# 'விக்கிரமனின் வரலாற்று நாவல்களில் பெண்கள்'

அழகப்பா பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்
**கே. கண்ணாத்தாள்**
(முதுநிலை விரிவுரையாளர், தமிழ்த்துறை
அழகப்பா அரசு கலைக்கல்லூரி, காரைக்குடி)

நெறியாளர்
**முனைவர். இரா. பாலசுப்பிரமணியன்**
பேராசிரியர் & தலைவர்
தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்




**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

காரைக்குடி - 630 003.

செப்டம்பர் - 2004

முனைவர் **இரா.பாலசுப்பிரமணியன்**
எம்.ஏ., எம்.ஃபில்., பி.எச்.டி., டி.ஜி.டி.,
பேராசிரியர் & தலைவர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள் : 16.09.04

# நெறியாளர் சான்றிதழ்

"விக்கிரமனின் வரலாற்று நாவல்களில் பெண்கள்" என்னும் பொருள் பற்றி முனைவர்(பி.எச்.டி) பட்டத்திற்காகத் திருமதி.**கே.கண்ணாத்தாள்** அவர்கள் செய்துள்ள இவ்வாய்வு, அழகப்பா பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையில் என் மேற்பார்வையின் கீழ் ஆய்வு செய்த காலத்தில், அவரின் சொந்த முயற்சியால் செய்யப் பெற்றது என்றும் இவ்வாய்வேடு ஆய்வாளருக்காக இதற்குமுன் வேறு எந்தப் பட்டத்திற்காகவும் அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

முனைவர் இரா.பாலசுப்பிரமணியன்
(நெறியாளர்)

துறைத்தலைவர்
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்.
காரைக்குடி-630 003.

**கே.கண்ணாத்தாள்,** எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்., சி.ஜி.டி.,
பகுதிநேர ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள் : 16. 9. 2004.

# ஆய்வாளர் உறுதிமொழி

"விக்கிரமனின் வரலாற்று நாவல்களில் பெண்கள்" என்னும் பொருளில் முனைவர் (பி.எச்டி) பட்டத்திற்காகச் செய்யப்பெற்ற இவ்வாய்வு என் முயற்சியில் உருவானதே ஆகும். இதற்கு முன் வேறு எந்தப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என உறுதி அளிக்கிறேன்.

கே. கண்ணாத்தாள்.
(கே.கண்ணாத்தாள்)
ஆய்வாளர்

முனைவர் **இரா.பாலசுப்பிரமணியன்**
பேராசிரியர் & தலைவர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

துறைத்தலைவர்
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

# நன்றியுரை

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் ஆய்வு நிகழ்த்த அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக்கழகத்தார்க்கும், தமிழ்த்துறைப் பேராசிரியருக்கும் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வுத் தலைப்பைத் தெரிவு செய்து, ஆய்வு நெறியாளராக இருந்து ஊக்கமும் ஆக்கமும் தந்து நெறிப்படுத்திய பேராசிரியர் இரா.பாலசுப்பிரமணியன் அவர்கட்கு நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

நாவலாசிரியர் திரு.விக்கிரமனைத் தொடர்புகொண்ட போதெல்லாம் உடனுக்குடன் தேவையான தகவல்களைக் கொடுத்து ஊக்கமும் வாழ்த்தும் தெரிவித்தமைக்கு எனது இதயம் கனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்விற்குப் பலவகைகளில் துணைபுரிந்த அழகப்பா பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் முனைவர் மு.பாண்டி, முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை, முனைவர் சு.இராசாராம், திரு.மு.நடேசன் ஆகியோருக்கும் என் அன்பான நன்றி உரியது.

ஆய்வேடு செம்மையுறத் தகுந்த ஆலோசனை வழங்கிய முனைவர் க.காந்தி அவர்கட்கு நன்றி. ஆய்வு நெறியாளரை எனக்கு அறிமுகப்படுத்திய சகோதரர் முனைவர் இரா.கருணாநிதியை இத்தருணத்தில் நினைத்துப் பார்த்து மகிழ்கிறேன்.

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறை முனைவர் பட்ட ஆய்வாளர்களான சகோதரர்கள் க.சொல்லேருழவன், சோ.முத்தமிழ்ச்செல்வன் சகோதரிகள் மு.பஞ்சவர்ணம், இரா.ரேணுகா காந்தி, பி.மாலதி, சி.பரமேஸ்வரி ஆகியோருக்கு என் அன்பு கலந்த நன்றியைத் தெரிவிக்கிறேன்.

ஆய்விற்கு ஊக்கமும் ஆதரவும் ஊட்டி இன்முகத்துடன் துணைநின்ற திருமதி கவிதாபாலசுப்பிரமணியன் அவர்கட்கு இதயபூர்வமான நன்றி.

ஆய்வின் துவக்கத்திலிருந்து முடிவுவரை ஆய்வின் முழுமைக்குத் துணைநின்ற என் வாழ்க்கைத்துணைவருக்கும் குழந்தைகளுக்கும் வார்த்தைகளால் எங்ஙனம் நன்றி சொல்லல் இயலும்.

ஆய்வேட்டைக் கணினி அச்சாக்கம் செய்த சரவணா கணினி மைய உரிமையாளருக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

# உள்ளடக்கம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| இ.ப.த.ம | - இந்தியப் பல்கலைக்கழக தமிழாசிரியர் மன்றம். |
| உ.ஆ | - உரை ஆசிரியர் |
| திரு.வி.க | - திரு.வி.கல்யாணசுந்தரனார் |
| தொ.ஆ | - தொகுப்பு ஆசிரியர் |
| தொல் | - தொல்காப்பியம் |
| நூ | - நூற்பா |
| ப.ஆ | - பதிப்பாசிரியர் |
| ப | - பக்கம் |
| பக் | - பக்கங்கள் |
| பொருள் | - பொருளதிகாரம் |
| ம.கா.ப | - மதுரை காமராஜர் பல்கலைக்கழகம் |
| மேலது | - மேலே உள்ள நூல் |
| P | - Page |
| P P | - Pages |

# நாவல் சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| உ.ச | - உதயசந்திரன் |
| ப.வா | - பரிவாதினி |
| பா.ம | - பாண்டிய மகுடம் |
| ந.பு.நா | - நந்திபுரத்து நாயகி |
| கா.சு | - காஞ்சி சுந்தரி |
| வ.இ | - வல்லத்து இளவரசி |
| சி.வ | - சித்திரவல்லி |
| மா.வ.கா | - மாறவர்மன் காதலி |
| ம.தே.ம | - மங்கலத்தேவன் மகள் |
| யா.ந | - யாழ்நங்கை |
| தெ.வா.மோ | - தெற்கு வாசல் மோகினி |
| தி.வ | - தியாக வல்லபன் |
| இரா.ச | - இராஜாதித்தன் சபதம் |
| க.ம.கா | - கடல்மல்லைக் காதலி |
| சோ.இ.க | - சோழ இளவரசன் கனவு |
| ப.கா | - பகைவனின் காதலி |
| கொ.ம.கு | - கொன்றை மலர்க் குமரி |
| சோ.ம | - சோழமகுடம் |
| வ.ந.வ | - வஞ்சிநகர் வஞ்சி |
| க.கோ.இ | - கன்னிக்கோட்டை இளவரசி |
| ஒ.வா.ஒ.ம.இ.வி | - ஒருவாள் ஒரு மகுடம் இருவிழிகள் |
| ம.ம | - மதுரை மகுடம் |
| மா.வீ | - மாணிக்க வீணை |
| க.பு.கா | - கங்காபுரிக் காவலன் |
| ஆ.அ | - ஆலவாய் அரசி |

# அட்டவணைப் பட்டியல்

# 1. முன்னுரை

இலக்கியக்கலை கலைகளுள் சிறந்தது. மனித வாழ்வின் சிறப்பியல்பாக உள்ள மொழியால் அமையும் காரணத்தாலும் வழிவழியாக விளங்கி நிலைத்த பயன் அளித்தலாலும் வாழ்க்கைச் சூழலையும் பண்பாட்டுக் கூறுகளையும் இச்சமூகத்திற்கு எடுத்தியம்புவதாலும் இலக்கியம் சிறந்ததாகத் திகழ்கிறது. அவ்வகை இலக்கியம் எல்லாக் காலங்களிலும் ஒரே மாதிரியாக அமைவதில்லை. மக்களின் தேவைக்கும் நுகர்விற்கும் ஏற்ப உருவையும் கருவையும் உத்திகளையும் பெற்று வளர்ந்து வந்ததை வரலாற்று மெய்ம்மைகள் தெளிவுபடுத்துகின்றன.

பண்டைநாளில் இலக்கியச் செய்திகள் பாட்டில் உணர்த்தப்பெற்றன. பாட்டில் உணர்த்தப்பெற்ற யாவும் உரைநடையிலும் உணர்த்தப் பெற இயலும் என்ற சூழல் இலக்கிய வரலாற்றில் உருவாகியது. ஐரோப்பியர் வருகையால் இந்தியாவிற்கும் தமிழகத்திற்கும் முற்குறித்த சூழல் உருவாகியதால் புதுவகை இலக்கியவகைகள் (Genre) முகிழ்த்தன. அவ்வகை இலக்கியத்தை இருபதாம் நூற்றாண்டுத் தமிழிலக்கியம் அல்லது 'இக்கால இலக்கியம்' (Modern Literature) என அழைப்பர்.

உரைநடையை அடிப்படையாகக் கொண்டு எழுந்த இக்கால இலக்கியவகைகளுள் சிறுகதை, நாவல் ஆகியவை கருதத்தக்கன. குறிப்பாக நாவல் இன்றியமையாத கலை இலக்கியவடிவமாகவும். மக்கள் இலக்கியமாகவும் விளங்குகிறது. முதல் நாவல் (கி.பி.1879) வெளிவந்த ஆண்டிலிருந்து இன்றுவரை நாவல் இலக்கியம் கண்ட வளர்ச்சியும் எழுச்சியும் ஆய்வாளர்களால் சுட்டிக்காட்டப் பெறுகின்றன. குறிப்பாகச் சிறுகதையைக் காட்டிலும் நாவல் இலக்கியம் கருதத்தக்க நிலையில் ***உள்ளது.*** மக்கள் பிரச்சனைகளை விவாதிக்கவும் விழிப்பூட்டவும் மனிதனை நெறிப்படுத்தவும் நாவல் இலக்கியம் நல்ல ஊடகமாக விளங்குவது கருதத்தக்கதாகும். ஆகவே தற்காலம் 'நாவல் இலக்கியத்தின் பொற்காலம்' என்ற சிந்தனையும் உருவாகியது.

இலக்கிய வரலாற்றில் விரிந்தும் ஆழ்ந்தும் உள்ள நாவல் இலக்கிய வகைக்கு மட்டும் தனித்த இலக்கிய வரலாறு எழுதப்பெற வேண்டிய நிலை உள்ளது. குறிப்பாகக் காலமும் கருத்தும் என்ற அடிப்படையில் எழுதப்பெறலாம். நாவல் இலக்கிய வகையில் பலவகைகள் உள்ளன.அவ்வகையில் வரலாற்று நாவல்களுக்குச் சிறப்பான இடமுண்டு.

பொற்காலப் புனிதங்களைப் பேசும் வரலாற்று நாவல்கள் கல்கிக்கு முன்பே தோற்றம் பெற்றன. எனினும் கல்கிக்குப்பின் வரலாற்று நாவல்கள் குறிப்பிடத்தக்க வளர்ச்சி பெற்ற நிலையில் பல வரலாற்று நாவலாசிரியர்கள் உருவாயினர். கல்கியின் வழித்தோன்றலில் உருவான வரலாற்று நாவலாசிரியர்களுள் விக்கிரமனுக்குக் கருதத்தக்க இடமுண்டு.

நாவல்வழியாக மனித வாழ்க்கையைத் தரிசிக்கலாம். அம்முறையில் வரலாற்றுக்கால மக்களின் வாழ்வை வரலாற்றுப் பின்புலத்தில் வரலாற்று நாவலில் படைக்கின்றனர். வரலாற்று நாவலாக இருந்தாலும் அதன்கரு நிகழ்கால வாழ்விற்கும் பயன்தரும் நிலை மறுப்பதற்கில்லை. ஆய்வில் நாவல் இலக்கிய வகைகளைக் கருத்தில் கொண்டு ஆய்வு செய்யும் முறை பரவலாக உள்ளது. அவ்வகையில் நாவல் இலக்கிய ஆய்வுக்களத்தில் வரலாற்று நாவல் வகையில் குறிப்பிட்ட எழுத்தாளரைக் கருதும் போக்கில் விக்கிரமன் வரலாற்று நாவல்களை மையமிட்டுப் பின்வருமாறு தலைப்புத் தேர்வு செய்யப் பெறுகிறது.

## ஆய்வுத்தலைப்பு

விக்கிரமனின் வரலாற்று நாவல்களில் வரையறை கருதிப் பெண்களை மையமிட்டுத் தலைப்பு அமைக்கப் பெற்றது. சமூகத்தில் பெண் சமூகத்திற்குச் சிறப்பான இடமுண்டு என்பதை அனைவரும் அறிவர். அம்முறையில் வரலாற்று நாவலாசிரியரான விக்கிரமன் தம் வரலாற்று நாவல்களில் பெண்களுக்குத் தந்த இடத்தினை மதிப்பிடும் வரையறை முயற்சியில் ‘விக்கிரமனின் வரலாற்று நாவல்களில் பெண்கள்’ என்ற தலைப்பு அமைத்துக் கொள்ளப் பெற்றது.

## முன்னோடி ஆய்வுகள்

நாவல் இலக்கியத்தில் பெண்களைக் கருத்தில் கொண்டு ஆய்வு செய்யும் முயற்சி அண்மைக் காலத்தில் பரவலாக வளர்ச்சி பெற்றதாகக் கருதலாம். இந்நிலைக்குப் பெண்ணியம் குறித்த விழிப்புணர்வு எழுச்சியாக இருந்த நிலையைக் காரணமாகத் துணியலாம். இராஜம் கிருஷ்ணன் கல்விப்புல ஆய்வுப் பின்னணி (Non Academic) இல்லாமல் பெண்கள்பற்றிக் 'காலந்தோறும் பெண்கள்' என்ற நூலை எழுதியுள்ளார். பெண்ணியச் சிந்தனையும், விழிப்புணர்வும் கொண்ட கட்டுரைகளையும் எழுதிவருகிறார். கல்விப் பின்புலத்தில் (Academic Research) ஆய்வாளர்கள் பெண்களைக் கருத்தில் கொள்ளும் நிலையில் நிகழ்த்திய சில முன்னோடி ஆய்வுகளைக் குறிப்பிடலாம். தி.கு.நடராஜன் 'இராஜம் கிருஷ்ணன் நாவல்களில் பெண்மைக் கோட்பாடு' என்ற தலைப்பில் சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆய்வு செய்து முனைவர் பட்டம் பெற்றுள்ளார்.

பொதுவாகத் 'தமிழ்ப்புதினங்களில் பெண்கள்' என்ற தலைப்பில் எம்.கமலம் சென்னைப் பல்கலைக்கழகத்தில் நிகழ்த்திய ஆய்வு விரிவான களத்தைக் கொண்டுள்ளது. 'லட்சுமி நாவல்களில் பெண்களின் பிரச்சனைகளும் உரிமைகளும்' என்ற தலைப்பில் செல்லத்தாய் பொன்னுத்துரை அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகத்தில் செய்துள்ள ஆய்வு குறிக்கத்தகுந்த முனைவர் பட்ட ஆய்வாகும்.

சமூக நாவல்களில் பெண்கள்சமூகம் குறித்த ஆய்வுகள் வளர்ந்த அளவிற்கு வரலாற்று நாவல்களில் பெண்கள் சமூகம் பற்றிய ஆய்வு வளம் பெறவில்லை. சில ஆய்வுகளே இச்சூழலில் அமைந்துள்ளன. முத்துலெட்சுமி என்பவர் 'சாண்டில்யன் நெடுங்கதைகளில் பெண்மை' என்ற தலைப்பின்வழி மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்ட ஆய்வு நிகழ்த்தியுள்ளார். பெண்களை மையமிட்டு வரலாற்று நாவலைத் தொடர்புபடுத்தி நிகழ்த்தப் பெற்ற இவ்வாய்வு நூலாகவும் வெளிவந்துள்ளது (1993).

ஜெ.சீனிவாசன் என்பவர் 'விக்கிரமனின் வரலாற்று நாவல்கள் ஓர் ஆய்வு' என்ற தலைப்பில் கல்கத்தா பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டத்திற்கான ஆய்வு நிகழ்த்தியுள்ளார். தனிப்பட்ட ஒரு நாவலை மட்டும் ஆராயும் போக்கில் பி.சின்னையா 'நந்திபுரத்துநாயகி ஓர் ஆய்வு' என்ற ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வை அழகப்பா பல்கலைக் கழகத்தில் (1993) முடித்துள்ளார். எனினும் விக்கிரமனின் வரலாற்று நாவல்களில் பெண்களைக் கருத்தில்கொண்டு ஆய்வுசெய்யும் இம்முயற்சி புதுமுயற்சியும் தேவையான முயற்சியும் ஆகும்.

## ஆய்வு நோக்கம் (Objectives of the Study)

இவ்வாய்வு பின்வரும் நோக்கங்களை முதன்மையாகக் கொண்டு அமைகிறது.

- படைப்பாளரின் வாழ்வியல் வரலாற்றுப் பின்னணியைத் தெளிவாக உணர்ந்த நிலையில் நாவல் இலக்கியத்தை ஆராய்தல்.
- வரலாற்றுக்காலச் சமூகத்தில் காதல், குடும்பம், அரசியல், கலைகள் ஆகியவைகளில் பெண்கள் எங்ஙனம் சித்தரிக்கப்பெறுகிறார்கள்? என்பதை மதிப்பிடுதல்.
- வாழ்க்கை சிறக்க உதவும் காதலிலும் காதலால் விரிந்த குடும்ப அமைப்பிலும் ஆண்களோடு பெண்களும் கலந்து பங்குகொள்ளும் அரசியலிலும் பெண்ணியச் சிந்தனை விக்கிரமன் படைப்புக்களில் இடம்பெற்ற விதத்தை ஆராய்தல்.

முற்குறிப்பிடப்பெற்ற ஆய்வு நோக்கங்களைக் கருத்தில் கொண்டு ஆய்விற்குரிய கருதுகோள் அமைகிறது.

## ஆய்வு அணுகுமுறை (Research Approach)

நாவல் இலக்கியத்தை வடிவம் (Form) , உள்ளடக்கம் (Content) உத்தி (Technique) என்பவைகளைப் பொருளாகக் கொண்டு ஆராயும் முறை புறநிலை அணுகுமுறையைச் (Deductive Approach)

சார்ந்தமையும். நாவலில் இடம்பெறும் சமூகம், பெண்சமூகம், அரசியல், பண்பாடு, கலைகள் முதலியவற்றை வரையறுத்து ஆராயும் போக்கு அகநிலை அணுகுமுறையாகும் (Inductive Approach). இவ்வாய்வில் அகநிலை அணுகுமுறை கருத்தில் கொள்ளப் பெற்றது.

வரலாற்று நாவலில் சாதனை படைத்த விக்கிரமனின் வாழ்வியல் பின்னணியில் நாவல் கூறுகளை மதிப்பிடும் முயற்சியில் வாழ்க்கை வரலாற்று அணுகுமுறையும் (Biographical approach), விளக்கவியல் (Descrptive approach) அணுகுமுறையும், பெண்ணிய அணுகுமுறையும் (Feministic approach) பொருத்தமான இயல்களில் செயல் முறைப்படுத்தப் பெற்றுள்ளன.

**ஆய்வுமூலங்கள் (Reasearch Sources)**

விக்கிரமனின் நாவல்களில் வரலாற்றுத் தொடர்புடைய நாவல்கள் ஆய்விற்குரிய மூலஆதாரங்களாகும் (Primary Sources). 1956 லிருந்து 1996 வரை வெளிவந்துள்ள நாவல்களில் வரையறை கருதி இருபத்தி ஐந்து நாவல்கள் ஆய்விற்குக் கருத்தில் கொள்ளப்பெற்றன. விக்கிரமனின் பிறநாவல்கள், சிறுகதைகள், கவிதைகள், இதழ்கள் போன்றவைகளைச் சார்ந்து கிடைக்கும் செய்திகள் துணைத்தரவுகளாக (Secondary Sources) அமைகின்றன. விக்கிரமன் படைப்புக்கள் குறித்த ஆய்வுநூல்கள், ஆசிரியரைப் பற்றி வெளிவந்த நூல்கள், பாராட்டுக்கள் போன்றவைகளிலிருந்து கிடைக்கும் தரவுகள் துணைச் சான்றுகளில் அடங்கும். சமூகவியல் மற்றும் பெண்ணியம் சார்ந்த நூல்களிலிருந்தும் துணைமைத் தரவுகள் சேகரிக்கப்பெற்றன. களஆய்வு (Field study) முறையில் ஒன்றான வினாவழித் தொடர்புமுறை (Questionnaire) கையாளப் பெற்று விக்கிரமனுடன் பேட்டி அமைத்துக் கொள்ளப் பெற்றது. பேட்டித் தரவுகளும் துணைச் சான்றுகளாகக் கொள்ளப்பெறுகின்றன.

## ஆய்வுப் பகுப்பு

விக்கிரமனின் ‘வரலாற்று நாவல்களில் பெண்கள்’ என்னும் இவ்வாய்வு கீழ்க்கண்ட எட்டு இயல்களில் பகுக்கப் பெற்றுள்ளது.

1. முன்னுரை
2. படைப்பாளரும் படைப்பும்
3. காதலில் பெண்கள்
4. உறவுநிலைகளில் பெண்கள்
5. அரசியலில் பெண்கள்
6. கலையில் பெண்கள்
7. பெண்ணியச் சிந்தனைகள்
8. முடிவுரை

### *பின்னிணைப்புக்கள்*

1. துணைநூற்பட்டியல்
2. படைப்பாக்க விவரங்கள்
   - நாவல்
   - சிறுகதை
   - நாடகம்
   - கவிதை
   - கட்டுரை
   - ஆங்கில நூல்
3. ஆசிரியரின் சுய குறிப்பு.
4. ஆசிரியருடன் நடத்தப்பெற்ற பேட்டி

ஆய்வுத்தலைப்பு, முன்னோடி ஆய்வுகள், ஆய்வு நோக்கம், ஆய்வு அணுகுமுறை, ஆய்வு மூலங்கள், ஆய்வுப்பகுப்புப் போன்ற உட்தலைப்புக்களைக் கொண்டமையும் முன்னுரைப் பகுதி ஆய்வின் அறிமுகத்தைச் சுருக்கமாக விளக்கும் வகையில் அமைந்துள்ளது.

‘படைப்பாளரும் படைப்பும்’ என்ற தலைப்பில் இரண்டாவது இயல் அமைந்துள்ளது. இவ்வியலில் நாவல் இலக்கிய வரலாற்றில் வரலாற்று

நாவல் பெறுமிடம், வரலாற்று நாவல்கள் பற்றிய வரையறைகள், வரலாற்று நாவல்கள் குறித்துத் திறனாய்வாளர்களின் கருத்துக்கள், கல்கியின் பாதையில் வரலாற்று நாவலாசிரியர்கள், வாழ்க்கை வரலாற்று அணுகுமுறையின் தேவை, விக்கிரமனின் பிறப்பும் கல்வியும். 'விளையும் பயிர் பயிர் முளையிலே தெரியும்' என்பது போலச்சிறுவயதிலிருந்து அவரிடம் இடம்பெற்ற ஆற்றல்கள், முதல்படைப்பு, அதன்பின் ஏற்பட்ட வளர்ச்சி, பணிநிலை, விக்கிரமனின் தணியாத ஆர்வம், அவரது பிற படைப்புக்கள், இதழாசிரியராக அமுதசுரபியோடு அவர் கொண்டுள்ள தொடர்பு, பிற இதழ்ப்பணிகள், பல்துறைப்பணிகள், சங்கம் அமைத்த திறம், பெற்றுள்ள பாராட்டுக்கள், பட்டங்கள், பரிசுகள் போன்ற செய்திகள் இடம்பெறுகின்றன.

மூன்றாவது இயலாக அமைந்துள்ள 'காதலில் பெண்கள்' என்னும் தலைப்புக் கீழ்க்கண்டவாறு பகுத்தாயப் பெறுகிறது. காதல் விளக்கம், காதல் அன்றும் இன்றும், காதல் வகைப்பாடு, விக்கிரமனின் வரலாற்று நாவல்களில் காதல் செய்திகள், ஆசிரியர் வழியாகவும் கதைமாந்தர் வழியாகவும் வெளிப்படும் விதம், அரசகுலம் சார்ந்த பெண்களின் காதல், அரசகுலம் சாராத பெண்களின் காதல், அரசகுலம் சார்ந்த பெண்களின் நிறைவேறிய காதல், நிறைவேறாக்காதல், வகைப்பாட்டை அந்தந்தப் பாத்திரங்களின் பெயர்களோடு உட்தலைப்புக்களாகப் பிரித்தறிதல், அரசகுலம் சாராத பெண்களின் நிறைவேறிய காதல், நிறைவேறாக்காதல் வகைப்பாட்டை அந்தந்தப் பாத்திரங்களின் உட்தலைப்புக்களாகப் பிரித்தறிதல், இவ்வியலில் பெறப்பெற்ற ஆய்வுமுடிவுகள் முதலியன இடம் பெறுகின்றன.

நான்காவது இயல் 'உறவுநிலைகளில் பெண்கள்' என்பதாகும். உறவு வளர்ச்சிக்குத் தொடக்கமான திருமணம், குடும்பம், அழியாத அமைப்பாகச் செயல்படும் குடும்பநிலை, குடும்பத்தின் வகைகள், தனிக்குடும்பம், கூட்டுக்குடும்பம், தந்தைவழிக்குடும்பம், தாய்வழிக்குடும்பம், பிற குடும்பவகைகள், குடும்பஉறவுகள், விக்கிரமனின் வரலாற்று நாவல்களில்

திருமணம், குடும்பம், உறவு பற்றிய செய்திகள், தனிக்குடும்பம் அதன் வகைகளான முழுமைபெற்ற குடும்பம், முழுமையல்லாத குடும்பம், இக்குடும்பங்களில் மகள், மனைவி, தாய் முதலிய உறவுநிலைகள், முழுமையல்லாக் குடும்பத்தில் மகள், தாய் உறவுநிலைகள், கூட்டுக்குடும்பத்தில் அரசகுலம் சார்ந்த உறவுகள், அரசகுலம் சாராத உறவுகள், பிற உறவுகள் ஆகியன விரிவாக விளக்கப் பெறுகின்றன.

'அரசியலில் பெண்கள்' என்ற இயல் ஐந்தாவது இயலாக அமைகிறது. இவ்வியலில் அரசியல் விளக்கம் இடம்பெறுகிறது. இலக்கியமும் சமூகமும், அரசியலில் பெண்களின் பங்கு ஆகியன உணரப்பெறுகின்றன. விக்கிரமனின் வரலாற்று நாவல்களில் அரசியலில் ஈடுபடும் பெண்கள், அவர்களுள் அரசகுலம் சார்ந்த பெண்கள், அரசகுலம் சாராத பெண்கள் என்று பிரித்தறியப் பெறுகிறார்கள்.

அரசகுலம் சார்ந்த பெண்கள் நாட்டினடிப்படையில் சோழநாட்டு அரசகுலப் பெண்கள், பாண்டியநாட்டு அரசகுலப்பெண்கள், பல்லவநாட்டு அரசகுலப்பெண்கள், சாளுக்கியநாட்டு அரசகுலப் பெண்கள் என்று பிரித்தறியப் பெறுகிறார்கள்.

அரசகுலம் சாராத பெண்களும் அந்தந்த நாட்டினடிப்படையில் சோழநாட்டு அரசகுலம் சாராத பெண்கள், பாண்டியநாட்டு அரசகுலம் சாராத பெண்கள், நாயக்கர் நாட்டு அரசகுலம் சாராத பெண்கள், பல்லவநாட்டு அரசகுலம் சாராத பெண்கள், சாளுக்கிய நாட்டு அரசகுலம் சாராத பெண்கள், காம்போஜநாட்டு அரசகுலம் சாராத பெண்கள் என்றறியப்பெற்று அவர்களது அரசியலீடுபாடுகள் ஆராயப்பெறுகின்றன.

'கலையில் பெண்கள்' என்பது ஆறாவது இயலாக அமைகிறது. இதில் கலை விளக்கம், கலையில் பெண்கள், விக்கிரமன் நாவல்களில் வெளிப்படும் கலைகள், அதில் ஈடுபடும் பெண்கள், நுண்கலைகளில் நடனம், ஓவியம், நாடகம், இசை, இவற்றில் நாட்டினடிப்படையில் பெண்கள் பங்கு

பெற்றவிதம், பயன்கலைகளான மருத்துவம், சமையல், மாறுவேடம், அணிகலன்களையறிதல், பிறமொழியறிவு, அறிவுக் கூர்மை, ஆகியவற்றில் பெண்கள் பெற்றிருந்த திறம் முதலியன மதிப்பிடப் பெறுகின்றன.

ஏழாவது இயலான 'பெண்ணியச் சிந்தனைகள்' என்ற இயலில் பெண்ணியம் பற்றிய செய்திகள் விளக்கப் பெறுகின்றன. மேலும் பெண்ணியத்தின் வகைகள், இந்தியப் பெண்ணியம், தமிழ்ப்பெண்ணியம், விக்கிரமன் காட்டும் பெண்ணியம், அவர் நாவல்களில் இடம்பெறும் உரிமை, சுதந்திரம் பற்றிய போக்குகள், விக்கிரமன் காட்டும் பெண்ணிய வகை முதலியன ஆய்விற்குட்படுத்தப் பெறுகின்றன.

விக்கிரமனின் நாவல்களில் பெண்ணியச் சிந்தனைகள், காதல், திருமணம், குடும்பம், சமூகம், அரசியல் முதலியவற்றில் எவ்வாறு மிளிர்கிறது என்ற செய்திகள் பார்க்கப் பெறுகின்றன.

'முடிவுரை' என்ற இயலில் ஒவ்வொரு இயலிலும் கூறப்பெற்ற முடிவுரையிலிருந்து செறிவான முடிவுகள் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன. பின்னிணைப்பில் துணைநூற் பட்டியலை அடுத்து விக்கிரமனின் படைப்புக்கள், விக்கிரமனின் சுய குறிப்பு, விக்கிரமனுடன் நடத்திய பேட்டி விபரம் ஆகிய தொகுப்புக்கள் இணைக்கப்பெற்றுள்ளன.

# 2. படைப்பாளரும் படைப்பும்

இக்கால இலக்கிய வகையில் நாவல் இலக்கியத்திற்குச் சிறப்பான இடமுண்டு. ஐரோப்பியர் வருகைக்குப்பின் ஆங்கிலக் கல்வி அறிமுகமாகியது. ஆங்கிலக் கல்வியின் வாயிலாக மேலைநாட்டு இலக்கியப் போக்குகள் குறித்து விழிப்புணர்வு உருவாகியது. இச்சூழலில் மரபுக்கவிதை நெகிழ்ந்து புதுக்கவிதை என்ற இலக்கியவகை முகிழ்த்தது. உரைநடை வளர்ச்சியின் காரணமாகச் சிறுகதை, நாவல் போன்ற இலக்கியவகைகள் பெருமளவில் தோன்றின. கவிதை, கற்றவர்களோடு மிகுதியாகத் தொடர்பு பெறும். ஆனால் நாவலும் சிறுகதையும் சாதாரண மக்களைக்கூட விரைவாகச் சென்றடையும் தன்மையன. இந்நிலையில் சிறுகதையைவிட நாவலிலக்கியம் மக்களிடையே செல்வாக்குப் பெற்ற சாதனம் என்பது அறிஞர்கள் கருத்தாகும்.

நாவல் இலக்கிய வரலாறு விரிவான களத்தைக் கொண்டது. அவ்வரலாற்றில் சாதனை படைத்த பல படைப்பாளர்கள் இருக்கின்றனர். அவர்களுள் விக்கிரமனுக்குச் சிறப்பான இடமுண்டு, 'விக்கிரமனின் வரலாற்று நாவல்களில் பெண்கள்' என்ற இவ்வாய்வில் விக்கிரமனைக் குறித்து ஆய்வுக்குப் பயன்படும் வாழ்வியல் செய்திகளை விளக்குவதாக இவ்வியல் அமைகிறது. வரலாற்று நாவல்களில் முத்திரை பதித்த காரணத்தால் வரலாற்று நாவலின் வளர்ச்சியோடு இவரது வாழ்வியல் அறிமுகம் தொடர்பு படுத்திய நிலையில் விளக்கச் செய்திகள் இடம்பெறுகின்றன.

## வரலாறும் நாவலும்

தமிழ் நாவல் இலக்கிய வரலாறு பிரதாபமுதலியார் சரித்திரத்திலிருந்து தொடங்கி இன்றைய காலகட்டம்வரை சிறப்பான பரிமாணத்தைப் பெற்றுள்ளது. அப்பரிமாண வளர்ச்சியில் பங்குபெற்ற படைப்பாளர்கள் ஒவ்வொருவரும் அவரவர் காலத்தில் சமூகச் சூழலைத் தம் இலக்கியத்தில் பதிவு செய்து வருகின்றனர். "பல்லவர், சோழர் வரலாற்றை

வைத்து மிகச்சிறப்பாக நாவல்களைப் படைத்த கல்கியின் வரலாற்றினை அறிஞர்கள் போற்றுகின்றனர்."[1] அவ்வகையில் வரலாற்றுச் சமூகச் சூழலையும் பதிவுசெய்யும் ஆற்றல் நிகழ்காலப் படைப்பாளருக்கு இருப்பது கருதத்தக்கதாகும்.

நாவல் இலக்கிய வரலாற்றில் வரலாற்று வகை நாவலுக்குச் சிறப்பான இடமுண்டு. 'சரித்திரம் தேர்ச்சி கொள்' என்பது மகாகவியின் வாக்காகும். வரலாற்று நாவல்களை வெறும் ராஜா ராணிக் கதைகளாக மதிப்பிடக் கூடாது. வரலாறும் கற்பனையும் கலந்து எழுதப்பெற்ற அந்நாவல்கள் தனித்த பண்புகளைக் கொண்டவை. வரலாற்றுவகை நாவல்களுக்குக் கூடுதலான உழைப்பும், கவனமும், முயற்சியும் தேவை என்பது அறிஞர்களின் கருத்தாகும்.

"வரலாற்று நூல்களால் பெறமுடியாத வேறொன்றும் நாவலால் கிடைக்கிறது. மாந்தர்களையும், சம்பவங்களையும் வரலாற்றால் விரித்துச் சொல்ல முடியவில்லை. அதை வரலாற்று நாவல் மூலம் பெறமுடியும்"[2] என்ற சிந்தனைக்கு ஏற்ப, வரலாற்று நாவல்கள் நாடு, இடம், காலம், பருவம் எல்லாவற்றையும் தெளிவாகத் தருகிறது எனக் கொள்ளலாம்.

தமிழ் நாவல் இலக்கிய வரலாற்றில் விரிந்த களங்கள் பல உள்ளன. அக்களங்களுள் வரலாற்று நாவல் வகையும் ஒன்று. "வரலாறு என்பது கடந்த காலத்தை மட்டும் கூறுவதன்று. இன்றைய செய்திகள் கூட நாளைய வரலாறாக மாறிவிடும்."[3] கடந்தகாலச் செய்திகள் நிகழ்காலத்தில் நிரல்படுத்தப்பெற்று வருங்காலத்திற்கு இலட்சிய வாழ்க்கையை எடுத்தியம்புவது வரலாற்றின் செயல்பாடுகளாக இருக்க வேண்டும். அம்முறையில் வரலாற்றுக்கும் சமகால நிலையில் ஒரு பயன்பாடு எதிர்பார்க்கப் பெறுகிறது.

வரலாற்று உண்மைகளை மட்டும் வைத்துக் கொண்டு நாவல் எழுதப்புகுந்தால் அது வரலாற்று நூலாகிவிடும். "வரலாறு என்பது உயிரற்ற ஓர் அமைப்புதான். அதற்கு உயிர் கொடுக்க நாவலாசிரியர்களால் இயலும்"[4] என்கிற கருத்து இங்கு நோக்கத்தக்கதாகும். வரலாற்றுடன் கற்பனை கலக்கின்ற பொழுது படிப்பதற்கான ஆர்வம் உருவாகிறது. ஆனால் வரலாற்றை விடக் கற்பனை மிகும்பொழுது வரலாற்று நாவல் தனித்தன்மையை இழக்கிறது. "வரலாறும் கதையும் கலத்தலின் பயனாக வடிவெடுப்பதை வரலாற்று நாவல் எனக்கொள்ளலாம்"[5]

வரலாற்று நாவலின் போக்கு, வாழ்க்கை வரலாற்று நூலின் இயல்பு, பிரயாண நூலின் தனித்தன்மை போன்ற முக்கூறுகள் வரலாற்று நாவல்களில் இடம் பெற்றிருக்கும் என்று குறிப்பிடுவர். மேலும் சொல்லழகும், நடையழகும், கற்பனை வளர்ச்சியும் வரலாற்று நாவல்களில் தொடர்பு பெற்றிருப்பதால் கவிதைப் பண்புகளும் மிகுந்திருக்கக் காணலாம். அவ்வகையில் சுருங்கச் சொன்னால் பழைய காப்பியத்தின் இடத்தை நாவல் பிடித்துக் கொண்டதாக மதிப்பிடலாம். வரலாற்றுப் பாத்திரங்களுடன் கற்பனைப் பாத்திரங்கள் தொடர்புகொள்கிறபோது வரலாற்று மெய்ம்மைகள் சிதைவுபடாமல் நாவலை உருவாக்குதல் வேண்டும்.

"வரலாற்றின் நோக்கம் நாவலாலேயே நிறைவேறுகிறது. எனவேதான் கே.கே.பிள்ளை, கே.வி.ரெங்கசாமி ஐயங்கார் போன்ற பேராசிரியர்கள் வரலாற்று நாவல்கள் மிகுதியாக வெளிவர வேண்டுமென்று விரும்பியிருக்கின்றனர்"[6] என்ற கருத்தின் மூலம் வரலாற்று நாவலின் இன்றியமையாமையை அறிந்துகொள்ள முடிகிறது.

### *கல்கியின் பாதையில்*

வேதநாயகம் பிள்ளையின் சுகுண சுந்தரியை(1887) வரலாற்று நாவல் வகையின் முன்னோடியாகக் குறிப்பிடுவர். எனினும் இந்நாவலில் வரலாற்றுப் பண்புகளைவிட வீரதீரச்செயல்கள் மிகுந்து காணப்பெறுகின்றன

என்பது அறிஞர்தம் மதிப்பீடாகும். உண்மையான வரலாற்று நிகழ்ச்சியைக் கருப்பொருளாகக் கொண்டு சரித்திர உணர்வுடன் நாவலை உருவாக்கியவர் தி.த.சரவணமுத்துப்பிள்ளை ஆவார். இவருடைய மோகனாங்கி (1895) என்னும் நாவல் பதினேழாம் நூற்றாண்டில் தஞ்சையை ஆண்ட விஜயராகவ நாயக்கரின் மகள் மோகனாங்கியை மையமிட்டது.

1895க்குப் பிறகு உருவாகிய வரலாற்று நாவலாசிரியர்களுள் கல்கி விடிவெள்ளியாகத் திகழ்ந்தவர். கல்கியின் பார்த்திபன் கனவு (1941) அலை ஓசை (1953), சிவகாமியின் சபதம் (1948) பொன்னியின் செல்வன் (1950) போன்ற நாவல்கள் இதழ்களில் தொடர்கதையாக வந்து மக்களின் வரவேற்பைப் பெற்றவை. பிற்கால வரலாற்று நாவலாசிரியர்கள் கல்கியைத் தமது குருவாகக் கொண்டனர். அகிலன், ஜெகசிற்பியன், கோவி மணிசேகரன், சாண்டில்யன் ஆகியோர் வரலாற்று நாவல் படைப்பதில் தடம் பதித்தவர்கள். இவர்கள் தடம் பதிப்பதற்கு ஏதோ ஒருவகையில் உந்துசக்தியாக இருந்தவர் கல்கியாவார்.

கல்கியின் உந்துசக்தியால் திறம்பெற்றவர் விக்கிரமன். "கல்கிவிட்ட பகுதியிலிருந்து விக்கிரமன் போன்றவர்கள் வரலாற்றைப் பயன்படுத்தினர்"[7] என்ற கருத்து நோக்கத்தக்கது. கல்கியை முதலாகவும் உந்துதலாகவும் கொண்டு முகிழ்த்த நாவல்கள் நாவல் வரலாற்றில் இடம்பிடித்தன.

நாவல் இலக்கியக் காலகட்டத்தை மூன்றாகப் பிரிக்கும் இரா.தண்டாயுதம் "மூன்றாவது காலகட்டம் கல்கியை முதலாகக் கொண்டு தொடங்குகிறது. இக்காலகட்டமே தமிழ் நாவல் வரலாற்றில் ஒரு தொடர்ந்த தெளிவான காலகட்டமாக விளங்குகிறது."[8] என்று கூறுகிறார். கல்கியின் காலத்தில் கிடைத்த தெளிவு பிற்காலத்து நாவலாசிரியர்களுக்கு முன் மாதிரியாகவும் உந்துசக்தியாகவும் இருந்தமை கருத்திற்குரியதாகும்.

வரலாற்று நாவல் என்பதற்கு, "பத்தொன்பதாம் நூற்றாண்டுக் காலத்துத் தமிழகக் கலைஞர் குடும்பத்தின் வாழ்க்கையையோ, இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் நடைபெற்ற சுதந்திரப் போராட்டத்தையோ ஒரு நாவல் தனது கதைப்பொருளாகக் கொள்ளுதல் வேண்டும்"[9] என்று இலக்கணம் கூறுகிறார் கா.சிவத்தம்பி. அத்தகைய வரலாற்று நாவல்களை ஆசிரியர்கள் வெறும் பொழுது போக்கிற்காக எழுதவில்லை. "இறந்த காலத்தை எண்ணிப் பார்க்காதவன் நிகழ்காலத்தில் எதார்த்தத்தை உணர்ந்து எதிர்காலத்தை வெற்றிகரமாக நடத்திச் செல்லும் தகுதியைப் பெற மாட்டான். சரித்திரமும் சரித்திரத்தைப் பின்னணியாகக் கொண்ட நவீன இலக்கியங்களும் இயற்றப்படுவதற்கு இதுதான் அடிப்படை நோக்கம்."[10] சரித்திரம் அறிந்து, தேர்ந்து வரலாற்றுச் செய்திகளைக் கற்கும் ஆர்வமுள்ள எழுத்தாளர்களால் சரித்திர நாவல்கள் படைக்கப்பெற்றிருக்கின்றன.

வரலாற்று நாவலாசிரியரான சாண்டில்யன், "என் வீட்டை அடகுவைத்தாவது தமிழக வரலாற்றை எழுதி முடிப்பதுதான் என் வாழ்க்கையின் இலட்சியம்"[11] என்று குறிப்பிடுவார். வரலாற்று நாவலின் செய்திகள் மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் பயன்படும் என்று கருத்துத் தெரிவிப்பார்.

நாவல் இலக்கிய வகையில் வரலாற்று நாவல்களின் பயன்பாடு எக்காலத்திலும் ஒன்றுபோல் இருந்தது என்று கூற இயலாது. இலக்கியப் பொருள், வடிவம், அலங்காரம், மொழிநடை, நம்பகத் தன்மை, ஏற்புடைமை முதலிய பல்வேறு அம்சங்கள் காலத்துக்குக் காலம் வெவ்வேறு வகையிலும் அளவிலும் முதன்மையும் முக்கியத்துவமும் பெறுதல் வெறும் தற்செயல் நிகழ்வு அன்று. ஒவ்வொரு காலப்பகுதியிலும் நடப்பிலிருக்கின்ற பொருளாதார அரசியல் சமுதாய அமைப்புக்களின் பிரதிபலிப்பாகத் தோன்றும் தத்துவக் கோட்பாடுகளுக்கு ஏற்பவே இலக்கியம் பற்றிய சிந்தனைகளும் அமைகின்றன. "இலக்கியத்தின் தோற்றம், பண்பு, பணி,

பயன் என்பன குறித்துக் காலத்துக்குக் காலம் வேறுபட்ட கருத்துக்கள் நிலவுவதை"[12] கைலாசபதி அவர்களும் குறிப்பிடுவார்.

வரலாற்று நாவல்கள், அவ்வகையில் காலத்திற்குக் காலம் பண்பிலும், பயன்களிலும் மாற்றம் பெற்று நிலைத்தே வந்திருக்கின்றன. நிலைத்து வந்திருத்தல் என்பதை 'உயிர்த்துடிப்பு' எனக்குறிப்பிடலாம். அத்தகைய உயிர்துடிப்பைத் தளரவிடாமல் அவ்வக் காலத்துப் படைப்பாளர்கள் அரவணைத்து வருகின்றனர். அவ்வகையில் பழமைக்கும் பழமையாய்ப் புதுமைக்குப் புதுமையாய்த் திகழும் படைப்பாளராக விக்கிரமன் விளங்குகிறார்.

## வாழ்க்கை வரலாற்று அணுகுமுறையின் தேவை

படைப்பாளரின் படைப்புக்களை ஆய்வதற்கு முன் படைப்பாளரின் வரலாற்றை அறிந்து கொள்வது தேவையான முயற்சியாகும். ஏனெனில் "ஒரு சிறந்த இலக்கியம் அதனை உருவாக்கிய ஆசிரியனிடமிருந்து வேறுபட்டு நிற்பதில்லை"[13] என்ற கருத்து இவண் கருத்திற்கொள்ளற்குரியது. "ஒரு சிறந்த நூல் அதனைப் படைத்த ஆசிரியருடைய மூளையிலிருந்தும் இதயத்திலிருந்துமே பிறக்கிறது. அவர் தம்மையே அந்த நூலின் பக்கங்களில் வெளிப்படுத்துகிறார்"[14] என்பதால் படைப்பாளரைப் பற்றி அறிவது தேவையான முயற்சியாகிறது. வாழ்க்கை வரலாற்று அணுகுமுறை (Biographical approach) படைப்பாளரின் வரலாற்றை அணுகும் முறையோடு தொடர்பு பெறுவதால் ஆய்வில் தெளிவு கிடைக்க வாய்ப்புண்டு.

"திறனாய்விற்கு இலக்கியப் புலமையும், ஈடுபாடும் மட்டுமல்ல. இலக்கியத்தை உருவாக்கிய, அதன் உருவாக்கத்திற்கு அடிப்படையாக அமைந்த பின்புலங்களும் தகவல்களும் தேவை. படைப்பாளனின் அகமனம், வாழ்க்கை வரலாறு, படைப்பு எழுந்த காலச்சூழல், நிலவிய இலக்கிய வகை முதலான பலவற்றையும் மனத்திற்கொண்டு இவற்றின் செல்வாக்கு ஒரு

படைப்பில் எவ்வளவு இருக்கிறது? எப்படி இருக்கிறது? என்பதையும் கணித்தே திறனாய்வில் ஈடுபட வேண்டும் என்பது திறனாய்வாளர்களில் பலர்சுட்டும், ஏற்கும் வழி."[15] இக்கருத்தின் வழி படைப்பாளியின் வாழ்க்கை, வரலாற்றுப் படைப்புப் பற்றிய செய்திகள் ஆராய்ச்சிக்குத் தேவை என்ற நிலை வலியுறுத்தப் படுவதைக் காணலாம். மேற்குறித்த சூழலைக் கருத்திற்கொண்டு படைப்பாளர் விக்கிரமன் வாழ்க்கை வரலாற்றையும் அவர்தம் படைப்புக்களையும் பிற பணிகளையும் சிறப்புக்களையும் இனிவரும் பகுதியில் விளக்கமாகக் காணலாம்.

சரித்திரக் கதையைப் பின்னித்தந்த விக்கிரமன் எல்லா இலக்கிய வரலாற்றறிஞர்களாலும் கல்கியின் பாதையில் தோன்றியவர்களிலே சிறப்பானவராகக் கருதப்பெறுகிறார். "தன் வாழ்வைத் தானே மாற்றிக் கொள்பவன் மாந்தன்"[16] இக்கூற்றிற்கிணங்க தன் முயற்சியாலும் திறமையாலும் வரலாற்று நாவலாசிரியர்களின் வரிசையில் வைத்துப் போற்றப் பெறுகின்ற அளவுக்குத் தன்னை வளர்த்துக் கொண்டவர் விக்கிரமன்.

## பிறப்பும் கல்வியும்

"நந்திபுரத்து நாயகி என்பது விக்கிரமன் தந்த வரலாற்று நாவல்"[17] என்று மு.வ.அவர்களால் இலக்கிய வரலாற்றில் பேசப்பெறும் வரலாற்று நாவலாசிரியர் விக்கிரமன் 1928 ஆம் ஆண்டு மார்ச் பத்தொன்பதாம் நாள் (பிரபவ வருடம், பங்குனி மாதம் ஐந்தாம் நாள்) செவ்வாய்க்கிழமை திருச்சிராப்பள்ளியில் பிறந்தார். பெற்றோர் சுப்பிரமணிய ஐயர், லெட்சுமி அம்மையார் ஆவர். இத்தம்பதியருக்குப் பிறந்த முதல் நான்கு குழந்தைகளும் இறந்துபடவே ஐந்தாவது குழந்தை இறையருளால் நிலைக்க வேண்டும் என்று சென்னையிலுள்ள ஆலந்தூர்க் கோவில் வேம்பிலியம்மனுக்கு வேண்டிக் கொண்டனர். அதன்படிக் குழந்தை நலமாய்ப் பிறக்க வேம்பிலி அம்மன் அருளைநினைந்து குழந்தைக்கு 'வேம்பிலி' எனப்

பெயரிட்டனர். அவரே பின்னால் 'வேம்பு' என்றழைக்கப் பெற்ற நாவலாசிரியர் விக்கிரமன் ஆவார்.

கல்வி பயில சென்னை சரஸ்வதி ஆரம்பப்பள்ளியில் சேர்ந்தார். பின்னர் சைதாப் பேட்டையில் உள்ள நகராட்சிப் பள்ளியில் பயின்றார். அதன்பிறகு ஸ்ரீராமகிருஷ்ணா மடத்தைச் சார்ந்த கல்விக் கூடத்தில் சேர்ந்தார். வறுமை காரணமாக அரைக்கட்டணச் சலுகையில் படித்த விக்கிரமன் பின்னர் சிறப்பாகப் படித்து முழுக்கட்டணச் சலுகைக்குரிய உபகாரச் சம்பளம் பெற்றுப் பள்ளிப்படிப்பை முடித்தார்.

அக்காலச் சூழலில் அனைவரும் ஆங்கிலத்தைப் பாடமாக எடுத்துக் கல்வி கற்பதை முதன்மையாகக் கொண்டிருந்தனர். ஆனால் இவர் பள்ளி மாணவர் பருவத்திலேயே தமிழின்மேல் தீராத ஆர்வம் கொண்டதன் விளைவாகத் தமிழை முதன்மைப் பாடமாக எடுத்துப் படித்தநிலை கருதத்தக்கதாகும். விக்கிரமன், தந்தையின் ஊக்கத்தால் எட்டு வயதிலேயே பாரதியைப் பற்றி உணர்ந்து கொண்டார்.

### *விளையும் பயிர்*

விக்கிரமன் சிறுவயதிலேயே படிப்பிலும் எழுத்திலும் அதிக ஆர்வமுடையவராகத் திகழ்ந்தார். வடுவூர் துரைசாமி ஐயங்கார், ஜே.ஆர்.செல்வராஜு, வை.மு.கோதைநாயகி அம்மாள் போன்றோரின் எழுத்துக்களை விரும்பிப்படித்து வந்தார். ஆனந்தவிகடன், பிரசண்ட விகடன் முதலிய இதழ்கள் அவரது விருப்பத்திற்கு உகந்த இதழ்களாகத் திகழ்ந்தன. பள்ளியில் பயிலும்போதே 'பரமஹம்சா', 'தமிழ்ச்சுடர்' ஆகிய கையெழுத்துப் பிரதிகளை வெளியிட்டார். பிறகு 'கலாவல்லி', 'நந்தி' முதலிய கையெழுத்துப் பிரதிகளும் இவரது முயற்சியால் வெளிவந்தன. பிற்காலத்தில் இதழ்கள் பலநடத்தி 'அமுதசுரபி' என்ற சிறந்த இதழின் ஆசிரியராகத் திகழும் விக்கிரமனின் இளமைப் பருவம் படைப்பிலக்கியம் மீதும் இதழ்கள் மீதும் ஆர்வம் உடையதாகத் திகழ்ந்துள்ளமையை உணரலாம்.

## முதலும் வளர்ச்சியும்

எழுதவேண்டும் என்ற ஆர்வம் விக்கிரமனுக்கு இளமைப் பருவத்திலேயே இருந்தது. இவரது முதல் சிறுகதையான ‘நண்பா மறந்து விட்டாயா’ என்ற கதை 1942 இல் மாலதி என்ற இதழில் வெளியாகியது. அதைத் தொடர்ந்து ‘வள்ளிக்கணவன்’, ‘விளையாட்டுக் கல்யாணம்’ என்ற சிறுகதைகள் வெளிவந்தன. கல்கி அப்பொழுது நடத்திய சிறுகதைப் போட்டிக்கு ‘கண்டக்டர் கந்தப்பன்’ என்ற சிறுகதையை விக்கிரமன் அனுப்பியிருந்தார். அது பிரசுரத்திற்கு ஏற்ற கதையாக ஏற்றுக்கொள்ளப் பெற்றது. அக்கால கட்டத்தில் ‘சுதேசமித்திரன் பத்திரிகையில்’ இவரது ‘படகோட்டியின் பாசம்’ என்ற சிறுகதையும் வெளிவந்தது. விக்கிரமன் தொடர்ந்து சிறுகதை படைப்பதில் தனித்திறம் காட்டினார். அவர் எழுதிய சிறுகதைகள் தொகுக்கப் பெற்று நூல்களாக வெளிவந்துள்ளன.

### பணிநிலை

பள்ளிப் படிப்பை முடித்த பிறகு தொடர்ந்து கல்வி கற்பதற்கான சூழல் இல்லையாதலால் ஸ்பென்சர் கம்பெனியில் வேலையில் சேர்ந்தார். எழுத்துலகில் ஆர்வம் கொண்டிருந்த விக்கிரமனுக்கு ஸ்பென்சர் கம்பெனி வேலை பிடிக்கவில்லை. அதனால் சின்ன அண்ணாமலையும், சாவியும் சேர்ந்து நடத்திய ‘வெள்ளிமணி’ பத்திரிக்கை அலுவலகத்தில் வேலைக்குச் சேர்ந்தார். வெள்ளிமணிக்காக விக்கிரமன் அரும்பாடுபட்டு உழைத்தாலும் அப்பத்திரிக்கையின் நிதிநிலை நாளுக்குநாள் நலிந்தது. ஊழியர்களுக்குச் சம்பளம் கொடுப்பதே கடினமாகிவிட்டது. அதனால் அலுவலகத்தை விட்டு விலகிச் சின்ன அண்ணாமலையின் ‘தமிழ்ப்பண்ணைப்’ பதிப்பகத்திலேயே பணியாற்றத் தொடங்கினார்.

## ஆசிரியரின் தணியாத ஆர்வம்

விக்கிரமன் குழந்தை இலக்கியம், சிறுகதை, கவிதை, கட்டுரை, நாடகம், நாவல் முதலிய இலக்கியங்களைப் படைத்த போதிலும் நாவல்

இலக்கியம் படைப்பதில் அவரது பணி சிறப்பிற்குரியது எனலாம். நாவலிலும் சமூகநாவல், வரலாற்று நாவல் என்ற இரண்டு பிரிவிலும் நாவல்கள் எழுதினாலும் வரலாற்று நாவல்களை மிகுதியாக எழுதியுள்ளார். "நான் வரலாற்று நாவல் எழுதுவதற்குக் காரணம் கல்கி அவர்கள் எழுதிய வரலாற்று நாவல்கள்தாம். அவர் வரலாற்று நாவல் எழுதுவதற்கு முன்பாக வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்களைப் பற்றி எழுதியுள்ளார். குறிப்பாக மாமல்லை, அஜந்தா போன்ற இடங்களைச் சொல்லலாம். எனது வரலாற்று நாவல்கள் நூல்களாக வருவதற்கு முன்பே 1946ல் 'மாமல்லபுரம்' என்ற நூலைக் கையெழுத்துப் பிரதியாக எழுதினேன். அதைத் தவிர இன்றுவரை மாமல்லபுரத்தைப் பற்றிய தமிழ் நூல்கள் இல்லை. மாமல்லபுரத்தைப் பற்றிய நூல் எழுதுவதற்கு எடுத்துக் கொண்ட முயற்சி, ஆர்வம் என்னை வரலாற்று நாவல் எழுதச் செய்தது"[18] என்று விக்கிரமன் கூறும் கூற்றால் வரலாற்று நாவல் எழுதுவதில் அவருக்கிருந்த ஆர்வத்தை உணரலாம்.

வரலாற்றுச் செய்திகளை எழுதுவதில் ஆர்வம் கொண்ட விக்கிரமன் அதை வரலாறாக மட்டும் கருதாமல் மனித சமுதாயத்திற்குப் பயன்படக்கூடிய சிறந்த இலக்கியமாக்கும் தன்னம்பிக்கையோடு நாவல்களைப் படைத்துள்ளார்.

"ஒவ்வொரு குடிமகனும் கண்ணியமாக வாழ நாட்டை அறிந்து கொள்ள வேண்டும். நாட்டை அறிந்து கொள்ள நாட்டின் வரலாற்றை அறிந்து கொள்ள வேண்டும் என்பது எனது கருத்து. இளைஞர்களுக்காக நான் வரலாற்று நூல்களும் எழுதியுள்ளேன்"[19] என்று விக்கிரமன் கூறியுள்ளார். விக்கிரமன் முதன் முதலாக எழுதிய வரலாற்று நாவல் 'பரிவாதினி' (1956) ஆகும்.

கல்கி எழுதிய பொன்னியின் செல்வனைத் தொடர்ந்து சோழவரலாற்றை நாவல்களில் வடித்த பெருமை விக்கிரமனுக்கு உண்டு. கல்கி 'பொன்னியின் செல்வன்' என்ற நாவலை ஒரு கால வரையறையோடு

நிறைவுசெய்தார். அப்போது அவர் எழுதிய குறிப்பில் "இந்தக் கதையின் ஆசிரியனைவிட அறிவிலும், ஆற்றலிலும், ஆராய்ச்சியிலும் மிக்கவர்கள் வருங்காலத்தில் சோழ சரித்திரத்தை அடிப்படையாகக் கொண்ட பல மகோன்னதமான நவீனங்களை எழுதித் தமிழ்ச் சமூகத்துக்கு மேலும் மேலும் தொண்டு செய்வார்கள் என்று நம்புகிறேன் என்று எழுதியுள்ளார்."[20] இக்குறிப்பின்படி கல்கியைத் தன் குருநாதராக எண்ணிய விக்கிரமன் 'நந்திபுரத்து நாயகி' (1961) முதலான வரலாற்று நாவல்களைப் படைத்துள்ளார். (ஆசிரியரின் வரலாற்று நாவல்களின் அட்டவணை, பின்னிணைப்பில் சேர்க்கப்பெற்றுள்ளது)

## கவிதை

இக்கால இலக்கிய வகைகளில் முதன்மை பெறுவது கவிதை என்பது விக்கிரமனின் எண்ணம். "ஒவ்வொரு கவிதைக்குள்ளும் ஒரு கதை உண்டு என்பதால் அதை நான் எப்போதும் விரும்புவது உண்டு"[21] என்கிறார். விக்கிரமனது ஒருசில கவிதைகள் தவிர மற்றவை யாவும் கையெழுத்துப் பிரதியாகவே உள்ளன. சாதிக்கொடுமை, பகுத்தறிவுச் சிந்தனை, நாட்டுப்பற்று, மொழிப்பற்று, சுதந்திரவேட்கை முதலிய கருத்துக்களைக் கொண்ட கவிதைகளை விக்கிரமன் படைத்துள்ளார். (கவிதைப் படைப்புக்களின் விபரம் பின்னிணைப்பில் உள்ளது)

## கட்டுரை

விக்கிரமன் கட்டுரை எழுதுவதில் ஆற்றல் பெற்றவர். அவரது 'சிற்பம், சித்திரம், கோபுரம், கோயில்' என்ற நூல் கட்டுரைத் திறனுக்குச் சான்றாக அமையும். தஞ்சைப் பெருங்கோயிலைப் பற்றிய கட்டுரையில் இராசராசனின் அற்புதங்களைச் சித்தரித்துக் காட்டும் ஆசிரியர் அங்குள்ள ஓவியங்கள் கண்டுபிடிக்கப் பெற்ற வரலாற்றையும் தொட்டுக் காட்டுகிறார். 'அமுதசுரபி' இதழில் பல கட்டுரைகள் எழுதியுள்ளார்.

## நாடகம்

விக்கிரமன் இளம் வயதிலிருந்தே நடிப்புத் திறமை பெற்றவராயிருந்தார். அவர் நடித்த பல நாடகங்களுள் ‘கபீர்தாஸ்’ நாடகம் குறிப்பிடத்தக்கது. சிலப்பதிகாரத்தின் துணைகொண்டு ‘மாதவியின் தியாகம்’ என்ற தலைப்பில் ‘சானவி’ என்ற புனைபெயர் கொண்டு கற்பனை கலந்த ஓர் நாடகத்தைக் கொடுத்திருக்கிறார். தமது இதழில் சமுதாயத்திற்கு உதவும் வகையில் சமூக நாடகங்களை விமர்சனம் செய்துள்ளார்.

## புனைபெயர்கள்

பல்வேறு நூல்களையும், இதழ்களையும் உருவாக்கிய விக்கிரமன் பல புனைபெயர்களைக் கொண்டு தம் படைப்புக்களை வெளியிட்டிருக்கிறார். விக்கிரமன் என்பது அவர் வைத்துக்கொண்ட புனைபெயர். “கல்கியின் நாவல்களை விரும்பிப் படிக்கும் விக்கிரமன் அவரது ‘பார்த்திபன் கனவு’ என்ற நாவலில் வரும் பாத்திரமான விக்கிரமனால் ஈர்க்கப் பெற்றார். அன்றிலிருந்து தன்பெயரை விக்கிரமன் என்று வைத்துக்கொண்டார்.”[22] அப்பெயரே நிலைத்துவிட்டது. மேலும் ‘சானவி’, ‘பூ’, ‘எஸ்.வி’, ‘வே.ராஜ்யா’, ‘சுயோதனன்’, ‘மாம்பலக் கவிராயர்’, ரா.சங்கரி, திரிபுவனன், விசித்திரசித்தன் முதலிய புனைபெயர்களில் எழுதினார். இப்பெயர்கள் எல்லாம் அவ்வப்போது தோன்றுகின்ற மனநிலையில் வைத்துக் கொண்டவை என்று நினைவுகூர்கிறார்.

## ஆசிரியரும் அமுதசுரபியும்

இன்று வெளியாகும் இதழ்களில் தனித்ததோர் இடம் பெற்றுப் பொலிவது ‘அமுதசுரபி’ என்னும் இதழாகும். வே.இலட்சுமணனை ஆசிரியராகக் கொண்டு தொடங்கப் பெற்ற அமுதசுரபியை விரைவிலேயே நிறுத்திவிடும் நிலை உருவானது. விக்கிரமன் அதைத் தான் ஏற்று நடத்துவதாகக் கூறி 1950ஆம் ஆண்டு மார்ச் மாதம் முதல் ஆசிரியர், நிர்வாகி என்ற இரண்டு பொறுப்புக்களையும் ஏற்றார். அப்போது அவருக்கு

வயது இருபத்தி ஒன்று, கல்கி, சாண்டில்யன் முதலிய வரலாற்று நாவலாசிரியர்கள் அமுதசுரபியில் எழுதினர். தமிழுக்கென முழுமையாக அர்ப்பணித்துக் கொண்ட இதழாக அமுதசுரபி விளங்கியது.

"பத்திரிகையாசிரியர் நிலைத்த நன்னோக்கம் உடையவராயிருப்பின் அவரால் உருவாக்கப்படும் பத்திரிகையிலும் அந்நோக்கம் அமைந்து கிடக்கும்"[23] என்பதற்கேற்ப ஆசிரியரின் நல் நோக்கத்தாலும், உழைப்பாலும் அமுதசுரபி ஐம்பத்து நான்காண்டு காலமாகப் புகழ் பரப்பிவருகிறது. கவிதை, சிறுகதை, நாவல், கட்டுரை, நாடகம் என்ற இலக்கிய வகைகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. பக்தியைப் பரப்புகிறது. பலபரிசுப் போட்டிகளை நடத்துகின்றது. மூதறிஞர் இராசாஜியின் வாழ்த்தையும், பாராட்டையும் பெற்றுத் திகழ்கிறது.

### *பிற இதழ்ப்பணி*

தமிழ்ப் பண்ணைப் பதிப்பகத்தில் பணியாற்றிய போது 'குருவி' என்ற வார இதழ் ஒன்றின் ஆசிரியராக இருந்தார். அது நான்கு இதழ்களுக்குப் பின் நின்றுவிட்டது. 1992 முதல் 'தமிழரசி' என்ற இதழின் சிறப்பாசிரியராகப் பணியேற்று அதைக் குறுகிய காலத்திலேயே பிரபலமாக்கினார். அமுதசுரபியில் வெளியிடமுடியாத சில செய்திகளை வெளியிடுவதற்காகச் 'சுந்தரி' என்ற இதழை 1972 முதல் தொடங்கினார். தற்போது 'இலக்கிய பீடம்', 'இலக்கிய நந்தவனம்' என்ற இதழ்களையும் நடத்தி வருகிறார். ஒன்பது வயதில் கையெழுத்துப் பிரதியைத் தொடங்கிய விக்கிரமன், இதழ்ப்பணிகளில் தன்னைத் தொடர்ந்து ஈடுபடுத்திக் கொண்டுள்ளார்.

### *பல்துறைப் பணிகள்*

விக்கிரமன் படைப்பாளியாகவும், இதழாசிரியராகவும் இருந்ததோடு மட்டுமல்லாமல் பல்வேறு துறைகளில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். அவரிடம் இருந்த சமூக உணர்வு அவரை எல்லாத் துறைகளிலும்

பங்கு பெறச் செய்தது. தமிழ் வளர்ச்சித்துறை, தமிழ்நாடு இயல்இசை நாடகமன்றம், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனக் கரும்பலகைத் திட்டம், சிறந்த திரைப்படத்தேர்வுக் குழு, நடிக நடிகையர் தேர்வுக்குழு, மதுவிலக்குப் பிரச்சாரக்குழு, என்று அரசுத்துறைகளின் கீழ் இயங்கிவரும் பல்வேறு குழுக்களில் பலமுறை பணியாற்றிய பெருமை விக்கிரமனுக்கு உண்டு.

## *ஆசிரியரும் சங்கங்களும்*

விக்கிரமனின் வளர்ச்சிக்கு அடித்தளம் அமைத்தவர் அவர் தந்தை. பாரதியின் பால் ஈடுபாடு கொண்ட அவரது தந்தை, மகனையும் அதே ஈடுபாட்டோடு வளர்த்தார். அதன் காரணமாக விக்கிரமன்.

பாரதி ராட்டைக் கழகம் (1945)

பாரதி கலைக் கழகம் (1951)

தமிழ் இலக்கிய மன்றம்

முதலிய சங்கங்களை அமைத்து இளைஞர்களுக்கு நாடு, மொழி பற்றிய உணர்வுகளை ஊட்டினார். “சிறுவர் சங்கங்கள் மூலம் அவர்களிடையே கலை ஆர்வத்தை, இலக்கிய உணர்வை ஊட்டி ஒருமைப்பாட்டை வளர்த்துள்ளார்”[24] மாணவர்களுக்குப் படிப்பார்வத்தைத் தூண்டப் ‘பூச்செண்டுச் சங்கம்’ (1956) ஒன்றையும் ஏற்படுத்தினார். எழுத்தாளர்களுக்கென்று பல வசதிகளைச் செய்து தரவும் இலக்கிய விழாக்கள் நடத்தவும் போட்டிப் பரிசுகள் வழங்கவும் புதிய எழுத்தாளர்களை ஊக்குவிக்கவும் விக்கிரமனும் பிற எழுத்தாளர்களான கல்கி, அகிலன், சாண்டில்யன், ம.பொ.சி.முதலியோரும் விரும்பினர். அதன் பயனாகக் கல்கி தலைமையில் எழுத்தாளர் சங்கம் (1950) முதன் முதலில் அமைந்தது. கல்கி மறைவிற்குப் பிறகு பலர் தலைமை ஏற்றனர். 1968 முதல் விக்கிரமன் எழுத்தாளர் சங்கத்தலைவராகப் பொறுப்பேற்று இன்றுவரைச் சிறப்பாகச் செயல்பட்டு வருகிறார். ‘எழுத்தாளர் நலநிதி அறக்கட்டளை’ என்ற ஓர் அமைப்பை ஏற்படுத்தி முதிர்ந்த எழுத்தாளர்களுக்கும் பணஉதவி

தேவைப்படும் எழுத்தாளர்களுக்கும் ஒவ்வொரு மாதமும் ரூ.500 ஓய்வூதியமாகக் கிடைக்கச் செய்கிறார். இந்தியாவிலேயே இப்படியொரு அமைப்பை முதன்முதலாக நிறுவியவர் விக்கிரமனேயாவார்.

### பாராட்டும், பட்டமும், பரிசும்.

வரலாற்று நாவலாசிரியர் விக்கிரமன் பற்றித் தமிழுலகம் அறிந்திருந்தாலும் அவரது சிறப்புக்களை மேலும் தெரிந்து கொள்வதற்கு அவரது படைப்புக்கள் பயன்படுவதைப்போல அவரைப்பற்றிய நூல்கள் துணையாகின்றன. அறிஞர்களும் ஆராய்ச்சியாளர்களும் பாராட்டிப் பேசிய பேச்சின் வாயிலாக அவரது சிறப்பை அறியலாம்.

"கல்கியின் மறைவுக்குப்பின் விக்கிரமன் சரித்திர நாவல்களே தமிழகத்தில் தனி ஆட்சி புரிகின்றன."[26] என்று உலகக் கவிஞர்கள் அமைப்பின் தலைவர் டாக்டர் கிருஷ்ணநிவாஸ் சிறப்பித்துள்ளார். இச்செய்தியிலிருந்து வரலாற்று நாவலில் தனிச்சிறப்புப் பெற்ற கல்கியின் வரிசையில் வைத்துப் பேசப்பெறும் நிலையில் விக்கிரமன் உயர்ந்துள்ள தன்மையை அறியலாம்.

1953 இல் விக்கிரமன் 'ராமபாதம்' என்ற நாடகத்தில் நடித்தபோது கல்கியால் பாராட்டப்பெற்ற பெருமைக்குரியவர். 'பரிவாதினி' என்ற நாவல் மூன்று முறை நாடகமாக நடந்தது. அப்போது விக்கிரமன் இயக்குநர் ஸ்ரீதர், டி.கே.சண்முகம் முதலியோரின் பாராட்டைப் பெற்றுள்ளார்.

'யாழ்நங்கை' நாடகமாக அரங்கேறிய போது அறிஞர் அண்ணா தலைமைதாங்கிப் பாராட்டியுள்ளார். சுத்தானந்த பாரதி, கி.வா.ஜ, வா.செ.குழந்தைசாமி, கி.வேங்கடசுப்பிரமணியன் போன்றோரின் பாராட்டையும் பெற்றவர்.

விக்கிரமன் தனது வரலாற்று நாவல்களில் அறுபது சதவிகிதம் வரலாறும், நாற்பது சதவிகிதம் கற்பனையும் கலந்து எழுதுவதாகக் கூறுகிறார். வரலாற்றறிவும் வரலாற்றின்பாலுள்ள ஈடுபாடுமே அவரை வரலாற்று நாவல் எழுதத் தூண்டியது. இதை, "விக்கிரமனுக்கு வரலாற்றின்பால் உள்ள ஈடுபாடே

இவ்வளவு நாவல்களைச் சிறப்பாகப் படைக்கக் காரணம்"[27] என்று தொல்பொருள் துறையின் முன்னாள் இயக்குநர் இரா.நாகசாமி பாராட்டியுள்ளார். சிலம்பொலி செல்லப்பன், கலைஞர் கருணாநிதி போன்றோரும் வாழ்த்தத் தவறவில்லை.

"இலக்கியங்களை உருவாக்குவது மட்டுமல்ல. இதய அன்பை வளர்ப்பதே பேனாவின் வேலை. இந்த உண்மை வாழ்வு முழுவதும் தொடர்ந்துவரப் பயணம் போகிறவர் விக்கிரமன். எளிமையும், இனிமையும், புனிதமனமும் கொண்ட ஓர் இலக்கியத் தபோவன முனிவராகவே நான் அவரைக் கண்டேன்"[28] என்று கவிஞர் காமராசன் பாராட்டுகிறார். வரலாற்றைப் பின்புலமாகக் கொண்ட விக்கிரமன் படைப்புக்களில் வரலாற்றுக் காலம், வரலாற்றுக் கால நிகழ்வுகள், திருக்குறள் சிந்தனை, புராண அறிவு, வாழ்க்கைத் தத்துவம், சமூக அமைப்புக்கள் அனைத்தும் வெளிப்படுவதால் அவ்வத் துறைகளில் துறைபோகியோரின் பாராட்டுக்கள் பலவற்றைப் பெற்றுத் திகழ்கிறார்.

தமிழ் எழுத்துலகில் தொடர்ந்து சாதனை செய்துவரும் விக்கிரமன் பட்டங்கள், பரிசுகள் பலபெற்ற சிறப்பாளர். அவர்பெற்ற பட்டங்களின் விபரங்களும், பரிசுகளின் விபரங்களும் அட்டவணைப் படுத்தப் பெற்றுள்ளன.

அட்டவணை 2.1

## பட்டம் பெற்ற விபரங்கள்

| வ. எண் | பட்டம் | ஆண்டு | பட்டம் வழங்கியோர் விபரம் |
|---|---|---|---|
| 1. | சரித்திரக் கதைச் செம்மல் | 1973 | பாரதி இளைஞர் சங்கம். |
| 2. | "இலக்கிய மாமணி" | 1982 | ஈழத்துப் பாராளுமன்ற உறுப்பினர் இலக்கியக்குழு |
| 3. | 'முத்தமிழ் வித்தகர்' | - | திண்டிவன இலக்கியவிழா |
| 4. | பண்பாட்டுக் காவலர் | - | திருச்சிராப்பள்ளி ஜேசிஸ் சங்கம் |
| 5. | 'சிறுகதைச் சேக்கிழார்' | 1986 | ஆர்.எம்.வீரப்பன் |
| 6. | நற்கதை நம்பி | 1987 | குன்றக்குடி ஆதீனகர்த்தர் தவத்திரு குன்றக்குடி அடிகளார். |
| 7. | கலைமாமணி | 1992 | தமிழ்நாடு இயல் இசைச் சங்கம் சார்பாக வழங்கப்பட்டது. (வழங்கியோர், ஆளுநர் பீம்நாராயண் & முதலமைச்சர் செயலலிதா 26-1-92 அன்று) |
| 8. | கதைக் கலைச்செம்மல் | 1993 | திருவையாறு தமிழய்யா சி.வி.குமாரசாமி பிள்ளை கல்விக்கழகத்தின் சார்பில் வழங்கப்பட்டது. |
| 9. | 'டாக்டர்' | 1978 | அமெரிக்கப்பல்கலைக் கழகம். |
| 10. | மாமனிதர் | 1998 | ஓங்கார ஆசிரமம், பாண்டிச்சேரி. |
| 11. | டி.லிட் | - | இரண்டு முறை உலகப் பல்கலைக்கழகம் வழங்கியது. |
| 12. | கபிலவாணர் விருது | - | திருக்கோவிலூர் பண்பாட்டுக்கழகம். |

அட்டவணை 2.2

## பரிசு பெற்ற விபரங்கள்

| வ. எண் | ஆண்டு | பரிசு | பரிசு வழங்கியோர் |
|---|---|---|---|
| 1. | 1981 | 12,000/- | தமிழக அரசின் தமிழ் வளர்ச்சித்துறை (சோழ இளவரசன் கனவு - சிறந்த நாவல் பரிசு) |
| 2. | - | 25,000/- | எம்.ஏ.சி.அறக்கட்டளை - இராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் விருது (மதுரை மகுடம் வரலாற்றுப் புதினத்திற்காக) |
| 3. | 1988 | 5000/- | தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகம் - தமிழ் அன்னை விருது. |
| 4. | 2003 | பொற்பதக்கம் | ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் காஞ்சி மடத்தில் அமர்ந்த ஐம்பதாவது பொன்விழாவின் போது அளித்த பரிசு. |
| 5. | 2003 | 21/2 லட்சம் பணமுடிப்பு | விக்கிரமனின் எழுபத்தைந்து ஆண்டு நிறைவு விழாவின் போது பவளவிழா குழுவினரால் வழங்கப்பெற்றது) |
| 6. | - | 50,000/- | மன்னார்குடி செங்கமலத் தாயார் அறக்கட்டளை - தமிழ்ப்பணி விருது. |

## முடிவுரை

வரலாற்று நாவல் இலக்கிய வரலாறு நீண்ட பாரம்பரியத்தைக் கொண்டது. வரலாற்றுக்கால அரசியல் மற்றும் சமூகச் சூழலை வரலாற்று நாவலில் பதிவுசெய்வர்.

வரலாறும் கற்பனையும் வரலாற்று நாவல்வகையில் தொடர்புபெறும். மற்றைய நாவல்களைப் படைப்பதைக் காட்டிலும் வரலாற்று நாவல் உருவாக்கத்திற்குக் கூடுதல் முயற்சி தேவை.

வரலாற்று நூலுக்கும் வரலாற்று நாவலுக்கும் வேறுபாடு உண்டு. முன்னது வரலாற்று மெய்ம்மைகளை அப்படியே தரும். பின்னது மெய்ம்மைகளுடன் கற்பனையையும் கலந்து பெற்றிருக்கும். வரலாற்று நாவல்களில் வரலாற்றுக் காலச் சூழல்கள் இருந்தாலும் சமகாலப் பயன்பாட்டிற்கு வரலாற்று நாவல்கள் உதவ வேண்டும். அம்முறையில் வரலாற்று நாவலுக்குப் பயன்பாட்டு நிலை கிடைப்பது உறுதியாகிறது.

வரலாற்று நாவலின் போக்கு, வாழ்க்கை வரலாற்று நூலின் இயல்பு, பிரயாணநூலின் தனித்தன்மை ஆகியவை வரலாற்று நாவலில் இடம் பெற்றிருக்கக் காணலாம். கவிதைப் பண்புகள் வரலாற்று நாவலில் மிகுந்திருக்கும். பொதுவாக அக்காலக் காப்பியத்தின் இடத்தை வரலாற்று நாவல்கள் பிடித்துக்கொண்டன எனக் கருதலாம்.

1895க்கு முன் வரலாற்று நாவல்கள் உருவாக்கம் பெற்றாலும் கல்கிக்குப்பின் புதிய எழுச்சி கிடைத்ததாகக் கூறலாம். கல்கியை முன்மாதிரியாகக் கொண்டு வரலாற்று நாவல்கள் எழுதியவர்களுள் விக்கிரமனுக்குச் சிறப்பான இடமுண்டு.

படைப்பாளர்களின் படைப்புக்களை ஆராய்வதற்கு வாழ்க்கை வரலாற்று அணுகுமுறை உதவும். இந்நிலையில் விக்கிரமனைக் குறித்து அறிந்துகொள்வது பயனுடைய முயற்சியாக அமைகிறது.

திருச்சியில் சுப்பிரமணிய ஐயர், லெட்சுமி அம்மையார் தம்பதியினர்க்கு ஐந்தாவது குழந்தையாகப் பிறந்தவர் விக்கிரமன். வேம்பு என்பது அவரது இயற்பெயராகும். சென்னையில் உள்ள சரஸ்வதி ஆரம்பப்பள்ளி, சைதாப்பேட்டை நகராட்சிப் பள்ளி, ஸ்ரீராமகிருஷ்ண மடத்தைச் சார்ந்த கல்விக் கூடம் ஆகியவற்றில் துவக்கக் காலக் கல்வியைப் பெற்றிருக்கிறார். தமிழை முதன்மைப் பாடமாகப் படித்ததும் எட்டுவயதிலேயே பாரதியை முன்மாதிரியாகக் கொண்டதும் கருதத்தக்கவை. படிக்கும் காலத்தில் கையெழுத்துப் பிரதிகள் நடத்திய திறமுண்டு.

விக்கிரமனின் முதல் சிறுகதை 1924 இல் வெளிவந்தது. அது முதல் தொடர்ந்து எழுத்துலகில் பிரவேசம் செய்தார். பள்ளிப்படிப்பை முடித்தபிறகு வெள்ளிமணிப் பதிப்பகத்திலும் தமிழ்ப்பண்ணைப் பதிப்பகத்திலும் பணியாற்றியிருக்கிறார். நாவல், சிறுகதை, நாடகம், கட்டுரை போன்ற பல இலக்கிய முயற்சிகளில் ஈடுபட்டிருக்கிறார். எனினும் வரலாற்று நாவல் படைப்பதில் பெரும் ஆர்வம் காட்டியிருக்கிறார். இவரது முதல்நாவல் பரிவாதினியாகும்.

கல்கி எழுதிய பொன்னியின் செல்வனைத் தொடர்ந்து நந்திபுரத்து நாயகி (மூன்றுபாகங்கள்) எழுதியுள்ளார். தொடர்ந்து முப்பத்தியிரண்டு வரலாற்று நாவல்கள் எழுதியுள்ளார்.

கல்கியின் 'பார்த்திபன் கனவில்' வரும் விக்கிரமன் என்ற வரலாற்றுப் பாத்திரத்தின் பெயரைத் தன் பெயராக மாற்றிக்கொண்டார். வேறு பல புனைபெயர்கள் இருந்தாலும் விக்கிரமன் என்ற பெயரே நிலைத்து நின்றது.

'அமுதசுரபி' என்ற இதழை நடத்த வாய்ப்புக் கிடைத்தது. அவ்வகையில் இவர் இதழாசிரியராகவும் பரிணமித்திருக்கிறார். 'தமிழரசி' என்ற இதழையும் நடத்தியுள்ளார். 'இலக்கிய பீடம்', இலக்கிய 'நந்தவனம்' இவற்றின் ஆசிரியராகவும் திகழ்கிறார்.

விக்கிரமன் இயல்பாகவே தொண்டு செய்வதில் ஆர்வமுடையவர். ஆகவே சங்கங்களை உருவாக்கிப் பணிபுரிந்திருக்கிறார். கல்கியின் தலைமையில் தொடங்கிய எழுத்தாளர் சங்கம் தற்போது விக்கிரமன் தலைமையில் இயங்கி வருவது கருதத்தக்கது.

அறிஞர்களும் ஆராய்ச்சியாளர்களும் அரசியல் தலைவர்களும் இதழாசிரியர்களும் விக்கிரமன் சாதனைகளைப் பாராட்டியுள்ளனர். தனியார் அமைப்பும் அரசும் மடங்களும் பல்கலைக்கழகங்களும் அவருக்குப் பரிசும் பாராட்டும் வழங்கிய திறம் கருதத்தக்கதாகும்.

கல்கியின் வழித்தடத்தில் நீண்ட பாரம்பரியத்தில் இன்று வாழும் எழுத்தாளரான விக்கிரமன் பன்முகப் பரிமாணங்களை உடையவர்.

## சான்றாதாரங்கள்

1. தா.வே.வீராசாமி, கல்கி அகிலன் படைப்புக்கலை, ப,5.
2. தி.இராசகோபாலன், வரலாற்று நாவல்களில் வரலாற்றுச் செய்திகள், ப,71.
3. இரா.பாலசுப்பிரமணியன், நாவல்களம், ப,9.
4. விக்கிரமன், சித்திரவல்லி, முன்னுரை.
5. இரா.பாலசுப்பிரமணியன், நாவல்களம், ப,75.
6. தி.இராசகோபாலன், வரலாற்று நாவல்களில் வரலாற்றுச் செய்திகள், ப,67.
7. தா.வே.வீராசாமி, தமிழ் இலக்கியக் கொள்கை, ப,111.
8. இரா.தண்டாயுதம், ஓர் இலக்கிய ஆய்வு - தற்காலம், ப,1.
9. கா.சிவத்தம்பி, நாவலும் வாழ்க்கையும், ப,104.
10. ஜெகசிற்பியன், பத்தினிக் கோட்டம், (முதல்பாகம்), பக்,11-12.
11. தி.இராசகோபாலன், வரலாற்று நாவல்களில் வரலாற்றுச் செய்திகள், ப,41.
12. க.கைலாசபதி, இலக்கியமும் திறனாய்வும் (2ஆம் பதிப்பின் முன்னுரை), ப,13.
13. இரா.தண்டாயுதம், ஓர் இலக்கிய ஆய்வு-தற்காலம், ப,43.
14. W.H.Hudson, An introduction to the study of literature, P,10.
15. மீனாட்சி முருகரத்தினம், மேலை இலக்கியத் திறனாய்வு, ப,23.
16. ச.வே.சுப்பிரமணியன், ச.சிவகாமி (ப.ஆ), தமிழ் இலக்கியக் கொள்கை, ப,103.
17. மு.வரதராசனார், தமிழ் இலக்கிய வரலாறு, ப,293.
18. துரை.பன்னீர்ச் செல்வம், விக்கிரமனின் இதழ்ப்பணிகள் ஓர் ஆய்வு, ப,149.
19. மேலது, ப,150.
20. இலக்கியபீடம் - இதழ், ஏப்ரல் 2002, ப,118.
21. காண்க : பின்னிணைப்பு : பேட்டி.
22. காண்க : பின்னிணைப்பு : பேட்டி.
23. துரை.பன்னீர்ச்செல்வம், விக்கிரமனின் இதழ்ப்பணிகள் ஓர் ஆய்வு,, அணிந்துரையில் கி.வேங்கடசுப்பிரமணியன் குறிப்பிட்டது.
24. மு.விவேகானந்தன், வாழும் போதே ஓர் வரலாறு, ப,159.
25. காண்க : பின்னிணைப்பு : பேட்டி.
26. மு.விவேகானந்தன், வாழும் போதே ஓர் வரலாறு, ப,219.
27. மேலது, ப, 229.
28. மேலது, ப,224.

# 3. காதலில் பெண்கள்

மனித வாழ்வு இருதிறத்தது. ஒன்று அகவாழ்வு. மற்றொன்று புறவாழ்வு, காதல் உணர்வு மனித குலத்தில் அனைவருக்கும் பொதுவானது. இயற்கையான வாழ்வியல் சுழற்சியில் காதலுக்குத் தொடர்புண்டு. காதல் உணர்வு வரையறுக்கப்பெற்றுப் பண்பாட்டுடனும், சமுதாயத்தின் விதிமுறைகளுடனும் தொடர்பு பெறுகிறபோது மதிக்கத்தக்கதாகிறது. புலனின்பம் மட்டும் காதலல்ல. புலனின்பத்திற்கும் மேலான மதிப்பும் காதலில் உண்டு என்கிற நிலையில் காதலுக்குச் சமுதாயத்தில் மதிப்பு (Value) உருவாக்கப் பெறுகிறது.

இலக்கியங்கள் தோன்றுகிற காலகட்டங்களின் பண்பாடு மற்றும் சமுதாயச் செய்திகளைப் பதிவுசெய்வது இயல்பானதாகும். அவ்வகையில் விக்கிரமன் தாம் எழுதிய வரலாற்று நாவல்களில் காதல் பற்றிய செய்திகளை எங்ஙனம் பதிவாக்கியுள்ளார் என்பதை மதிப்பிடுவது பயனுடையதாகும். இவ்வியலில் காதல் கருத்துருவாக்கம், வகைப்பாடு, இடம் பெறுவதோடு, விக்கிரமன் நாவல்களில் காதல் கருத்துருவாக்கமும், வகைப்பாடும் இடம் பெற்ற திறத்தை மதிப்பிடும் முயற்சி மேற்கொள்ளப் பெற்றுள்ளது.

## காதல் விளக்கம்

காதல் என்பதற்கு “விருப்பம்”[1] என்ற பொருளை இலக்கியச் சொல்லகராதி சுட்டும். மேலும் காதலுக்குத் தமிழ்பேரகராதி “அன்பு, ஆசை”[2] ஆகியவைகளைப் பொருளாகக் குறிப்பிடும். காதலுக்கு இணையான ஆங்கிலச்சொல் ‘Love’ என்பதாகும். அச்சொல்லுக்கு ஆங்கிலத் தமிழ்க்கையகராதி “நேசம், அன்பு, காதல், அருள், நேசி, அன்புகொள், விரும்பு”[3] என்ற பொருள்களை விரிவாகக் காட்டும். அண்மைக் காலத்தில் உருவான கிரியாவின் தற்காலத் தமிழகராதி காதலுக்குப் பின்வருமாறு விளக்கம் தருகிறது. அதாவது, “இனக்கவர்ச்சி அடிப்படையில் ஆண், பெண்

இருபாலரிடையே தோன்றும் அன்பு, நேசம் காதலாகும்"[4] என்கிறது. பொதுவாகக் "காதல் என்பது வயதுவந்த ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே மலரும் அன்பு"[5] என்று வரையறைப்படுத்துகின்றனர்.

அவ்வகையில் காதல் என்பது விருப்பம், ஆசை ஆகிய பண்புகளை அடிப்படையாகக் கொண்டு இருபாலரிடத்துத் தோன்றும் அன்பாகும். துவக்கத்தில் இனக்கவர்ச்சி இருந்தாலும் காலப்போக்கில் அன்பின் முதிர்ச்சியையே காதலுக்குரிய பொருளாக வரையறுக்கலாம்.

## காதல் அன்றும் இன்றும்

"எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது தானமர்ந்து வரூஉம் மேவற்றாகும்"[6] என்பது தொல்காப்பியர் கருத்தாகும். இக்கருத்தை எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது தான் மனம்பொருந்திவரும் விருப்பத்தை உடைத்து என்றவாறு என்று இளம்பூரணர் விளக்குவார். அவ்வகையில் இன்பம் என்பது அவரவர் மனத்தில் ஏற்படும் விருப்பம் என்ற அடிப்படையில் தொல்காப்பியர் அகத்திணைக் கோட்பாட்டினை உருவாக்கியுள்ளார்.

தொல்காப்பியரின் அகத்திணைக் கோட்பாட்டினை ஒட்டிச் சங்க இலக்கியம் அமைந்ததிறம் கருதத்தக்கதாகும். 'களவு' மற்றும் 'கற்பியல்' சார்ந்த துறைகளை மையமிட்டுச் சங்கப்பாடல்கள் அமைந்துள்ளன. அப்பாடல்களில் காதல் பற்றிய பலசெய்திகள் பதிவாகியுள்ளன. எடுத்துக்காட்டு விளக்கத்திற்காகச் சிலவற்றைக் குறிப்பிடலாம்.

"யாயும் ஞாயும் யாராகியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயல் நீர்போல
அன்புடை நெஞ்சம் தாங்கலந்தனவே"[7]

முன்பின் தெரியாத ஓர் ஆணும் பெண்ணும் சந்தித்து நட்பாகி அஃது காதலாகிப் பரிணமிப்பது இவ்வகையில் அடங்கும். தாய் தந்தை தெரியாத

நிலையில் இருவரது அன்பும் கலந்த தன்மையை நல்ல உவமை மூலம் புலவர் வெளிப்படுத்துகிறார்.

காதல் அளப்பரியது என்பதைக் கீழ்க்காணும் சங்கப்பாடல் வரிகள் உணர்த்தக் காணலாம்.

"பெரிதே காமமென் உயிர்தவச் சிறிதே"[8]

"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரள வின்றே"[9]

உடலுக்கு உயிர் எவ்வளவு முக்கியமோ அதுபோலத் தலைவனது நட்பு அல்லது காதல் முதன்மையானது என்பதை வலியுறுத்தும் நிலையில்,

"...............யாக்கைக்கு
உயிரியைந்தன்ன நட்பின் அவ்வுயிர்
வாழ்தல் அன்ன காதல்
சாதல் அன்ன பிரிவறியோளே"[10]

என்ற பாடல் வரிகள் அமைந்திருப்பது கருதத்தக்கதாகும்.

அகத்திணை மரபுகள் சங்க இலக்கியத்தில் போற்றப் பெற்ற அளவு பிற்காலத்தில் பின்பற்றப் பெறவில்லை. எனினும் அகத்திணை மரபுக் கூறுகள் அவ்வக்கால இலக்கிய வகைகளில் சிலவாக இடம்பெற்றே வந்துள்ளன. சங்கப்பாடல்கள் துறைசார்ந்து தன்னுணர்ச்சிப் பாடல்களாக இருந்தன. பிற்காலத்தில் கதைப் பொருளை மையமிட்டு நீண்ட போக்கில் இலக்கிய உருவாக்கம் தோன்றியது. அவ்வகையில் அச்சூழலுக்கு ஏற்ற வகையில் அகத்திணைக் கூறுகள் இடம் பெற்றதாகக் கருதலாம்.

சங்ககாலச் சமுதாயத்தில் போர் முதன்மை பெற்றது. போரின் காரணமாக அமைதியின்மை, பாதுகாப்பின்மை, அச்சம் மற்றும் பல சீரழிவுகள் தொடர்ந்து இருந்தன. அரசியல், பொருளாதாரம் ஆகியவற்றில் நிலைத்த தன்மை இல்லாததால் மக்கள் பாதிக்கப் பெற்றனர். இந்நிலையிலிருந்து மீட்சி பெறுவதற்குச் சான்றோர்கள் ஈடுபட்ட முயற்சிகளில் இலக்கிய முயற்சியும்

ஒன்று. நீதியை மையமிட்ட இலக்கியங்களை உருவாக்கத் தொடங்கினர். அறங்கள் சார்ந்த இலக்கியங்கள் வளம்பெறத் தொடங்கின. இவ்வகை இலக்கியங்களில் அகத்திணைக் கோட்பாடு பின்பற்றப்படுவதற்கு வாய்ப்பு இல்லையெனக் கருதலாம்.

காப்பியவகை தோன்றிய காலகட்டத்தில் அகக்கோட்பாட்டு மரபுகள் அவ்வாறே பின்பற்றப் படவேண்டிய சூழ்நிலை இல்லை. இலக்கிய வகைக்கும் சமூகச் சூழலுக்கும் ஏற்றவகையில் தேவையான அகமரபுச் சிந்தனைகள் காப்பியங்களில் பரவலாகப் பதிவாகின. எடுத்துக்காட்டாகச் சில பாடல்களைக் காணலாம்.

அன்பின் மிகுதியால் தலைவன், தலைவியை நலம் பாராட்டும் பண்பைச் சிலம்பு,

“மாசறு பொன்னே வலம்புரி முத்தே
காசறு விரையே கரும்பே தேனே
அரும்பெறற் பாவாய் ஆருயிர் மருந்தே
பெருங்குடி வாணிகன் பெருமடமகளே
மலையிடைப் பிறவா மணியே என்கோ
அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ
யாழிடைப் பிறவா இசையே என்கோ”[11]

என்று எடுத்தியம்புகிறது. இங்குக்கோவலன் கண்ணகியைப் பாராட்டுகிறான். தொல்காப்பியம் குறிப்பிடும் ‘நலம்பாராட்டல்’ இங்கு இணைத்து ஒப்புநோக்கத் தக்கது.

சீவக சிந்தாமணியில் காதல் தலைவன் தன் தலைவியைத் தன் உயிராய்க் கொண்டுள்ள தன்மையை,

“விள்ளாவிய னெடுந்தேர் வேந்தன்
காதல் மடமகளே!
கள்ளாவி கொப்பளிக்குங் கமழ்பூங்

கோதா யென் மனத்தின்

உள்ளாவி யுள்ளாய் நீயொழிந்தாய்

அல்லையெனக் கையிற்

புள்ளாவிச் செங்கழுநீர்க் குவளை

செய்தாள் புனைபூணாள்"[12]

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

பக்தி இலக்கியங்களில் பேசப்பெற்ற காதல் இறைவனை மையப்படுத்தியதாக அமைகிறது. பக்தி இலக்கியங்கள் நாயகநாயகி பாவத்தில் காதலை வெளிப்படுத்துகின்றன. பக்தியில்கூட காதல் மேன்மைப் படுத்தப்படுவது இங்கு கருதத்தக்கது. சைவம், வைணவம் என்ற இருபிரிவுகளிலும் இறைவனைத் தலைவனாகக் கொண்டு அவன்மீது காதல் மீக்கூரப்பெற்றுத் தலைவியர் திகழ்ந்ததாக அடியார்கள் எழுதுகின்றனர். இறைவன் மீது காதலாகிக் கசிந்து கண்ணீர் உகுத்த காதல் துறைப் பாடல்கள் பக்தி இலக்கியங்களில் காணப்படுகின்றன.

தோழி தலைவனை (இறைவனை) இயற்பழித்துரைத்தலும், தலைவி இயற்படமொழிதலும் அமைத்தபாடல்,

"கானார் புலித்தோல் உடைதலை ஊண் காடுபதி

ஆனால் அவனுக்கிங்கு ஆட்படுவோர் ஆர்ஏடீ

ஆனாலும் கேளாய் அயனும் திருமாலும்

வான்நாடா கோவும் வழியடியார் சாழேலோ"[13]

- என்பதாகும். பக்தி இலக்கியங்களில் சித்தரிக்கப்பெறும் காதல் இறைக்காதலாக அமைந்து அவ்விலக்கியங்கள் இறைக்காதலால் மேன்மைப்படுத்தப் படுகின்றன.

காதலர்களிடையே தோன்றும் ஊடற்பண்பைக் கம்பராமாயணத்தின் வழி உணரலாம்.

"காரென்ன கூந்தற் குயிலன்னவள் கண்புதைப்ப

ஆரென்னலோடும் அனலென்ன வெதும்புகிறாள்"[14]

- தன் தலைவனைத் தான் கண்புதைத்த அளவில் தன்னைக் கண்டுகொள்ளாமல் யார் என்று கேட்கிறாளே! வேறுசில பெண்களும் இவன் கண் புதைப்பதுண்டோ என்று ஊடுகின்ற தலைவியின் மிகுதிக்காதல் இங்கு வெளிப்படுகிறது. இது போன்ற அகக் கருத்துக்கள் ஆங்காங்கே கம்பராமாயணத்தில் பதிவாகியுள்ளன.

சிற்றிலக்கியங்கள் இறைக்காதலால் முகிழ்த்தவை என்பதையும். அக்காதல் தமிழரின் அகக்கோட்பாட்டின்படி அமைந்தவை என்பதையும் கீழ்க்காணும் கருத்து அரண் செய்கிறது. "காதலர்களுக்கிடையே நிகழும் அன்பின் ஐந்திணை ஒழுக்கத்தை விழுமியதாகக் கொண்ட தமிழர்கள் இறைநிலையிடத்துச் செலுத்தும் அன்பினையும் அவ்வைந்திணை ஒழுக்கத்தின் பாற்படுத்துப் பாப்புனையும் வழக்கத்தினையும் மேற்கொண்டார்கள். அத்துறையில் முகிழ்த்த ஒன்றே கலம்பகம் ஆயிற்று."[15] என்ற கருத்து, சிற்றிலக்கியக் காதலை விளக்கக் காணலாம்.

இருபதாம் நூற்றாண்டுக் கவிஞர்கள் காதலை உயர்வாகவும் எளிமையாகவும் அழகாகவும் பாடுகின்றார்கள். பாரதி,

"காதலினால் மானுடர்க்குக் கல்வியுண்டாம்
கல்வியிலே மானுடர்க்குக் கவலை தீரும்
காதலினால் மானுடர்க்குக் கவிதையுண்டாம்
கானமுண்டாம் சிற்பமுதற் கலைகளுண்டாம்
ஆதலினால் காதல் செய்வீர் உலகத்தீரே
அஃதொன்றே இவ்வுலகத் தலைமை இன்பம்
காதலினால் சாகாமல் இருத்தல் இன்பம்
கவலைபோம் அதனாலே மரணம் பொய்யாம்"[16]

என்று பாடியுள்ளார். காதல் என்பது கல்வி தருவது, கவிதை தருவது, கவலை

தீர்ப்பது. கலைகள் தருவது. உலகின் தலைமை இன்பம் தருவது. மரணத்தைப் பொய்யாக்கும் வல்லமை பெற்றது என்ற காதல்செய்திகள் பாரதியின் இப்பாடலில் பெறப்படுகிறது.

பாரதி வழியில் வந்த பாரதிதாசன் காதற்சிறப்பைத் தம் பாடல்களில் பலவாறு புலப்படுத்துகிறார்.

"ஒட்டும் இரண்டுளத்தைத் - தம்மில்
ஓங்கிய காதலினை- என்றும்"
"காதல் இல்லாவிடம் சூனியமாம் - புவி
காதலினால் நடக்கும்"[17] என்றும் பாரதிதாசன் காதலின் இன்றியமையாமையைப் புலப்படுத்துகிறார்.

முன்பின் அறியாத உள்ளங்கள் காதல்கொண்டு, உயிருக்குயிராய்த் திகழ்ந்து, அளப்பரிய காதலாய் வளர்ந்து நலம் பாராட்டி, ஊடல் கொண்டு, மனிதவாழ்வின் பெருங்கூறாய்த் திகழும் காதல் இலக்கியங்களில் அன்றிலிருந்து இன்றுவரை புலவர்களால் புலப்படுத்தப் படுகின்றது.

அறிஞர்கள், திறனாய்வாளர்கள் வழி, காதல் செய்திகள் எவ்வாறு நோக்கப் பெறுகின்றன என்பதை இனிக் காணலாம்.

"உலகில் காணப்படும் தலையாய அடிப்படையான வன்மைமிகுந்த சக்திகளில் காதலும் ஒன்று"[18] என்று குறிப்பிடப்படும் செய்தியிலிருந்து காதலின் வலிமை புலனாகிறது. அத்தகு காதல் என்பது உடற்பசி, உள்ளப்பசி, பிறவிப்பசி என்பதை வலியுறுத்தும் வ.சுப.மாணிக்கம் "பாலுணர்வு உடையவரே காதலர் என்ற சொல்லாட்சிக்கு உரியவர் என்ற கருத்து நிலவுகிறது"[19] என்கிறார். இக்கருத்தால் காதலுக்குப் பாலுணர்வு அடிப்படை என்பது பெறப்படுகிறது.

காதல் உடற்பசியோடு நின்று விடுவதில்லை. ஆன்மாக்களின் சங்கமமாகிய காதலும் இங்கு தேவை என்பதை "மனிதர்களைத் தேவர்களாக்கக் கூடிய சிறந்த உணர்ச்சிகளுள் தலை சிறந்தது காதல்"[20] என்ற கருத்து அரண்செய்யும்.

இவ்வாறு போற்றப்பெறும் காதல் அவ்வக்கால இலக்கிய வகைமைகளில் பதிவாகியே வந்துள்ளது. இருபதாம் நூற்றாண்டு இலக்கியங்களில் கவிதையில் மட்டுமன்றி, உரைநடையின் இலக்கிய வகைகளிலும் வளம் பெற்று வந்துள்ளது. உரைநடை இலக்கிய வகைகளில் நாவலுக்குச் சிறப்பான இடமுண்டு. நாவலாசிரியர்கள் மனித வாழ்வியல் கூறுகளில் ஒன்றான காதலை இலக்கியத்தில் புலப்படுத்துகின்றனர்.

### *காதல் வகைப்பாடு*

காதலைப் பல வகைகளில் வகைப்படுத்தலாம். தமிழ்மரபை நோக்கும்போது அன்பின் ஐந்திணைக் காதல், கைக்கிளைக் காதல், பெருந்திணைக் காதல் என்ற வகைப்பாட்டை உணரமுடிகிறது. இதில் அன்பின் ஐந்திணைக்காதல் சமூகத்தால் மதிக்கப்பெற்ற காதலாகும்.

காதலை மற்றொரு வகையில் பொதுநிலையில் வகைப்படுத்திப் பார்க்கலாம். அஃதாவது நிறைவேறும் காதல், நிறைவேறாக் காதல் என்பது அந்த வகைப்பாடாகும். காதல் நிறைவேறாத்தன்மைக்குப் பலகாரணிகள் சமூகச் சூழலுக்கு ஏற்ப அமையலாம். அத்தகு காரணிகளை இலக்கியங்கள் பதிவுசெய்யும். நிறைவேறும் காதல் ஒருவகையில் கீழ்க்கண்டவாறு பகுக்கப்பெறலாம்.

இயல்புக்காதல் என்பது ஒருவகை. உடல் மட்டுமன்றி ஆன்ம ஈடுபாட்டில் தோன்றும் காதலை உயர்காதல் என்று குறிப்பிடுவர். இவ்வகைக்காதல் பெரும்பாலும் பரவலாக இருப்பதில்லை. இருப்பினும் கருத்தில் கொள்ளப்படவேண்டிய வகைப்பாடு என்று கூறலாம்.

இயல்புக்காதல் உறவுநிலைக்குள் அமையலாம். உறவு அல்லாத நிலையிலும் அமையலாம். உறவு அல்லாத நிலையில் சாதிசமயங்களைக் கடந்து தோன்றும் காதல் போற்றத்தகுந்த காதலாகும். இதனைக் கீழ்க்கண்ட வரைபடம் விளக்கும்.

**காதல் வகைப்பாடு - வரைபட விளக்கம்**




### விக்கிரமனின் வரலாற்று நாவல்களில் காதல்

விக்கிரமன் தம் வரலாற்று நாவல்களில் காதல் பற்றிய செய்திகளை நன்முறையில் பதிவாக்கியுள்ளார். அவர் வரலாற்றுக் காலத்திலிருந்து வரலாற்றுப் பாத்திரங்களையும். கற்பனைப் பாத்திரங்களையும் படைத்துள்ள நிலை கருத்திற்கொள்ளத் தக்கதாகும். அவ்வகையில் வரலாற்றுக் காலச் சமூகம் மற்றும் பண்பாட்டுச் சூழலுக்கேற்பக் காதல் பற்றிய செய்திகளை இடம்பெறச் செய்துள்ளார். மேலும் அவர் படைக்கும் பாத்திரங்கள் வழியாகவும், தம் கூற்றின் வழியாகவும் காதல் கோட்பாடுகள் பற்றிய சிந்தனைகளை வழங்கியுள்ளார். அம்முறையில் கீழ்க்கண்ட வகைமையில் காதல் பற்றிய செய்திகளைப் பகுத்துப் பார்க்கலாம்.

1. ஆசிரியர் கூற்று

2. கதை மாந்தர் கூற்று.

### 1. *ஆசிரியர் கூற்று*

ஆசிரியர் கதைப் போக்கில் தற்கூற்றாகக் காதல் கோட்பாடுகளைக் கூறிச் செல்கிறார். ஆசிரியர் தம் அனுபவத்திலும் உலகியல் நோக்கிலும் உணர்ந்தவை எழுத்தில் வெளிப்படுகின்றன.

“காதல் எனும் மாயை தரம் பார்ப்பதில்லை. உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற வித்தியாசம் பார்ப்பதில்லை. சாதியும் அதன் குருட்டுக் கண்களுக்குத் தெரிவதில்லை. மின்னல் போன்ற ஒருநிலை மாபெரும் சக்தியாக உருவாகி ஆண், பெண் இருவர் உள்ளங்களிலும் சென்று சேர்ந்து விடுகிறது. இருவர் இதயங்களிலும் புகுந்தபிறகு அதன் திருவிளையாடலே தனிதான். கண்ணீர் ததும்பவைக்கும். களிநடம்புரியவைக்கும். கைகோத்து உலவவைக்கும். நாணிக்கண் புதைக்க வைக்கும். அதன் வழியில் நிற்பவரை எதிர்த்துப் போராடச் செய்யும்”[21] என்ற ஆசிரியர் கூற்றுக் காதலுக்கு இலக்கணம் கூறுவதுபோல் அமைந்துள்ளது.

மேலும் காதல் வயப்பட்ட பாத்திரங்களின் உணர்வு, உடல்மாற்றம் இவற்றைப் பாத்திரங்களே பேசுதல் என்பது தமிழ்மரபுக்கு அப்பாற்பட்டது. “காதற்பாட்டு மரபுக்கும் உரிமைக்கும் இடைநிலைப்பட்ட ஒரு சமநிலையை வேண்டி நிற்கும். இச்சமநிலை ஒருபாற்கோடினாலும் அப்பாட்டிற்கு நல்லுருத்தோன்றாது”[22] என்ற கருத்துக் கருதத்தக்கது. எனவே பாத்திரங்களால் வெளிப்படையாகக் கூறமுடியாத செய்திகளை ஆசிரியர் தற்கூற்றாகக் கூறுகிறார்.

வந்தியத்தேவன் மீது காதல் கொண்ட குந்தவை அவன் சிறையிலிருந்த காலத்து மிகுந்த துயரடைகிறாள். அவன் குற்றமற்றவன் என்பதை உணர்ந்து சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டவுடன் மகிழ்கிறாள். இருப்பினும் அவளால் வந்தியத்தேவனிடம் சென்று தன் காதல்

உணர்வுகளைத் தானே புலப்படுத்திக் கொள்ள முடியாமல் தவிக்கிறாள். இவ்விடத்தில் ஆசிரியர், "ஆண் இதயமே வேறு. பெண் இதயமே வேறு. பெண் வலுவில் சென்று ஆடவருடன் பேசமுற்படுவதில்லை. காதலைப் புலப்படுத்துவதிலும் அப்படித்தான்"[23] என்கிறார்.

## 2. கதைமாந்தர் கூற்று

காதல் பற்றிய செய்திகளை நாவலில் இடம்பெறும் கதைமாந்தர்வழி ஆசிரியர் புலப்படுத்துகிறார். கீழ்வரும் உட்தலைப்புக்களால் காதல் செய்திகள் விளக்கப்பெறுகின்றன.

1. தாய் கூற்று
2. தந்தை கூற்று
3. காதலன் கூற்று
4. காதலி கூற்று

## 1. தாய் கூற்று

'மங்கலத்தேவன் மகள்' கதைத் தலைவி சிந்தாமணி ஆவாள். அவள் தாயால் செல்லமாக வளர்க்கப் பெற்ற பெண். இவள் காதல் கொள்ளும் காலத்தில் தாய் உயிரோடு இல்லை. ஆயினும் தாய் உயிரோடு இருந்தால் தம்மை எவ்வாறு ஆற்றுப்படுத்தியிருப்பாள் என்பதைச் சிந்தாமணி நினைத்துப் பார்க்கும் போது, தாய்மூலம் ஆசிரியர் உணர்த்தும் காதல் கோட்பாட்டை உணரமுடிகிறது. நம்பி மீது கொண்ட காதலால் சிந்தாமணியின் உடல் சிலிர்த்தது. இமயத்துப் பெண் பனித்துளிகளை எடுத்துவந்து தூவியது போல் தோன்றியது. பொதிகைச் சந்தனத்தை எடுத்துப் பூசியதுபோல் குளிர்ந்தது. மறுகணம் அவள் கண்ணெதிரே அவள் தாய் தோன்றி "பெண்ணே' ஆடவர்களிடம் மிகவும் எச்சரிக்கையுடன் பழகவேண்டும். கருமேகத்தில் மறைந்திருக்கும் மின்னல், சாம்பல் மூடிய தணல், இனிப்பாய் இருக்கும் நஞ்சு"[24] என்று கூறுவதுபோல் இருக்கிறது.

சிந்தாமணியின் தாய் உயிரோடு இல்லை. இருக்கின்ற காலத்தில் அவள் சிந்தனை எப்படிப்பட்டதாக இருந்தது என்பதை அடிப்படையாக வைத்தும், உண்மையிலேயே ஒரு தாயின் சிந்தனை எப்படி இருக்கும் என்பதை நினைத்தும் இறந்துவிட்ட தாயின் குரலை இங்கு ஆசிரியர் ஒலிக்க வைக்கிறார்.

வாழ்வின் ஒருபகுதி காதல், கல்விகற்றலும் பொருள் தேடுதலும் சரியாய் அமைந்தால்தான் காதல்வாழ்வு இனிக்கும். அதனால் குமுதவல்லியைக் காதலித்துத் தன் வீட்டிற்கு அழைத்து வந்த அச்சுதனிடம் அவனது தாய், "வாழ்க்கை என்பது எப்போதும் சுகமாய் அமையாது. குமுதவல்லியின் முகத்தை மட்டுமே பார்த்துக் கொண்டு காலத்தைக் கழித்துவிட முடியாது"[25] என்று கூறுகிறாள். வாழ்வின் எதார்த்த நிலையை எடுத்துக் கூறும் இத்தாய் காதலுக்கு இரண்டாமிடமே அளிக்கிறாள்.

### 2. *தந்தை கூற்று*

விக்கிரம பாண்டியனின் மகள் சித்ராதேவியை வீரபாண்டியனும், சுந்தரபாண்டியனும் அடைய நினைக்கிறார்கள். அவர்கள் தனித்தனியே சித்ராதேவியைக் காணும் போது காதல் மொழிபேசுகிறார்கள். அதைச் சிந்தாமணி வெறுக்கிறாள். விக்கிரமபாண்டியன் தம் மகளிடம் "அழகான பெண்மீது ஆசைகொள்வது ஆண்குலத்தின் இயற்கை"[26] என்று கூறுகிறார். காதல் இயல்பானது, இயற்கையானது என்பதைக் கூறும் தந்தையின் பேச்சு சிந்தாமணிக்கு வியப்பளிக்கிறது. இங்கு தம்மகள் உயர்நிலையில் உள்ளவர்களால் காதலிக்கப்படுவதால் தந்தை இவ்வாறு பேசியிருக்கக் கூடும் எனக்கருத இடமுண்டு.

### 3. *காதலன் கூற்று*

ஆண் மாந்தர்கள் காதலை இயல்பாக ஏற்றுக் கொள்வதாக ஆசிரியர் படைக்கிறார். சில சமயங்களில் அவர்கள் அரசியல் நோக்கோடு காதலிப்பதையும் காண முடிகிறது. 'காதலும் அதன் மறுபக்கமான காமமும்

பாவம் என்று நீ புதிதாகக் கூறுகிறாய். அது புனிதமானது என்று நான் கூறுகிறேன்"[27] என்று வெள்ளீச்சுரன் தன் காதலியிடம் கூறும் கூற்றின் மூலம் ஆசிரியர் காதலின் புனிதத்தை வெளிப்படுத்துகிறார்.

காதலும், கடமையும் வாழ்வோடு இணைந்துள்ளது என்பதை விஜயன் தன் காதலிக்குக் கூறும் கூற்றால் அறியலாம். "சுந்தரி! காதலா? கடமையா? என்ற கேள்வியை எழுப்பிவிடாதே! காதலும் கடமையும் இரண்டுமே முக்கியம்"[28] என்ற கூற்று வாழ்க்கைக்குக் காதலும் கடமையும் அவசியம் என்பதைத் தெளிவுபடுத்துகிறது.

கூர்மையான வாளைவிடக் காதல் மிகுந்த விழிகளுக்குத்தான் வலிமை அதிகம் என்பதைப் பைரவியின் காதலன் எயினன், "என்வாளைவிட உன் விழிகளுக்குத்தான் சக்தி அதிகம்"[29] என்று கூறுகிறான். விழிகள் வலிமை பெறக் காரணம் அதில் வெளிப்படும் காதலாகும் என்பதைக் காதலர் நோக்கில் வெளிப்படுத்துகிறார்.

### 4. காதலி கூற்று

பாண்டிய குமாரனைக் காதலிக்கும் சிந்தாமணி காதலும் வீரமும் வாழ்வுக்கு மிகவும் தேவையானவை என்று பேசுகிறாள். காட்டில் ஒளிந்து திரிவது இழந்த ஆட்சியைப் பிடிக்கவும். சோழனைப் பழிவாங்கவும்தான் என்று உணர்ந்த பின்னும் பாண்டிய குமாரன் சிந்தாமணியைக் காட்டில் கண்டு காதல் கொள்கிறான். எந்நேரமும் அவளுடன் அளவளாவ விரும்புகிறான். இதை அவனது படை வீரர்கள் விரும்பவில்லை. அப்போது சிந்தாமணி, "வீரமும் காதலும் இரட்டைக்குழந்தைகள் என்பது அவர்களுக்குத் தெரியவில்லை. காதலுக்கு வீரமும், வீரத்துக்குக் காதலும் இந்த உலகம் உருவான காலத்திலிருந்து ஒன்றுக்கு ஒன்று உறுதுணையாய் இருந்துவருவதை அவர்கள் அறிய *மாட்டார்களா"*[30] *என்று ஆவேசமாகப் பேசுகிறாள். காதல் சார்ந்த தமிழரின்* வாழ்க்கைக் கோட்பாடாக சிந்தாமணியின் பேச்சு அமைகிறது.

விக்கிரமன் படைத்துள்ள அரசகுலப் பெண்களும், அரசகுலம் அல்லாத பெண்களும் பெரும்பாலும் இலட்சியப் பெண்களாகச் சித்தரிக்கப் பெற்றுள்ளனர். பாண்டியர் குலத்தைச் சார்ந்த மதிவாணன் மலர்க்கொடியைக் காதலிக்கிறான். அரசுரிமையால் நாட்டில் ஏற்பட்ட குழப்பத்தை அறிந்து தன்காதலியோடு எங்காவது சென்றுவிடலாம் எனநினைக்கிறான். அப்போது மலர்க்கொடி "கடமைக்கப்புறம் தான் காதல். அன்பே! தாய் நாட்டின் விடுதலைதான் உங்கட்கு முதன்மையாய் இருக்கவேண்டும்"[31] என்கிறாள். 'வினையே ஆடவர்க்குயிரே' என்ற சங்க இலக்கியக் கோட்பாட்டை ஆசிரியர் இங்கு மலர்க்கொடி மூலம் பேச வைக்கிறார். இலட்சியப் பெண்களின் பார்வையில் காதல் இரண்டாமிடத்தைப் பெறுகிறது.

பல துன்பங்களைச் சந்தித்த மலர்க்கொடி "காதல் வயப்பட்டவர்களுக்குச் சோதனையும் துன்பமும் வரும் என்பார்களே"[32] என்று கூறுவதன் மூலம் காதலில் வெற்றிபெறுவது எளிதல்ல என்பதை உணரமுடிகிறது.

ஜெயசிம்மன் சாளுக்கிய நாட்டைச் சார்ந்தவன் என்பதை அறியாமல் அவன்மீது காதல்கொண்ட சித்திரவல்லி தன் செயலுக்கு வருந்துகிறாள். தன் காதலால் தன்நாட்டிற்குத் தீமை வந்துவிட்டதை உணர்கிறாள், அப்போது 'காதலுக்குக் கண்போய்விட்டதே' என்று வருந்துகிறாள். உணர்வுவேறு, அறிவுவேறு என்றிருந்தாலும் உணர்வுக்கு மட்டுமே முக்கியத்துவம் கொடுக்கின்றபோது அறிவற்ற செயல்கள் நடந்துவிடுகின்றன. காதலும் அத்தன்மைத்தே என்பதை இக்கருத்துப் புலப்படுத்துகிறது.

"வீரனுக்கு உறுதுணை தோளும் வாளும். அவனுக்கு நிம்மதியை அளிப்பது களவெற்றியே தவிர கன்னியின் கடைக்கண் அல்ல"[33] என்ற கோட்பாட்டைக் கொண்டவளாகச் சித்திரவல்லி படைக்கப்பெற்றுள்ளாள்.

'பாண்டிய மகுடம்', முத்தம்மாள் காதல் எதார்த்தமானது என்பதை ஒருகணத்தில் தோன்றுவதுதான் காதல் உணர்வு. அது வளரும். காதல் சக்திக்கு வேற்றுமை உணர்வு கிடையாது. அது சாதிமதம் பார்க்காது. செல்வம் ஏழைமை என்பதை எல்லாம் அது நோக்காது என்று கூறுகிறாள்.

இவ்வாறு பெற்றோர் வாயிலாகவும் காதல் வயப்பட்ட ஆண், பெண் வாயிலாகவும் காதல்பற்றிய கோட்பாட்டைக் காலச் சூழலுக்கு ஏற்ப, பாத்திரங்களின் தன்மைக்கேற்ப ஆசிரியர் சித்தரிக்கிறார். நாவல்களில் காதலே உயர்வு என்போரும் கடமையோடு ஒப்பிடுகின்ற போது காதலுக்கு இரண்டாம் இடம் தருவோரும் உளர் என்பது பெறப்படுகிறது.

ஆய்வுக்கு உட்படுத்தப் பெற்ற இருபத்தைந்து நாவல்களில் இடம்பெறும் காதலர்கள் குறித்த செய்திகள் பின்வரும் அட்டவணைகளால் தெளிவாக்கப் பெறுகின்றன.

அட்டவணை 3.1

**விக்கிரமன் நாவல்களில் காதலர்கள்**

| எண் | நாவலின் பெயர் | காதலி பெயர் | காதலன் பெயர் |
|---|---|---|---|
| 1. | உதயசந்திரன் | குமுதவல்லி<br>சந்திரமதி | குணதேவன்<br>சுந்தரன் |
| 2. | பாண்டிய மகுடம் | மலர்க்கொடி | மதிவாணன் |
| 3. | காஞ்சி சுந்தரி | காஞ்சனா<br>சுந்தரி | விஜயன்<br>விஜயன் |
| 4. | நந்திபுரத்து நாயகி | குந்தவை<br>சிறியபஞ்சவன்மாதேவி<br>இன்பவல்லி | வந்தியத்தேவன்<br>அருண்மொழிவர்மன்<br>அருண்மொழிவர்மன் |
| 5. | வல்லத்து இளவரசி | மோகனா | சொக்கநாதநாயக்கர் |
| 6. | சித்திரவல்லி | சித்திரவல்லி<br>குணரேகா | ஜெயசிம்மன்<br>ஜெயசிம்மன் |
| 7. | மாறவர்மன் காதலி | குமுதவல்லி<br>ரங்கதேவி | மாறன்<br>மாறன் |
| 8. | இராசாதித்தன் சபதம் | குமுதா<br>அனுபமா | அச்சுதன்<br>வெள்ளாங்குமரன் |
| 9. | கடல் மல்லைக்காதலி | சந்திரமாலா<br>ராஜசுந்தரி | ஓவியன் குமாரதேவன்<br>வீரன்குமாரதேவன் |
| 10. | தியாகவல்லபன் | சந்திரபிரபா | வல்லபன் |
| 11. | யாழ்நங்கை | பைரவி | எயினன் |
| 12. | சோழஇளவரசன் கனவு | மீன்விழி<br>மயிலழகு<br>வைரக்கண்ணி | விக்கியண்ணன்<br>அமுதன்<br>ஆதித்தன் |
| 13. | கொன்றைமலர்க்குமரி | மலர்மங்கை | கூத்தன் |
| 14. | பகைவனின் காதலி | சிந்தாமணி | பாண்டியகுமரன் |
| 15. | மங்கலத்தேவன்மகள் | சிந்தாமணி | நம்பி |
| 16. | ஒருவாள் ஒரு மகுடம் இருவிழிகள் | சந்திரவதனா | போசளமன்னன் |
| 17. | வஞ்சிநகர் வஞ்சி | மயில்விழி | சேரநாட்டிளைஞன் |
| 18. | மதுரை மகுடம் | முத்தம்மாள் | முத்துவீரப்பன் |
| 19. | கன்னிக்கோட்டை இளவரசி | எழினி | நம்பி |
| 20. | மாணிக்கவீணை | சாலினி | குமரேசன்<br>பரமகுரு |
| 21. | கங்காபுரிக் காவலன் | வீரம்மாள் என்ற வீரம்மாதேவி | இராசராசன் |

அட்டவணை 3.2

## விக்கிரமன் நாவல்களில் காதல் வகை

| எண் | நாவலின் பெயர் | காதலி பெயர் | அரசகுலம் சார்ந்தோர் | அரசகுலம் சாராதோர் |
|---|---|---|---|---|
| 1. | உதயசந்திரன் | குமுதவல்லி | - | + |
| | | சந்திரமதி | - | + |
| 2. | பாண்டிய மகுடம் | மலர்க்கொடி | - | + |
| 3. | காஞ்சி சுந்தரி | காஞ்சனா | - | + |
| | | சுந்தரி | - | + |
| 4. | நந்திபுரத்து நாயகி | குந்தவை | + | - |
| | | சிறியபஞ்சவன்மாதேவி | + | - |
| | | இன்பவல்லி | - | + |
| 5. | வல்லத்து இளவரசி | மோகனா | + | - |
| 6. | சித்திரவல்லி | சித்திரவல்லி | - | + |
| | | குணரேகா | - | + |
| 7. | மாறவர்மன் காதலி | குமுதவல்லி | - | + |
| | | ரங்கதேவி | + | - |
| 8. | இராசாதித்தன் சபதம் | குமுதா | - | + |
| | | அனுபமா | + | - |
| 9. | கடல் மல்லைக்காதலி | சந்திரமாலா | - | + |
| | | ராஜசுந்தரி | - | + |
| 10. | தியாகவல்லபன் | சந்திரபிரபா | - | + |
| 11. | யாழ்நங்கை | பைரவி | - | + |
| 12. | சோழஇளவரசன் கனவு | மீன்விழி | - | + |
| | | மயிலழகு | - | + |
| | | வைரக்கண்ணி | + | - |
| 13. | கொன்றைமலர்க்குமாரி | மலர்மங்கை | - | + |
| 14. | பகைவனின் காதலி | சிந்தாமணி | - | + |
| 15. | மங்கலத்தேவன்மகள் | சிந்தாமணி | - | + |
| 16. | ஒரு மகுடம் ஒருவாள் இருவிழிகள் | சந்திரவதனா | + | - |
| 17. | வஞ்சிநகர் வஞ்சி | மயில்விழி | - | + |
| 18. | மதுரை மகுடம் | முத்தம்மாள் | + | - |
| 19. | கன்னிக்கோட்டை இளவரசி | எழினி | - | + |
| 20. | மாணிக்கவீணை | சாலினி | - | + |
| 21. | கங்காபுரிக் காவலன் | வீரம்மாள் என்ற வீரம்மாதேவி | - | + |

அரசகுலம் சார்ந்த காதலில் ஈடுபட்ட பெண்கள் என்ற வகைமைக்குள் எட்டுப்பேரும், அரசகுலம் சாராத காதலில் ஈடுபட்ட பெண்கள் என்ற வகைமைக்குள் இருபத்து மூன்று பேரும் உள்ளனர். அரசகுலம் அல்லாத பெண்களின் செய்திகள் கற்பனையாக அமைவதால், பாத்திரங்கள் மிகுதியாகப் படைக்கப்பெற்றிருக்கிறார்கள் எனக் கருதலாம்.

## அரசகுலம் சார்ந்த பெண்களின் காதல்

மேற்கண்ட இரண்டு பிரிவுகளுள் முதலில் அரசகுலம் சார்ந்த பெண்களின் காதல் செய்திகளை இப்பகுதியில் காணலாம். மேலும் அச்செய்திகள் பின்வரும் பகுப்பில் வகைப்படுத்தப்பெற்று விளக்கப் பெறுகின்றன.

அரசகுலம் சார்ந்த பெண்களின் காதல்

நிறைவேறும்காதல் நிறைவேறாக்காதல்





குந்தவை சிறிய பஞ்சவன் மாதேவி வைரக் கண்ணி சந்திர வதனா முத்தம்மாள் மோகனா அனுபமா ரங்கதேவி

## 1. நிறைவேறும் காதல்

அரசகுலம் சார்ந்த பாத்திரப் படைப்புக்களில் நிறைவேறும் காதல் மிகுதி. இப்பாத்திரங்களின் காதலை வரலாற்றோடு தொடர்புடைய அரசகுலப் பெண் பாத்திரங்களின் காதல் என்றும் வரலாற்றோடு தொடர்பில்லாத கற்பனையில் உருவாக்கப்பெற்ற அரசகுலப்பெண் பாத்திரங்களின் காதல் என்றும் பாகுபடுத்திப் பார்க்கலாம்.

## வரலாற்றோடு தொடர்புடைய அரசகுலப்பாத்திரங்களின் காதல்

இவ்வகையில் நந்திபுரத்து நாயகியின் குந்தவை, சிறிய பஞ்சவன்மாதேவி, மதுரைமகுடத்தில் இடம்பெறும் முத்தம்மாள் ஆகியோர்களின் காதலைக் குறிப்பிடலாம். இவர்களின் காதல் செய்திகளைப் பின்வரும் பகுதியில் விளக்கமாகக் காணலாம்.

### 1. குந்தவையின் காதல் (போராட்டங்களுக்கிடையே பூத்த காதல்)

குந்தவை வந்தியத்தேவனின் காதல் சோழநாட்டு அரசியலில் பலதிருப்பங்களை ஏற்படுத்துகிறது. குந்தவையின் தந்தை சுந்தரசோழனோடு அருகிருந்து பேசும் வந்தியத் தேவனின் தோற்றம், திறமை இரண்டும் குந்தவையின் மனதுள் காதலை வளர்க்கிறது.

சோழநாட்டுப் பெரும்செல்வந்தர்கள் முதல் அனைவரும் வியக்கும் மதிநுட்பத்தைக் குந்தவை பெற்றுள்ளாள். அவளது பேரன்பை வந்தியத்தேவன் பெற்றுவிட்டானென்று குந்தவை குடும்பத்தார் மகிழ்கிறார்கள். குந்தவையின் காதலுக்கு யாரும் எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை. "எத்தனையோ மாவீரர்கள் இளைய பிராட்டியாரின் இன்சொல் பெறத்துடித்து நிற்கும்போது வாணர்குலத்து வீரர் எளிதில் தம் சகோதரியின் இதயம் கவர்ந்து விட்டாரே"[34] என்று அருண்மொழிவர்மன் நினைக்கிறான்.

குந்தவை கொண்ட காதல் வந்தியத்தேவனை மகிழவைக்கிறது. சோழர் குலக்கொடி குந்தவையின் காதல் படரக் கொழுகொம்பாக வந்தியத்தேவன் அமைகிறான். அதனால் வந்தியத் தேவனின் காதல் குந்தவையை மகிழச் செய்கிறது.

இருவரும் உள்ளத்தால் ஒன்றிவிட்ட காதலர்களாக இருப்பதால் இறுதிவரைக் காதலை நிறைவேற்றிக்கொள்ளப் பொறுமையாய்க் காத்திருக்கின்றனர். தன் சகோதரன் ஆதித்தனைக் கொன்றவனைக் கண்டுபிடிக்கும் வரை தங்கள் திருமணம் நடைபெறாது என்று குந்தவை விரதம் பூணுகிறாள். ஆனால் தன்காதலன் வந்தியத்தேவனே

அக்கொலைகாரன் என்று பிறர் கூறியபோது துன்பம் மிகுகிறது. சோழஅரசை ஆட்டிப்படைக்கும் குந்தவை செய்வதறியாது நிற்கிறாள். அதன்பின் நீண்டநாட்கள் இவர்களது காதல் பிரிவுக்காதலாக உள்ளது.

காதல் என்ற உணர்வு பக்குவம் வாய்ந்தவர்களிடையே தோன்றுகின்றபோது எத்தனை போராட்டம் வந்தாலும் நிறைவேற்றிக்கொள்ளும் ஆற்றல் பெற்றுவிடுகிறது. குந்தவை சோழநாட்டு அரசியலை நடத்தும் ஆற்றல் பெற்றவள். அவளிடத்துத் தோன்றிய காதலுக்குத் தடைவருகிறது. காதலன் சிறையில் அடைபடுகிறான். நாடே வந்தியத்தேவனைக் கெட்டவனாய்ச் சித்தரிக்கிறது. இந்நிலையில் குந்தவை அவசரப்படவில்லை. மனதைத் தேற்றிக்கொண்டு வேறொருவனுக்கு மாலையிட விரும்பவில்லை. உறுதியான உள்ளத்துடன் தன் காதலன் குற்றமற்றவன் என்பதை உறுதிசெய்து அவனையே மணமுடிக்க விரும்புகிறாள்.

குந்தவையின் மனம் வேறொருவனை ஏற்றிருக்குமேயானால் சோழநாடு இருந்த சூழலில் பல சிக்கல்கள் தோன்றியிருக்கும். அதை எதிர்த்துச் சமாளித்த குந்தவை, தன்காதலைத் தலைதூக்க விடாமல் இறுகிய மனத்தோடு, வெளியில் காட்டிக்கொள்ளாமல் நாட்டைப்பற்றிய சிந்தனையில் காலத்தைக் கழிக்கிறாள்.

கணவனைப் பிரிந்து வாழும் வானதிக்கும், காதலனைத் தேடிவந்திருக்கும் இன்பவல்லிக்கும், காதலிக்கத் துடித்துக் கொண்டிருக்கும் சிறிய பஞ்சவன்மாதேவிக்கும் அறிவுரை கூறும் பொறுப்புள்ள பெண்ணாயிருக்கும் குந்தவையின் காதல் பண்பட்ட காதலாய் உள்ளது.

எத்தனை பலம் பொருந்தியவர்கள் வந்தாலும் எதிர்த்துநிற்கும் வந்தியத்தேவன் காதலுணர்வால் குந்தவையைப் பார்த்ததும் சிரம்தாழ்த்துகிறான். பெண்புலி என்று சொல்லப்பெறுகிற குந்தவை வந்தியத்தேவன் இருக்குமிடத்தில் பேசத் தடுமாறுகிறாள். குதூகலமாகவும்,

கண்டிப்பாகவும் பேசவல்ல அவளுக்குக் காதலால் தயக்கம் ஏற்படுகிறது. மனபலமும் உடல்பலமும் படைத்தவர்களையும் தடுமாறவைக்கும் ஆற்றல் காதலுக்கு உண்டு என்பதைக்குந்தவை, வந்தியத்தேவன் காதலால் உணர முடிகிறது. நாட்டுநலனுக்கு முதலிடமும் காதலுக்கு இரண்டாவது இடமும் தரும் இவர்களது காதலைப் போராட்டங்களுக்கிடையே பூத்த காதல் எனக் கருதலாம்.

மேலும் குந்தவை வந்தியத்தேவன் காதல் உயர்காதலாய்ச் சொல்லப் பெறுகிறது. "வந்தியத்தேவா! நீ சரியான மற்றொரு உள்ளத்துடன்தான் நட்புக் கொண்டாய், உன்காதல் புனிதமானது என்று உலகில் போற்றப் போகிறார்கள். பிரிவு உங்களிடையே செய்த சதியைப் போல் உலகத்து எந்தக் காதலர் வாழ்விலும் அது செய்திராது. இருவரும் காட்டிய பொறுமைக்கு மகத்தான சின்னம் ஏற்படுத்தலாம். இருவரின் உள்ளமும் மாறாதிருந்ததற்கு மாபெரும் சாம்ராஜ்யங்களைப் பரிசாகத் தரலாம்"[35] என்ற வந்தியத்தேவனின் தற்கூற்றின் மூலம் இவர்களது காதலின் பெருமை வெளிப்படுகிறது.

குந்தவையின் காதல் நிறைவேறும் காதலாய் அமைகிறது.




என்ற நிலையில் உள்ளது.

## 2. சிறியபஞ்சவன் மாதேவியின் காதல் (சிக்கலற்ற காதல்)

பெரிய பழுவேட்டரையரின் மகள் சிறியபஞ்சவன் மாதேவி ஆவாள். அவளை அருண் மொழிவர்மனுக்கு மணமுடித்து வைக்க வேண்டுமென்று சிறியபழுவேட்டரையர் நினைக்கிறார். அதனால் சோழ நாட்டரண்மனைக்கு அவளை வரவழைத்துத் தங்கவைக்கிறார். பல

பெண்களை மணப்பது அரசர்களின் பழக்கம். அதனால் பழுவேட்டரையர் குடும்பத்தினர் சோழநாட்டுக்குப் பாடுபட்டதற்கு நன்றிக்கடனாக, அருண்மொழிவர்மன் ஏற்கனவே வானதியை மணந்திருந்தாலும் சிறிய பஞ்சவன் மாதேவியையும் மணக்க வேண்டும் என்று வேண்டுகிறார்.

இதை அருண்மொழிவர்மன் ஏற்றுக்கொண்டவுடன், சிறிய பஞ்சவன் மாதேவியின் உள்ளத்தில் காதல் அரும்புகிறது. இளவரசர் அருண்மொழிவர்மன் வருவாரா, மாட்டாரா என்று பலமுறை கேட்டுத் தன் ஆவலை வெளிப்படுத்துகிறாள். வானதியின் கணவன் அருண்மொழிவர்மன் என்பதை அறிந்தும் இவள் அருண்மொழிவர்மனிடம் தன் காதலைப் புலப்படுத்துகிறாள். ஒரே அரண்மனையில் ஒரு அரசருக்குப் பல மனைவியர் இருப்பதும், ஒருவர் மற்றவரைச் சகிப்பதும் அரசனுக்கு மிகுந்த வயதானாலும் அவனை இளம்பெண் காதலித்து மணப்பதும் அரசகுலப் பெண்களின் நிலையாக உள்ளது என்பதை ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

பஞ்சவன்மாதேவி, தான் கைப்பிடிக்கப்போகும் மணாளன் நினைப்பதையே தான் நினைக்கவேண்டும். அவன் விரும்பாததைத் தான் விரும்பக்கூடாது. அவருக்கு எதுபிடிக்குமோ அதுவே தனக்குப் பிடிக்கவேண்டும். அவர் கருத்தும் தன்கருத்தும் ஒன்றாயிருக்கவேண்டும் என்று ஒன்றிவிட நினைக்கிறாள். அருண்மொழியிடம் தன்காதலைத் தெரிவிக்கும் சிறியபஞ்சவன் மாதேவிக்குத் தன் திருமணத்தால் அரண்மனையில் பல குழப்பம் வரும் என்று உணரமுடிகிறது. அந்நேரம் தன் மனத்துள் "பலருக்கு மன வேதனை ஏற்படப் போவதை நினைத்தால் இந்திர லோகம் கூட வேண்டாம்"[36] என்று கூறிக்கொள்கிறாள். ஆனால் அருண் மொழியைக் கண்டவுடன் அவள் முன்பு நினைத்ததை மறந்து காதல் உணர்வு பெறுகிறாள்.

வானதிக்குப் பிறக்கப் போகும் குழந்தைதான் நாட்டை ஆளப்போகிறது என்று பஞ்சவன் மாதேவி அறிகிறாள். பட்டத்து அரசியாக இருக்க வானதி விரும்பவில்லை. அந்த இடத்தை நிரப்ப பஞ்சவன் மாதேவி, அருண்மொழி திருமணம் நடக்கப்போகிறது. அன்பும் பரிவும் மட்டும் தனக்கிருந்தால் போதும் என்று கருதி அவனையே மனதில் வரிக்கிறாள். அந்த ஆசை தொடர்ந்து வளர்வதால் எந்தச் சிக்கலும் இல்லாமல் அவர்கள் திருமணம் நிறைவேறுகிறது.

### 3. முத்தம்மாளின் காதல் ('குலம்' கடந்த காதல்)

பாண்டியர் குலத்தைச் சார்ந்த தென்காசிப் பாண்டியனின் மகள் முத்தம்மாள். இவள் நாயக்கர் குலத்தைச் சார்ந்த முத்துவீரப்பனைக் காதலிக்கிறாள். முத்தம்மாளின் காதல், 'கண்டதும் காதல்' என்ற நிலையில் ஏற்படுகிறது. முத்துவீரப்பனைப் பற்றி ஏதும் அறியாமல் காதல் அரும்புகிறது. முத்தம்மாளின் தோழி தேனாட்சி "உங்கள் மனதில் ஏற்பட்டிருப்பதற்குப் பெயர் காதல். அந்த நோய் யாவருக்கும் எப்படி வரும் என்று சொல்ல முடியாது. ஆனால் கண்டவுடனேயே உங்களுக்குக் காதல் ஏற்பட்டதுதான் வியப்பாக இருக்கிறது. தங்கள் மனத்தையும் குணத்தையும் அறிவேன்"[37] இவ்வாறு முத்தம்மாள் கொண்ட காதலை இனம் காட்டுகிறாள். மேலும் தேனாட்சி மூலமாகவே முத்தம்மாள் முத்துவீரப்பனைப் பற்றிப் பின்னால் அறிந்துகொள்கிறாள்.

பாண்டிய நாட்டில் மீண்டும் பாண்டியராட்சியை நிறுவ முத்தம்மாளும், அவள் தந்தையும் நினைக்கின்றனர். இயல்பாய் முத்துவீரப்பன் மீது ஏற்பட்ட காதல் அரசியல் அடிப்படையில் வெற்றிபெற்றால் நல்லது என்று முத்தம்மாள் விரும்புகிறாள். அதன்படியே அவர்கள் காதல், நிறைவேறும் காதலாகிறது. மதுரை அரியணையில் இருவரும் அமர்கின்றனர்.

வரலாற்றுப் பாத்திரங்களை ஆசிரியர் விருப்பம் போல் இயக்க முடிவதில்லை. வரலாற்றுப் பாத்திரங்களைப் பொறுத்தமட்டில் அவர்களது சுய மகிழ்வைவிட அரசநீதிக்குத்தான் முதன்மை என்ற நிலையில் இயங்குகிறவர்கள். ஆயினும் அவர்களது மென்மையுணர்வுகள், அதிலும் மிகுந்த கட்டுப்பாட்டில் உள்ள பெண்களின் காதலுணர்வுகள் ஆசிரியரால் சித்தரிக்கப்பெற்றுள்ளன. வரலாற்றுப் பாத்திரங்களின் நிறைவேறிய காதல் அனைத்தும் இலட்சியக் காதலாக, துணிகரக் காதலாக, வரலாற்றில் நிலைபெறும் காதலாக அமைந்துள்ளன.

## வரலாற்றோடு தொடர்பில்லாத அரச குலப்பெண்களின் காதல்

### 1. வைரக்கண்ணியின் காதல் (நாடு கடந்த காதல்)

வைரக்கண்ணி, பல்லவநாட்டின் ஒரு சிறுபகுதியின் தலைவி ஆவாள். வைரக்கண்ணியின் தாய்மாமன் மூலபத்திரன். அவன் வைரக்கண்ணியைப் பல்லவ மன்னன் அபராஜிதனுக்கு மணமுடித்து வைத்துத் தான் பயன்பெற வேண்டுமென்று நினைக்கிறான். வைரக்கண்ணி அபராஜிதனை விரும்பவில்லை. அவள் மனம் சோழ இளவரசன் ஆதித்தனை விரும்புகிறது.

தனக்குப் பலவகையில் பாதுகாப்பு அளித்துவரும் ஆதித்தனால்தான் நன்மை நடக்கும் என்று வைரக்கண்ணி நினைக்கிறாள். மேலும் ஆதித்தனின் வீரம் அவள் மனதை கவர்கிறது. மூலபத்திரனிடம் இருந்து தப்பிக்க வேண்டுமென்றால் ஆதித்தன் உதவி வேண்டும் என நினைக்கிறாள். தன்னை காதலிக்கும் ஆதித்தனுக்குப் பல்லவ நாட்டில் பாதுகாப்பு இல்லை என்று அறிகிறாள். அவனையும் வைரக்கண்ணியையும் எந்நேரமும் அபராஜிதன் ஆட்கள் கண்காணிக்கின்றனர். துணிச்சல் மிகுந்த பெண்ணான வைரக்கண்ணி பல்லவநாட்டுச் சூழலிருந்து ஆதித்தனுடன் தப்பிச் செல்ல நினைக்கிறாள்.

"இளவரசியைப் பார்த்தால் அவளது அழகு மனதைக் கவருகின்றது. அவளது குணநலன்களைப் பார்த்தாலோ, இவ்வளவு துணிகரமான இளநங்கை சோழநாட்டிற்கு வந்து தனது கொள்கைகளையெல்லாம் மாற்றிக்கொள்வாள் என்பது என்ன நிச்சயம்? அதுதான் என் உள்ளத்தில் உறுத்துகிறது"[38] என்று தயங்கிய ஆதித்தனின் மனதில் வைரக்கண்ணி இடம்பிடித்து, அவனுடன் சோழநாடு சென்று, திருமணம் புரிந்து தன் காதலை நிறைவேற்றிக் கொள்கிறாள்.

"உளம் கலந்த காதலன்பு முதிர்ந்து மணம் செய்து கொள்ள வேண்டுமானால் அதற்குத் தகுந்த மனஆற்றல் அவர்கட்கு வேண்டும். அப்பேர்ப்பட்டவர்களையேதான் தலைமக்களாகத் தேர்ந்தெடுத்துள்ளனர் நம் முன்னையோர். தலைவற்கு நிறைந்த ஆண்டன்மையும், தலைவிக்கு நிறைந்த பெண்டன்மையும் அமைந்திருக்கவேண்டும். அப்போதுதான் அவர்கள் காதல் வாழ்க்கைகுத் தகுதியுடையோராவர்".[39] இக்கருத்திற்கிணங்க வைரக்கண்ணி ஆதித்தன் காதல் அமைந்துள்ள திறம் கருதத்தக்கதாகும். வைரக்கண்ணியின் காதல் மனவாற்றல் மிகுந்தகாதல் ஆகும். பல்லவ நாட்டுப் பெண் சோழநாட்டரசனைக் காதலிக்கும் நாடுகடந்த காதல் நிறைவேறும் காதலாக உள்ளது.

## 2. சந்திரவதனாவின் காதல் (பகைவனைத் திருத்திய காதல்)

சோழ நாட்டு இளவரசி சந்திரவதனா, போசளநாட்டு இளவரசனைக் காதலிக்கிறாள். போசள நாட்டு இளவரசன் ஓவியனாகச் சோழ அரண்மனைக்குள் நுழைகிறான். வந்திருப்பவன் இளவரசன் என்றறியாது ஓவியனாக நினைத்து சந்திரவதனா தன் மனதைப் பறிகொடுக்கிறாள்.

சோழ நாட்டின் மீது பகைகொண்ட சுந்தரபாண்டியன் சோழஇளவரசி சந்திரவதனாவை மணந்து சோழ நாட்டை அடிமைப்படுத்த நினைக்கிறான். சந்திரவதனாவின் தந்தை அவளை விஜயகண்ட கோபாலன் மகனுக்கு மணமுடித்துக் கொடுத்து அதன்மூலம் பகைவனான பாண்டியனை

வெல்லலாம் என நினைக்கிறான். இச்சூழலில் சந்திரவதனாவின் தாய் ஆறுதலாக உள்ளாள். தன் மகள் விரும்பும் மணாளனையே மணமுடிக்க வேண்டும் என்று சந்திரவதனாவின் தந்தையிடம் கூறுகிறாள். இருப்பினும் இறுதியில் சுந்தரபாண்டியன் படையெடுத்து வந்துவிடுகிறான். சந்திரவதனா அறிவுக்கூர்மையுடன் பாண்டியனைத் 'தந்தையே' என அழைத்துத் தான் விரும்பும் காதலனைப் பற்றிச் கூறுகிறாள். பகைவனான பாண்டியன் மனம் மாறிச் சோழநாட்டைச் சோழனுக்கேயளித்துச் சந்திரவதனாவின் காதலை வாழ வைக்கிறான்.

## 2. நிறைவேறாக் காதல்

அரசகுலம் சார்ந்த பெண்களின் நிறைவேறாக் காதல் என்ற வகையில் வல்லத்து இளவரசியில் இடம்பெறும் மோகனா, 'இராஜாதித்தன் சபதத்தில்' இடம்பெறும் அனுபமா, 'மாறவர்மன் காதலி'யில் குறிக்கப்பெறும் ரங்கதேவி, ஆகியோர் இடம் பெறுகிறார்கள். இவர்களில் 'மோகனாங்கி' எனப்படும் மோகனா வரலாற்றைச் சார்ந்த பாத்திரமாவாள்.

## 1. மோகனாங்கியின் காதல் (மாய்த்த காதல்)

'மோகனா' தஞ்சையை ஆண்ட விஜயராகவ நாயக்கரின் மகள் ஆவாள். மோகனா மதுரை நாயக்கர் சொக்கநாதரைக் காதலிக்கிறாள். இவர்கள் காதல் எல்லோராலும் அறியப்படுகிறது. இருப்பினும் தஞ்சையிலிருந்து பெண்கொண்ட திருமலைநாயக்கர் அப்பெண்ணைக் கொன்றுவிட்டார் என்பதனால் மறுபடியும் அந்நாயக்கர் குலத்தில் பெண்கொடுக்க மோகனாவின் தந்தை விரும்பவில்லை.

வல்லத்தில் வாழ்ந்துவரும் மோகனாவின் அத்தை ரங்கமாதேவி மோகனாவைக் கந்தேவனின் மகன் சந்தனதேவனுக்கு மணமுடித்து அவளை வல்லத்து இளவரசியாக்கித் தன் அதிகாரத்தைச் செலுத்தலாம் என்று நினைக்கிறாள். தந்தை, அத்தை ஆகியோர் எண்ணத்தை

அடியோடு வெறுக்கும் மோகனாவுக்குத் தன் காதலை நிறைவேற்றிக் கொள்ள வழி தெரியவில்லை. துணிச்சலும் இல்லை. அதனால், தான் திருமணமே செய்துகொள்ளப் போவதில்லை என்று தந்தையிடம் கூறுகிறாள்.

மோகனா சொக்கநாத நாயக்கரை மணந்தால், நாடு பாதிக்கப்படும் என்று தம் மகளுக்கு அவளது தந்தை எடுத்துரைக்கிறார். மோகனாவின் அண்ணன் ஒழுக்கக்குறைவுடையவன் என்பதால் அவனுக்கு முடிசூட்ட இயலவில்லை. அதனால் தஞ்சையின் வருங்கால இளவரசி மோகனாவே என்று அவளது தந்தை முடிவு செய்கிறார். இந்நிலையில் தன் காதலை தந்தையிடம் புலப்படுத்த முடியாமல் தவிக்கிறாள். முறையாகப் பெண்கேட்டு மோகனாவை அடையமுடியாது என்று நினைத்த சொக்கநாதர் தஞ்சைமீது போர் தொடுக்கிறார்.

அந்நிலையிலும் மோகனா தன் தந்தையிடம் "அப்பா! மன்னர் வருகிறாரா? அப்படியென்றால் அவருக்கு என்னை மணம் முடித்துக் கொடுத்துவிடுவீர்கள் அல்லவா? அவர் தோல்வியுற்ற அரசரைச் சிறையில் அடைக்கமாட்டார். நல்ல குணம் படைத்தவர். என்னை அவருக்கு மணம் முடித்துக்கொடுத்தால், அவர் மீண்டும் தஞ்சை அரசை உங்களுக்கே கொடுத்துவிடுவார் இல்லையா?"[40] என்று கெஞ்சுகிறாள். காதலைக் காப்பாற்றிக்கொள்ள நினைக்கும் மோகனாவின் பேச்சு அவள் தந்தைக்குப் பிடிக்கவில்லை. அவளை வெறுக்கிறார். தன் குடும்பம் மாய்ந்தாலும் பரவாயில்லை. ஆனால் சொக்கநாதருக்குப் பெண் கொடுக்கக்கூடாது என்பதில் பிடிவாதமாக உள்ளார். அதனால் தன் மாளிக்கைக்கு வெடி வைத்துத் தன்னையும் தன் குடும்பத்தையும் அழிக்கிறார்.

மோகனாவின் அழகைப் பற்றிக் கேள்விப்பட்டு, அவள் மீது காதல் கொண்டு காதலுக்குத் தூதனுப்பி, மாறு வேடத்தில் தஞ்சை வந்து அவளைச் சந்தித்து, முறையாகப் பெண் கேட்டுப் பார்த்தும் மோகனா சொக்கநாதரின் காதல் நிறைவேறவில்லை. கடைசியில் போர்தான் தங்கள்

காதலை நிறைவேற்றும் என்று நினைத்த சொக்கநாதருக்கு மோகனாங்கியின் பிணத்தைப் பார்க்கும் வாய்ப்புத்தான் கிட்டியது. பல காதலர்களின் வாழ்க்கை பெற்றோர் பிடிவாதத்தால் அழிவதுபோல வரலாற்றுக் காலக் காதலும் மாய்ந்து விடுவதை அக்காலத்தை எடுத்துணர்த்தும் நாவல்கள் வழி அறியலாம்.

வரலாற்றைச் சாராத அரசகுலப் பெண்களின் நிறைவேறாக் காதலில் அனுபமா, ரங்கதேவி இருவரின் காதலும் இடம்பெறுகிறது.

### 1. அனுபமாவின் காதல் (மாறிய காதல்)

இராஜாதித்தனின் சகோதரி அனுபமா. இராஜாதித்தனின் நெருங்கிய நண்பனாகவும், நாட்டின் படைத்தலைவனாகவும் உள்ள வெள்ளாங்குமரனைக் காதலிக்கிறாள். அவளது காதலுக்கு யாரும் எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை. ஏனெனில் இராஜாதித்தனே "அவள்தான் தனக்குப் பிடித்தவரை முன்பே தேர்ந்தெடுத்துக் கொண்டுவிட்டாளே"[41] என்று அவளது காதலை அறிந்தவனாக அதைப்பற்றிப் பெருமைப்படுபவனாகப் பேசிக் காட்டுகிறான்.

ஆனால் அரசியலின் காரணமாகக் கொடும்பாளூர் இளவரசன் இளங்கோவுக்கு அனுபமாவைத் திருமணம் பேசி முடிக்கின்றனர். கொடும்பாளூரார் எப்போதும் சோழர்களுடன் நல்லுறவு கொண்டவர்கள். ஆனால் அனுபமாவின் சகோதரி வீரமாதேவியை இராட்டிரகூட மன்னன் கோவிந்தனுக்கு மணமுடித்ததால் சோழர்களுக்கும் கொடும்பாளூராருக்கும் மனவேறுபாடு ஏற்படுகிறது. அதைச் சரிசெய்ய அனுபமாவைத் தற்போது அங்கு மணமுடித்துக் கொடுக்கிறார்கள். அனுபமா, குமரன்மீது கொண்ட காதல் நிறைவேறாமல் போகிறது. அதை எதிர்த்து நிறைவேற்றிக்கொள்ளும் ஆற்றல் இருவருக்கும் இல்லை.

### 2. ரங்கதேவியின் காதல் (கைக்கிளைக் காதல்)

'மாறவர்மன் காதலி' என்ற நாவலின் கதைத்தலைவன் மாறன். அவன் சோழநாடு செல்லும்போது கடலில் மூழ்கி விடுகிறான். அப்போது

ரங்கதேவியின் தந்தையால் காப்பாற்றப்படுகிறான். ரங்கதேவியின் தந்தை சிங்கவரையன் சோழநாட்டின் குறுநிலப்பகுதியின் அரசன். சிங்கவரையன் மாறனின் தோற்றத்தையும், வீரத்தையும் கண்டு வியந்து தன் மகளை அவனுக்கு மணமுடிக்கக் கருதுகிறான். ரங்கதேவியும் மாறனை மிகவும் விரும்பிக் காதலிக்கிறாள். ஆனால் மாறன் மனத்தில் குமுதா நிறைந்துள்ளாள். எனவே ரங்கதேவியை அவன் மனம் ஏற்கவில்லை. ரங்கதேவியின் பணம், பகட்டு, அவளது தந்தையின் அதிகாரம் எதுவும் மாறனின் மனத்தில் மாற்றத்தை ஏற்படுத்தவில்லை. அதனால் ரங்கதேவியின் காதல் நிறைவேறாக் காதலாகிறது.

## II. அரசகுலம் சாராத பெண்களின் காதல்

விக்கிரமனின் வரலாற்று நாவல்களில் அரசகுலம் சாராத பெண்களின் காதல் செய்திகள் இடம்பெறுகின்றன. இப்பெண்கள் அனைவரும் ஆசிரியரின் கற்பனைப் பாத்திரங்கள். அப்பாத்திரங்களின் காதல் பின்வருமாறு பகுக்கப்பெற்று அட்டவணைப்படுத்தப்படுகிறது.

1. நிறைவேறும் காதல்.
2. நிறைவேறாக் காதல்.

அட்டவணை 3.3

## அரசகுலம் சாராத பெண்களின் காதல் வகைப்பாடு

| எண் | நாவலின் பெயர் | காதலியர் பெயர் | நிறை வேறும் காதல் | நிறை வேறாக் காதல் |
|---|---|---|---|---|
| 1. | உதயசந்திரன் | குமுதவல்லி | + | - |
| | | சந்திரமதி | + | - |
| 2. | பாண்டிய மகுடம் | மலர்க்கொடி | + | - |
| 3. | காஞ்சி சுந்தரி | காஞ்சனா | - | + |
| | | சுந்தரி | + | - |
| 4. | நந்திபுரத்து நாயகி | குந்தவை | + | - |
| | | சிறியபஞ்சவன்மாதேவி | - | + |
| | | இன்பவல்லி | - | + |
| 5. | சித்திரவல்லி | சித்திரவல்லி | - | + |
| | | குணரேகா | - | + |
| 6. | மாறவர்மன் காதலி | குமுதவல்லி | - | + |
| | | ரங்கதேவி | - | + |
| 7. | இராசாதித்தன் சபதம் | குமுதா | - | + |
| 8. | கடல் மல்லைக்காதலி | சந்திரமாலா | + | - |
| | | ராஜசுந்தரி | + | - |
| 9. | தியாகவல்லபன் | சந்திரபிரபா | + | - |
| 10. | யாழ்நங்கை | பைரவி | + | - |
| 11. | சோழஇளவரசன் கனவு | மீன்விழி | - | + |
| | | மயிலழகு | - | + |
| 12. | கொன்றைமலர்க்குமரி | மலர்மங்கை | - | + |
| 13. | பகைவனின் காதலி | சிந்தாமணி | - | + |
| 14. | மங்கலத்தேவன்மகள் | சிந்தாமணி | + | - |
| 15. | வஞ்சிநகர் வஞ்சி | மயில்விழி | + | - |
| 16. | கன்னிக்கோட்டை இளவரசி | எழினி | + | - |
| 17. | மாணிக்கவீணை | சாலினி | - | + |
| 18. | கங்காபுரிக் காவலன் | வீரம்மாள் என்ற வீரம்மாதேவி | + | - |

## அரசகுலம் சாராத பெண்களின் காதல் வகைப்பாடு

அரசகுலம் சாராத பன்னிரெண்டு பெண்களின் காதல் நிறைவேறும் காதலாகவும், பதினொரு பெண்களின் காதல் நிறைவேறாக் காதலாகவும் உள்ளது. இவர்களுள்,

1. வீரம்மாள் (கங்காபுரிக் காவலன்)
2. மலர்க்கொடி (பாண்டிய மகுடம்)
3. மீன்விழி (சோழ இளவரசன் கனவு)
4. சித்திரவல்லி (சித்திரவல்லி)
5. குணரேகா (சித்திரவல்லி)
6. சிந்தாமணி (பகைவனின் காதலி)
7. சந்திரபிரபா (தியாகவல்லபன்)

இவ்வேழு பெண்களும் அரசகுல ஆண்களைக் காதலிக்கின்றனர். அக்காதலில் வெற்றியும் ஏற்படுகிறது; சிலசமயம் தோல்வியும் ஏற்படுகிறது. காதலில் ஈடுபட்டுள்ள பெண்களில் பெரும்பாலோர் தாயில்லாமல் வளர்பவர்கள். மேலும் அப்பெண்கள் கலையில் அறிவும் ஆற்றலும் படைத்தவர்கள். நாட்டுக்காகக் காதலைத்துறக்கவும் சித்தமானவர்கள். இனி நிறைவேறும் காதலும், நிறைவேறாக் காதலும் விரிவாகப் விளக்கப் பெறுகின்றன.

### 1. நிறைவேறும் காதல்

'உதயசந்திரனில்' இடம்பெறும் குமுதவல்லி, சந்திரமதி, மதுரை மகுடத்தில் மலர்க்கொடி, 'காஞ்சி சுந்தரியில்'-சுந்தரி, கடல் மல்லைக் காதலியில் - சந்திரமாலா, ராஜசுந்தரி, 'தியாகவல்லபனில்-சந்திரபிரபா' 'யாழ்நங்கையில்' - பைரவி 'மங்கலத்தேவன் மகளில்' - சிந்தாமணி, 'வஞ்சி நகர் வஞ்சியில்' - மயில்விழி, 'கன்னிக்கோட்டை இளவரசியில்' - எழினி, 'கங்காபுரிக் காவலனில்' - வீரம்மாள் ஆகியோரின் காதல் நிறைவேறும் காதலாகச் சித்தரிக்கப்பெற்றுள்ளது.

## 1. குமுதவல்லியின் காதல் (உறவுக்காதல்)

குமுதவல்லி குணதேவனின் தாய்மாமன் மகள் ஆவாள். இவர்களின் காதல் 'உதயசந்திரன்' நாவலில் இடம்பெறுகிறது. பல்லவநாட்டுப் படையில் பணியாற்றும் குணதேவன் குமுதவல்லியை எப்பொழுதாவது தான் பார்க்கும் வாய்ப்பைப் பெறுகிறான்.

குணதேவனுக்கு வரவிருந்த பல இன்னல்களை குமுதவல்லி முன்கூட்டியே அறிந்து தன் காதலனைக் காப்பாற்ற ஊரைவிட்டு வெளியேறுகிறாள். பல துயரங்களுக்குப்பின், உதயசந்திரன் சொற்களுக்கு மதிப்பளித்து, காதலை மனதில் வலியோடு தாங்கி குணதேவனை நாட்டுக்காக அனுப்பி வைக்கிறாள். இருவரும் காதல் மொழி பேசியதைவிட நாட்டுக்குழைத்ததே மிகுதி. இறுதியில் உதயசந்திரன் இக்காதலர்களை வாழ்த்தும்போது "வானர மகளிர்க்கு வதுவை செய்யக் கை உயர்த்திய முருகன் இந்தக் காதலர்க்கு அருளட்டும்"[42] என்று கூறுகிறான். காதலால் கண்கள் பனிக்க இருவரும் கூடினர்.

## 2. சந்திரமதியின் காதல் (பரிவுக் காதல்)

சந்திரமதியின் காதலன் சுந்தரன் ஆவான். ஆரம்பத்தில் அவன் பார்வையற்றவனாகக் காட்டப்பெறுகிறான். சந்திரமதியின் வீட்டில் தங்கி அவளது தந்தை பைரவனுடன் சேர்ந்து பல்லவநாட்டிற்கு வரவிருக்கும் ஆபத்தை அறிந்து பணியாற்றுகிறான். அதனால் இருவர் நெஞ்சிலும் காதல் அரும்பிய போதும் அதை விடுத்துச் செல்ல வேண்டிய நிலை ஏற்படுகிறது.

"சந்திரமதி! நான் போகிறேன். இறை அருள் கூட்டுவிக்குமானால் நிச்சயம் நாம் இருவரும் சந்திக்கலாம் கவலைப்படாதே! சுந்தரன்"[43] என்று கடிதம் எழுதிவைத்துவிட்டுச் செல்கிறான். அதைக் கண்டு கண்ணீரில் வாடும் சந்திரமதியின் காதல் பல இன்னல்களுக்குப்பின் நிறைவேறுகிறது. கண்தெரியாத சுந்தரனுக்கு உதவும் விதத்தில்

நடந்துகொண்ட சந்திரமதி அவனது அறிவு, புலமை, இனிய குரல் இவற்றால் ஈர்க்கப்படுகிறாள். பின் வளரும் அவளது காதல் அவன்மீது இரக்கம் கொண்ட பரிவுக்காதலாய் அமைந்து வெற்றிபெறுகிறது.

### 3. மலர்க்கொடியின் காதல் (குலம் கடந்த காதல்)

மலர்க்கொடி மதிவாணன் காதல் குலம்கடந்த காதலாகும். மதிவாணன் அரசகுலத்தவன். இதை அவன் அறியான். அரசகுலம் அல்லாத மலர்க்கொடி மதிவாணனைப் பற்றி ஏதும் அறியாது காதல் கொள்கிறாள். ஆயினும் இறுதிவரை அவர்கள் காதல் இயல்பாய் வளர்கிறது.

மலர்க்கொடி சோழநாட்டுப்பெண். தந்தையுடன் பாண்டி நாட்டில் தங்கியுள்ளாள். கள்ளம் கபடமற்ற வெள்ளை உள்ளம் பெற்றவள். இந்த உள்ளம் மதிவாணனை மிகவும் கவர்கிறது. மதிவாணன் அரசகுலத்தவன் என்றறிந்ததும் தன் காதல் நிறைவேறாமல் போய்விடுமோ என்று கலங்குகிறாள். ஆனால் மதிவாணன் இவளது காதலை இழக்க விரும்பவில்லை. நாடு கிடைக்காவிட்டாலும் பரவாயில்லை காதலியுடன் எங்காவது சென்றுவிடலாம் என்று நினைக்கிறான்.

எளிமையாக, மலர்க்கொடி, மதிவாணன் இடையே தோன்றிய காதல் காலப்போக்கில் அறிவுப்பூர்வமான காதலாகிறது. இருவரும் கலந்துபேசி, நன்கு சிந்தித்துப் பாண்டிய மகுடத்துடன் இலங்கை செல்கின்றனர். மகுடத்தை ஈழமன்னனிடம் ஒப்படைத்தபின் மதிவாணன், "மலர்க்கொடி, நம் பணி முடிந்துவிட்டது. இனி எவரும் நம்மைக் கட்டுப்படுத்தாத இடத்திற்குச் செல்வோம். சாவகமோ, புட்பகமோ அதைத்தாண்டியும் செல்வோம்"[44] என்று கூறிப் பாய்மரப்படகில் ஏறுகிறான். அரச வாழ்க்கைச் சிக்கலை மறுத்துக் காதலை வாழவைக்கும் தன்மையோடு இருவரும் சேர்ந்து செல்கின்றனர்.

## 4. சுந்தரியின் காதல் (கலைக் காதல்)

சுந்தரி தன் தாய்க்குத் துன்பம் இழைத்தவரைக் கண்டுபிடித்துப் பழிவாங்கப் பல்லவநாட்டிற்கு வருகிறாள். காட்டில் உள்ள மல்லிநாதரின் கலைக் கூடத்தில் தங்குகிறாள். அங்கு ஓவியன் விஜயனைக் காண்கிறாள். இருவருக்கும் காதல் உண்டாகிறது.

விஜயன் ராஜசிம்மப் பல்லவரின் கலைக் கனவை நிறைவேற்ற வேண்டிய சூழ்நிலையில் உள்ளான். விஜயன் பனைமலைக்குச் சென்று ஓவியப் பணிகளை மேற்கொள்ள வேண்டும் என்பது மன்னரின் கட்டளை. இந்நிலையில் விஜயன் தன்னைப் பிரியக்கூடுமோ என்று சுந்தரி வருந்துகிறாள். விஜயன் "காதலும் கடமையும் இரண்டுமே முக்கியம். ஓவியத்தின் மீது காதல். உன்மீது அழியாக்காதல். இரண்டையுமே நிறைவேறச் செய்வது என் கடமை"[45] என்று கூறிச் சுந்தரியைத் தேற்றுகிறான். அரசனின் ஆளுகைக்குக்கீழ் உள்ள மக்கள் தங்கள் காதலை விருப்பம் போல் வளர்த்துக்கொள்ள இயலாமல் இருந்த சூழல் புலனாகிறது.

சுந்தரி தன் காதலை மட்டும் மையப்படுத்துகிறாள். விஜயன் காதலையும் நாட்டையும் சமமாக நினைக்கிறான். தன் காதலனைப் பிரிந்திருப்பதற்குப் பல்லவ மன்னன்தான் காரணம் என்று கருதி அவனிடம் கோபம் கொள்கிறாள். "விஜயனைப் பனைமலைக்கு அனுப்பினீர்கள். அவருடன் சிற்பியையும் அனுப்பினால் அற்புதமான சிற்பக்கோயிலும் ஓவியக்கூடமும் அமையும். காதலர்களைப் பிரிக்க அறிந்த தங்களுக்கு அந்த யோசனை தோன்றாதது ஆச்சரியம்தான்"[46] என்று சுந்தரி மன்னரிடம் துணிச்சலாகப் பேசுகிறாள்.

சுந்தரி நாட்டியக் கலையில் சிறந்தவள் என்பதாலும், கலைஞர்கள் மதிக்கப்பட்ட காலம் பல்லவர்காலம் என்பதாலும் சுந்தரியின் கோபத்தைப் பொருட்படுத்தாத பல்லவமன்னன் அவர்களது காதலை நிறைவேற்றி வைக்கிறார். சுந்தரி விஜயன் காதல் பிணைப்பு மன்னரை அவர்கள் மீது பரிவு கொள்ளச் செய்கிறது.

## 5. சந்திரமாலாவின் காதல் (நாடு கடந்த காதல்)

சாளுக்கிய நாட்டில் அஜந்தா குகைக்காடுகளில் தாய் தந்தையுடன் சந்திரமாலா வாழ்ந்து வருகிறாள். அவளது தந்தை சிறந்த ஓவியர். அவரிடம் ஓவியம் கற்கப் பல்லவ நாட்டைச் சேர்ந்த குமாரதேவன் என்ற இளைஞன் வருகிறான். இருவருக்கும் காதல் உண்டாகிறது. சந்திரமாலாவின் தந்தை கண்டிப்பானவர். இவர்களது காதலை அறிந்தவுடன் குமரனைத் தன்னிடம் வரக்கூடாது என்று அனுப்பிவிடுகிறார். காதலனைப் பிரிந்த சந்திரமாலா, அழகும் இளமையும் கொண்ட பெண். பல்லவநாட்டிற்குக் காதலனைத் தேடி வருகிறாள்.

முத்தம்மாள் பாட்டியிடம் அடைக்கலமாகச் சேர்ந்த சந்திரமாலா இருவரின் வயிற்றுப் பிழைப்புக்காக நடனமாடுகிறாள். தன் காதலனைச் சந்திக்கிறாள். அவனுக்குக் கலைமீது மிகுதியான ஆர்வம் இருந்ததேயொழியக் காதலில் இல்லை. ஆயினும் சந்திரமாலா காதலில் உறுதியுடனுள்ளாள். "உறுதியுடன் இருப்பது பெண்களுக்குக் கை வந்த கலை"[47] என்று சந்திரமாலாவின் தாய் உணர்த்திய செய்தி அவள் மனத்துள் பதிந்திருக்கிறது. கலையின் மீது ஆர்வம் கொண்ட குமாரதேவன் பேச்சிலும் பார்வையிலும் உறுதி இருப்பதைப் புரிந்து கொண்டு காத்திருக்கிறாள். இறுதியில் காதல் நிறைவேறுகிறது.

## 6. ராஜசுந்தரியின் காதல் (உதவிக் காதல்)

ராஜசுந்தரி அரசனால் அமர்த்தப்பெற்ற கோவில் நர்த்தகி ஆவாள். அழகு, இளமை, கலை மூன்றும் ஒருங்கே அமையப்பெற்ற ராஜசுந்தரியைப் பலரும் அடைய நினைக்கின்றனர். அவளுள்ளம் பெரிய குமாரதேவனை விரும்புகிறது. பெரியகுமாரதேவன் படைவீரன். சந்திரமாலாவின் காதலன் ஓவியன் குமாரதேவனுடன் பிறந்தவன். இருவரும் ஒரே சாயலைப் பெற்றவர்கள். இதனால் சில சமயம் குழப்பம் ஏற்படுகிறது.

சமுத்திரநாதன் என்ற தீயவனிடமிருந்து தன்னைக் காப்பாற்றிக்கொள்ள ராஜசுந்தரி குமாரதேவனுடனான தன் காதல் நிறைவேற வேண்டும் என்று நினைக்கிறாள்.

ராஜசுந்தரியின் காதலன் காபாலிகர்களால் கடத்தப்படுகிறான். அந்நேரத்தில் ஓவியன் குமாரதேவனைச் சந்திக்கிறாள். அவன் பாராமுகமாகச் செல்கிறாள். உருவ ஒற்றுமை காரணமாகத் தன் காதலன் தன்னைப் பார்க்காமல் செல்கிறான் என்று கருதி அவன்மீது ஊடல் கொள்கிறாள். சமுத்திரநாதன் ஆட்கள் புத்தபிட்சுவைப் போல் வேடமிட்டு ராஜசுந்தரியை அழைத்துச் செல்கின்றனர். அவர்களில் ஒருவனை ராஜசுந்தரி கொல்ல சிறையில் அடைபடுகிறாள். அவளது செவிலித்தாய் அங்கிருந்து காப்பாற்றி, களமேற்றி வேறு நாட்டிற்கு அனுப்புகிறாள். பல்லவ மன்னன் கலபதியிடம் கூறி ராஜசுந்தரியை நாகநாட்டிற்கு அனுப்புகிறாள்.

இவ்வாறு பல்வேறு துயரங்களைச் சந்திக்கும் ராஜசுந்தரிக்குக் காதல் வெறுத்துப்போகிறது. மணிமேகலையைப் போல் துறவியாகித் தொண்டாற்ற நினைக்கிறாள். ஓவியன் குமாரதேவன்–சந்திரமாலா, படைவீரன் குமாரதேவன் – நடனமங்கை ராஜசுந்தரி என்ற இந்தக் காதலர்கள் இணைந்தால் தனது கலைப்பணி சிறக்கும் என்று நினைத்த பல்லவ மன்னன் இவர்களை இணைத்து வைக்கிறான்.

### 7. சந்திரபிரபாவின் காதல் (உதவியால் உருவான காதல்)

ஏழைக்குடும்பத்தைச் சார்ந்த சந்திரபிரபா தன் தாத்தாவின் ஆதரவில் வாழ்கிறாள். மேலைச் சாளுக்கிய நாட்டைச் சார்ந்தவர்கள் அவ்வப்போது கீழைச்சாளுக்கிய நாட்டிற்குள் வந்து மாடுகளையும் ஆடுகளையும் கவர்ந்து சென்றபோது வல்லபன் அவற்றை மீட்டுக் கொடுக்கிறான். தன் உடைமைகளை மீட்டுத் தந்தவன் என்ற நன்றி உணர்வு காதலாய் மாறுகிறது. தன் தாயால் எளிமையாகவும், குறிக்கோளுடனும் வளர்க்கப்படும் வல்லபனின் மனம் அரச நலத்தைத் துறக்க நினைப்பதால் சந்திரபிரபாவின் காதலுக்கு இடம்கொடுக்கிறது.

சந்திரபிரபா கொண்ட காதல் மிகுதியினால் தன் காதலனைச் சந்திக்காத காலங்களில் துன்புறுகிறாள். வல்லபன் அரச குலத்தவன் என்பதால் தன் காதல் நிறைவேறாமல் போகுமோ என்று கருதி அலையிடைப்பட்ட துரும்பினைப்போல் தவிக்கிறாள். "அந்தஸ்து வித்தியாசத்தில் ஏற்படும் காதல் மிகவும் சோதனையைத் தரும். மறந்துவிடுவதே மேல்"[48] என்று சந்திரபிரபாவின் தாத்தா கூறும் காலத்தில் அவள் முகம் வாட்டம் கொள்கிறது. பிரிவு என்பது பெரும்பிளவு போல் காட்சியளிக்கிறது.

வல்லபன் சோழநாட்டு இளவரசனாக வேண்டும் என்று முடிவு எடுக்கிறார்கள். உயர்ந்த இடத்தில் திருமணம் புரியவும் பேச்சு நடக்கிறது. இதை அறிந்த சந்திரபிரபா சரியாக உண்பதில்லை. உறக்கத்திலும் வல்லபன் நினைவுதான். நதிக்கரைக்குச்சென்று நேரம்போவது தெரியாமல் அமர்ந்துள்ளாள். வல்லபன் வாழ்வில் தனக்கு இடம் கிடைக்குமா என்ற கவலை அவளை வாட்டுகிறது. ஆயினும் அவன் தனக்குக் கொடுத்த மோதிரத்தையும், உறுதிமொழியையும் நினைத்து நம்பிக்கையோடு காத்திருக்கிறாள்.

வல்லபன் தாய், சந்திரபிரபாவிடம் வல்லபனின் எதிர்காலப் பொறுப்பை எடுத்துக்கூறி அவனை மறக்கும்படி சொல்கிறாள். பிரபாவை மறக்க வல்லபன் விரும்பவில்லை. தனக்கு வரவிருக்கும் இளவரசுப் பட்டத்திற்காகக் காதலை இழக்க இயலாது என்று பேசுகிறான். "ஒரு பெண்ணின் தூய அன்பை விடச் சோழநாட்டு இளவரசுப்பட்டம் பெரிதன்று"[49] என்று தாயிடம் கூறிவிட்டு வெளியேறுகிறான்.

வல்லபன் சந்திரபிரபாவின் காதல் உறுதியைக் கண்டு அரசகுடும்பத்தார்கள் வியக்கிறார்கள். ஒரு பெண்ணின் மீது கொண்ட காதலுக்காக இளவரசுப் பட்டத்தைத் துறக்ககூடாது என்று அறிவுரை கூறுகிறார்கள். அரச குலத்தவர்கள் ஒன்றுக்கு மேற்பட்ட பெண்களை மணப்பது மரபுதானே என்று கருதி சந்திரபிரபாவை அரசனானதும்

மணக்கலாம் என்று முடிவெடுக்கிறார்கள். வல்லபன் மனதில் தனக்குமட்டுமே இடம் வேண்டும் என்று நினைத்த பிரபாவிற்கு அவ்வெண்ணம் நிறைவேறாவிட்டாலும் அவன் மனைவியருள் ஒருத்தியாகும் வாய்ப்புக் கிடைக்கிறது. காதல் நிறைவேறுகிறது.

### 8. பைரவியின் காதல் (நாட்டொருமைக் காதல்)

பைரவி 'யாதும் ஊரே! யாவரும் கேளிர்' என்ற உணர்வுடைய இலட்சியப் பாத்திரமாகப் படைக்கப்பெற்றுள்ளாள். பைரவி சோழநாட்டுப் பெண். சோழநாட்டு இரகசியங்களை அறியவந்த பாண்டி நாட்டு ஒற்றனுக்குத் தன்வீட்டில் இடம்கொடுத்து அவனைத் தன் காதலனாக ஏற்றுக் கொள்கிறாள். இதை ஊர்மக்கள் அறிகிறார்கள். பைரவி நாட்டிற்குத் தீமை இழைக்கிறாள் என்று பேசுகிறார்கள். பைரவியின் தோழி பொன்னருவி சாடுகிறாள். சோழமன்னன் பைரவியின் காதலனைச் சிறையிலடைக்கிறான். ஆயினும் பைரவி தன் காதலைக் கைவிடவில்லை.

தான் ஒரு கலைப்பெண் என்றும், தன்னை யாரும் கட்டுப் படுத்த முடியாது என்றும் கூறுகிறாள். "அனைவரும் ஒருவரே என்ற சமரச மனப்பான்மையுடைய பைரவியைப் போன்ற பெண் ஒருத்தியை இனி இந்த உலகில் காணமுடியாது"[50] என்று எயினன் கூறுகிறான். இருவரும் இரண்டு பெரிய பகைநாடுகளைச் சார்ந்தவர்கள். இருநாட்டு அரசர்களும் இவர்கள் காதலை எதிர்க்கிறார்கள். இருவருமே தங்கள் காதலைப் பயன்படுத்தி இரண்டு நாட்டுக்கும் நன்மை செய்யப் போவதாக வாக்களிக்கிறார்கள்.

பைரவியின் திறமையால் போரில் சோழ நாடு வென்றது. எயினன் தன் வாளை விட பைரவியின் விழிகளுக்குச் சக்தி அதிகம் என்று பாராட்டுகிறான். போரில் சோழநாடு வெல்லக் காரணமாக இருந்த பைரவி சோழமன்னனிடம் தனக்குரிய பரிசாகப் பாண்டியநாட்டுச் சிறையிலிருக்கும் எயினனைக் கேட்கிறாள். இரண்டு நாட்டையும் கடந்து எங்காவது சென்றுவிடுவதாகக் கூறுகிறாள். அதன்படி எயினனை அடைகிறாள். தனது

நாட்டை வாழ்விப்பதையும், காதலை வளர்ப்பதையும் இரு கண்களாகக் கொண்டு செயல்படும் பைரவியின் காதல் நாட்டொருமைக் காதலாகிறது. பகைநாட்டு ஒற்றனைக் காதலித்து அக்காதலை நிறைவேற்றிக் கொள்ளும் பைரவி தனிச்சிறப்புப் பெற்றவளாகப் படைக்கப்பெற்றுள்ளாள்.

### 9. சிந்தாமணியின் காதல் (பாதுகாப்புக் காதல்)

சோழநாட்டு ஒற்றர்படைத்தலைவன் நம்பியை மங்கலத்தேவன் மகள் சிந்தாமணி காதலிக்கிறாள். தனக்கும் தன் குடும்பத்திற்கும் அம்பலவாணன் ஆட்களால் ஏற்படும் தொல்லைகளைக் கூறத் தன் தந்தையுடன் சிந்தாமணி மன்னனைக் காணச் செல்கிறாள். அங்கு நம்பியைச் சந்திக்கிறாள். அவனை அவளுக்குப் பிடிக்கிறது. தன் வயதான தந்தையுடனும், தங்கையுடனும் பாதுகாப்பற்ற சூழலில் வாழும் சிந்தாமணிக்கு நம்பியின் அன்புப் பேச்சு பாதுகாப்பளிக்கிறது. பின் அது காதலாகிறது.

நம்பி அடுத்தவர்களுக்கு உதவும் நல்லெண்ணம் கொண்டவன். அதனால் சிந்தாமணியின் நிலை உணர்ந்து உதவுகிறான். இருவரும் கருத்தொருமித்த காதலர்களாகிறார்கள். இடையில் ஏற்பட்ட பல தொல்லைகளால் சிந்தாமணி அவன் காதலை மறக்கிறாள். உலக ஆசையைத் துறக்கிறாள். கோவிலில் தங்கிக் கலைத்தொண்டு செய்யச் சித்தமாகிறாள். ஆனால் இருவரிடையே மலர்ந்த உண்மைக் காதலால் நம்பி, அவளைத் தேடி வருகிறான். ஒரு காலை இழந்த நிலையில் வரும் நம்பியை சிந்தாமணி உள்ளன்போடு ஏற்றுக்கொள்கிறாள்.

### 10. மயில்விழியின் காதல் (கலைக் காதல்)

வளர்ப்புத் தாய் மரகதத்தால் கட்டுப்பாடுடன் வளர்க்கப்பெற்ற மயில்விழி சேரநாட்டிளைஞனைக் காதலிக்கிறாள். மயில்விழி நடனம் கற்றவள். அவள் காதலனும் சிறந்த நடனக் கலைஞன். இருவர் உள்ளமும் ஒன்றுகிறது. தனக்குத் தன் காதலுடனான உறவு “ஜன்மம் ஜன்மமான

தொடர்பு என்னை அவரால் மறக்க முடியவில்லை. அவரை மறக்கவும் என்னால் உறுதியாக முடியாது"[51] என்று தன் வளர்ப்புத் தாயிடம் நேரடியாகக் கூறுகிறாள். தன்னிடம் தோன்றியிருக்கும் காதல் இயல்பான ஓர் உணர்வு. அந்த உணர்வு தவறல்ல என்று பேசுகிறாள். காதல் நிறைவேறுகிறது.

### 11. எழினியின் காதல் (இயல்புக்காதல்)

கன்னிக்கோட்டை இளவரசியில் எழினி - நம்பியின் காதல் விரிவாக இடம் பெறாவிட்டாலும் இருவரும் காதலித்துத் திருமணம் செய்துகொண்ட நிகழ்ச்சி சுட்டப்பெறுகின்றது. எழினி பெண்ணுரிமைச் சிந்தனையுடைய பெண்ணாகப் படைக்கப் பெற்றுள்ளாள்.

நம்பி, எழினி இருவரும் கொண்டிருந்த காதல் அவர்கள் திருமணத்திற்குப்பின் நடக்கும் உரையாடல் வழிப்புலனாகிறது. "நம்பி உங்கள் மீது எனக்குக் காதல் உண்டு. என்னிடம் உங்களுக்கு மிகமிகப்பிரியம் உண்டு. வருங்காலத்தில் நீங்கள் அரண்மனையில் செல்வாக்குடன் பெரும்பதவி வகிக்கப் போகிறீர்கள் என்ற ஆசையில் நான் உங்களை விரும்பவில்லை. பட்டாடை, மஞ்சணை, பெருஞ்செல்வம் இவை அடையப்போகிறோம் என்பதற்காக நான் காதலிக்கவில்லை. அன்பு, காதல், பாசம் என்ற நிலையைப் படிப்படியாக என்னுள் வளர்த்தேன்"[52] என்ற கூற்றின் மூலம் அவர்களின் இயல்புக்காதல் வெளிப்படுகிறது.

### 12. வீரம்மாளின் காதல் (உயர்காதல்)

வீரம்மாள் படைத்தலைவன் முத்துக் குமரனின் தங்கை. இவள் இராசராசனின் மகன் இராசேந்திரச் சோழனைக் காதலிக்கிறாள். தன்னுடைய குடும்பச்சூழல் அறியாது அரசனை விரும்புகிறாள். இவளது அழகும், நடனக்கலைத்திறமையும் அரசனைக் கவர்கிறது. அதனால் இருவருக்கும் திருமணம் நடக்கிறது. வீரம்மாள் இராஜேந்திரனின் உடல்மீது ஆசைகொள்ளவில்லை. அவனது கலையுள்ளத்தைக் காதலிக்கிறாள். தனக்குக் குழந்தை பிறந்தால் அரசகுடும்பத்தில் பல சிக்கல் உருவாகும் என்று

நினைத்து அரசனைத் தன்னை நெருங்கவிடாது தடுக்கிறாள். தன் அழகுக்காகத் தன்னை நெருங்க வரும் பிற ஆடவர்களை வெறுக்கிறாள். இளவரசர் மீது கொண்ட காதலால் காமமிக்க கழிபடர் கிளவியாகத் தான் வளர்க்கும் கன்றுக்குட்டி நாகுவிடம் பேசுகிறாள்.

மனம்ஒன்றிப் போவதற்கு வயது ஒரு பொருட்டல்ல என்று தத்துவம் பேசுகிறாள். இராசேந்திரனின் கலை ஆர்வம், புலமை, வீரம், விவேகம், பாசம் அவரது வயதையும் மீறி இவளைக்காதல் கொள்ளச் செய்கிறது.

அரசனைத் தெய்வமாய் நினைக்கும் சாதாரணக் குலத்துதித்த வீரம்மாளுக்கு அரசனின் அரவணைப்பு மகிழ்வளிக்கிறது. உள்ளுக்குள் அதை எண்ணி மகிழ்ந்தாலும் வெளியில் காட்ட முடியாத நிலையில் தவிக்கிறாள். நெஞ்சொடு புலம்புகிறாள். அரசனுக்கருகில் அமரும் தகுதி தமக்குக்கிடைத்ததா என்று வியக்கிறாள். அரசன் "உன்னுள்ளே அறிவுச்செல்வம் மறைந்திருக்கிறது கலைப்புலமை ஒளிந்திருக்கிறது என் இதய ஒலியைக் கேட்கக் கூடியவள் நீதான்"[53] என்று தன் இலட்சியக் காதலைப் புலப்படுத்துகிறான்.

வயதில் சிறிவளாய் வெள்ளை உள்ளம் கொண்ட வீரம்மாளின் காதல் வளர்ச்சி நாவலில் சிறப்பாகச் சொல்லப்பெற்றுள்ளது. "மாரி, கோடை, பனிக்காலம் மாறுவதுபோல உள்ளமும், உடலும் மாறிவரும்போது எண்ணங்களும் மாறிவளர்ந்தன"[54] என்று வீரம்மாளும் அவள் தோழி முத்துவடிவும் பேசிக்கொள்ளும்போது வீரம்மாளின் உள்ளம் காதலைய் இயல்பாய் ஏற்றுக்கொள்ளும் விதம் புலனாகிறது.

"நாட்டியக்கலை அனைவருக்கும் பொது, கலைகளில் தேர்ச்சி பெற்ற அந்த மங்கை நல்லாள் பண்டிதச் சோழரான நம் இராசேந்திரனின் மனதில் அழியாத இடம்பெற்றுவிட்டாள். எதிலும் அவள் உதவியாக விளங்குவாள்"[55] என்று இராசராசர் கூறி அவர்கள் திருமணத்தை முடித்து

வைக்கிறார். வீரம்மாளின் காதல் தொடக்கத்தில் பயமும் ஐயமும் கலந்த காதலாகப், புலப்படுத்த முடியாத தன்மையுடையதாகத் திகழ்கிறது. திருமணத்திற்குப் பின் தன் கணவரோடு உறவாட முடியாத காதலாக உள்ளது.

ஆனாலும் தன் உள்ளம் ஒருபோதும் உடல் இச்சை கொண்டதில்லை என்பதை, "சுகவாழ்விழந்து உயிர்ச்சேர்க்கையன்றி உடல்சேர்க்கையை விரும்பாதவள்"[56] என்று புலப்படுத்துகிறாள். தன்னைத் தன்கணவனுக்கு அடிமை என்றும் பணிப்பெண் என்றும் சிறந்த துணையென்றும், தோழி என்றும், கருத்தறிந்து நடப்பவள் என்றும் கூறிக்கொள்கிறாள். அவளது ஒவ்வொரு பேச்சும் உயர்காதலை வெளிப்படுத்துகிறது.

## 2. நிறைவேறாக்காதல்

அரசகுலம் அல்லாத பெண்களின் நிறைவேறாக் காதல் பற்றி இப்பகுதி ஆராய்கிறது.

1. காஞ்சனா (கா.சு)
2. இன்பவல்லி (ந.பு.நா)
3. சித்திரவல்லி (சி.வ)
4. குணரேகா (சி.வி)
5. குமுதா (மா.வ.கா)
6. குமுதவல்லி (இரா.சபதம்)
7. மீன்விழி (சோ.இ.க)
8. மயிலழகு (சோ.இ.க)
9. மலர்மங்கை (சோ.ம)
10. சிந்தாமணி (ப.கா)
11. சாலினி, (மா.வீணை)

இப்பதினோரு பெண்களின் காதல் நிறைவேறாக் காதலாகச் சித்தரிக்கப் பெற்றுள்ளது. இப்பெண்கள் நாவல்களில் தலைமை மாந்தர்களாகவும், துணைமாந்தர்களாகவும் படைக்கப்பெற்றுள்ளனர்.

## 1. காஞ்சனாவின் காதல் (ஒருதலைக்காதல்)

காஞ்சனாவின் காதல் ஒருதலைக்காதலாகச் சித்தரிக்கப் பெறுகிறது. பதியிலாதார் குலத்தவளான காஞ்சனா நடனமாடியும், நாடகங்களில் நடித்தும் வாழ்ந்து வருகிறாள். காஞ்சனா நினைத்திருந்தால் உயர்செல்வந்தனை மணந்திருக்கலாம். அவள் மனம் தன் இளமைக்கு ஏற்றவாறு ஓர் இளைஞனைத் திருமணம் புரிந்து வாழவிரும்புகிறது. அந்நிலையில் விஜயனைக் கண்டு காதல் கொள்கிறாள். தானே வலியச் சென்று அன்பைப் புலப்படுத்துகிறாள். விஜயன்தான் என நினைத்துச் சாளுக்கிய இளவரசனிடமும் தன்காதலை வெளிப்படுத்துகிறாள். விஜயன் மீது காஞ்சனா கொண்ட காதல் ஒருதலைக்காதல். ஏனெனில், விஜயன் நடனக்கலையில் சிறந்த சுந்தரியைக் காதலிக்கிறான்.

காஞ்சனா கணிகைதான் என்றாலும் தன்னைச்சேர வந்த பல தீய ஆடவர்களிடமிருந்து இலாவகமாகத் தப்புகிறாள். உண்மையான காதலை அவள்மனம் விரும்புகிறது. தொழிலுக்காகத் தன்னை அலங்கரித்துக் கொள்கிறாளே தவிர நெறி தவறவில்லை.

விஜயன் தன் காதலை ஏற்காதபோது அவனைப் பழிக்கிறாள். அவன் முகத்தையே பார்க்கக் கூடாது என நினைக்கிறாள். காதலை வெளிப்படையாகத் தெரிவித்தும் தன்னை அவன் விரும்பவில்லையே என நினைக்கிறாள். விஜயன் தன் தங்கை சுந்தரியைக் காதலிப்பதை அறிந்தபோது அவள்மனம் அக்காதலை வாழ்த்த மறுக்கிறது.

காஞ்சியில் வாழ விரும்பாத காஞ்சனா கால்போன போக்கில் நடக்கிறாள். கிணற்றில் குதித்து உயிர்துறக்கக் கருதியபோது புத்தபிட்சுவால் காப்பாற்றப்பெறுகிறாள். “பெண்ணாய்ப் பிறந்த பிறகு துன்பத்தையும் துயரத்தையும் எதிர்பார்க்காமலோ, வரவேற்காமலோ முடியுமா”[57] என்று தேற்றிக்கொள்கிறாள். பின் புத்தபிட்சுவின் அறிவுரைப்படி தன் செல்வத்தைத் துறந்து, துறவிக்கோலம் கொள்கிறாள். காதலை நிறைவேற்ற முடியாத காஞ்சனா இறுதியில் நல்ல மனமாற்றத்தைப் பெறுகிறாள்.

## 2. இன்பவல்லியின் காதல் (ஒடுக்கப்பட்ட காதல்)

நந்திபுரத்து நாயகியில் இன்பவல்லியின் நிறைவேறாக்காதல் சித்தரிக்கப்பெற்றுள்ளது. இன்பவல்லி முல்லைத் தீவைச் சேர்ந்த பெண். ஆடல் பாடல்களில் சிறந்தவள். இவள் முல்லைத்தீவுக்குச் சென்ற அருண்மொழிவர்மனைக் கண்டு காதலிக்கிறாள். அருண்மொழி தன் தாய் நாட்டிற்குத் திரும்பவேண்டிய காலம் வந்தவுடன் அவளை மீண்டும் சந்திப்பதாகக் கூறிப் பிரிகிறான். வந்தவன் மீண்டும் செல்லவில்லை. அவனை எப்படியாவது அடையவேண்டும் என்ற உள்ள உறுதியுடன் இன்பவல்லி கலமேறிச் சோழநாடு வருகிறாள்.

இன்பவல்லிக்குக் குந்தவை அரண்மனையில் அடைக்கலம் தருகிறாள். அங்கு அருண்மொழியைப் பார்த்த இன்பவல்லி அதிர்ச்சி அடைகிறாள். குந்தவையிடம் தன்காதலனைப் பற்றிக் கூற முடியவில்லை. குந்தவை இவர்கள் காதலை அறிந்தபின், காதலை எச்சூழ்நிலையிலும் வெளிப்படுத்தக் கூடாது என்று சட்டம் போடுகிறாள். காதல் தவிப்பின் உச்சநிலையை இன்பவல்லி அடைகிறாள். தன்மனம் கவர்ந்த காதலன் ஏற்கனவே ஒரு பெண்ணை மணந்தவன். இன்னொரு பெண்ணை விரைவில் மணக்கப்போகிறவன். அவனுடன் பேசமுடியாத நிலை இன்பவல்லிக்கு ஏற்படுகிறது.

பின் குந்தவை அறிவுரைப்படி அரண்மனையினின்றும் நீங்கி, ஊரின் ஒதுக்குப்புறத்தில் நடனப்பள்ளி அமைத்துக் கலைத்தொண்டு புரிந்து வாழ்கிறாள். அரசகுல ஆணைக் காதலித்த இன்பவல்லியின் காதல் அதிகாரவர்க்கத்தால் ஒடுக்கப்பட்ட காதலாகிறது.

## 3. *சித்திரவல்லியின் காதல் (காதலா? நாடா?)*

இளவரசன் ஜெயசிம்மன் சாளுக்கிய நாட்டைச் சார்ந்தவன். சோழநாட்டு இரகசியங்களை அறியும் பொருட்டுத் தன்னைச் சோழப்படையில் உள்ள வீரன் என்று பொய்கூறிச் சித்திரவல்லியைக்

காதலிக்கிறான். இதை அறியாத சித்திரவல்லி உண்மையான நாட்டுப்பற்றுடையவன் என்று கருதிப் பல அரசியல் இரகசியங்களை அவனுடன் பகிர்ந்து கொள்கிறாள். இருவரிடையே காதல் வளர்கிறது.

முன்பின் அறியாத நாட்டில் சித்திரவல்லி காட்டும் அன்பு அவனுக்கு ஆறுதல் அளிக்கிறது. சித்திரவல்லியின் நாட்டுப்பற்றைக் கண்டு வியக்கிறான். உண்மையை உரைக்காது ஏமாற்றிக் காதலிக்கிறான். “பேதைப்பெண்! நன்றாக ஏமாறப்போகிறாள். என்னைப் பற்றிய உண்மையை அவள் அறிந்தபிறகு இவளுடைய பக்தி நாட்டின் மீதா? அல்லது உயிருக்குயிராய் நேசிக்கும் என்மீதா? என்பது தெரிய வேண்டும்’[58] என்று மனதுக்குள் திட்டம் தீட்டுகிறான்.

சோழநாட்டிற்கும், சாளுக்கிய நாட்டிற்கும் போர் நடைபெற உள்ளது. சித்திரவல்லி ஜெயசிம்மனிடம் தங்கள் நாட்டு மன்னனைக் காக்குமாறு கூறுகிறாள். அந்த அளவுக்கு அவனை நம்பிய சித்திரவல்லிக்கு ஜெயசிம்மனைப் பற்றிய உண்மை அறிந்தவுடன் அழுகை வருகிறது. தன்நாட்டைக் காப்பாற்ற முடியாமல் போய்விடுமோ என்று வருந்துகிறாள்.

“நீறுபூத்த நெருப்புடன் பழகினோம். மறைந்திருக்கும் எரிமலைமீது ஏறி அமர்ந்தோம்”[59] என்று உணர்கிறாள். ஜெயசிம்மனை மாற்ற முயல்கிறாள். முடியவில்லை. நாட்டுக்காகவும் காதலுக்காகவும் பாடுபடும் சித்திரவல்லிக்குக் காதலில் தோல்வி ஏற்படுகிறது. சோழ மன்னரைக் காப்பாற்ற நினைத்துப் போர்க்களம் செல்கிறாள். அங்கு மன்னர் தலையிலிருந்து விழ இருந்த மகுடத்தை எடுத்துவந்து இளவரசர் தலையில் சூடி அம்பு பட்டு மாள்கிறாள். அவள்மீது பாய்ந்த அம்பைக் ‘காதல்பரிசு’ என்கிறாள்.

### 4. குணரேகாவின் காதல் (உடற் காதல்)

பதியிலார் குலத்தைச் சேர்ந்த குணரேகா, ஜெயசிம்மன் கட்டளைப்படி சாளுக்கிய நாட்டிலிருந்து சோழநாட்டில் வந்து தங்குகிறாள்.

கலையில் சிறந்தபெண் என்பதால் சோழநாட்டில் யாரும் அவளைச் சந்தேகிக்கவில்லை. குணரேகா, ஜெயசிம்மனை அடைவதிலும், உடலின்பம் பெறுவதிலும் அதிக ஆர்வம் கொண்டுள்ளவளாகப் படைக்கப்பெற்றுள்ளாள். நல்ல கொள்கையுடைய பதியிலார் குலப்பெண்களைப் படைக்கும் ஆசிரியர் குணரேகா போன்ற ஒருசில பாத்திரங்களையும் படைக்கிறார்.

குணரேகா காதல் இச்சையை வெளிப்படையாகக் கூறுவதை வைத்துப் பெண் இவ்வளவு வெளிப்படையாகப் பேசுகிறாளே என்று ஜெயசிம்மன் நினைக்கிறான். தான் கூறியபடி குணரேகா சோழநாட்டில் நடந்துகொண்டால் அவள் விருப்பத்தை நிறைவேற்றுவதாக ஜெயசிம்மன் கூறுகிறான். சித்திரவல்லியும் ஜெயசிம்மனைக் காதலிப்பதை அறிந்த குணரேகா அவளுக்காக வருந்துகிறாள்.

ஜெயசிம்மன் ஏற்கனவே மணமானவன். யாரிடமும் ஏமாறமாட்டான் என்பதை அறிந்தும், குணரேகா அவனுடன் தொடர்பு வைத்து அவ்வப்போது அவனோடு பேசுவதில் மகிழ்கிறாள். குணரேகாவும் சித்திரவல்லியும் ஒருவனையே விரும்பியபோதும் அவன் ஒருவரிடமும் உண்மையாய் இல்லாததால், அவனை வெறுக்கும் நிலைக்கு ஆளாகிறார்கள். குணரேகாவின் காதல் நிறைவேறாக் காதலாகிறது.

### 5. குமுதாவின் காதல் (நாடும், காதலும்)

மாறவர்மன் குமுதாவின் காதல் நாவலில் விரிவாகச் சொல்லப்படவில்லை. இருவர் மனதிலும் விருப்பம் இருப்பதை அவர்களைச் சூழ்ந்திருப்போர் புரிந்து கொள்கின்றனர். நாவலில் அவர்களின் காதலைவிட நாட்டுப்பற்றே ஓங்கி நிற்கிறது. ஆயினும் தன்னைவிட்டுப் பிரிந்து சென்ற மாறனைச் சந்திக்கும் நாளுக்காகக் குமுதம் ஏங்குகிறாள்.

பாண்டிநாட்டைச் சார்ந்த குமுதமும், மாறனும் சோழநாட்டில் தங்கித் தங்கள் நாட்டின் வெற்றிக்குச் சதி தீட்டுகின்றனர். அப்போது அவர்களுக்கு உதவும் அடியார் “உனக்குக் குமுதத்தையும் குமுதத்திற்கு

உன்னையுமாக பரிசாக வழங்க ஏற்பாடு செய்வேன்”[60] என்று கூறும்போது இருவர் உள்ளத்திலும் மகிழ்ச்சி ஏற்படுகின்றது. பாண்டிநாட்டு வெற்றிக்குப் பிறகு குமுதத்தை மாலையிடக் கருதிய மாறன் போரில் நாட்டுக்கு வெற்றியைத் தேடித்தந்து உயிர்துறக்கிறான். குமுதாவின் வாழ்வில் நாடும் காதலும் போட்டிபோடக் காதல் தோல்வியடைகிறது.

## 6. குமுதவல்லியின் காதல் (கைவிடப்பட்ட காதல்)

குருகுலத்தில் தங்கிக் கல்விகற்கும் அச்சுதன் குமுதவல்லியைக் காதலிக்கிறான். வீணை இசைப்பதில் வல்லவளான குமுதவல்லியிடம் அச்சுதன் வீணையைக் கற்றுக்கொள்கிறான். இருவரின் காதலுக்கும் எதிர்ப்பு வர அச்சுதன் குமுதவல்லியை அழைத்துக்கொண்டு தன் தாயிருக்கும் இடத்திற்கு வருகிறான். கையில் பணமில்லாமல் காதலி முகத்தைப் பார்த்துக்கொண்டு காலம் தள்ள முடியாது என்று அச்சுதன் தாய் அறிவுரை கூறுகிறாள். தாயிடம் குமுதவல்லியை ஒப்படைத்துச் சென்ற அச்சுதன் திரும்பி வரவேயில்லை.

பிரிவாலும் பிறர் குத்தல் மொழிகளாலும் துன்பப்பட்டுக் கொண்டிருந்த குமுதவல்லியை நோய் தாக்குகிறது. அதனால் அவளது அழகான முகம் மாறி அழகிழக்கிறாள். தன்னந்தனியாய்த் தன் காதலனைத் தேடி வந்த குமுதவல்லிக்குக் காமவல்லி என்ற பதியிலாதார் குலப்பெண், தங்க இடம் தந்து உதவுகிறாள். அவளது காதலனோடு சேர்க்கப் பாடுபடுகிறாள். அச்சுதன் சாமியார் வேடத்தில் சுற்றித்திரிந்து சேர அரசனுக்கு உதவுகிறான்.

குமுதவல்லி அவனிடத்தில் தன்னை இன்னார் என்று வெளிப்படுத்திய போதும் அவனிடத்தில் காதல் கனியவில்லை. கல்நெஞ்சம் உடையோனாய் இருக்கிறான். அவன் வீட்டிற்குக் குமுதவல்லி சென்றபோதும் அவளை வெறியேறச் சொல்கிறான். குமுதவல்லியின் காதல் துன்பம் நிறைந்த காதலாகக் கைவிடப்பட்ட காதலாகிறது. வேடதாரியாய் அலையும் அச்சுதன் காதல் வாழ்விலும் வேடதாரியாகிறான்.

## 7. மீன்விழியின் காதல் (சிக்கலான காதல்)

மீன்விழி சோழநாட்டிலிருந்து ஆதித்தனுடன் வந்த கங்க நாட்டு இளவரசன் விக்கியண்ணனைக் காதலிக்கிறாள். அவன் யார் என்பதை அறியாது காதலித்த மீன்விழி அவனைப்பற்றி அறிந்தவுடன் மனம் மாறுகிறாள். மேலும் பட்டரின் மனைவி மூலம் அவன் ஏற்கனவே திருமணமானவன் என்பதறிந்து "உறுதிகொண்ட உள்ளத்துடன் இருந்த நான் சிறிது மயங்கிவிட்டேன். இளவரசனின் நண்பனிடம் மனதைப் பறிகொடுத்து விட்டேன். பிறகு விழிப்பு வந்தது. ஓடோடி வந்துவிட்டேன்"[61] என்று தன் சகோதரியிடம் எடுத்துக்கூறுகிறாள். மீன்விழி மிகுந்த அறிவுடைய பெண்ணாகப் படைக்கப்பெற்றுள்ளாள். ஆயினும் காதல் கொள்ளும் போது சிந்திக்காது செயல்பட்டதால் அவள் சித்தம் கலங்கும் நிலைக்குச் செல்கிறாள். பின் காதலை நிறைவேற்றிக் கொள்ள முடியாமல் அதிலிருந்து தப்பிக்கிறாள்.

## 8. மயிலழகின் காதல் (அரசர்களால் அழிந்த காதல்)

மயிலழகு சோழநாட்டிலிருந்து வந்த ஒற்றன் அமுதனைக் காதலிக்கிறாள். ஒற்றன், ஆதித்தனைப் பற்றியறிய அவனது மனைவி இளங்கோபிச்சியால் அனுப்பப்பெற்றவன். அரண்மனைக்குச் சேலை வியாபாரியாக வருகிறான். தன் காதலனைத் தானே தேர்ந்தெடுத்த மயிலழகு அவனுடன் சோழநாடு சென்று கலையில் சிறக்க விரும்புகிறாள். ஏனெனில் சோழநாட்டார் கலையை மிகவும் ஆதரிக்கின்றனர். அழகான ஆண்களிடத்தில் காதல் கொள்ளும் பண்பு மயிலழகிற்கு உண்டு. ஆதித்தனின் அழகில் மயங்கியதைப் பற்றிப் பல்லவமன்னனிடம் கூறும் போது, "நானும் மயங்கியது உண்மைதான். ஆனால் மயக்கம் தெளிந்துவிட்டது"[62] என்கிறாள். வீட்டில் தனது தங்கை மீன்விழி மேலோங்கிய நிலையில் உள்ளாள். மயிலழகு அடங்கித் தாயற்று, தந்தையால் எப்போதாவது கவனிக்கப்படும் பெண்ணாய் உள்ளாள். அதனால்தான் அவள் செயல்கள் சரியாய் அமையவில்லை.

தன் காதலன் அமுதன் கொலைசெய்யப்பட்ட செய்தியைக் கேள்விப்பட்ட பிறகு தஞ்சை செல்வதை வெறுக்கிறாள். காஞ்சியிலும் தங்க மனம் விரும்பவில்லை. தந்தையைக் கவனிக்கும் பொறுப்பை மீன்விழியிடம் ஒப்படைக்கிறாள். பின் தொண்டைமான் நல்லூர் சென்று அங்கு கோவிலில் பணிபுரிந்து காலத்தைக் கழிக்கிறாள். காதல் தோல்வி இறைச்சேவையில் மனதைச் செலுத்துகிறது. மனதைத் திடப்படுத்திக்கொண்ட பெண்ணாக மயிலழகு காட்சியளித்தாலும் அவள் மனம் மிகவும் துன்புறுகிறது.

## 9. மலர்மங்கையின் காதல் (தீய்ந்த காதல்)

மலர்மங்கை கூத்தனிடம் இசை கற்றாள். இறைப்பற்று மிகுந்த கூத்தன், மலர்மங்கையின் மீது காதல் கொள்கிறான். குருவாயிருப்பவர் தன்மீது காதல் கொள்வது முறையல்ல என்று நினைத்த மலர்மங்கை அவன் காதலைத் துவக்கத்தில் வெறுக்கிறாள்.

நீண்ட நாட்களுக்குப் பின் மறுபடியும் இருவரும் சந்திக்கின்றனர். அப்போது தன்னையே கூத்தன் நினைத்து வாழ்வதை அறிந்து அவன் காதலை வரவேற்கிறாள். கோவிலில் இசைத்தொண்டு செய்பவள் என்பதால் அவன் காதலை வெளிப்படையாக ஏற்றுக் கொள்ளவோ, புலப்படுத்தவோ முடியவில்லை. அதனால் யாருக்கும் தெரியாமல் இருவரும் வேற்று ஊருக்குச் செல்கின்றனர். மணிவாசகன் வீட்டில் சிலநாட்கள் தங்குகின்றனர். மலர்மங்கையின் அழகை அனுபவிக்க விரும்பிய மணிவாசகன் இருவர் மனத்தையும் கெடுக்க முயற்சி செய்கிறான். ஆனாலும் இருவரும் காதலில் உறுதியாய் உள்ளனர்.

கூத்தன் மலர்மங்கையின் மீது கொண்ட காதலை மிக உயர்வாகக் கருதுகிறான். “சிதம்பரத்தில் நடராசரைத் தரிசிக்காமல் என்னால் ஒருநாள் கூட இருக்கமுடியாது என்பது உண்மையே. ஆனால் நான் இப்பொழுது அந்த அம்பலவாணரைப் பிரிந்து இருக்கிறேன். காரணம் நீதான்

சிதம்பரம். எனக்கு நீதான் அம்பலவாணர். நீதான் திருப்பதிகம். நீதான் இசை. குறிஞ்சியும் காந்தாரமும் நீதான்”[63] என்று தன் உன்னதமான உள்ளத்தைப் புலப்படுத்துகிறான்.

இராட்டிரகூட மங்கையான மலர்மங்கை உதயன், மதுவணன் என்ற கொடியவர்களால் சோழநாட்டிற்கு அழைத்து வரப்பெறுகிறாள். கலையார்வம் மிக்க சோழ அரசனை, கலையில் சிறந்த பெண்ணாகிய மலர்மங்கையைக் கொண்டு அழித்து விட முயல்கின்றனர். அப்போது மலர்மங்கையின் காதலை அறிகிறார்கள். அதனால் கூத்தனும் மலர்மங்கையும் படகில் செல்லும்போது அவர்களைத் தாக்கித் துன்புறுத்துகிறார்கள். கூத்தன் படுத்தபடுக்கையாகிவிடுகிறான். நாடிருக்கும் சூழலில் தம் காதல் நிறைவேறாது என்று நினைத்த கூத்தன் “இனிமேல் சந்தித்தால் காதலை மறந்து கலைஞர்களாகச் சந்திக்கலாம். இனி நம் காதல் இறைவனிடம் தான்”[64] என்று ஓலை எழுதி அனுப்புகிறான்.

அந்த ஓலை நீண்ட நாள் கழித்து மலர்மங்கைக்குக் கிடைக்கிறது. காதலிக்க உரிமையற்ற சூழலில் சிக்கும் மலர்மங்கையின் காதல் தீயவர்களால் தீய்க்கப்பட்ட காதலாகிறது.

### 10. சிந்தாமணியின் காதல் (பகைவனின் காதலி)

சோழநாட்டுப் படைத்தலைவரின் மகள் சிந்தாமணி ஆவாள். தந்தையுடன் அடிக்கடி அரண்மனை செல்லும் வாய்ப்பைப் பெற்ற சிந்தாமணி அரசரையும் தந்தைபோல் நினைக்கிறாள். அதனால் அரண்மனையில் தங்கும் வாய்ப்புக் கிடைக்கிறது. சோழமன்னர் தன் மகளைப் போல் நடத்துகிறார். சோழமன்னரோடு பாண்டிநாடு சென்ற சிந்தாமணி பாண்டிய குமரர்களுள் ஒருவனைக் காதலிக்கிறாள். அவன் சோழமன்னருக்குக் கப்பம் செலுத்தப் பிடிக்காமல் காட்டில் தங்கிப் படைதிரட்டிச் சோழனை வெல்லக் காத்திருப்பவன். அவனைச் சிந்தாமணி காதலிப்பதால் அவள் பகைவனின் காதலியாகிறாள்.

சோழன் தனக்கு அடிமையாய் இருக்கும் விக்கிரம பாண்டியனுக்குச் சிந்தாமணியை மணமுடித்துக் கொடுத்துப் பாண்டிய நாட்டோடு எப்பொழுதும் நல்லுறவு வைத்துக் கொள்ள விரும்புகிறான்.

சிந்தாமணியின் காதலன் பாண்டியகுமாரன் மனதில் எப்பொழுதும் போர் என்ற எண்ணமேயுள்ளது. போரில் சோழர்களை வென்று, சோழர்களால் சிறைப்பிடிக்கப்பெற்ற தன் தாயை விடுவித்துச் சிந்தாமணியை வெற்றிப் பரிசாக அடைய நினைக்கிறான்.

சிந்தாமணியைத் தன் மகளாகக் கருதிய குலோத்துங்கன் சிந்தாமணியின் காதலை விரும்பவில்லை. ஆதரிக்கவில்லை. ஆனால் சிந்தாமணியோ, அரசர்களுள் ஒருநேரம் பகையும், மறுநேரம் உறவும் வருவது இயற்கை. ஆனால் தன் காதல் நட்பு, பகை எல்லாவற்றையும் மீறியது. விழிகளின் சந்திப்பில் எந்தவித பேதமும் இல்லை என்று கூறுகிறாள். ஆயினும் அவர்கள் காதல் வெற்றி பெறும் சூழல் உருவாகவில்லை. அரண்மனையில் காவல் அதிகமாகிறது. அதையும் மீறிச் சிந்தாமணியைப் பார்க்க வந்த பாண்டிய குமாரன் படைவீரர்களுடன் போரிட்டு மரணம் அடைகிறான்.

பல எதிர்ப்புகளிடையே தன் காதலை வளர்த்துக் கொண்ட சிந்தாமணி சுதந்தி உணர்வுடைய பெண்ணாய் இருப்பதால் காதலிலும் அப்படியே நடக்கிறாள். ஆனால் காதல் வெற்றிபெறவில்லை. பாண்டிய குமாரன் இறந்தபின் வேறுயாரையும் மணக்காமல் அவன் காதலியாக வாழ்கிறாள்.

### 11. சாலினியின் காதல் (நிலையற்ற காதல்)

சாலினி சாளுக்கிய நாட்டுப் பெண்ணாவாள். குமரேசனைக் காதலிக்கிறாள். பல்லவ நாட்டுக் கலைமீது சாளுக்கியர்கள் பொறாமை கொள்கின்றனர். பல்லவ நாட்டில் மிகச் சிறப்பாகப் பேசப்பட்டு வரும் மாணிக்க வீணையைக் கவர நினைக்கின்றனர். அதனால் சாலினியைப்

பல்லவ நாட்டிற்கு அனுப்புகின்றனர். வீணைக் கலைஞர் பரமகுரு வீட்டில் சாலினி தங்கி அவருக்குப் பணிவிடைகள் செய்கிறாள். பரமகுரு கண்தெரியாதவர். அவரது கலைச்சிறப்பைக் கண்ட சாலினி அவர்மீது காதலை வளர்க்கிறாள்.

பல்லவ நாட்டிற்கு வந்து, பரமகுருவைப் பார்த்தபின் சாலினிக்கு குமரேசனைப் பிடிக்கவில்லை. பல்லவநாட்டிலிருந்து மாணிக்கவீணையைக் கவர்ந்து சாளுக்கிய நாட்டிற்கு அனுப்பி விட்டுப் பரமகுருவோடு தங்கிவிட நினைக்கிறாள். இதை அறிந்த குமரேசன் சாலினி காதலை இழக்க விரும்பவில்லை. இருவருக்கும் நடந்த பேச்சுவார்த்தைச் சண்டையாக மாறுகிறது. சாலினி, குமரேசனைக் கொல்கிறாள்.

இதை மறைந்திருந்து பார்த்த தேவசோமை சாலினி துரோகம் செய்கிறாள் எனக் கருதி சாலினியைக் கொல்கிறாள். சாலினி சதிச் செயலுக்காகத் தன்வீட்டில் தங்கித் தன்னைக் காதலித்திருக்கிறாள் என்பதை அறிந்த பரமகுரு “சாலினி என்னும் சதிகாரிக்கு நான் அடைக்கலம் கொடுத்தேன். ஒரு கலைஞன் செய்யக்கூடாததைச் செய்துவிட்டேன். நான் பல்லவ நாட்டின் துரோகி. என்னைக் கழுவிலேற்றுங்கள்”[65] என்று வாய்விட்டு அழுகிறான்.

பெண்ணின் நிலையற்ற காதல் தன்னை அழிப்பதோடு, தன்னைச் சார்ந்தவர்களையும் துயரப்படுத்துகிறது.

## முடிவுரை

மனித வாழ்வில் காதல் குறிப்பிடத் தகுந்த பகுதியாகும். இனக்கவர்ச்சியிலிருந்து அன்பின் முதிர்ச்சி காதலுக்குரிய பரிணாமமாக அமைகிறது. தொல்காப்பியர் அகத்திணைக் கோட்பாட்டில் காதல் குறித்த இலக்கணமெய்ம்மைகளை வரையறுக்கிறார். சங்க இலக்கியங்களும் அகத்திணை மரபுகளை மதித்து வந்த நிலையை உணரலாம்.

காலப்போக்கில் அரசியல், பொருளாதாரம், பண்பாடு, வாழ்வியல் மதிப்புக்கள் ஆகியவைகளில் நிகழ்ந்த மாற்றங்கள் காதல் மதிப்பிலும் மாற்றத்தை ஏற்படுத்தியுள்ள நிலை குறிக்கத்தகுந்ததாகும். அவ்வக்கால இலக்கியங்கள் காதல் மதிப்புக்களை இலக்கியத்தில் பதிவுசெய்தே வந்துள்ளன. இலக்கியங்கள் அன்றிலிருந்து இன்றுவரை காதலைப் பாடுவதை மரபாகக் கொண்டிருக்கின்றன.

காதல் உடற்பசி, உள்ளப்பசி, பிறவிப்பசியைத் தீர்க்க வல்லது. பால் உணர்வு அடிப்படையாக இருந்தாலும் ஆன்மாக்களின் சங்கமமும் போற்றப் பெறுகிறது. காதல் குறித்த செய்திகளை இருபதாம் நூற்றாண்டில் துவங்கிய நாவல் இலக்கியமும் பதிவுசெய்யும் சூழல் தோன்றியது. விக்கிரமன் தமது நாவல்களில் காதல்பற்றிச் சிந்தித்துள்ளார்.

ஐந்திணைக்காதல் சிறப்புப்பெற்ற காதலாகும். நிறைவேறும் காதலில் இயல்புக்காதல், உயர்வுக்காதல் என்ற வகைப்பாட்டினை காணலாம். உணர்வுகாதலில் உணர்வுகள் முக்கியமல்ல. உள்ளங்களின் சங்கமம் முதன்மையானதாகும். இயல்புக்காதல் உறவுநிலையிலும், உறவு அல்லாத நிலையிலும் அமையலாம். உறவு அல்லாத நிலையில் கலப்புக்காதலும் இடம்பெறலாம்.

விக்கிரமன் தம் நாவல்களில் ஆசிரியர் கூற்று வாயிலாகவும், பாத்திரக் கூற்று வாயிலாகவும் காதல் பற்றிய சிந்தனைகளை எடுத்துரைக்கிறார். காதலில் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற வேறுபாடு இருப்பதில்லை என்பது விக்கிரமனின் சிந்தனையாகும். அவ்வகையில் காதலை எதார்த்தமாக எதிர்கொள்கிறார்.

காதல் வாழ்வு பிற்காலத்தில் சிறப்பாக அமையப் பொருள் வேண்டும் என்று தாய்கூற்றில் ஒலிக்கிறார். அழகான பெண்மீது ஆசை கொள்வது ஆண்குலத்தின் இயற்கை என்பது தந்தைப் பாத்திரங்களின் எண்ணமாகும். காதலன் காதலைப் புனிதமாகப் போற்றுகிறான். கடமைக்கு

இணையாகக் காதலைக் கருதுகிறான். எனினும் இலட்சியப் பெண்களின் பார்வையில் காதல் இரண்டாமிடத்தைப் பெறுவதை விக்கிரமன் சித்தரித்துள்ளார்.

ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப் பெற்ற இருபத்தைந்து நாவல்களில் இருபத்தோரு நாவல்களில் காதல் பற்றிய செய்திகள் வந்துள்ளன. அரசகுலம் சாராத பெண்களின் காதல் மிகுதி. அரசகுலம் சார்ந்திருந்தால் வரலாற்று மெய்ம்மைகளை மாற்றி அமைக்க இயலாது. அரசகுலம் சாராத பெண்களின் காதலில் புனைவுரைகளை இணைத்திடலாம் என்று மதிப்பிடலாம்.

அரசகுலம் சார்ந்த பெண்களின் காதல் சற்று விரிவாகப் படைக்கப் பெற்றுள்ளது. போராட்டங்களுக்கிடையில் காதலை எதிர்கொள்ளுதல், குலம்கடந்த காதல் ஆகியவை அரசகுலம் சார்ந்த பெண்களின் காதல் தன்மைகளாக இடம்பெற்றுள்ளன.

அரசகுலம் சாராத பெண்களின் காதலில் நாடு கடந்து அமையும் காதல், பகைவனைத் திருத்தும் காதல் போன்றவை காதல் புனைவில் இடம்பெற்றுள்ளன. அரசகுலம் சார்ந்ததில் மோகனாங்கி, ரங்கதேவி ஆகியோரின் காதல் அரசியல் காரணமாக நிறைவேறவில்லை.

நிறைவேறும் காதலில் உறவு, பரிவு, குலம் கடந்தநிலை, கலையார்வம், நாடுகடந்தநிலை, உதவிநிலை, பாதுகாப்பு, இயல்பு ஆகியவைகள் காதலுக்குரிய அடிப்படைச் சூழல்களாக அமைகின்றன.

கங்காபுரிக் காவலனில் வரும் வீரம்மாளின் காதல் உயர்வுக் காதல். இவள் அரசகுலம் சாராத பெண். அரசகுல ஆணைக் காதலிக்கும் தன்மையுடையவளாக உள்ளாள். இந்நிலையை விக்கிரமன் பிறநாவல்களிலும் அமைத்துக் காட்டுகிறார். இப்படிப்பட்ட காதலில் சில நிறைவேறியுள்ளதை நாவல்வழி உணர முடிகிறது.

அரசகுலம் சாராத பெண்களின் காதலில் ஒருதலை அன்பு, ஒடுக்கப்பட்ட நிலை, நாட்டுணர்வு, உடற்காதல், கைவிடப்படும் காதல், அரசர்களால் அழியும் காதல், பகைவன் காதலனாக அமைதல், நிலையற்ற காதல் ஆகியவை நிறைவேறாத காதலின் சூழல்களாகச் சித்தரிக்கப் பெற்றுள்ளன.

இவைகளைப் பொதுவாக நோக்கும் போது ஆசிரியர் இயல்புக் காதலை மிகுதியாகப் படைத்துள்ளார் எனக் கருதலாம். உயர்காதல் எதார்த்தமில்லை என்பது ஆசிரியர் சிந்தனையாக இருக்கலாம். காதலில் காமம் அன்பாக மாறுதல் காதல் கோட்பாடாகச் சுட்டப்பெறுகிறது. நிறைவேறும் காதலை மிகுதியாகச் சித்தரித்துள்ளார். ஆனால் எதார்த்தத்தில் நிறைவேறாத தன்மை பலவகைகளில் இருக்கிறது என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும். காதல் நிறைவேறாத போது பெண்கள் நாட்டுப்பணிகளிலும் கோவில் பணிகளிலும் ஈடுபடுவதாகப் சித்தரித்துள்ள விதம் கருதத்தக்கதாகும். காதலும் கடமையும் முரண்படுகிறபோது இவர் படைத்துள்ள பெண்கள் கடமைக்கு முக்கியத்துவம் தருகின்றனர்.

# சான்றெண்விளக்கம்

1. இலக்கியச் சொல்லகராதி, ப,55.
2. தமிழ்ப் பேரகராதி முதல்பாகம், ப,588.
3. ஆங்கிலத் தமிழ்க் கையகராதி, ப,312.
4. கிரியாவின் தற்காலத் தமிழகராதி, ப,290.
5. Promilla kapur, Love Marriage & Sex, P,25.
6. தொல்காப்பியம், பொருளதிகாரம் நூ.எண்.219.
7. குறுந்தொகை, பா.எண், 40.
8. கலித்தொகை, பா.எண், 137.
9. குறுந்தொகை, பா.எண், 3.
10. அகநானூறு. பா.எண், 339.
11. ந.மு.வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ), சிலப்பதிகாரம் மூலமும் உரையும், மனையறம்படுத்தகாதை, வரிகள், 73-79
12. திருத்தக்கத்தேவர், சீவகசிந்தாமணி, கனகமாலையார் இலம்பகம் இரண்டாம் பாகம் - 1887வது பாடல்.
13. மாணிக்கவாசகர், திருவாசகம், திருச்சாழல், ப.எண்.12.
14. கம்பர், கம்பராமாயணம், பாலகாண்டம், பூக்கொய்படலம் 18வது பாடல்.
15. சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள், முதற்பாகம் - ப.284.
16. பாரதியார், பாரதியார் கவிதைகள் பாடல்.232.
17. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், காதற்பெருமை பாடல், 15.
18. மகாத்மா பெண்களுக்கு, ப,97.
19. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப,454.
20. இரா.மோகன் கல்கி கட்டுரைகள்' ப,55.
21. விக்கிரமன் இராசாதித்தன் சபதம், ப,112.
22. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப,30.
23. விக்கிரமன் நந்திபுரத்து நாயகி, (மூன்றாம் பாகம்) ப,89.

24. விக்கிரமன், மங்கலத்தேவன் மகள், ப,57.

25. விக்கிரமன், இராஜாதித்தன் சபதம், ப,119.

26. விக்கிரமன், கன்னிக்கோட்டை இளவரசி, ப,14.

27. விக்கிரமன், சோழ இளவரசன் கனவு, ப,249.

28. விக்கிரமன், காஞ்சி சுந்தரி, ப,329.

29. விக்கிரமன், யாழ்நங்கை, ப,131.

30. விக்கிரமன், பகைவனின் காதலி, ப,163.

31. விக்கிரமன், பாண்டிய மகுடம், ப,81.

32. விக்கிரமன், பாண்டிய மகுடம், ப,48.

33. விக்கிரமன், சித்திரவல்லி, ப,192.

34. விக்கிரமன், நந்திபுரத்து நாயகி, (முதல்பாகம்), ப,224.

35. விக்கிரமன், நந்திபுரத்து நாயகி, (மூன்றாம்பாகம்), ப,407.

36. விக்கிரமன், நந்திபுரத்து நாயகி, (முதல்பாகம்), ப,356.

37. விக்கிரமன், மதுரை மகுடம், பக்,118-119.

38. விக்கிரமன், சோழ இளவரசன் கனவு, ப,164.

39. புலவர் குழந்தை, தொல்காப்பியத் தமிழர், ப,169.

40. விக்கிரமன், வல்லத்து இளவரசி, ப,390.

41. விக்கிரமன், இராஜாதித்தன் சபதம், ப,173.

42. விக்கிரமன், உதயசந்திரன், ப,329.

43. விக்கிரமன், உதயசந்திரன், ப,94.

44. விக்கிரமன், பாண்டிய மகுடம், ப,115.

45. விக்கிரமன், காஞ்சி சுந்தரி, ப,329.

46. விக்கிரமன், காஞ்சி சுந்தரி, ப,359.

47. விக்கிரமன் கடல் மல்லைக் காதலி, ப,85.

48. விக்கிரமன், தியாக வல்லபன், ப,87.

49. விக்கிரமன், தியாக வல்லபன், ப,169.

50. விக்கிரமன், யாழ்நங்கை, ப,102.

51. விக்கிரமன், வஞ்சி நகர் வஞ்சி, பக்,44-45.

52. விக்கிரமன், கன்னிக்கோட்டை இளவரசி, ப,35.

53. விக்கிரமன், கங்காபுரிக் காவலன், (பாகம் 1), ப,212 .

54. விக்கிரமன், கங்காபுரிக் காவலன், (பாகம் 1), ப,227 .

55. விக்கிரமன், கங்காபுரிக் காவலன், (பாகம் 1), ப,288 .

56. விக்கிரமன், கங்காபுரிக் காவலன், (பாகம் 1), ப-256 .

57. விக்கிரமன், காஞ்சு சுந்தரி, ப,373.

58. விக்கிரமன், சித்திரவல்லி, ப,112.

59. விக்கிரமன், சித்திரவல்லி, ப,237.

60. விக்கிரமன், மாறவர்மன் காதலி, ப,193.

61. விக்கிரமன், சோழ இளவரசன் கனவு, ப,349.

62. விக்கிரமன், சோழ இளவரசன் கனவு, ப,337.

63. விக்கிரமன், கொன்றைமலர்க்குமரி, ப,146.

64. விக்கிரமன், கொன்றைமலர்க்குமரி, ப,158.

65. விக்கிரமன், மாணிக்க வீணை, ப,276.

# 4. உறவு நிலைகளில் பெண்கள்

காதல் குறித்த சிந்தனைகள் முன்னியலில் விளக்கப் பெற்றன. காதல் அறத்தின் வழியில் திருமணமாக நிலைநிறுத்தப் பெறுகிறது. திருமணம் என்பது பண்பாட்டுப் பாரம்பரியம் உடையது. அவ்வகையில் பண்பாட்டு மதிப்புகள் (Cultural Values) பல திருமணத்தோடு தொடர்பு பெற்றிருக்கும். திருமணம் என்கிற நிகழ்வின் வழிக் குடும்பம் உருவாக்கம் நிகழ்கிறது. குடும்பம் சமூகவியலில் குறிப்பிடத்தகுந்த நிறுவனம் (Institution) ஆகும். அந்நிறுவனம் இயங்குவதற்கு உறவுகள் முதலிடம் பெறுகின்றன. உறவுகளின் இயக்கத்திற்கும், குடும்பத்தின் மேன்மைக்கும் சில விதிமுறைகள் அவ்வக் காலத்தில் உருவாகின்றன. சில தொன்று தொட்டு வருவன. அவ்வகையில் திருமணம், குடும்பம், குடும்ப உறவுகள், உறவுகளின் வகைகள் போன்றவைகள் குறித்த கருத்துருவாக்கங்களும், விளக்கங்களும் கவனத்தில் கொள்ளப்பெற வேண்டிய நிலையில் இவ்வியல் அமைகிறது.

கருத்துருவாக்கங்களைத் தெளிவாக்கிய பின்னர் அவைகளின் பின்னணிகளில் விக்கிரமன் நாவல்களில் இடம்பெற்ற கருத்துக்கள் தொடர்ந்து மதிப்பிடப் பெறுகின்றன.

## திருமணம்

திருமணம் என்பது சமுதாய ஒப்பந்தமாகும். ஆணும் பெண்ணும் இணைந்து திருமணம் என்கிற சடங்கால் கணவன், மனைவி என்ற பெயர்களோடு குடும்பத் தலைவனாகவும், குடும்பத் தலைவியாகவும் இணைந்து இல்லறம் நடத்துகின்றனர். “திருமணம் ஆணையும் பெண்ணையும் இணைக்கிறது. மேலும் இருவருக்கும் சமஉரிமைகளையும், கடமைகளையும் அமைத்துக் கொடுக்கிறது”[1] என்பது சமூகவியலார் சிந்தனையாகும். ஒரு பெண்ணுடன் வாழ்வதே திருமண வாழ்வின் நிறைவிற்கு ஏற்றது. அவ்வாழ்வில் அறநெறி பின்பற்றப் பெறவேண்டும் என்ற நோக்கில் பெண்ணுடன் ஆண் இணைந்து வாழும் வாழ்க்கைத் திருமணத்திற்குப்பின் இல்லறம் எனப்படுகிறது.

தமிழர்களின், 'களவு' என்கிற காதல் வாழ்க்கை அறப்படுத்தப்பெறும்போது 'கற்பு' வாழ்க்கையாகிறது. காதலுக்குத் தடைவரும் நிலையில் உடன்போக்கு மணமும் அக்காலத்தில் இருந்திருக்கிறது. இம்முறையில் பெற்றோர்/உறவினர் ஒப்புதலின்றித் திருமணம் நடந்ததாகத் தெரிகிறது. யாரைப் பெண் விரும்புகிறாளோ அவளையே மணத்தல் அறத்தொடு தொடர்புடைய கற்பு வாழ்க்கையென்று கருதப்பெற்றது.

"கற்பெனப் படுவது கரணமொடு புணரக்

கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்

கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே"[2]

என்பது தொல்காப்பியம்.

இக்கருத்தின் வழியாகத் தொல்காப்பியர் காலத்தில் 'கரணம்' என்ற சொல்லால் திருமணம் குறிக்கப்பெற்றிருப்பதை அறியலாம். ஆணும் பெண்ணும் திருமணத்திற்கு முன்பே அன்பு கொண்டிருந்தாலும், திருமணத்திற்குப் பின் ஊரறிய இல்லறம் நடத்தினர் என்பது பெறப்பெறுகிறது. ஊரறிய நடக்கும் இணைப்பு திருமணம் ஆகும்.

"மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்

தீவலம் செய்வது காண்பார் கண்நோன் பென்னை"[3]

இச்செய்திமூலம் சிலம்பில் திருமணம் ஒரு சடங்கு முறையாக இடம்பெற்றுள்ளதை அறியலாம். திருமணம் என்பதை வதுவை, மணம், மன்றல், வரைவு, கடி என்ற சொற்களால் தமிழர்கள் வழங்கினர். இன்று திருமணம் 'கல்யாணம்' என்ற சொல்லால் பரவலாகக் குறிக்கப்பெறுகிறது.

திருமணம் நல்லறத்துடன் கூடிய இல்லறமாய் மாறிக் குழந்தைப் பேற்றால் விரிவடைகிறது. "இந்துக்களின் திருமணம் புனிதமானது. அறம், இனவிருத்தி முதலியவற்றை நிறைவு செய்வதன் அடிப்படையில் நிகழ்வது"[4] என்ற கருத்துக் கருத்திற்கொள்ளத்தக்கது.

## குடும்பம்

உலகில் மனித சமுதாயம் பரிணாம வளர்ச்சியின் வரலாற்றைக் கொண்டது. அம்மனித சமுதாயத்தில் பழமையான நிறுவனங்களுள் (Institution) குடும்பமும் ஒன்று. "எந்தவோர் இனக்குவியல் பகுதியிலும் (Ethnographic Area) குடும்ப அமைப்பு இடம்பெறாமல் இல்லை. எனவே குடும்பம் என்னும் அமைப்பே படிமலர்ச்சிக் காலத்தில் தோன்றிய குலம் (Clan) போன்ற அமைப்புக்களைக் காட்டிலும் உலகளாவிய நிலையிலும், சமுதாயவியல் நிலையிலும் தோன்றி முக்கியத்துவம் பெற்று அழியா நிலையில் உள்ளது"[5] என்ற கருத்து இவண் கருதத்தக்கது.

இக்கருத்திலிருந்து சமூகத்தின் எல்லாக் குழுக்களிலும் குடும்பம் என்ற அமைப்பு இடம்பெற்றிருப்பதை உணரலாம். பண்டைக் காலத்தில் தோற்றம் பெற்ற இக்குடும்ப அமைப்பு எல்லாச் சமூக அமைப்புகளிலும் இடம்பெற்றிருப்பதை அறியலாம்.

## குடும்பம் அழியா அமைப்பு

"குடும்பம் பழமையானது. மற்றும் மனித சமுதாயத்திற்கு உரிய நிறுவனமாக விளங்குகிறது. வரலாற்றுக் காலத்திற்கு முன்பிருந்தே நிலவி வருகிற குடும்பம் என்ற அமைப்புச் சமூகவளர்ச்சிக்குத் துணையாய் இருந்து வந்திருக்கிறது. மக்கள் குடும்பத்தின் வழி வளர்கிறார்கள். அவர்களுக்குச் சொந்தமான குடும்பத்தை நிறுவுகிறார்கள்".[6] இவ்வாறு மனிதன் குடும்பத்தின் வழியாக வளர்கிறான். அதனால் குடும்பம் என்பது அழியாத ஒரு சமூகத்தில் உள்ளது. தனித்து வாழும் இயல்பற்ற மனிதன் தன்னைச் சூழ்ந்துள்ள குழுக்களுடன் சேர்ந்து வாழவேண்டிய நிலையில் உள்ளான். அக்குழுக்களுள் முதன்மையானது குடும்பமாகும். "குடும்பத்தில்தான் அவனது வாழ்க்கையில் பெரும்பகுதி அமைகிறது. பிறப்பிலிருந்து இறப்புவரை அவன் இக்குழுவோடு பிணைப்பு வைத்திருக்கிறான். அவனுடைய உடல் உள்ளத்தேவைகளைப் பெரிதும் நிறைவேற்றி அவனுடைய வாழ்க்கையை அமைத்துக்கொடுப்பது குடும்பமே"[7]

இந்நிலையில் மனிதனின் உடல் மற்றும், உள்ளத்தின் தேவை நிறைவுக்குக் குடும்பம் காரணமாக உள்ளது. அதனால் குடும்பம் என்ற அமைப்பு எல்லாக் காலங்களிலும் எல்லாப் பண்பாட்டுக் கூறுகளிலும் அழியாத அமைப்பாக இருந்து வருகிறது.

## குடும்பத்தின் வகைகள்

திருமண உறவை அடிப்படையாகக் கொண்டு அமையும் குடும்பம் திருமண வாழ்க்கைக் குடும்பம் (Conjucal Family) என அழைக்கப் பெறுகிறது. குடும்பம் இரண்டு வகைப்படும். அவை,

1. தனிக்குடும்பம் (Nuclear Family)
2. கூட்டுக்குடும்பம் (Joint Family)

எனப்படும்.

### 1. தனிக்குடும்பம்

கணவன் மனைவியைக் குடும்ப உறுப்பினர்களாகக் கொண்டு தனிக்குடும்பம் அமையும். அண்மைக் காலச் சமூகத்தில் பெரும்பாலும் தனிக்குடும்ப நிலையே காணப்பெறுகிறது. நகரக்குடும்பங்கள் மிகுதியாகத் தனிக்குடும்பங்களாகவே உள்ளன. கீழ்க்கண்ட வரைபடம் தனிக்குடும்பத்தின் விளக்கத்தைத் தெளிவாக்க உதவும்.



## 2. கூட்டுக்குடும்பம்

கூட்டுக்குடும்பங்களில் பொதுவான மூதாதையர்களைக் கொண்ட பலதலைமுறையைச் சேர்ந்த குடும்பத்தினர் உறுப்பினர்களாக இருப்பர். அதாவது கூட்டுக்குடும்பத்தில் உள்ள ஆண்களின் மனைவிமார்கள், தாய்மார்கள், விதவையான அல்லது திருமணமாகாத பெண்கள், திருமணமாகாத ஆண்கள், குழந்தைகள் முதலியோர் இருப்பர். கூட்டுக்குடும்பத்தோடு தொடர்புடைய உறவினர்களை முதல்நிலை உறவினர்கள் (Primary relations) என்றும், இரண்டாம் நிலை உறவினர்கள் (Secondary relations) என்றும் வகைப்படுத்தலாம். கூட்டுக் குடும்பத்தைக் கீழ்க்காணும் வரைபடம் விளக்கும்.




வரைபட விளக்கம்

1. முதல் பரம்பரை (பாட்டன், பாட்டி)
2. இரண்டாம் பரம்பரை (மகன்-மருமகள்; மகள், மருமகன்)
3. மூன்றாம் பரம்பரை (பேரன், பேத்தி - மகன் வழி); பேரன், பேத்தி - மகள் வழி)

- கூட்டுக்குடும்பத்தில் ஒற்றுமை உணர்வு சிறக்கிறது.
- முதியோர் கூட்டுக்குடும்பத்தில் பாதுகாக்கப் பெறுகின்றனர்.
- உடல் ஊனமுற்றோர், நோயுற்றோர் போன்றவர்களுக்கு அன்பும் ஆதரவும் கிடைக்கிறது.

- நல்ல பழக்கவழக்கங்கள், சமயச் செய்திகள் கூட்டுக் குடும்பத்தின் மூலம் இளையவர்களுக்கும், குழந்தைகளுக்கும் கிடைக்கிறது.
- நன்னடத்தை, குடும்பக் கடமைகள் ஆகியவை குடும்ப உறுப்பினர்களுக்குக் கற்பிக்கப் பெறுகின்றன,

காலம் மாறுவதற்கு ஏற்ப மக்களின் வாழ்க்கை முறையும் மாறுகிறது. விவசாயத் தொழிலிருந்து சமூகம் மாறிக்கொண்டிருக்கிறது. அதனால் விவசாயத்தின், பாரம்பரிய மதிப்புகள், வரலாற்று மதிப்புகள் (Historical values) தற்காலத்தில் கேள்விக்குறியாக உள்ளன. மனிதன் கல்விக்காக, வேலை வாய்ப்புக்காகத் தன் குடும்பத்தை விட்டுப்பிரிகிறான். அதனால் கூட்டுக்குடும்பம் சிதைந்து தனிக்குடும்பம் உருவாகிறது. இந்நிலை தற்கால நகரமக்களிடம் இயல்பாக இருப்பதைக் காணலாம். கிராமப் புறங்களில் கூட்டுக்குடும்பநிலை தற்பொழுதும் ஓரளவு நிலவி வருவதைக் காணலாம்.

## தந்தை வழிக் குடும்பம்; தாய்வழிக்குடும்பம்

தந்தை வழிக்குடும்பத்தில் ஆணுக்கும், தாய்வழிக் குடும்பத்தில் பெண்ணுக்கும் சிறப்பிடம் உண்டு. தந்தைவழிக் குடும்பத்தில் தந்தை வழி உறுப்பினர்கள், குடும்ப உறுப்பினர்களாய் இருப்பார்கள். தாய்வழிக்குடும்பத்தில் தாயின் உறவினர்கள், குடும்ப உறுப்பினர்களாய் இருப்பார்கள். தொடக்கத்தில் தாய்வழிச் சமூகமாய் இருந்த நிலை தற்போது மாற்றம் கண்டுள்ளது.

"தந்தை வழிக் குடும்பம் ஏற்பட்ட பின்னரே ஆடவர்கள் தாங்கள் மணக்கும் பெண்கள் தூய்மையைக் காத்துக் கொண்டவர்களாக இருக்கவேண்டுமென விழையத்தலைப்பட்டார்கள். தாய்வழிச் சமூகமுறை நிலவிய பொழுது வாலிபர்களைப் போன்றே இளம்பெண்களும் தம் விருப்பப்படி தங்கு தடையின்றிக் காமக் கேளிக்கைகளில் ஈடுபட்டனர். ஆனால் மணத்திற்குப் புறம்பான சிற்றின்ப உறவுகள் கொள்வது நெறிகெட்ட

நடத்தை என்று பெண்களுக்கு அறிவுறுத்தும் நிலை ஏற்பட்டதும் அவர்கள் தவறிழைப்பதைச் சமூகம் பொறுத்துக்கொள்வதற்கில்லை என்ற நிலை விளங்கியது"[8]

தந்தைவழிக் குடும்பத்தில் 'கற்பு' பெண்களுக்கு வற்புறுத்தப்பெற்றது. இக்குடும்பத்தில் ஆணாதிக்கம் நிறைந்திருக்கிறது. பெண்ணுரிமைகள் பல மறுக்கப் பெறுகின்றன. இதனால் அண்மைக் காலத்தில் பெண்ணுரிமைக்காகப் போராடும் நிலை (Feminism) உருவாகியது. ஒவ்வொரு போராட்டத்திற்கும் அவற்றுக்கான சமூகப் பின்புலங்கள் உண்டு.

### பிற குடும்ப வகைகள்

ஒருவன் ஒரு மனைவியோடு வாழும் குடும்பங்கள் ஒரு துணைக்குடும்பம் அல்லது ஒரு தாரக்குடும்பம் என்றழைக்கப் பெறும். ஒருவன் பல மனைவியரோடு வாழும்நிலை சில குடும்பங்களில் இருந்தாலும் ஒருவனுக்கு ஒருத்தி என்பதே உயர்ந்த குடும்பக் கோட்பாடாக சமூகத்தில் இடம்பெறுவதைக் காணலாம்.

மேலும் குடும்பம் எவ்வாறு, யாரால் நிர்வகிக்கப்பெறுகிறது என்பதை வைத்துத் தந்தையாட்சிக் குடும்பம், தாயாட்சிக் குடும்பம், சமதர்மக்குடும்பம் என வகைப்படுத்தலாம்.

தந்தையின் இழப்பின் காரணமாகவோ, பொறுப்பின்மை, தீய ஒழுக்கம் காரணமாகவோ தாயால் நிலைபெற்றுள்ள குடும்பங்களும் உள்ளன. இந்நிலையில் குழந்தைகள் குடும்ப உறுப்பினர்கள் யாராவது ஒருவர் பராமரிப்பில் மட்டுமே இருப்பர். இதை முழுமையில்லாக் குடும்பம் எனக் கூறலாம்.

**குடும்ப வகைகளைக் கீழ்க்காணும் வரைபடம் தெளிவாக உணர்த்தும்**



## குடும்ப உறவுகள்

தமிழ்ச்சமூகம் வளர்ச்சியடைந்த நிலையில் உள்ள சமூகமாகும். குழுவாக வாழும் மனித வாழ்க்கையில் சமூக மேன்மைக்காகத் தோன்றிய விலக்குகள் (Taboos) பல தமிழ்ச்சமூகத்தின் வளர்ச்சிக்கு அடிப்படையாய் அமைகின்றன.

“காமம் சான்ற கடைக்கோட் காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே” (தொல்-பொருள்.1138)

என்பது தொல்காப்பியச் சிந்தனையாகும். இரண்டு பேரின் அன்பு இருவருக்கும் உரியதாகத் தோன்றி, ஒரு சிலருக்கு உரியது போல விரிந்து, பிறர்க்காக நிகழ்த்தும் பெருவாழ்வே இந்நூற்பாவில் குறிக்கப்பெறுகிறது. “இரண்டு பேருக்காக வாழத்தொடங்கியவர்கள் உலகத்து எல்லோருக்குமாக வாழவேண்டும் என்னும் கோட்பாட்டை இதன்மூலம் வாழ்க்கை இலக்கணமாக வகுத்துத் தருகிறது தொல்காப்பியம்”[10] மக்கள் சேர்ந்து வாழ்வது இயல்பு என்பது உயிர்நூலார் கண்ட உண்மை. இதற்காகவே புனிதக் காதல் இயற்கையில் அமைந்துள்ளது. காதல் சேர்க்கை, குடும்பத்தை உருவாக்குகிறது. குடும்பச் சேர்க்கையின் குறிக்கோள் ஊராய், கோட்டமாய், வட்டமாய், நாடாய், உலகமாய் விரிந்து பொலிகிறது.

வள்ளுவர் ‘குடி’ என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றார். இது குடும்பம் என்ற சொல் விரிந்து பயன்படுத்தப் பெற்ற நிலையாகும். அதே போல் குடிக்குப் பதிலாகக் குடும்பம் என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார் (1029). எனவே வள்ளுவரின் குடிசெயல்வகைக் கருத்து இங்கு நினைவு கூறத் தக்கதாகும். தனது குடும்பத்தைக் காக்க ஒருவன் முயற்சி செய்கிறான். குடும்பத்துக்காக மட்டுமல்லாது தான்பிறந்த குடிக்கும் பாடுபடுகிறான்.

குடும்ப உறவுகளில் கணவன் மனைவி உறவே தலைமைப்பகுதியாகும். கணவன் வழிவந்த சுற்றம், தந்தைவழிச் சமூகத்தில் முதலிடம் பெறுகிறது. மனைவியின் பிறப்பிடம் வேறாக இருப்பதால் குடும்பத்தில் தந்தைவழிச் சுற்றம் அவளுக்குச் சவாலாக அமைகிறது. தனிக்குடும்பத்தில் பெரும்பாலும் சுற்றத்தின் சுமை மிகுதியாக இல்லை. கூட்டுக் குடும்பத்தில் உள்ள உறவுநிலைகள் மிகுதி. அதனால் அங்கு உறவுகள், சிக்கல்கள், கடமைகள், பொறுப்புகள் மிகுதியாக உள்ளன.

கூட்டுக்குடும்பம் ஆணாதிக்கம் சார்ந்ததாக அமைகிறது. கூட்டுக்குடும்பத்தில் பெண் (மனைவி)தன் உறவுகளிலிருந்து விடுபட்டுக் கணவன் சார்ந்த உறவுகளுடன் வாழ்கிறாள். கணவன் உறவு சார்ந்த கூட்டுக்குடும்பத்தில் கணவனின் தாய், தந்தை, மூத்த தலைமுறையைச் சார்ந்தவர்கள், கணவனின் சகோதரர், அவரதுமனைவி, குழந்தைகள் உறுப்பினர்களாக அமைவர். கணவனின் சகோதரிக்குத் திருமணம் ஆகிவிட்டால் அவளது உறவு இக்குடும்பத்தில் கலப்பதில்லை. சகோதரி கணவனை இழந்து விட்டாலோ, அவள் வாழா வெட்டியாக இருந்தாலோ சகோதரன் குடும்பத்தில் நிலையாகத் தங்கி விடுகிறாள். கணவனின் திருமணமாகாத சகோதரன்/சகோதரி கூட்டுக்குடும்பத்தில் உள்ளனர். அதனால் உறவின், சமூகத்தின் பாரம்பரிய நிலை இங்குப் பின்பற்றப் பெறுகிறது.

கணவன், மனைவி, பிள்ளைகள் என்று அமையும் தனிக்குடும்பம் முழுமைக் குடும்பமாகக் கருதப்பெறுகிறது. இதில் கணவன், மனைவி இருவரும் குழந்தை நலத்தில் அக்கறை கொள்வர். குழந்தைகளின் முறையான வளர்ப்பிற்கு முழுமைக் குடும்பம் உறுதுணையாக இருக்கிறது. கணவன் குழந்தைகள் மட்டும் வாழும் குடும்பமும், மனைவி, குழந்தைகள் மட்டும் வாழும் குடும்பமும் முழுமையில்லாக் குடும்பமாகிறது. இங்கு குழந்தைகளின் நலம் பண்பாட்டு அடிப்படையிலும், உளவியல் அடிப்படையிலும் பாதிக்கப்பெறுகிறது.

குடும்ப உறவு சிறந்து நிற்கக் குடும்பப் பெண் சிறந்திருக்க வேண்டும். பெண்ணால்தான் குடும்ப உறவுகள் வலுப்பெறும். "நூறுமனிதர்கள் ஒன்று கூடித் தங்களை ஒரு கூட்டமாக ஆக்கிக் கொள்ள முடியும். ஆனால் குடும்பத்தை உருவாக்க ஒரு பெண்ணால்தான் முடியும்"[11] என்ற கருத்து இவண் கருதத்தக்கது.

சமூகத்தின் மாற்றத்திற்கேற்ப குடும்பத்தின் மதிப்புகளும் மாற்றம் பெறுகின்றன. இந்நிலையில் அவ்வக்காலச் சூழல்களை, மதிப்புகளை எழுத்தாளர்கள் தம் எழுத்துக்களில் பதிவு செய்துள்ளனர். விக்கிரமன் எவ்வாறு குடும்ப மதிப்புகளை, பெண்களின் உறவு நிலைகளைத் தம் வரலாற்று நாவல்களில் பதிவு செய்துள்ளார் என்பதை மதிப்பிடும் வகையில் இவ்வியல் அமைகிறது. அம்மதிப்பீட்டிற்கு முன் குடும்ப வகைப்பாட்டினைக் கருத்தில் கொண்டு இவ்வியலில் குடும்ப வகைகள், உறவு வகைகள் குறித்த மெய்ம்மைகள் ஆராயப்பெறுகின்றன.

***விக்கிரமன் நாவல்களில் திருமணம், குடும்பம், உறவு பற்றிய செய்திகள்***

விக்கிரமன் நாவல்களில் தனிக்குடும்பச் சூழலும், கூட்டுக்குடும்பச் சூழலும் அமைக்கப்பெற்றுள்ளன. வரலாற்றுக் கால நாவல்கள் என்பதால் அரச குடும்பங்கள் பற்றியும், அக்காலத்தில் வாழ்ந்த அரசகுலம் அல்லாதார் குடும்பங்கள் பற்றிய செய்தியும் நாவல்களின் வழி வெளிப்படுகின்றன.

## திருமணம்

திருமணம் பற்றிய செய்திகளைக் கதைமாந்தர் வழி ஆசிரியர் கூறிச் செல்கிறார். "ஒரு கன்னிப் பெண் தனியாக வாழ்வது என்பது எளிதான செயலன்று"[12] என்ற செய்தியின் மூலம் திருமணத்தின் இன்றியமையாமை உணர்த்தப் பெறுகிறது. ஒரு பெண்ணும் ஆணும் சேர்ந்து வாழும் வாழ்க்கைக்குரிய சடங்கு திருமணம். மனிதர்கள் குறிப்பாகப் பெண்கள் திருமணமின்றி வாழ்வது எளிதல்ல என்பது பெறப்பெறுகிறது.

இத்திருமணங்கள் பல நடந்திருக்கின்றன. மேலும் எல்லாக்காலத்திலும் பெண்கள் தன் கணவர் ஒருத்திக்குமேல் திருமணம் செய்துகொள்ளக்கூடாது என்பதிலேயே கவனமாய் இருந்தனர் என்பதை "தன் கணவன் ஒருத்திக்கு மேல் மணக்கக்கூடாது என்பதில் எந்தக் பெண்ணும் தீவிரமாகவே இருப்பாள்"[13] என்ற கருத்தின் வழி அறியலாம்.

அரசகுலத்தவரின் திருமணம் பெரும்பாலும் நாட்டின் நன்மை கருதி நடப்பதாக ஆசிரியர் காட்டுகிறார். அதாவது:

1. படையெடுப்பைத் தடுக்க
2. படை உதவி பெற,
3. பழங்காலப் பகைமை மறக்க
4. நன்றியுணர்வை வெளிப்படுத்த

அரசகுலத்திருமணங்கள் நடந்தேறின. இம்முறை நாவல்களின் மூலம் ஆங்காங்கே உணர்த்தப் பெறுகின்றன.

## குடும்பம், உறவு

கணவனும் மனைவியுமாக அன்புசெலுத்தி வாழக்கூடிய நிலை குடும்பம் எனக்கருதப்பெறுகிறது. இதை "நீ திருமணமானவள், காதலித்து மணந்தவள். உயிருக்குயிராக இருவரும் நேசித்து வாழ்க்கையை நடத்திக்கொண்டிருந்தீர்கள். உன் மீது உள்ள அன்பின் அழுத்தமாக நீ சொன்னபடி நடந்தவர் நம்பி"[14] என்று சித்திராதேவி எழினியிடம் கூறும் கருத்தின்மூலம் ஆசிரியர் வெளிப்படுத்துகிறார்.

ஆண், பெண்ணுக்கிடையே உண்டான காதல், அது கனிந்த நிலையில் திருமணமாகிறது. திருமணத்தின் வெற்றியாக அமைவது நல்ல குடும்பம். அக்குடும்பம் சிறப்பாக அமையும் போது உறவு வலுக்கிறது என்ற உறவுச்சங்கிலிப் பிணைப்பை, ஆசிரியர் கதைப்போக்கில் பாத்திரங்களின் வழி கூறிச் செல்லுகிறார். இக்கருத்தின் மூலம் தனிக்குடும்பநிலை

புலப்படுத்தப்படுகிறது. தனிக்குடும்ப வெற்றி கணவனும் மனைவியும் ஒருவரையொருவர் புரிந்துகொண்டு நடப்பதிலேயே உள்ளது என்பதையும் அறியலாம்.

அரச குடும்பங்கள் பற்றிக் கூறுகின்றபோது அரசன், அரசி, அரசனின் சகோதரர்கள், இளவரசன், இளவரசி, பணிப்பெண்கள், தாதியர், செவிலியர் என்று அமைந்த விரிவான கூட்டுக்குடும்பத்தை அமைத்துக்காட்டுகிறார்.

ஆய்வுக்குட்படுத்தப்பட்ட விக்கிரமனின் 25 நாவல்களில் இடம்பெற்றுள்ள தனிக்குடும்பம், கூட்டுக்குடும்பம் பற்றிய செய்திகளைக் கீழ்க்கண்டவாறு அட்டவணைப்படுத்தலாம்.

அட்டவணை 4.1

## குடும்ப வகை

| எண் | நாவலின் பெயர் | தனிக்குடும்பம் | கூட்டுக் குடும்பம் |
|---|---|---|---|
| 1. | உதயசந்திரன் | + | + |
| 2. | பாண்டிய மகுடம் | + | + |
| 3. | காஞ்சி சுந்தரி | + | - |
| 4. | நந்திபுரத்து நாயகி | - | + |
| 5. | வல்லத்து இளவரசி | - | + |
| 6. | சித்திரவல்லி | - | + |
| 7. | ஆலவாய் அரசி | + | + |
| 8. | மாறவர்மன் காதலி | - | + |
| 9. | இராசாதித்தன் சபதம் | - | + |
| 10. | கடல்மல்லைக் காதலி | + | + |
| 11. | தியாகவல்லபன் | + | - |
| 12. | தெற்குவாசல் மோகினி | + | + |
| 13. | சோழ இளவரசன் கனவு | + | + |
| 14. | கொன்றை மலர்க் குமரி | + | + |
| 15. | சோழ மகுடம் | - | + |
| 16. | மங்கலத் தேவன் மகள் | + | - |
| 17. | ஒரு வாள் ஒரு மகுடம் இரு விழிகள் | + | - |
| 18. | மதுரை மகுடம் | + | + |
| 19. | கன்னிக்கோட்டை இளவரசி | + | - |
| 20. | மாணிக்க வீணை | + | - |
| 21. | கங்காபுரிக்காவலன் | + | + |
| 22. | யாழ்நங்கை | + | - |
| 23. | வஞ்சிநகர் வஞ்சி | + | - |

விக்கிரமனின் நாவல்களில் 16 நாவல்களில் தனிக்குடும்பம் பற்றிய செய்திகளும், 15 நாவல்களில் கூட்டுக்குடும்பம் பற்றிய செய்திகளும் இடம்பெறுகின்றன. இவற்றுள் தனிக்குடும்பவகை அரச குலம் சார்ந்த குடும்பங்களில் குறைவாக உள்ளது. அரசகுலம் அல்லாத குடும்பங்களில் தனிக்குடும்பம் மிகுதியாகவும் கூட்டுக்குடும்பம் குறைவாகவும் உள்ளது.

## 1. தனிக்குடும்ப நிலை

தனிக்குடும்பத்தில் உறுப்பினர்களின் எண்ணிக்கை குறைவு. கணவன் மனைவி என்ற இருவர் இருப்பர். குறைந்தது ஒரு குழந்தையாவது இருக்கலாம், இல்லாமலும் இருக்கலாம் என்பது தனிக்குடும்ப விளக்கக் கருத்தாகும். இப்படிப்பட்ட தனிக்குடும்பங்களை,

1. முழுமை பெற்ற குடும்பம்
2. முழுமையில்லாக் குடும்பம்

என மேலும் இருவகைப்படுத்தலாம். கணவன், மனைவி என்பவர் அடங்கிய குடும்பமும், கணவன், மனைவி, குழந்தை ஆகியோர் அடங்கிய குடும்பமும் முழுமைக் குடும்பம் ஆகும். இதில் கணவனோ, அல்லது மனைவியோ இல்லாது நடத்தப்பெறும் குடும்பங்கள் முழுமையில்லாக் குடும்பம் எனப்பெறும். இவ்வகைக் குடும்பங்களையும் விக்கிரமன் படைத்துக் காட்டுகிறார். கீழ்க்காணும் அட்டவணை மூலம் அதை வகைப்படுத்தி அறியலாம்.

அட்டவணை 4.2

## குடும்ப வகை

| எண் | நாவலின் பெயர் | முழுமைக் குடும்பம் | முழுமையில்லாக் குடும்பம் |
|---|---|---|---|
| 1. | உதயசந்திரன் | - | + |
| 2. | பாண்டிய மகுடம் | - | - |
| 3. | காஞ்சி சுந்தரி | - | + |
| 4. | கடல்மல்லைக் காதலி | + | - |
| 5. | தியாகவல்லபன் | - | + |
| 6. | சோழ இளவரசன் கனவு | - | + |
| 7. | மங்கலத் தேவன் மகள் | + | + |
| 8. | ஒரு வாள் ஒரு மகுடம் இரு விழிகள் | + | - |
| 9. | மதுரை மகுடம் | - | + |
| 10. | கன்னிக்கோட்டை இளவரசி | - | + |
| 11. | மாணிக்க வீணை | + | + |
| 12. | கங்காபுரிக்காவலன் | + | + |
| 13. | யாழ்நங்கை | + | + |
| 14. | வஞ்சிநகர் வஞ்சி | + | - |




## 1. முழுமை பெற்ற குடும்பத்தில் மகளுறவு

முழுமை பெற்ற குடும்பத்தில் கணவன், மனைவி, குழந்தைகள் உறுப்பினர்களாக உள்ளனர். இதில் மகள் என்ற உறவுநிலையில் உள்ள பெண், தாய், தந்தை, உடன் பிறந்தாரோடு கொண்டிருக்கும் உறவுநிலை இங்கே ஆராயப்பெறுகிறது.

1. *சந்திரவதனா (ஒ.வா.ஒ.ம.இ.வி)*

2. சந்திரமாலா (க.ம.கா.)

3. பைரவி (யா.ந)

இம்மூன்று பெண்களும் முழுமை பெற்ற குடும்பத்தின் மகள்கள் ஆவர். இவர்களுள் சந்திரவதனா அரசகுலப் பெண் ஆவாள். இவள் சோழநாட்டு மன்னன் இராசராசனின் மகள். பெற்றோரால் மிகவும் செல்லமாக வளர்க்கப்பெறுகிறாள். பெற்றோர்மீது சந்திரவதனா அதிக அன்பு வைத்துள்ளாள். தன்மனம் சோர்ந்த போது தாயிடம் ஆறுதல் பெறுகிறாள்.

மகளாக வளரும் பருவம் இளமைப் பருவம் என்பதால் அவர்கள் காதல் வயப்படும் செய்தி நாவல்களில் விவரிக்கப்பெறுகிறது. சந்திரவதனாவின் காதலைத் தாய் ஆதரிக்கிறாள். தந்தை மறுக்கிறார். கொழுகொம்பு தேடும் பருவம் ஆதலால் மகள்மீது கொண்ட பாசம் தாயை ஆதரிக்கும் நிலைக்கு ஆளாக்குகிறது. நாட்டு நலன் கருதும் தந்தை மீது

சந்திரவதனா மிகுந்த பாசம் கொண்டிருந்ததால் அவள் மனம் தந்தையை மீற முடியாமல் தவிக்கிறது. இறுதியில் பகையரசனிடம் துணிச்சலாகப் பேசி வெற்றி கொள்கிறாள்.

சந்திரமாலா, நிருத்தியவல்லி சித்திரசேனரின் ஒரே மகள் ஆவாள். செல்லமாக வளர்க்கப் பெறுகிற பெண். அதே சமயம் தாய்க்கு வீட்டுவேலைகளில் மிகவும் உதவுகிறாள். தந்தை ஓவியம் வரையும்போது அவருக்கு அருகிருந்து உதவுகிறாள். தன்தாய் எப்போது அழைத்தாலும் அன்போடு ஓடிவருகிறாள். குமாரதேவனைக் காதலிப்பதில் பெற்றோரின் குறிப்பாகத் தந்தையின் கட்டுப்பாடு அவளுக்குப் பிடிக்கவில்லை. அதனால் காதலனைத்தேடிப் பல்லவநாட்டிற்கு வருகிறாள். அவ்வப்போது தன் பெற்றோரைப்பற்றி நினைக்கிறாள். காதலுக்கு முன் பெற்றோரிடம் கொண்ட பாசம் தலைதூக்கவில்லை. யாழ்நங்கையில் இடம்பெறும் பைரவி தன் பெற்றோருடன் வாழ்கிறாள். நாட்டுப்பற்றுக் கொள்ளவும், காதல் கொள்ளவும் உரிமை பெற்றவளாகப் படைக்கப்பெற்றுள்ளாள்.

## முழுமை பெற்ற குடும்பத்தின் மனைவியுறவு

தனிக்குடும்பங்களில் முழுமை பெற்ற குடும்ப உறவு மனைவியால் சிறக்கிறது. விக்கிரமன் நாவல்களில்,

1. புவனமுழுதுடையாள் - (ஒ.வா.ஒ.ம.இ.வி)
2. நிருத்திய வல்லி - (க.ம.கா)
3. வைரநாயகி - (ம.தே.ம)
4. பொன்னாச்சி - (மா.வீ)
5. செங்கமலவல்லி - (மா.வீ)
6. மயில்விழி - (வ.ந.வ)

இப்பெண்கள் முழுக்குடும்ப மனைவியராகப் படைக்கப் பெற்றுள்ளனர்.

இராசராசனின் மனைவி புவனமுழுதுடையாள் ஆவாள். இவர்களது மகள் சந்திரவதனா. கணவன், மனைவி, மகள் என்று வாழும் தனிக்குடும்பத்தில் முழுமைபெற்ற குடும்பமாக இது அமைகிறது. நாட்டில் எந்நேரமும் பகைவர்களைப் பற்றிய பயம் நிலவுகிறது. அதனால் மன்னன், மன அமைதியின்றித் தவிக்கிறான். அந்நிலையில் மன்னனுக்கு புவனமுழுதுடையாள் ஆறுதலளிக்கிறாள். மன்னன் மனக்கவலை அவனது மனைவிக்கு மட்டுமே தெரிந்திருக்கிறது. இதை ஆசிரியர் "அவனை நன்றாகப் புரிந்து கொண்டிருந்த பட்டத்தரசி புவனமுழுதுடையாள் மட்டுமே தன் கணவனின் உள்ளார்ந்த கவலையை அறிந்திருந்தாள்"[15] என்று கூறிச் செல்கிறார். கணவனுக்கு அந்தரங்க ஆலோசகராகச் செயல்படும் மனைவி நிலை வெளிப்படுகிறது. மனைவியின் ஆற்றலைப் பார்த்து மன்னர் வியக்கிறார். பாண்டியர் படையெடுப்பில் மனமுடைந்த மன்னர் பகைவரிடம் சரணடைந்து விடலாமோ என்று எண்ணுகிறார். அப்போது புவனமுழுதுடையாள் "பாண்டியர்களிடம் மண்டியிடுவதா, இப்படியொரு கோழைச் சோழராகத் தாங்கள் மாறுவீர்கள் என்று நான் எதிர்பார்க்கவில்லை"[16] என்கிறாள். ஒவ்வொரு மனிதனின் வெற்றிக்குப் பின்னும் ஒரு பெண் இருக்கிறாள் என்ற வாக்கினை புவனமுழுதுடையாள் மெய்யாக்குகிறாள். புவனமுழுதுடையாள் அரசகுல மனைவி என்பதால் அவளது செயல்பாடுகள் சாதாரணத் தன்மையிலிருந்து மாறுபட்டுள்ளன.

சித்திரசேனரின் மனைவி நிருத்தியவல்லி. சாளுக்கிய நாட்டின் காட்டுப்பகுதியில் தங்கி ஓவியக்கலையை வளர்த்துக் கொண்டிருக்கும் சித்திரசேனருக்கு நிருத்திய வல்லி பலவகைகளில் உதவுகிறாள். நிருத்திய வல்லி "தற்காத்துக் தற்கொண்டான் பேணித் தகைசான்ற சொற்காத்துச் சோர்விலாள் பெண்" என்ற வள்ளுவரின் இலக்கணத்திற்கு உரியவளாக உள்ளாள். நிருத்தியவல்லி "கணவருக்குப் பணிவிடைகள் செய்வதுடன் அவர்படைக்கும் ஓவியத்தின் உயிராகவே அவள் அமைகிறாள். அவளை

முன்மாதிரியாக வைத்துக்கொண்டுதான் அவர் ஓவியம் வரைகிறார். இதயத்தில் அவளையே உருவமாக ஏற்றிவைத்து அதையே தூரிகையில் வடிக்கிறாள்”[17] கலையுலகத் தம்பதியராக வாழும் சித்திரசேனரும் நிருத்திய வல்லியும் மனம்ஒன்றி வாழ்கின்றனர். அவர் நோயுற்றபோது அங்கிருந்து கவனிக்கிறாள். இதைக் கண்ட குமாரதேவன் சித்திரசேனரைப் “பாக்கியசாலி”[18] என்று பாராட்டுகிறான்.

அம்பலவாணனின் மனைவி வைரநாயகி. அம்பலவாணன் தீயவன், செல்வந்தன். சிற்றரசன் போல வீடு அமைத்து நூறு ஆட்களை எப்போதும் தன்னருகில் வைத்திருப்பவன். ஆனால் அவன் மனைவிக்கு அடிமை. கணவனுக்கு ஏற்றவளாக வைரநாயகி நடக்கிறாள். அதனால் மனைவியின் யோசனைகளை அவன் அப்படியே கேட்கிறான். கணவனுடைய திட்டங்களுக்கு மனைவி ஒத்துழைக்கிறாள். தனிக்குடும்பம் என்பதால் இவர்களது செயலால் பிறபாதிப்புகள் ஏற்படவில்லை. இவர்களுக்கு மகன்கள் இருவர் இருப்பதாக நாவலில் சுட்டப்பெறுகிறது. அவர்களும் தீயவர்களாகவே உள்ளனர். தனிக்குடும்பத்தில் பெற்றோர் தீயவர்களாக இருப்பதால் பிள்ளைகளும் அதே மாதிரி வளர்கின்றனர். அறிவுரை கூறித் திருத்த, வீட்டில் பிறர் இல்லை என்பது ஒரு காரணமாக இருக்கலாம்.

பொன்னாச்சி, குடிசையில் வாழும் பெரியவரின் மனைவி. இருவரும் ஒரு குறையுமின்றி வாழ்கின்றனர். பொன்னாச்சி நாட்டு விவரங்கள் தெரிந்த பெண்ணாக உள்ளாள். கருத்தொருமித்த பொன்னாச்சி தம்பதியர் தங்களிடம் உதவி என்று வருபவர்களுக்குத் தவறாது உதவுகின்றனர். சைலேந்திரிக்கும், அவளது தாத்தாவுக்கும் உதவும் இவர்களுக்குக் குழந்தைகள் இருப்பதைப்பற்றிக் கதையில் சொல்லப்படவேயில்லை.

நந்தீசனின் மனைவி செங்கமவல்லி ஆவாள். திருவாலி நாட்டில் பிறந்த செங்கமவல்லி திருமால் மீது பக்தி கொண்டுள்ளாள். நந்தீசன் பல்லவ மன்னனுக்கு எதிராகச் செயல்படுகிறான் என்பதைக் கேள்விப்பட்டுச் செங்கமலவல்லி வருந்துகிறாள். அவன் மனம் திருந்தவேண்டும் என்று இறைவனிடம் வேண்டுகிறாள்.

ஆரம்பத்திலிருந்தே நந்தீசன் தீய எண்ணம் கொண்டவனாயுள்ளான். இறையடியவர்கள் மீது நல்லெண்ணம் கொள்ளாத அவன் குணத்தையும் போகப்போகத் தெரிந்து கொள்கிறாள். அதனால் கணவன் மீது கோபப்படாமல் அவனை மெல்ல மெல்லத்தான் மாற்றமுடியும் என்று முடிவெடுக்கிறாள். விரோதச் செயல்களில் ஈடுபடுவது தவறு என்னும் "ராஜதுரோகம் மன்னிக்க முடியாத குற்றம்"[19] என்றும் எடுத்துரைக்கிறாள்.

பலரோடு பழகும் வாய்ப்பு ஆண்களுக்கு உண்டு. அதனால் நன்மை எது தீமை எது என்று அறியாமலும் தீய செயல்களில் ஈடுபடுவது உண்டு. கணவன் செயலில் ஐயம் ஏற்பட்டால் அவர்களைத் தொடர்ந்து கவனித்துத் திருத்தும் மனைவியரால் குடும்பம் காப்பாற்றப்படும். அறிவுடைய, ஆலோசனை கூறும் மனைவியாகச் செங்கமலவல்லி திகழ்ந்து, கணவனுக்கு அறிவுரை கூறுகிறாள். தனிக்குடும்பத்தில் வாழும் பெண்களுக்குக் கணவனுடனான உறவு நிறைவு இல்லாமல் இருக்கும்போது குடும்ப அமைதி கெடும்.

மயில்விழி சேரநாட்டிளைஞனை மணந்து சேரநாட்டிலேயே தங்குகிறாள். கணவனும் மனைவியுமாக வாழும் தனிக்குடும்ப நிலை இந்நாவலில் சித்தரிக்கப்படுகிறது. இருவருமே நடனக்கலை அறிந்தவர்கள். ஒற்றுமையாக வாழும் இத்தம்பதியர் வீட்டிலேயே சிறுபெண்களுக்கு நடனம் சொல்லிக்கொடுக்கும் பள்ளியொன்றை நடத்துகின்றனர். இல்லம் எப்போதும் ஆடல், பாடல் நிறைந்ததாக உள்ளது. இவர்களுக்குக் குழந்தைகள் இல்லை.

## முழுமை பெற்ற குடும்பத்தின் தாயுறவு

மனைவி என்ற நிலைக்குப்பின் பெண் மக்கட்பேற்றால் தாய்மை நிலையினை அடைகிறாள். 'பெண்மையெல்லாம்', 'தாய்மைதான்' என்றும் திரு.வி.க போற்றுகிறார். தாய்மை தெய்வீக நிலைக்கு ஒப்பிடப்படுவதை 'தாயிற் சிறந்த கோவிலுமில்லை' என்ற வழக்கால்

அறியலாம். “சேவை தியாகம் ஆகியவற்றின் உயிருள்ள உருவமாகப் பெண்ணினத்தை வழிபடுகிறேன்”[20] என்ற கருத்துத் தாய்மையின் அடிப்படையில் பிறந்ததாகும்.

மேலும் “மந்திரம் அருளும் பத்து குருவுக்குச் சமமானவர் ஒரு ஆச்சாரியார். இப்படிப்பட்ட நூறு ஆச்சாரியர்களுக்குச் சமம் ஒரு தந்தை. ஆயிரம் தந்தைக்குச் சமம் ஒரு தாய்”[21] என்ற கருத்துத் தாயை உயர்த்திக் காட்டுகிறது. உறவுநிலைகளில் முழுமைக் குடும்பத்தில் தாயுறவு பெறும் தன்மையைக் கீழேகாணலாம்.

1. புவனமுழுதுடையாள் (ஒரு.வா.ஒரு.ம.இ.வி)
2. நிருத்தியவல்லி (க.ம.கா)
3. சிவகாமி (மா.வ.கா)

ஆகிய பெண்கள் தாயாக இடம்பெறுகின்றனர்.

புவனமுழுதுடையாள், சந்திரவதனாவின் தாய். புவனமுழுதுடையாள் தன்மகள் மீது மிகுந்த அன்பு செலுத்துகிறாள். மேலும் அவள் போசள மன்னனைக் காதலிப்பதை அறிகிறாள். தன் கணவனிடம் போசள மன்னனுக்கே மகளை மணமுடிக்க வேண்டும் என்று வற்புறுத்துகிறாள். மகளின் மகிழ்வே தன் மகிழ்வு என்கிறாள். ஆனால் அரசன் அதற்கு ஒத்துக் கொள்ளாமல் மகளை வேற்றரசனுக்கு மணமுடிக்க எண்ணுகிறான்.

இதை அறிந்த புவனமுழுதுடையாள் மன்னனின் வீம்பைப் புரிந்து கொண்டு, “மகளுக்குப் பிடிக்காத மணமகனுக்குக் கொடுக்கச் சம்மதிக்க மாட்டேன்”[22] என்று எதிர்க்கிறாள். சந்திரவதனாவின் உள்ளத்தை அவனது தந்தை புரிந்து கொள்ளவில்லை. அவனுக்கு அவன் கண்முன்னால் நாடே நிற்கிறது. ஆனால் தாயின் உள்ளத்தில் மகளின் வாழ்க்கையைப் பற்றிய சிந்தனையே நிறைந்துள்ளது. அரசன் பாண்டியனுக்குப் பயந்து தன்மகளை விஜயகண்ட கோபாலனுக்கு மணமுடிக்க நினைக்கிறான்.

அப்போது அரசி புவன முழுதுடையாள் "என் மகளை அரசியல் பகடைக் காயாக உருட்ட நான் சம்மதிக்க மாட்டேன்"[23] என்று வாதிட்டுத் தன் மகளின் காதலை வாழவைக்கிறாள்.

புவனமுழுதுடையாள் தன் மகளுடன் அன்புடன் பேசிக் கூந்தலை வருடி, விழிகளைத் துடைத்து அவளைத் தன்னுடன் சேர்த்து ஆறுதல் கூறும் தாயன்புமிக்கவளாக உள்ளாள். தந்தையின் பிடிவாதத்தில், அரசியல் சிக்கலில் தவித்துக்கொண்டிருக்கும் சந்திரவதனாவின் வாழ்வு தன் தாயின் மூலம் காப்பாற்றப்படுகிறது. தன் மகளின் வாழ்வில் நாட்டமும் அக்கறையும் கொண்ட தாய்மைப் பண்பு இங்கு வெளிப்படுகிறது. "ஒரு நாட்டின் மேன்மை மிகுந்த குடிமக்களை உருவாக்குவதில் அந்நாட்டுத் தாய்மாருக்குப் பொறுப்பிருக்கிறது. அவர்கள் அறிவிலிகளாக இருக்க இயலாது"[24] என்ற கருத்து இவண் நினைக்கத் தக்கது.

சந்திரமாலாவின் தாய் நிருத்தியவல்லி. இவள் நாட்டியக் கலையில் வல்லமை பெற்றவள். சந்திரமாலா தாயின் அங்க அசைவுகளைக் கண்டு அதற்கேற்பத் தானும் நடனம் கற்றுச் சிறந்த நடன மங்கையாகிறாள். அந்த நடனக்கலையை வைத்துப் பல்லவநாடு வந்தபோது சந்திரமாலா பிழைத்துக்கொள்கிறாள். காதலை அறிந்தபோது அவளது தந்தை வெகுண்டதைப் போலத் தாய் சினக்கவில்லை. தன்மகள் காதலுக்கு ஆதரவும் தரவில்லை. தன் கணவன் கோபக்காரர் என்பதால் மகளின் உணர்வுகளைப் புரிந்து கொண்டு அதற்கேற்ப நடக்க இயலவில்லை. ஆணாதிக்கம் அதிகம் உள்ள குடும்பங்களில் உள்ள தாயின் நிலையை ஆசிரியர் வெளிப்படுத்துகிறார்.

சிந்தாமணி, செங்கமலம் இருவரும் சிவகாமி, மாதேவனின் மகள்கள். இவர்களது தாய் அழகு மிகுந்தவள். நடனக்கலையில் சிறந்தவள். அவளிடமிருந்தே இப்பெண்கள் நடனம், இசை முதலியவற்றைக் கற்கிறார்கள். பெண்கள் இருவரையும் தெய்வபக்தி உள்ளவர்களாகவும், ஒழுக்கமிக்கவர்களாகவும் வளர்த்த தாய் இளமையிலேயே இறக்கிறாள்.

## 2. முழுமையில்லாக் குடும்பம்

விக்கிரமன் நாவல்களில் முழுமையில்லாக் குடும்பங்கள் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. இக்குடும்பங்களின் மகள், மனைவி, தாய் பற்றிய உறவுகள் பற்றிக் கீழே காணலாம்.

### மகளுறவு

முழுமையில்லாக் குடும்ப அமைப்பு அரச குலம் சார்ந்த குடும்பங்களிலும், அரசகுலம் சாராத குடும்பங்களிலும் உள்ளது. மகளுறவில் இடம்பெறும்,

1. மங்கம்மாள் (ஆ.அ)
2. முத்தம்மாள் (பா.ம)
3. சித்திராதேவி (க.கோ.இ)

மூன்று பெண்களும் அரசகுலம் சார்ந்த குடும்பத்தைச் சார்ந்தவர்கள். நாவல்களில் மகளுறவு வெளிப்படும் பாங்கை இனிக்காணலாம்.

மங்கம்மாள் சந்திரகிரி லிங்கமநாயக்கரின் மகள் ஆவாள். தாயில்லாத பெண் என்பதால் தந்தை அவளைச் செல்லமாக வளர்க்கிறார். "தாயற்ற ஒரே மகளின் நல்வாழ்வுதான் தன்வாழ்வு என்று எப்போதோ முடிவுசெய்து அதற்கேற்றவாறு வசதிகளைச் செய்து வைத்து அவள் மனதில் எந்தவிதக் கவலையும் ஏற்படாவண்ணம் வளர்த்து வந்தார்"[25] என்ற கருத்தால் தந்தை மகள் பாச உணர்வு வெளிப்படுகிறது. குழந்தைப் பருவத்திலிருந்தே மங்கம்மாளைத் தாயாகவும், தந்தையாகவும் இருந்து பாதுகாக்கிறார்.

திருமலைக்கு மகளோடு செல்லும் போது கிருஷ்ணதேவராயரின் திருவுருவச் சிலையைச் சுட்டிக்காட்டி அவரது வீரத்தையும், கடவுள் பக்தியையும், கலைப்புலமையையும் எடுத்துக்கூறுகிறார். மங்கம்மாளின் பிஞ்சு உள்ளத்திலேயே அக்கருத்துக்கள் பதிகின்றன. பின்னால் எல்லோராலும் பாராடடப்பெறும் ஆட்சித்திறமை வெளிப்பட்டதற்குத் தந்தை மங்கம்மாளை வளர்த்த முறை காரணமாயிருக்கலாம் எனக் கருத இடமுண்டு.

தென்காசிப் பாண்டியன் வரகுணராமனின் மகள் முத்தம்மாள் ஆவாள். இவளது அழகையும், அறிவையும் கண்டு தந்தை பெருமைப்படுகிறார். தன்மகள் மீது கொண்ட பாசத்தால் அவள் மகிழ்வாய் இருக்கவேண்டும் என்பதற்காகக் குற்றால மலைகளைக் கண்டுவர அனுப்புகிறார். தந்தைக்குப் பின்னால் தன்னால் தான் பாண்டிய மன்னராட்சியைத் தழைய வைக்கமுடியும் என்று நினைக்கும் பொறுப்புள்ள மகளாக முத்தம்மாள் உள்ளாள். தாயில்லாத சூழலில் தந்தையின்மீது பாசம் கொண்ட முத்தம்மாள் குடும்பத்தின் பெருமையை ஆண்மகன்தான் கட்டிக்காக்க முடியும் என்ற மரபை மாற்றுகிறாள். தந்தை தன்மகளுக்கு நல்ல வரன் அமையவேண்டும் என்று கவலை கொள்கிறார். "மகளே முத்தம்மா நீதான் எனக்கு மகள். பிற்கால வாரிசு. பாண்டிய வம்சம் தழைக்க வைக்கும் கொழுகொம்பு"[26] என்கிறார். தந்தை மீது மகளும், மகள் மீது தந்தையும் மிகுந்த அன்பைச் செலுத்தி வாழ்கின்றனர்.

சித்திராதேவி விக்கிரமபாண்டியன் மகள். அவள்மீது அரசர் குல இளவரசர்கள் விருப்பம் கொண்டு திருமணம் செய்ய முயல்வதை அவள் வெறுக்கிறாள். அரசர்குலக் காதலை வெறுக்கும் சித்திராதேவி கண்ணனூர்க் கொப்பத்தில் கோட்டை அமைத்து வாழ நினைக்கிறாள். அதைத் தந்தை தடுக்கவில்லை. தாயில்லாததால் தந்தையிடம் அதிக உரிமை எடுத்துக் கொள்ளும் சித்திராதேவி தன்விருப்பம் போல் வாழமுடிவெடுக்கிறாள். கண்ணனூர்க் கொப்பத்தில் பெண்கள் பலரின் துணையோடு இளவரசியாய் வாழ்கிறாள்.

## முழுமையில்லாக் குடும்பத்தில் அரசகுலம் சாராத மகள் உறவு

1. குமுதவல்லி (உ.ச)
2. சந்திரமதி (உ.ச.)
3. மலர்க்கொடி (பா.ம)
4. சுந்தரி (கா.சு)

5. குமுதா (மா.வ.கா)

6. சந்திரபிரபா (தி.வ.)

7. மீன்விழி (சோ.இ.க)

8. மயிலழகு (சோ.இ.க)

9. சிந்தாமணி (ம.தே.ம)

10. செங்கமலம் (ம.தே.ம)

11. சைலேந்திரி (மா.வீ)

12. ரத்னதேவி (மா.வீ)

13. தேவகுஞ்சரி (தெ.வா.மோ)

14. வீரமாதேவி (க.பு.கா)

15. பொன்னருவி (யா.ந)

இப்பெண்கள் மகளுறவில் படைக்கப்பெற்றுள்ளனர்.

குமுதவல்லி கந்ததேவனின் மகள் ஆவாள். தந்தையால் மிகவும் பாசத்தோடு வளர்க்கப்பெறுகிறாள். தாயற்ற சூழலில் அவளும் அவளது தந்தையும் மட்டும் வாழ்கின்றனர். அவளது மனம் குணதேவனை விரும்புகிறது. குணதேவன் குமுதவல்லியின் முறைமாப்பிள்ளை என்பதால் அவளது தந்தையிடமிருந்து காதலுக்கு ஆதரவு கிடைக்கிறது. ஆனால் நாடிருந்த சூழலில் படையில் பணியாற்றிய குணதேவன் வெளியிலேயே தங்கவேண்டியிருக்கிறது. அவனைப்பற்றித் தவறான செய்திகள் குமுதவல்லிக்கு வந்துகொண்டிருக்கின்றன. அப்போது துயரமடையும் குமுதவல்லி தன் தந்தையிடம் தன் கவலையைக் கூறுகிறாள். ஆறுதல் பெறுகிறாள்.

சந்திரமதி, கொல்லுப்பட்டறை வைத்துப் பல்லவனுக்கு எதிரியான சித்திரமாயனுக்கு வேலும் வாளும் செய்து கொடுத்து வரும் பைரவனின் மகள் ஆவாள். சந்திரமதி பிறந்தவுடன் அவளது தாய் இறக்கிறாள். “அந்தப்பெண்தான் பைரவனின் பாலைவனம் போன்ற

வாழ்வுக்கு பசுஞ்சோலையாக அமைகிறாள்"[27] என்ற கருத்தின்வழி தந்தை மகளுறவு வெளிப்படுகிறது. மனைவியை இழந்த கணவரின் வாழ்வு மகளுறவால் நிலைக்கிறது. உறவுகள் வாழ்க்கையில் பிடிப்பை ஏற்படுத்தும் திறத்தை இதன்மூலம் அறியலாம். சந்திரமதி சுந்தரனைக் காதலிக்கிறாள். இதை அறிந்த பைரவன் தன் மகள் மீது கொண்ட மிகுதியான அன்பால் அதைத் தடுக்கவில்லை. சந்திரமதி தன் காதலுக்குத் தன் தந்தை எதிர்ப்புத் தெரிவிக்க மாட்டார் என்று நம்புகிறாள்.

மலர்க்கொடி பாண்டிய நாட்டில் குடியேறியிருந்த ஒற்றன் மாரப்பனின் மகள் ஆவாள். மலர்க்கொடி தாயற்றவள். தந்தையால் அன்பாக வளர்க்கப்பெறுகிறாள். மாரப்பன் தன் மகள் மீது மிகுந்த அன்பு கொண்டிருந்தாலும் அரசுத் தொடர்பான செயல்களில் தான் ஈடுபடுவதை மகளிடம் கூறுவதில்லை. முழுமையற்ற குடும்பத்தில் உறவு விலகல் தன்மையைக் காணமுடிகிறது. பாண்டியநாட்டு மதிவாணனை மலர்க்கொடி காதலிக்கிறாள். மாரப்பன் பாண்டிய நாட்டிற்கு எதிர்ப்பாகச் செயல்படுகிறான். தந்தையின் போக்கை மகள் வெறுக்கிறாள். அதனால் கதையில் தந்தைமகளின் பாசமான உறவு வெளிப்பட வாய்ப்பில்லை. தாயற்ற சூழலில் தந்தையும் சரியில்லை என்றால் குழந்தைகளின் வாழ்வில் அன்பு, பாசம் மலராமல் போகிற நிலையை மலர்க்கொடி என்ற பாத்திரப்படைப்பு மூலம் அறியலாம்.

சுந்தரி, சாளுக்கிய நாட்டு சுவர்ண குமாரியின் மகளாவாள். அவளது தந்தை பல்லவநாட்டுப் படைத்தலைவன் குமாரதேவன் ஆவான். குமாரதேவன் தன் மனைவி கருவுற்றிருக்கும்போதே பிரிகிறான். தந்தை முகம் அறியாமல் வாழும் சுந்தரி தாயிடம் அன்பு செலுத்தி வாழ்கிறாள். தாயிடம் நடனம் முதலிய கலைகளைக் கற்றுக் கொள்கிறாள். தாய் நோய்வாய்ப்பட்டு இறந்தவுடன் தனிமையில் விடப்படுகிறாள்.

பல்லவநாட்டில் வாழும் தன் தந்தையைக் கண்டுபிடித்து அவனைப்பழி வாங்க வேண்டும் என்று பல்லவ நாட்டிற்கு வருகிறாள். எதிர்பாராத விதமாகத் தந்தையைச் சந்திக்கிறாள். நேரில் அவரைப் பார்த்தபோது "அவள் இதயத்தில் நொடியில் எங்கிருந்தோ பாச உணர்ச்சி சூழ்ந்து கொண்டது"[28] இந்நிலையில் அவளுக்குத் தந்தைமீது அன்பும் பாசமுமே மேலிட்டது. அவன் இறக்கும் தறுவாயில் அவனைச் சந்தித்ததால் செய்வதறியாது திகைக்கிறாள். திடீரென்று அவன் இறந்துபடவே அவன் மார்பில் முகத்தைப் புதைத்து 'அப்பா, அப்பா' என்று கதறுகிறாள். தந்தைமீது கொண்ட வெறுப்புணர்வைப் பாச உணர்வு வெல்கிறது.

குமுதம் ஓர் அநாதைப் பெண். அவளது தாயைச் சிறுவயதில் இழக்கிறாள். தந்தையால் அன்பாக வளர்க்கப்பெறுகிறாள். அவள் மூலம் நாட்டு நடப்புகளை அறிகிறாள். பாண்டியர்க்கும், சோழருக்கும் நடந்த போர்க்களத்தில் அவளது தந்தை இறக்கிறார். தந்தை இறப்புக்குக் காரணமாக இருந்த சோழநாட்டினை குமுதா வெறுக்கிறாள். இயல்பாகவே துடுக்குத்தனமும், அச்சமின்மையும் மிகுந்த அவளது உள்ளத்தில் வெஞ்சினம் மிகுந்ததால் மிகவும் கடின நெஞ்சுடையவளானாள். அதனால் சோழர்களை எதிர்க்கும் முயற்சிகளில் தன்னை ஈடுபடுத்திக்கொள்கிறாள்.

மயிலழகு சிற்பியின் மகள் ஆவாள். தன் தந்தையிடம் மிகுந்த அன்பு கொண்ட மயிலழகு கலையில் ஈடுபாடு கொண்டவளாகப் படைக்கப்பெற்றுள்ளாள். அதனால் அவள் பெரும்பாலும் குடும்பத்துடன் எப்போதும் சேர்ந்து வாழும் நிலையில் இல்லை. இறுதியில் அவள் மனம் வெறுத்துக் கோயிலில் தொண்டு செய்து வாழவேண்டும் என்று முடிவெடுக்கிறாள். அப்போது தன் தங்கை மீன்விழியிடம் தந்தையைப் பொறுப்பாகப் பார்த்துக்கொள்ளும்படிக்கூறிப் பிரிகிறாள். தந்தைமீது கொண்ட அன்பு, வாழ்க்கை மீது ஏற்பட்ட வெறுப்பு அவளைத் துயர்ப்படச் செய்கிறது.

மீன்விழி அவளது தந்தையுடன் வாழ்கிறாள். மீன்விழியின் அறிவான பேச்சையும், அவளைப் பிறர் பாராட்டும் விதமும் கண்டு மீன்விழியின் தந்தை மகிழ்கிறார். மீன்விழியின் தந்தை அரசனோடு நெருங்கியவர். அவருடன் வாழும் மீன்விழிக்கு அரசனைக் காணவும் அரசனோடு தொடர்புடைய பெரிய அதிகாரிகளுடன்பேசவும் வாய்ப்பு ஏற்படுகிறது. தந்தையின் மூலமும் நாட்டு நடப்புகளை அறிகிறாள். பெண்குழந்தைகள் தந்தையிடம் நெருங்கிய உறவுடையவர்களாக இருப்பர். அதிலும் மீன்விழி தாயற்ற பெண்ணாக இருப்பதால் தந்தையைத் தவிர வேறுலகம் இல்லை என்று வாழ்கிறாள்.

ஆயினும் அவள் வாழ்வில் காதல் குறுக்கிடுகிறது. தான் காதலிக்கும் விக்கியண்ணனை நம்பிச் சோழநாடு வருகிறாள். தந்தைமீது கொண்ட பாச உணர்வில் வருந்துகிறாள். "தன்னைக் காணாமல் தந்தை எவ்வாறு மனம் வருந்துவாரோ என எண்ணும்போது அவளுக்குத் துக்கம் துக்கமாக வந்தது. கோவென்று கதறி அழவேண்டும்போல் தோன்றியது"[29] என்ற வரிகளில் அவளது உறவுப் பிணைப்பை அறியலாம்.

மாதேவனின் மகள்களான சிந்தாமணியும், செங்கமலமும் தாய் தந்தையரால் இளமையில் வளர்க்கப் பெறுகின்றனர். தாய் சிவகாமி நோய்வாய்ப்பட்டிறக்கவே தந்தையால் வளர்க்கப்பெறுகின்றனர். தன் தந்தையைப் போல் வலிமையும் தோற்றமும் கொண்ட சிந்தாமணி அவள் நாட்டில் நடக்கும் கொடுமைகளை எதிர்க்கிறாள். தன் தந்தையோடு சோழநாடு செல்கிறாள். தந்தை மீது அமர்த்தப்பெற்ற வரிச்சுமை கண்டு வருந்துகிறாள். வயதான காலத்தில் தந்தை அதிகாரவர்க்கத்தால், தீயவர்களால் அலைக்கழிக்கப்படுவதைப் பார்த்து மகள் சிந்தாமணி துயரமடைகிறாள். செங்கமலம் இளைய பெண் என்பதால் அவளது அன்பு வெளிப்படவில்லை. இரண்டு பெண்களும் தாயையும், தந்தையையும் தெய்வமாய் நினைக்கின்ற பெண்மகள்களாய்ப் படைக்கப்பெற்றுள்ளனர்.

சைலேந்திரி சிறுவயதிலிருந்தே தாயால் மட்டுமே வளர்க்கப்பெறுகின்ற பெண் ஆவாள். தந்தையைப் பற்றி அவள் அறிந்ததாகச் சொல்லப்படவில்லை. காம்போஜ நாட்டிலிருந்து பல்லவநாட்டிற்கு வந்து சைலேந்திரி வீணைக் கலையைக் கற்கிறாள். தாயை விட்டுப்பிரியாத அப்பெண்ணுக்குப் பல்லவநாட்டில் எந்நேரமும் தாயின் நினைவாகவே உள்ளது. தந்தையைப் பற்றி அறிந்து வரும் பொறுப்பையும் அவளிடம் கொடுத்திருந்தாலும் அதற்கு அவள் முயற்சி செய்யவில்லை. தந்தை உறவு எப்படிப்பட்டது என்பதை அறியாத சைலேந்திரிக்குத் தந்தையைத் தேடுவதில் ஆர்வம் ஏற்படவில்லை. உறவாடப்படும்போதுதான் உறவுகள் சிறக்கும் என்பது நோக்கத்தக்கது.

ரத்னாதேவி திருமணமாகாத இளம்பெண். சிறந்த நாட்டிய மங்கை. தன் தாயுடன் வாழும் இவள் தன் தாய் மற்ற பெண்களைப் போல் கணவனுடன் மகிழ்வுடன் வாழவில்லையே என்று வருந்துகிறாள். தாயின் துயரத்தை எப்படியும் நீக்கவேண்டும் என்று கருதுகிறாள். அவளது தந்தையைப்பற்றிக் கூறும்போது "அம்மா தங்களைப் பெரும் குணவதி என்று மட்டுமே நினைத்துக்கொண்டிருந்தேன். நீங்கள் பெரிய தியாகியும் கூட. அன்புக் கணவர் மற்றொருத்தியை மணந்து ஒரு குழந்தைக்கும் தந்தையாகிவிட்ட செய்தியை அறிந்தும் அதை அடக்கி வைத்துக்கொண்டு மாற்றாந்தாய் மீதும் அவள் பெற்ற மகள் மீதும் துளி கூட வெறுப்புக்கொள்ளாமல் அவர்களைப் பார்க்கமுடியவில்லையே என்று வேதனைப்படுகிறீர்களே! தங்கள் குண உயர்வை எப்படிப் புகழ்வது"[30] என்று பாராட்டுகிறாள். தந்தையுடன் செல்லாது தன் குழந்தையாகியத் தன்னுடன் தங்கித் தன்னைச் சிறப்பாக வளர்த்திருக்கும் தாய்மீது மிகுந்த அன்பு கொண்டுள்ளாள்.

தேவகுஞ்சரி தன்தாய் பரவைநங்கையுடன் வாழ்கிறாள். தேவகுஞ்சரி நாட்டுநலனில் அக்கறைகொண்டு அதற்காகப் பாடுபடுகிறாள். அதிகம் வீட்டில் இல்லாதநிலை புலப்படுகிறது. தாயின்மீது அன்பும், மரியாதையும் வைத்துள்ளாள்.

வீரமாதேவி என்ற வீரம்மாள் திருணமத்திற்கு முன் அரசகுலத்தைச் சார்ந்தவலல்லள். அவளும் அவளது அண்ணனும் பக்கத்திலிருப்போரின் உதவியுடன் வாழ்கின்றனர். வீட்டைப் பொறுப்பாகப் பார்த்துக்கொள்ளும் வீரம்மாள் நடனக்கலையில் தேர்ச்சி பெறுகிறாள். தாய் தந்தை இன்றி வாழ்வதால் அவளின் உறவு வெளிப்பட வாய்ப்பில்லை.

பொன்னருவி தந்தையோடு வாழ்கிறாள். அவளும் பைரவியும் சிறந்த தோழியராக உள்ளனர். நடனக்கலையைக் கற்றப் பொன்னருவி தந்தையுடன் கோவிலுக்குச் செல்வதிலும், எந்நேரமும் இறைவனை வழிபடுவதிலும் காலத்தைக் கழிக்கிறாள். பைரவியுடன் நட்புக் கொண்டுள்ளதால் அவ்வப்போது நாட்டு நடப்புகளை அறிந்து கொள்ளும் வாய்ப்பு ஏற்படுகிறது. தாய் நாட்டுப்பற்று மிக்கவளாக உள்ளாள்.

## முழுமையில்லாக் குடும்பத்தில் மனைவியுறவு

விக்கிரமன் படைத்துள்ள நாவல்களில் முழுமையில்லாக் குடும்பங்கள் சித்தரிக்கப்பெற்றுள்ளன. அக்குடும்பங்களில் மனைவியின் பங்கு இல்லாததாகவும், தந்தை மட்டும் குழந்தைகளோடு வாழும் நிலையும் மிகுதியாக உள்ளன.

தாயும் குழந்தைகளும் என்ற நிலையும் தந்தையும் குழந்தைகளும் என்ற நிலையிலும்தான் முழுமையில்லாக் குடும்பங்கள் வரையறுக்கப்பெறுகின்றன. எனவே முழுமையில்லாக் குடும்பத்தில் பெண்ணின் உறவு ‘மனைவி’ என்ற நிலையில் இல்லாமல் ‘தாய்’ என்ற நிலையில்தான் உள்ளது.

## முழுமையில்லாக் குடும்பத்தில் தாயுறவு

அரச குடும்பத்தில் தாய், மகன் என்ற நிலையில் இரு குடும்பங்கள் மட்டும் இடம்பெறுகின்றன. தியாகவல்லபன் என்ற நாவலில் வல்லபனின் குடும்பம் முழுமையில்லாக் குடும்பமாய் உள்ளது. வல்லபனும் அவனது தாய் அறம்வளர்செல்வியும் குடும்ப உறுப்பினர்களாய் உள்ளனர். இக்குடும்பத்தில் தாயுறவு எவ்வாறுள்ளது என்பதைக் காணலாம்.

அரசகுலப் பெண்ணான அறம்வளர்செல்வி தன் கணவனுக்குப்பின் தன் மகனை வளர்க்கும் பொறுப்பை ஏற்கிறாள். வேங்கி நாட்டை விட்டு வந்து காட்டுப் பகுதியில் குடில் அமைத்து மகனை ஆற்றலுள்ளவனாக வளர்க்கிறாள். தன்மகனின் எதிர்காலம் ஒன்றையே தன் குறிக்கோளாகக் கொண்டுள்ளாள். அவளது சகோதரன் சோழன் தன்மகனைச் சோழநாட்டின் இளவரசனாகும்படிக் கேட்கிறான். முதலில் மறுக்கும் அறம்வளர்செல்வி அதுவும் ஒருவகையில் தன் மகனுக்கு அனுபவத்தைக் கொடுக்கும் என்று நினைத்து ஒத்துக்கொள்கிறாள்.

தன் மகன் சந்திரப் பிரபாவைக் காதலிப்பதை அவள் மனம் ஏற்கவில்லை. அவன் இல்லாதபோது சந்திரபிரபாவிடம் தன் மகனின் நிலை கூறி அவர்கள் காதலைத் தவிர்க்கிறாள். இதை எதிர்த்து மகன் வாதாடும்போது அறிவுரை கூறுகிறாள்.

மகனின் நலனில் அக்கறை கொண்டுள்ள அறம்வளர்செல்விக்குக் கணவன் முகத்தைக் காண முடியாத நிலையில் மகனின் முகமே ஆறுதலாய் உள்ளது. தன் மகன் என்றாவது ஒரு நாள் கணவன் இழந்த நாட்டை மீட்பான் என்று நம்புகிறாள். தன் மகனிடம் ஆஞ்சநேயனின் வீரத்தையும் இராமபிரானின் சீலத்தையும் வீர அபிமன்யுவின் தீரத்தையும் அர்ச்சுனனின் திறமையையும் எடுத்துக்கூறி அவன் உள்ளத்தில் வீர உணர்ச்சியை வளர்க்கிறாள். ஜீஜாபாய் சத்திரபதி சிவாஜியை வீரத்திருமகனாக உருவாக்கியது போல அறம்வளர்செல்வி தன் மகனை உருவாக்குகிறாள்.

மதுரை மகுடம் நாவலில் இராஜசிம்மனும் அவனது தாய் வானவன்மாதேவியும் வாழும் குடும்பம் முழுமையற்ற குடும்பமாய் உள்ளது. இராஜசிம்மப் பாண்டியனின் தாய் வானவன்மாதேவி. அவளது கணவன் இறந்துபட மகனைச் சிறப்பாக வளர்த்து வருகிறாள். தன் கணவனுக்கும் அவரது காதலிக்கும் பிறந்த மகன் மணவாளன் என்பதை அறிந்து அவனைப்பற்றி யாரும் அறியாது செய்துவிட வேண்டும் என்று நினைக்கிறாள். தன் மகன் மீது கொண்ட பாசம், அவன் எதிர்காலத்தை நன்கு சிறக்கச் செய்ய வேண்டும் என்ற அக்கறை அவளை இவ்வாறு செயல்பட வைக்கிறது. இதை இராஜசிம்மன் விரும்பவில்லை. அதனால் தாய் மகனுக்கிடையே கருத்துவேறுபாடு ஏற்படுகிறது.

தாய்மைப் பண்பு என்பது எல்லாப் பெண்களுக்கும் பொது என்றாலும் அரசகுலம் சார்ந்த பெண்களுக்குத் 'தாய்' என்ற நிலையில் பொறுப்பும், கடமையும் அதிகமிருக்கிறது. இதை வெளிப்படுத்த வாய்ப்பில்லாமலும் சில நேரங்களில் சூழல் அமைகிறது.

அரசகுலம் சாராத முழுமையில்லாக் குடும்பத்தின் தாயர்களாக சைலேந்திரியின் தாயும், ரத்னாதேவியின் தாயும் படைக்கப்பெற்றுள்ளனர். அவர்களின் தாயுறவினை இனிக் காணலாம்.

காம்போஜ நாட்டைச் சேர்ந்த சைலேந்திரி தன் தாயின் அறிவுரையினால் வீணைக் கலையைச் சிறப்பாகக் கற்றுக்கொள்ளப் பலலவநாட்டிற்கு வருகிறாள். கலையில் மேதையாவதோடு சைலேந்திரி தன் தந்தையைக் கண்டுபிடிக்கவேண்டும் என்றும் அனுப்பி வைக்கிறாள்.

மிகுந்த துயரத்தோடு சைலேந்திரியை அனுப்பி வைத்த தாயின் எண்ணம் ஈடேறாத வகையில் பல்லவநாட்டில் பல குழப்பங்கள் உண்டாகின்றன. அப்போது தன் தாயின் நிலை உணர்ந்து சைலேந்திரி புலம்புகிறாள். தாய் மகளின் பாச உணர்வு வெளிப்படுகிறது. சைலேந்திரியுடன் அவளது தாய் ஒரு பெரியவரைத் துணைக்கு அனுப்புகிறாள். நாடுவிட்டு

நாடுசெல்லும் பெண்ணைத் துணிச்சலோடு அனுப்பும் பெண்ணாக அவள் இருந்தாலும் அதையும் மீறித் தன் பெண் தனியாகச்செல்கிறாளே என்று பயந்து பெரியவர் ஒருவரைத் துணைக்கு அனுப்புகிறாள்.

ரத்னதேவியின் தாய் தன் கணவன் தன்னருகே இல்லாதபோதும் தன் கடமையை உணர்ந்து மகளைச் சிறப்பாக வளர்க்கிறாள். உலகியல் அறிவை மகளுக்கு ஊட்டி வளர்க்கிறாள். “மகளே! பெண்கள் என்றாலே அவர்கள் தியாகத்தின் வடிவம் என்றுதான் கூறவேண்டும். அவர்கள் ஏமாற்றத்தைச் சகித்துக்கொள்ள வேண்டும். பொறாமை எனும் நச்சு விதையை உள்ளத்தில் வளர்க்கக்கூடாது. கணவனைக் கண்கண்ட தெய்வமாக மதிக்கவேண்டும், காமத்திற்கும், காதலுக்கும் வித்தியாசம் உணர்ந்திருக்கவேண்டும். என்மேல் உனக்குப் பிரியமிருக்குமேயானால் நான் கூறும் இரண்டு விஷயங்களை வாழ்நாளில் கண்டிப்பாகக் கடைப்பிடிக்கவேண்டும். ஒன்று கற்பு. மற்றொன்று கணவன். அவனே தெய்வம் என்ற திடமான நம்பிக்கை”[31] என்ற கூற்றால் தன் மகளின் எதிர்காலம் சிறக்க நினைக்கும் தாயுள்ளம் புலப்படுகிறது. அறிவுரை கூறி மகளை வளர்க்கும் தாயின் கடமை உணர்வு வெளிப்படுகிறது.

### *கூட்டுக்குடும்பத்தில் பெண்களின் உறவுநிலைகள்*

விக்கிரமன் நாவல்களில் கூட்டுக்குடும்ப உறவுகள் சித்தரிக்கப்பெற்றுள்ளன. கூட்டுக்குடும்பத்தினை,

1. அரசகுலம் சார்ந்த கூட்டுக்குடும்பம்
2. அரசகுலம் சாராத கூட்டுக்குடும்பம்

என இருவகைப் படுத்தலாம். அரசகுலம் சார்ந்த கூட்டுக்குடும்ப உறவுநிலைக்கும், அரசகுலம் சாராத கூட்டுக்குடும்ப உறவு நிலைக்கும் வேறுபாடுகள் உண்டு. மேலும் விக்கிரமன் அரசகுலம் சார்ந்த கூட்டுக்குடும்பத்தினை மிகுதியாகச் சித்தரித்துள்ளார். வரலாற்று நாவல்களில் அது தவிர்க்க முடியாத நிலை. அதனால் அரசகுலம், அரசகுலம் அல்லாத குலம் என்று பிரித்துப் பார்க்கப் பெறுகின்றன.

- நந்திபுரத்து நாயகி,
- வல்லத்து இளவரசி
- சித்திரவல்லி
- ஆலவாய் அரசி
- இராஜாதித்தன் சபதம்
- தெற்குவாசல் மோகினி
- சோழ இளவரசன் கனவு
- கொன்றை மலர்க்குமரி
- சோழமகுடம்
- மதுரை மகுடம்
- கங்காபுரிக் காவலன்

ஆகிய நாவல்களில் அரசகுலம் சார்ந்த கூட்டுக்குடும்பங்கள் இடம்பெற்றுள்ளன. இக்கூட்டுக்குடும்பத்தில் மகள், மனைவி, தாய், பிற பெண்ணுறவுகள் எவ்வாறு சித்தரிக்கப்பெற்றுள்ளன எனக் காணலாம்.

## அரசகுலம் சார்ந்த கூட்டுக்குடும்பத்தில் மகளுறவு

அரசகுலம் சார்ந்த கூட்டுக்குடும்பத்தில் வரும் மகள்கள்

- குந்தவை (ந.பு.நா)
- மோகனா (வ.இ)
- ரங்கமாதேவி (வ.இ)
- வீரமாதேவி (இரா.ச)
- அனுபமா (இரா.ச)

போன்றோர் ஆவார்.

குந்தவை சிறுவயதில் தாயை இழந்தவள். தந்தையாலும் கல்யாணிப்பாட்டியாலும் வளர்க்கப்பெறுகிறாள். தன் சிறிய தந்தையின் மீது மிகுந்த அன்பு கொண்டுள்ளாள். அவளது சகோதரர்கள் ஆதித்தன், அருண்மொழிவர்மன் மீது மிகுந்த பாசம் வைத்துள்ளாள். சிறு வயதிலிருந்தே

அரசியல் பற்றி அறிந்து, தேர்ந்த ஞானம் பெறுகிறாள். கல்யாணிப்பாட்டியிடம் இருந்து தன் குடும்பப் பெருமைகளை அறிகிறாள். தன் சகோதரன் ஆதித்தன் இறந்தபிறகு கவலையில் ஆழ்ந்துள்ள தந்தை சுந்தரசோழருக்கு மிகுந்த ஆறுதலாக உள்ளாள். தந்தைமீது பரிவும், இரக்கமும் கொண்டு எந்நேரமும் நன்குக் கவனிக்கிறாள். அரண்மனையிலேயே அடைபட்டுக்கிடக்கும், தந்தையின் மனதில் மாற்றத்தையும் கொண்டு வர நினைக்கிறாள். அதனால் ஆதித்தன் ஆசையோடு கட்டிய பொன்மாளிகைக்கு அவரை அழைத்துச் செல்கிறாள். மகள் குந்தவை தன் தந்தையைக் கவனிப்பதில் அக்கறை கொள்வது இரத்த பாசத்தாலாகும் என்பதை அறியலாம்.

குந்தவை திருமணப் பருவம் நிறைந்த மங்கையாகத் திகழ்கிறாள். அவள் மனம் வந்தியத்தேவன் மீது காதல் கொள்கிறது. அப்பருவத்தில் மகள் என்ற உறவுப் பிணைப்பு அவளைக் காதல் மீது கவனம் செலுத்தவிடவில்லை. அரசகுலப் பெண் என்பதால் எல்லோராலும் செல்லமாக வளர்க்கப்பெற்றாலும் அவள் தன் விருப்பம்போல் நடந்துவிட முடியவில்லை. நாட்டுநலன் கருதிச் செயல்படுகிறாள். இறந்துபோன ஆதித்தனின் ஆசையை நிறைவேற்றும்படித் தன் தந்தையிடம் கூறுகிறாள்.

சுந்தரசோழனின் மனதில் தெம்பை ஊட்டும் மகளான குந்தவை தன் சகோதரன் அருண்மொழிவர்மனுக்காக நீண்ட நாள்கழித்துத் திருமணம் செய்து கொள்ளும் சகோதரியாகிறாள். முழுமையாகத் தன்னைத் தான்பிறந்த குடும்பத்தோடு இணைத்துக்கொள்ளும் மகளாய் உள்ளாள்.

ரங்கமாதேவி ரகுநாதநாயக்கரின் மகளாவாள். இவள் விஜயராகவ நாயக்கரின் சகோதரி. தன் தந்தையால் மிகவும் சிறப்பாக வளர்க்கப்பெற்றவள். அறிவுக்கூர்மை மிகுந்த ரங்கமாதேவியின் மீது அவளது தந்தை கொண்டிருந்த எண்ணத்தைப் பாதிரியார் குறிப்பிட்டிருப்பதாக நாவலாசிரியர் எடுத்துக்காட்டுகிறார். அதாவது “ரகுநாத நாயக்கருக்குத் தன் மகள் ரங்கமாதேவியிடம் அளவற்ற அன்பு என்றும், ஆட்சிப்பொறுப்பை

அவளிடமே ஒப்படைக்க வேண்டும் என்றும் விரும்பியதாகக் கூறியிருந்தார். அதனால் தன் மகளைத் தக்க அரசனாகப் பார்த்துக் கல்யாணம் செய்து வைக்க வேண்டும் என்று அவர் எண்ணியதுண்டு. தக்க வரனைத் தேடியதால் திருமணம் நடைபெறாது தள்ளிக்கொண்டே வந்தது"[32] என்ற இச்செய்தி மூலம் ரங்கமாதேவியிடம் ரகுநாதர் கொண்டிருந்த அன்பு புலப்படுகிறது.

இச்சூழலில் விஜயராகவ நாயக்கர் தனக்கு ஆட்சியுரிமை இல்லாமல் போய்விடுமோ என்று பயப்படுகிறார். ஆனால் ரகுநாதர் இறந்துபட ரங்கமாதேவி தஞ்சையினின்றும் நீங்கி வல்லத்தில் வாழ்கிறாள். அவ்வப்போது தஞ்சை வருகிறாள்.

மோகனா விஜயராகவ நாயக்கரின் ஒரே மகள். தந்தை மகளை மிகுந்த பாசத்துடன் வளர்க்கிறார். கூட்டுக்குடும்பத்தில் வளரும் மோகனா தாய், தந்தை, அத்தை ஆகியோரின் பாசத்திற்குரியவளாய் வளர்கிறாள். இளவரசி நிலையில் உள்ள அவள் தன் தந்தையின் சொற்களுக்குக் கட்டுப்பட்டவளாக உள்ளாள். அவளது அத்தை ரங்கமாதேவி வல்லத்தில் மோகனாவைத் தங்கும்படிக் கூறியபோது தன் தந்தைக்குப் பிடிக்காது என்று மறுக்கிறாள்.

விஜயராகவ நாயக்கர் தன் மகளுக்காக வித்வத் சபையைக் கூட்டுகிறார். இதை "நீ வரவேண்டும் என்பதற்காகத்தானே வசந்த மண்டபத்தில் வித்வத் சபையை ஏற்பாடு செய்தேன்"[33] என்ற கூற்றால் அறியலாம். இச்சபை கூடுவதால் மகள் வல்லத்துக்குப் போகக்கூடாது என்று அறிவுறுத்துகிறார். தந்தை மகளிடம் மிகுந்த அன்பு செலுத்தியபோதும் தந்தையிடம் எதையும் வெளிப்படையாகப் பேச அஞ்சும் மோகனா தான் சொக்கநாதநாயக்கர் மீது கொண்ட காதலை மறைக்கிறாள். அத்தைக்கும் தந்தைக்கும் மாறுபட்ட கருத்துக்கள் உள்ளதால் இருவரிடமும் அன்புசெலுத்தி, அவரவர் குணத்திற்குத் தகுந்தாற்போல் நடக்கிறாள்.

வீரமாதேவி பராந்தகச் சோழனின் மகள் ஆவாள். அவளை இராட்டிர கூட மன்னனுக்குத் திருமணம் புரிவிக்கிறார்கள். அவள் திருமணத்திற்கு முன் இளம்பருவத்தில் மகளாக அரண்மனையில் வளர்ந்த நிலை சுட்டப்பெறவில்லை. கணவனோடு பிறந்த வீட்டில் வந்து தங்கும் நிலையே சொல்லப்பெறுகிறது. அரண்மனையின் ஒவ்வொரு இடமும் தான் வளர்ந்த, பார்த்துப் பழகிற இடம் என்றாலும் கணவன் நாட்டை இழந்தபின் அங்கு வந்திருப்பது அவளுக்கு முள்ளாய் உறுத்துகிறது.

அரசகுல மகள் வீரமாதேவியின் மனம் புண்படாமல் இருக்கவேண்டும் என்று கூட்டுக்குடும்பத்தில் உள்ளோர் நினைக்கின்றனர். ஆனாலும் திருமணத்திற்குப்பின் கூட்டுக்குடும்பத்தில் திருமணமான மகளுறவு சிறப்படைய வாய்ப்பில்லாமல் போகிறது.

பராந்தகச் சோழனின் மற்றொரு மகள் அனுபமா. அரண்மனையில் துடிப்புள்ள இளம் பெண்ணாக வலம்வருகிறாள். அனைவரும் இவள் மீது அன்புகொண்டுள்ளனர். இவள் காதலைக் கேள்விப்பட்ட இராஜாதித்தன் சீண்டி விளையாடுகிறான். அவள் கோபம் கொள்வதைப் பார்த்து அனைவரும் மகிழ்கின்றனர். கூட்டுக்குடும்பத்தில் வாழும் மகள்களுக்குச் சகோதரியின் கணவன்களால் இடையூறுகள் வருவதுண்டு. வீரமாதேவியின் கணவன் கோவிந்தன் அனுபமாவிடம் அளவுக்கு மீறிப் பழகுகிறான். இதைப் பார்க்கும் வீரமாதேவியின் மனம் வருந்துகிறது. அனுபமா சிக்கலான சூழலில் அக்காவின் கணவன் பார்வையிலிருந்து தப்புகிறாள்.

### *அரசகுலம் சார்ந்த கூட்டுக்குடும்பத்தில் மனைவியுறவு*

அரசகுலம் சார்ந்த கூட்டுக்குடும்பங்களில் ஓர் அரசருக்குப் பல மனைவிகள் இருப்பதுண்டு. அதில் பட்டத்து இராணியாக முடிசூட்டிக் கொள்ளப்பெற்றவர்கள் அதிக உரிமை பெற்றவர்களாக உள்ளனர். முதுமைபெற்ற பட்டத்து இராணியர் இராசமாதா என்றழைக்கப்பெறுகின்றனர்.

இவர்கள் மட்டுமே மன்னரின் அருகேயிருக்கும் நிலையில் உள்ளனர். விக்கிரமன் நாவல்களில்

1. வானவன் மாதேவி (ந.பு.நா)
2. வானதி (ந.பு.நா)
3. மங்களாதேவி (வ.இ)
4. நாச்சியார் (மா.வ.கா)
5. வீரமாதேவி (க.பு.கா)
6. புவனமுழுதுடையாள் (தெ.வா.மோ)
7. மங்கம்மாள் (ம.ம)
8. செம்பியன் மாதேவி (சோ.ம)
9. கோக்கிழான் அடிகள் (இரா.ச)
10. வீரமாதேவி (இரா.ச.)
11. இளங்கோபிச்சி - (சோ.இ.க)

ஆகியோர் மனைவி என்ற உறவில் வைத்துச் சொல்லப்பெறுகின்றனர்.

சுந்தரசோழனின் மனைவி வானவன் மாதேவி கணவன்மீது மிகுந்த அன்புடையவள். அவருக்கு அருகிருந்து பணிவிடை செய்கிறாள். இவர்கள் குடும்பத்தில் இராசமாதாவாக செம்பியன் மாதேவி, உள்ளாள். சுந்தரசோழனின் அன்னை கல்யாணிப் பாட்டி ஆகியோர் உள்ளனர். இவர்களது தலையீடு குடும்பத்தில் அதிகமாக இருப்பதால் வானவன் மாதேவியின் பங்கு விரிவாகச் சுட்டப்பெறவில்லை. சுந்தரசோழன் இறந்ததும் வானவன் மாதேவி உடன்கட்டை ஏறுகிறாள். இச்செய்தி வரலாற்றில் இடம்பெறுகிறது.

சுந்தரசோழனின் மகன் அருண்மொழிவர்மனின் மனைவி வானதி. இவள் இளம்பெண். இவளைக் கருவுற்ற நிலையில் அரண்மனையில் சகோதரி குந்தவை பராமரிப்பில் விட்டுவிட்டு அருண்மொழிவர்மன் வேற்றுநாடு செல்கிறான். தன் கணவன் இல்லாத நிலையில் அரசகுல

மனைவியாகக் கம்பீரம் காட்டாமல் கோழையாக வாழ்கிறாள். இவளுக்கு அரண்மனையில் குந்தவையின் தலையீட்டால் நன்மை ஏற்பட்டாலும் வானதிக்கு அதிகாரம் செலுத்த வாய்ப்பில்லை. போதிய வயதும், கணவன் அருகே இல்லாமையும் வானதியை இந்நிலைக்குத் தள்ளுகிறது. மேலும் அருண்மொழிவர்மன் தன் சகோதரியின் அறிவுரைப்படி நடந்துகொண்டிருக்கிறான். அப்படிப்பட்டச் சூழலில் அவனது மனைவியின் நிலை கூட்டுக்குடும்பங்களில் உரிமையற்ற, அதிகாரமற்ற தன்மையில் இருக்கும் என்ற வகையில் வானதி வாழ்க்கைச் சித்தரிக்கப்பெற்றிருக்கிறது.

தன் கணவன் தன்னைத் தவிரப் பிறபெண்களோடு தொடர்புகொண்டுள்ளான் என்றும், அவர்களை மணந்துகொள்வான் என்றும் அறிகிறபோது அச்சூழலை அவளால் துணிச்சலோடு எதிர்கொள்ள முடியவில்லை. அதனால், தான் இறந்துபோகவேண்டும் என்று நினைக்கிறாள். இராசேந்திரன் என்ற ஆண்மகவினை ஈன்ற வானதி இறக்கிறாள்.

விஜயராகவ நாயக்கரின் மனைவி மங்களாதேவி ஆவாள். நாயக்கரின் சகோதரி ரங்கமாதேவியின் தலையீடு அரண்மனையில் அதிகமாய் உள்ளது. அவள் திருமணம் செய்துகொள்ளாமல் தஞ்சை அரண்மனையில் சகோதரன் குடும்பத்துடன் உள்ளாள். பின்னால் வல்லத்தில் கோட்டை அமைத்து அங்கு சென்று தங்குகிறாள். ஆற்றலும், துணிச்சலும் மிக்க ரங்கமாதேவிக்கு முன் அவளது சகோதரன் மனைவியின் பங்கு தலைதூக்க முடியவில்லை.

தன் சகோதரன் மகள் மோகனாமீது அக்கறை கொண்ட ரங்கமாதேவி அவளிடமே அவளது தாயைப் பற்றிக் குறை கூறுகிறாள். திருமணமாகாத நாத்தனாரால் கூட்டுக்குடும்பங்களில் மனைவியின் நிலை பரிதாபத்திற்குள்ளாகிறது. இதற்கு அரசகுடும்பமும் விதிவிலக்கல்ல என்பதை விஜயரகுநாதரின் 'மனைவி' பாத்திரப்படைப்பால் அறியலாம். "அத்தைக்கும் அம்மாவுக்கும் எதற்காகத் தகராறு ஏற்பட்டது. அம்மாவுக்கு அத்தையைப்

பிடிக்கவில்லை, என்றால் தான் அடிக்கடி வல்லத்துக்குச் சென்றுவருவதை ஏன் அனுமதிக்கிறாள்"[34] என்று மோகனா குழம்புகிறாள். தன் சகோதரன் மனைவியைப் பிடிக்காத போதும் தன் மருமகள் மீது ஆதிக்கம் செலுத்தித் தான் சொன்னபடி கேட்கவைக்கிறாள். தன் குழந்தையைக்கூட தன் விருப்பப்படி வளர்க்கமுடியாத நிலை குடும்பத்தலைவிக்குக் கூட்டுக்குடும்பங்களில் ஏற்படுகிறது என்பதை அறியலாம். அரசனின் மனைவியாக இருந்தும் விஜயராகவ நாயக்கரின் மனைவி ஆதிக்கம் செலுத்தாமைக்குக் காரணம் மற்றொரு பெண்ணின் மிகுந்த தலையீடு ஆகும்.

சிங்கவரையனின் மனைவி நாச்சியார். கணவனிடம் மிகுந்த அன்பு கொண்டவள். ஆனால் கணவனின் கோபத்துக்கு ஆட்படமாட்டாள். தனக்குப் பிடிக்காததை அரசனிடம் எடுத்துக்கூறும் துணிச்சல் உள்ளவள். நாச்சியார் நல்லவள் என்பதால் சிங்கவரையன் கோபம் அவளிடம் தோற்றுப்போகும். எதையும் துணிந்து முடிவெடுக்கும் சிங்கவரையன் தன் மனைவி எதற்கேனும் மறுப்புத் தெரிவித்தால் எச்செயலிலும் தயக்கம் காட்டுகிறான். ரங்கதேவி, மாறன் திருமணம் குறித்துத் தன் கணவன் எடுக்கும் முடிவு சரியில்லை என்று மறுக்கிறாள். மன்னனும் யோசிக்கிறான்.

அரசகுலப் பெண்கள் எப்போதும் கணவனின் அருகிருக்க முடியவில்லை. "நாச்சியாரை அவன் தொட்டுப்பேசி, அங்கிருந்து குலவி பல ஆண்டுகளாகிவிட்டன. அந்த அறையின் மஞ்சத்தில் சேர்ந்துறங்கி பல ஆண்டுகளாகி விட்டன"[35] என்ற கருத்தின் மூலம் அரச குல மனைவியரின் நிலை புலப்படுகிறது. ஆயினும் பெண்கள் கணவனை வணங்குபவராக, அவன் சொல்லை மதிப்பவராக இருந்துள்ளனர். அதேசமயம் சூழலால் குடும்பத்தில் தவறுகள் நடந்துவிட அனுமதிப்பதில்லை.

ரங்கதேவி, மாறனை மணந்துகொள்ள வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தபோது நாச்சியார் மறுக்கிறாள். அதைப் பார்த்து ரங்கதேவி தம் திருமணத்திற்குத் தன் தாய்தான் எதிரி என்று பேசுகிறாள். தன் மனத்தில்

மாறனை மகனாக நினைத்துவிட்டதாகக் கூறும் நாச்சியார், மாறனின் உள்ளத்தை நன்கு புரிந்துகொள்கிறாள். அவன் பேச்சிலிருந்து அவன் ரங்கதேவியைக் காதலிக்கவில்லை என்பதை அறிகிறாள். அவள் மறுத்ததால் ரங்கதேவியின் வாழ்வு காப்பாற்றப்பட்டது. ஏனெனில் மாறன் நல்லவன் என்றாலும் பாண்டியநாட்டுக்காகப் போராட வேண்டும் என்று சோழநாட்டில் தங்கியவன். மங்கையை விட மண்ணை நேசித்தவன். அதனால் இறுதியில் போரில் மாய்கிறான்.

சோழ அரசன் முதலாம் இராசராசனின் மகன் இராசேந்திரன். அவன் முக்கோக்கிழான் அடிகள், பஞ்சவன்மாதேவி, அரிந்தவன் மாதேவி, வீரம்மாள் என்ற வீரமாதேவி முதலிய பல பெண்களை மணந்துள்ளான். அனைவரிலும் அரசனின் மனத்துக்குப் பிடித்தவள் வீரம்மாள். இவள் பங்குநிலை நாவலில் விரிவாகக் குறிப்பிடப்படுகிறது.

வீரம்மாள் கலையில் சிறந்தவள். கலைக்காகவே இராசேந்திரன் வீரம்மாளை மணந்து கொள்கிறான். இதை மற்ற மனைவியர் விரும்பவில்லை. வீரம்மாளுக்குக் குழந்தை பிறந்தால் அரசுரிமையில் குழப்பம் வரும் என்று பிறமனைவியர் கருதுகின்றனர். அதனால் வீரம்மாளை அவர்கள் சொல்லால் சுடுகின்றனர். ஆனால் வீரம்மாளோ அவர்கள் "மமதைக்கும் கர்வத்திற்கும் பிடிவாதத்திற்கும் அப்பாற்பட்டவள்"[36] என்ற குறிப்பால் அன்பான, அடக்கமான மனைவியாகத் திகழ்கிறாள் என்றறியலாம். அன்பான தன்கணவனின் ஆசைக்கு இணங்கினால், அதன்மூலம் தன் வயிற்றில் அரசு வாரிசு உருவானால், ஏற்கனவே குழப்பம் செய்யும் அரண்மனை மக்கள் மேலும் குழப்பத்தை ஏற்படுத்துவர் என்று கருதி அரசனோடு நெருங்க மறுக்கிறாள்.

மன்னன் மனத்தில் வீரம்மாள் தன் நல்ல பண்புகளால் இடம்பிடித்துள்ளாள். மன்னன், "வீரமாதேவி' நீ இந்த நாட்டின் அரசிகளுள் ஒருத்தி, என் மனத்துக்கு இசைந்தவள். கலையும், வீரமும் அறிவும் நிறைந்த

ஒருவனை உன்னால் பெற்றுத்தர முடியும்”[37] என்று கெஞ்சுகிறான். வீரம்மாள் தனக்கு அரசனின் மனைவி என்ற இடமே போதும், தாய் நிலை வரவேண்டாம் என்று கூறி மன்னனோடு கொள்ளும் தாம்பத்ய உறவை மறுக்கிறாள்.

வீரமாதேவியைச் சாகசம் மிக்கவள், தந்திரம் மிக்கவள், மாயமந்திரம் தெரிந்தவள் என்று வீரம்மாளின் சக்களத்தியர் தூற்றியபோதும் அரண்மனையில் முடங்கிக் கிடக்காமல் மன்னனுக்குப் பெருமை சேர்க்கும் வகையில் கோயில் கட்டுதல், குளம் அமைத்தல், நகர் அமைத்தல் எனப் பல நற்செயல்களில் ஈடுபடுகிறாள். ஒவ்வொரு மனிதனின் வெற்றிக்குப் பின்னும் ஒரு பெண் இருக்கிறாள் என்ற கூற்றிற்கிணங்க இராசேந்திரனின் புகழ் பரவ வீரமாதேவி காரணமாகிறாள்.

மூன்றாம் இராசராசனின் மனைவி புவனமுழுதுடையாள் ஆவாள். சோழநாட்டைச் சேர்ந்த பதியிலாதார் குலப்பெண் தேவகுஞ்சரி அரசு தொடர்பான செயல்களில் ஈடுபடுகிறாள். நாட்டுக்காக உழைக்கிறாள். அதனால் தேவகுஞ்சரிக்கு அரசரைக் காணவும், நெருங்கிப் பழகவும் வாய்ப்பேற்படுகிறது. இதைப் புவனமுழுதுடையாள் விரும்பவில்லை.

தன் கணவனைத் தேவகுஞ்சரி அபகரித்து விடுவாளோ என்ற பயம் ஏற்படுகிறது. அதனால் தேவகுஞ்சரியைத் தரக்குறைவாகப் பேசுகிறாள். “சீ! குலத்து துரோகியே! பேசாதே” என் மகன் மனதை மாற்றினாய். உன்னைக் கண்டிக்கத் தக்கவர் இல்லாது போய்விட்டார்கள். மிகவும் நெருக்கடியான சமயத்தில் சக்கரவர்த்திகளுக்கு இடையூறாக அவரது மனத்தில் சஞ்சலத்தை அளித்தாய். இந்த மாளிகையில் இருக்காதே, போய்விடு”[38] என்ற புவனமுழுதுடையாளின் கூற்றிலிருந்து ஒரு மனைவியின் மனநிலை புரிகிறது. பல பெண்களை அரசர் மணந்துகொள்வது இயல்பு என்பதை அறிந்த போதும் மனைவியாகிய புவனமுழுதுடையாள் முடிந்தவரை அதை எதிர்க்கிறாள்.

குஞ்சரி இறந்தபிறகு அவளுக்கு நினைவுச்சின்னம் எழுப்பவேண்டும் என்று மன்னன் சொன்னபோது "இறந்துபோன ஒவ்வொருவருக்கும் நினைவுச்சின்னம் அமைப்பது என்றால் இந்த நகரமே போதாது"[39] என்கிறாள். ஒரு பெண் இறந்தபின் கூட மன்னன் மனதில் மதிப்புப்பெறுவது 'மனைவி' என்ற நிலையில் உள்ள பெண் புவனமுழுதுடையாளுக்குப் பிடிக்கவில்லை. மனைவியர் கணவன் மீது கொண்டுள்ள மிகுந்த அன்பு பொறாமையாகிறது. தன் கணவனை நிழல்போல் தொடரும் புவனமுழுதுடையாள் இறுதியில் தேவகுஞ்சரியின் தியாகத்தைப் புரிந்து கொள்கிறாள்.

மங்கம்மாள் என்ற வரலாற்றுப் பாத்திரத்தை மையமாக வைத்து விக்கிரமன் 'மதுரை மகுடம்' 'ஆலவாய்அரசி' என்ற இரண்டு நாவல்களைப் படைத்துள்ளார். மனைவி என்ற உறவு நிலையில் அவளது பங்கை இனிக்காணலாம். மதுரை மகுடத்தில் சொக்கநாதநாயக்கரின் மனைவியாக இடம்பெறும் மங்கம்மாள் அறிவுமுதிர்ந்த பெண்ணாக உள்ளாள். ஆலவாய் அரசியில் அரசியல் அறிவைப் பெற்ற இளம் மனைவியாக இடம்பெறுகிறாள்.

மங்கம்மாள் தன் கணவனின் மனமறிந்து நடக்கிறாள். அவரது காதலுக்கு உகந்தவளாகிறாள். அரசியலில் ஆலோசனை கூறுகிறாள். இக்கட்டான பல சமயங்களில் அவரது உயிரைக் காப்பாற்றுகிறாள். சொக்கநாதரின் பழைய காதலை அறிந்து தான் மனைவியாகிய பின் இன்னொரு பெண்ணின் நினைவு தன் கணவருக்கு வரக்கூடாது என்று கருதி அதை அடியோடு மறக்கச் செய்கிறாள். அரசருக்கு அழகிரியாலும், வெங்கண்ணாவாலும் வரவிருந்த சூழ்ச்சியை முன்பே உணர்ந்து செயல்படுகிறாள்.

இவ்வளவையும் அறிந்த சொக்கநாதர் தன் மனைவியின் ஆலோசனைப்படி நடக்கிறார். மங்கம்மாளின் அறிவுத்திறமைக்கு முன்னால் நாயக்கரே பயப்படும் நிலை உருவாகிறது. கணவரின் நலனில் அக்கறை

கொண்ட மங்கம்மாள் அவரைக் குற்றாலத்துக்கு அழைத்துச் சென்று தங்கவைக்கிறாள். மனைவி சிறந்த அமைச்சனாகவும் செயல்படக்கூடியவள் என்பதை மங்கம்மாள் வாழ்விலிருந்து அறியலாம். "தன் கணவரின் போக்குப்படி நாட்டில் எல்லாம் நடந்தால் எதிரிகளின் கை வலுத்துவிடும். ஆட்சிக் குதிரையின் லகானைத் தாம் பிடித்துக்கொள்ளவேண்டும் என்ற முடிவுக்கு வந்தாள்"[40] என்ற கருத்தால் தக்க நேரத்தில் நல்ல முடிவெடுக்கும் மங்கம்மாளின் அறிவு, அக்கறை புலப்படுகிறது.

அரசகுலம் அல்லாத சிறிய குடும்பங்களில் கூடப் பெண் தானே முடிவெடுப்பது என்பது இயலாத நிலையில் உள்ளபோது, அரசகுலப் பெண்ணான மங்கம்மாள் அரண்மனையில் உள்ள அத்தனை பேரையும் எதிர்கொள்ளவேண்டிய சூழலில் இத்தகைய முடிவெடுக்கிறாள். இவற்றிற்கு அடிப்படைக் காரணம் தன் கணவன் தன் குடும்பம் என்பதேயாம்.

கண்டராதித்தன் மனைவி செம்பியன் மாதேவி புத்திக்கூர்மையும் திறமையும் வாய்ந்த பெண். கணவனின் பக்திநெறிக்கு உறுதுணையாய் இருக்கிறாள். இதைக்கண்ட கண்டராதித்தர் தம் எண்ணம் போலவே மனைவி அமைந்துவிட்டதாக எண்ணி மகிழ்கிறார். கண்டராதித்தரைக் கண்டவர்கள் இராசகுடும்பத்தில் ஒரு சாமியார் பிறந்துவிட்டதாகவே கருதுகின்றனர். அவரது மனைவியும் பக்தியில் சிறந்ததால் அவரால் சிறப்பாக வாழமுடிகிறது. "கண்டராதித்த சோழருக்கு உள்ள சிவபக்தியில் செம்பியன் மாதேவியார் எந்தவிதத்திலும் குறைந்துவிடவில்லை. தேவியரின் சிவபக்தியைக் கண்டு கண்டராதித்தர் மிகவும் உற்சாகம்கொண்டார்"[41] என்பதால் வேறுவேறு ஊர், வேறுவேறு குடும்பம் என முற்றிலும் வேறுபட்ட ஆணும் பெண்ணும் மகிழ்வாய் வாழ்ந்து குடும்பத்தைக் கட்டிக் காக்கவேண்டுமெனில் சிந்தனை ஒன்றாதல் வேண்டும் என அறியலாம்.

செம்பியன் மாதேவியார் தன் கணவனிடம் பேசும்போது "நம் இதய வேட்கை இறைவனைத் தேடுவது"[42] என்கிறாள். இதில் இருவரின் ஒற்றுமை உணர்வு புலப்படுகிறது.

கோவிலில் நடனமும், பாட்டும் நிகழ்த்திய பெண் மலர்மங்கையைத் தன் கணவர் கலைக்காக நேசித்ததைப் போலவே தானும் நேசிக்கிறாள். பொறாமை கொள்ளவில்லை. கண்டராதித்தர் மங்கையைச் சோழ நாட்டிற்கு அழைத்தபோது "அரசி உன்னைப் பார்த்தால் மகிழ்ச்சியடைவாள். உன் பாடலைக்கேட்டுப் பரவசமடைவாள். சிவத்தலம் ஒவ்வொன்றிற்கும் செல்லும்போது உன்னையும் அழைத்துச் சென்று பாடக்கேட்டு ஆனந்தமடைவாள்"[43] என்கிறார். கருத்தொருமித்த மனைவியாகத் திகழ்கின்ற செம்பியன் மாதேவி தன் கணவர் மனதில் உயரிய இடம் வகிக்கிறாள். தன் கணவனின் சகோதரர்களைத் தன்குழந்தைகள் போல் பாவித்து அன்பு செலுத்துகிறாள்.

பராந்தகச் சோழனின் மனைவி முக்கோக்கிழான் அடிகளார் ஆவாள். தன் கணவருக்கு மிகவும் பயந்து, பணிந்து வாழ்கிறாள். அரசனோடு அருகிருந்து பேசி உறவாடி மகிழ்கிற மனைவியாகவோ, அரசனுக்கு ஆலோசனை கூறும் மனைவியாகவோ இவள் சித்தரிக்கப்படவில்லை. கூட்டுக்குடும்பத்தில் ஓர் உறுப்பினர் என்ற தன்மை மட்டுமே நாவலில் புலப்படுகிறது. மகன் இராஜாதித்தனோடு கோவிலுக்குச் செல்ல நினைக்கிறாள். அந்நேரம் மன்னன் மகனை அழைக்கிறார் என்பதை அறிந்தவுடன் மனதிற்குள் பயம் கொள்கிறாள். "அவசரமான பணி ஏதாவது சொல்வதற்குத் தந்தை அழைத்திருக்கும்போது நான் உன்னைத் தடுத்து இங்கே அழைத்து வருகிறேன்"[44] என்று கவலை தோய்ந்த குரலில் பேசுகிறாள். அரச குடும்பங்களில் அரசனின் மனைவியர் அரசனை விட்டு ஒதுங்கி வாழ்ந்துள்ளனர் என்பதை இதன்மூலம் அறியலாம்.

இராட்டிரகூட மன்னன் கோவிந்தனின் மனைவி வீரமாதேவி சோழநாட்டு அரசகுலப்பெண். இராஜாதித்தனுடன் பிறந்தவள். கணவன் பகைவர்களிடம் தோற்று நாட்டை இழந்ததால் இருவரும் சோழநாட்டில் வந்து தங்குகின்றனர். அப்போது அவள் மனம் துயருறுகிறது. தந்தைவீடு எவ்வளவு வசதிபடைத்ததாக இருந்தாலும் ஒருமனைவிக்கு கணவனது இல்லமே மகிழ்ச்சியளிப்பது ஆகும். அதனால் வீரமாதேவி தன் நிலைக்காக வருந்துகிறாள். அவள் பிறந்தவீடும், புகுந்தவீடும் கூட்டுக்குடும்ப அமைப்பைக் கொண்டது.

இராட்டிரகூடத்தில் வாழ்ந்த காலத்தில் கோவிந்தன் அழகான பிற பெண்களைக் கண்டால் சபலம் கொள்ளும் இயல்புடையவன். வீரமாதேவி தன் கணவனை மிகவும் கவனமாகப் பார்த்துக்கொள்கிறாள். வீரமாதேவியின் தங்கை அனுபமாவுடன் தன் கணவன் நெருங்கிப் பழகுவதை விரும்பவில்லை. வீரமாதேவி தன் தந்தையின் அரண்மனையில் தங்கியுள்ளபோது விளையாட்டாய் யாரும் ஏதும் கூறினால் கூட அவளுக்கு அது உறுத்தலாய் உள்ளது. கணவனின் கூட்டுக்குடும்பத்தில் வாழுகின்ற வாழ்க்கை முழுமையாகச் சொல்லப்படவில்லை. தந்தையின் வீட்டில் கூட்டுக்குடும்பத்தில் இருக்கின்ற நிலை அவளுக்குப் பிடிக்கவில்லை.

விஜயாலயச் சோழனின் மகன் ஆதித்தனின் மனைவி இளங்கோபிச்சி ஆவாள். ஆதித்தன் பல்லவநாட்டிற்கு மாறுவேடத்தில் சென்றுவிட்டபிறகு அரண்மனையைக் கவனிக்கும் முழுப்பொறுப்பையும் ஏற்கிறாள். நோய்வாய்ப்பட்டிருக்கும் விஜயாலயன், தனக்கு மருத்துவர், பணிப்பெண்கள், தாதியர் ஆகிய அனைவரையும் விட இளங்கோபிச்சி பணிவிடை செய்வதையே பெரிதும் விரும்புகிறார். அந்த அளவுக்குத் தான் ஒரு அரசி என்ற அகங்காரம் கொள்ளாது இயல்பாய் உள்ளாள். வெளியூர் சென்ற தன் கணவருக்கு எந்தவித இடையூறும் வரக்கூடாது என்று எந்நேரமும் இறைவனை வேண்டுகிறாள்.

இளங்கோபிச்சியின் கணவன் பல்லவநாட்டு இளவரசி வைரக்கண்ணியைக் காதலித்துச் சோழநாட்டிற்கு அழைத்து வருகிறான். இதை முதலில் கேள்விப்பட்ட இளங்கோபிச்சி வருத்தமடைகிறாள். நெஞ்சம் கலங்குகிறது. ஆதித்தனின் நண்பன் விக்கியண்ணன் பேச்சால் ஓரளவு மன நிம்மதி அடைந்து அவர்களை வரவேற்கிறாள். கணவனின் செயல் கண்ட இளங்கோபிச்சி மனம் கோணவில்லை. கோபத்தில் கதவைத் தாழிடவில்லை. அரசனுக்குப் பல்லவநாட்டில் நடந்த சிக்கலை அறிந்து, எதிர்காலத்தில் அவனது அரசவிரிவாக்கத்தை மனதில் வைத்து அவளுக்கிருந்த துயரத்தைப் பொறுக்கிறாள். அரசகுல மனைவியர் நாட்டை அடிப்படையாக வைத்தே தங்கள் உறவைத் தக்க வைத்துக்கொள்ள வேண்டிய சூழலில் உள்ளனர். கூட்டுக்குடும்பச்சூழலில் மாமனார், மற்றையோருக்கு முன்னால் கணவனைக் கோபித்துக் கொள்ளக்கூட முடியாத சூழல் உள்ளது.

## அரசகுலம் சார்ந்த கூட்டுக்குடும்பத்தில் தாயுறவு

அரசகுலம் சார்ந்த கூட்டுக்குடும்பத்தில் தாயுறவு நிலையில் உள்ள பெண்களைப் பற்றிக் கீழே காணலாம்.

1. வானவன் மாதேவி (ந.பு.நா)
2. மங்களாதேவி (வ.இ)
3. நாச்சியார் (மா.வ.கா)
4. செம்பியன் மாதேவி (சோ.ம)
5. முக்கோக்கிழான் அடிகள் (இரா.ச)

ஆகியோர் அரசகுலம் சார்ந்த கூட்டுக்குடும்பத்தில் 'தாயுறவு' நிலையில் வைத்துச் சொல்லப் பெறுகின்றனர்.

வானவன் மாதேவி, குந்தவையின் தாய் ஆவாள். இவள் அரண்மனையில் மிகுந்த முதன்மை பெற்ற பெண்ணாய்ச் சித்தரிக்கப்படவில்லை. குந்தவை பல்வேறு சிறப்புகளையும் பாராட்டுக்களையும் பெறும்போது மகிழ்கிறாள். குந்தவையைச்

சிறுவயதிலிருந்தே சிறப்பாகவும் பொறுப்பாகவும் வளர்த்த பெருமை வானவன் மாதேவிக்கு உண்டு. பிற குழந்தைகளோடு 'தாய்' என்ற நிலையில் இவளது உறவு அதிகம் வெளிப்படவில்லை. கூட்டுக்குடும்பச் சூழலில் குழந்தைகள் எல்லோராலும் கவனிக்கப்பட்டு வளர்க்கப்படுகின்ற சூழலால் வானவன் மாதேவியுடன் தாயுறவு அமிழ்ந்து போகிறது.

மோகனாவின் தாய் மங்களா தேவி தன் மகளின் வாழ்வில் அக்கறை கொண்டவளாகவோ அல்லது அதற்காகப் பாடுபடுபவளாகவோ சுட்டப்பெறவில்லை. மோகனாவின் அத்தை ரங்கமாதேவி மோகனாவின் வாழ்வில் தலையிடுகிறாள். அதிகாரம் மிகுந்த அத்தைக்கு முன்னால் கூட்டுக்குடும்பத்தில் தாயுறவு மிளிரமுடியவில்லை.

சிங்கவராயனின் மனைவி நாச்சியார் தன் மகள் ரங்கதேவியின் வாழ்வில் நன்மை ஏற்பட வேண்டும் என்று விரும்புகிறாள். ரங்கதேவி விரும்பும் மாறனுக்கு மணமுடிக்க விரும்பவில்லை. நாச்சியார் சொல்படி சிங்கவரையன் கேட்கிறார். அரசகுடும்பம் கூட்டுக்குடும்பமாய் இருந்தபோதும் பிறபெண்களின் தலையீடு இல்லாததால் மகளைத் தான் விரும்பும் வகையில் நாச்சியாரால் வளர்க்க முடிகிறது.

'கொன்றை மலர்க்குமரி' சோழமகுடம் என்ற இரண்டு நாவல்களும் ஒரே தலைமைப்பாத்திரத்தைக் கொண்டு படைக்கப் பெற்றவை. பட்டத்தரசி செம்பியன் மாதேவி. நீண்ட நாள்கள் குழந்தையில்லாமல் இருந்து அதன்பின் மதுரனைப் பெறுகிறாள். தன் மகன் மதுரனை வளர்க்கவும் அவனுக்கு இன்னல் வந்தகாலத்து அவனைக் காக்கவும் தாயாக இருந்து அவள் பாடுபடுகிறாள்.

தன் கணவர் கண்டராதித்தனின் சகோதரன் அரிஞ்சயனைத் தன் மகனைப்போல் கருதும் தாயுள்ளம் படைத்தவளாக உள்ளாள். அரிஞ்சயனின் "எனது சகோதரர் மிக உயர்ந்த குணமுடையவராக இருந்தார். சிவபக்தியில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டவர். அவரது

மனைவி அரசி எனது அண்ணியார் செம்பியன் மாதேவியாரும் சாலப் பரிவுடையவள். எனது தாய் சோழப் பராந்தகச் சோழரோடு உடன்கட்டை ஏறியபிறகு மிக வருத்தத்துடன் நின்ற எனக்கு ஆறுதல் மிகக்கூறி வளர்த்தவர்கள்"[45] என்ற கூற்றால் கூட்டுக்குடும்பத்தில் தாயாக உள்ள பெண்கள் மற்றவர்களையும் தாய்மைப் பண்போடு நடத்தியமை புலப்படுகிறது. தாயுறவு விரிவடைவதற்குக் கூட்டுக் குடும்பம் நல்ல வாய்ப்பாய் உள்ளது.

இராஜாதித்தனின் தாய் கோக்கிழான் அடிகள் மிகுந்த இறைப்பற்றுக் கொண்டவள். தன் மகனைச் சிவனேசச் செல்வனாய் வளர்க்க வேண்டுமென்ற ஆர்வம் அவளுள்ளத்தில் தோன்றுகிறது. ஆனால் வீரக்குடும்பத்தில் பிறந்தவனை அவள் விரும்பிய வண்ணம் வளர்க்க வாய்ப்பில்லை. ஆயினும் இராஜாதித்தனின் வீர உணர்வை, வீரச் செயல்களைப் பார்க்கின்றபோது அவளுள்ளம் மகிழ்கிறது. தன்கணவனின் இரண்டாவது மனைவியின் குழந்தைகளையும் சேர்த்து அரண்மனையில் வளர்க்கிறாள்.

ஆயினும் தன் மகன் உள்ளத்தில் தோன்றும் எண்ணங்களைப் புரிந்து கொண்டு, அவ்வெண்ணம் ஈடேற வேண்டும் என்று சிவனை வேண்டிக் கொள்கிறாள். "மகனது உடலில் வீரம் துள்ளுவதைப் போல், உள்ளத்தில் வீர எண்ணங்கள் துள்ளுவதைப்போல் சொற்களிலே உள்ள ஆர்வம் வாள் சுழல்வதைப் போல் சுழன்று வருவதைத் தாய் கவனித்து உள்ளுக்குள்ளேயே மகிழ்ந்து கொண்டாள்"[46] என்ற வரிகளால் உள்ளுக்குள் மகிழ்ந்து கொள்ளும். தாயுள்ளம் புலப்படுகிறது. இராஜாதித்தனுக்கு இருந்த சூழலில் தாயுடன் உறவாடக்கூட நேரமில்லாமலிருக்கிறது. "அன்புத்தாய், ஆசைமிகக்கொண்டதாய், அருள் உள்ளம் கொண்ட தாய் அழைப்பதை அவனால் தட்ட இயலவில்லை"[47] என்ற கருத்தால் தாய் மகன் பாச உணர்வை அறியலாம்.

## பிறஉறவுகள்

அரசகுலம் சார்ந்த கூட்டுக்குடும்பத்தில் பிற உறவுகளாக,

1. அத்தை
2. நாத்தனார்
3. மருமகள்
4. பாட்டி

ஆகிய உறவுகள் சுட்டப்பெறுகின்றன.

## அத்தை

குடும்பத்தலைவனின் உடன்பிறந்த சகோதரி ‘அத்தை’ என்று அழைக்கப்பெறுவது தமிழ்மரபு. குடும்பத் தலைவியின் உடன்பிறந்த சகோதரன் ‘மாமா’ என்று அழைக்கப்பெறுவது உறவில் சிறப்புப் பெறுவது போல ‘அத்தை’ என்ற உறவும் குடும்பத்தில் சிறப்பான உறவாக அமைகிறது.

விக்கிரமனின் வரலாற்று நாவல்களில் இரண்டு பெண்கள் ‘அத்தை’ என்ற உறவில் படைக்கப்பெற்றுள்ளனர். இவர்கள் அரசகுலம் சார்ந்தவர்கள். கூட்டுக்குடும்பத்தில் இடம்பெறுவர்கள். இராசராசனின் மகன் முதலாம் இராசேந்திரனைக் குந்தவை வளர்க்கிறாள். குந்தவையின் அரசியல் நுட்பமும், சிறந்த அறிவுரையும் கைவரப்பெற்ற இராசேந்திரன் பின்னால் பல்லோராலும் பாராட்டப்பெறுகிறான். இராசராசன் இராசேந்திரனிடம் “உன் அத்தை தனக்கு வாரிசை உருவாக்கிக் கொள்ள வில்லை. மதுராந்தகன் (இராசேந்திரன்) தான் தன் வாரிசு என்று நினைத்தாள்”[48] என்று கூறுகிறான். தாயில்லாத இராசேந்திரனைத் தன் பிள்ளைபோல் வளர்த்த குந்தவை சோழர் குலத்தை வாழவைத்தவள்.

இராசராசன் தன் சகோதரி இல்லாவிட்டால் தான் உருவாயிருக்கமுடியாது என்று நினைக்கிறான். “என் அருமைச் சகோதரியே! என்னை உருவாக்கினீர்கள் என் மகனை வீரதீரனாக அறிவாளியாக

வளர்த்துச்சோழநாட்டின் சக்கரவர்த்தி ஆக்கினீர்கள்"[49] என்று கூறும் இராசராசன் தன் சகோதரி தன் மகனுக்கு அத்தையாக மட்டுமில்லாமல் தாயாக விளங்கியதை நினைத்துப் பார்க்கிறார்.

ரங்கமாதேவி தன் சகோதரனின் மகள் மோகனா மீது அத்தை என்ற நிலையில் இருந்து அதிகாரம் செலுத்துகிறாள். தான் திருமணம் செய்துகொள்ளாததைப் பற்றிக் கவலைப்படவில்லை. மோகனாவுக்கு நல்ல அத்தையாக இருந்து அவள் வாழ்வைச் சிறக்கச்செய்து தான் சொல்வது போல் அவளை நடக்கச்செய்யவேண்டும் என்று நினைக்கிறாள். மோகனாவின் தாய்க்கு ஒன்றுமே தெரியாது என்று மோகனாவிடம் அடிக்கடி கூறுகிறாள்.

மிடுக்கான தோற்றமும் கடுமையான பேச்சும் யாரையும் அடக்கியாளும் தன்மையும் கொண்ட ரங்கமாதேவி மோகனாவிடம் அதிக அன்புசெலுத்தி மகிழ்கிறாள். மோகனாவின் மீது உள்ள பாசம் விரக்தி ஏற்படுகின்ற சூழல் வந்தபோதும் அவளைப் பற்றுதலோடு வாழச்செய்கிறது. திருமணமாகாமல் கூட்டுக்குடும்பங்களில் இருக்கும் ஆண், பெண்களுக்குச் சகோதர சகோதரிகளின் வாரிசால் மகிழ்ச்சி வருவதுண்டு. இந்த உலகியல் உணர்வு ரங்கமாதேவி பாத்திரப்படைப்பில் வெளிப்படுகிறது.

### நாத்தனார்

ஒரு பெண்ணின் கணவரோடு பிறந்த மூத்த, இளைய சகோதரிகள் அப்பெண்ணுக்கு நாத்தனார் என்ற உறவுடையவர்களாவர்.

குந்தவை இராசராசனின் மனைவி வானதிக்கு நாத்தனார் ஆவார். கூட்டுக்குடும்பத்தில் வாழும் இப்பெண்கள் மிகுந்த ஒற்றுமையோடு உள்ளனர். வானதி தன் நாத்தனாரைப்போல நல்லவர்கள் யாருமில்லை என்று நினைக்குமளவுக்குக் குந்தவை நடந்துகொள்கிறாள். தன் தம்பியின் நலம் சிறக்கவும் சோழ அரசு தழைக்கவும். தன் தம்பியின் மனைவி மகிழ்வோடும் நல்ல உடல்நலத்தோடும் இருக்கவேண்டும் என்று கருதி வானதி வாழ்வில் குந்தவை மிகுந்த அக்கறை காட்டுகிறாள்.

வானதிக்குத் தன் கணவன் தான் கருவுற்று இருக்கும் நிலையில் தன்னருகில் இல்லையே என்ற கவலை ஏற்படுகிறது. அதனால் அடிக்கடி மனமுடைந்து உலகை வெறுத்துப் பேசுகிறாள். அப்போது குந்தவை அவளுக்கு ஆறுதல் கூறி வானதியின் வயிற்றுக் குழந்தையே சோழநாட்டின் அரசுரிமை ஏற்கும் என்று உறுதியளிக்கிறாள். விக்கிரமன் குந்தவையை உயர்குணம் படைத்தவளாகச் சித்தரிக்கிறார். "சோழ சாம்ராஜ்யத்து அரண்மனையில் வீற்றிருக்கப்போகும் உனக்கு இன்னும் உலக விவகாரமே தெரியவில்லையே"[50] என்று அறிவுரை கூறித் தம்பியின் மனைவிக்குத் துணிச்சலையூட்டும் குந்தவை வானதிக்குத் தாய்போல் திகழ்கிறாள்.

ரங்கமாதேவி விஜயராகவ நாயக்கரின் மனைவிக்கு 'நாத்தனார்' என்ற உறவுடையவளாகிறாள். ரங்கமாதேவி தன் தம்பி குடும்பத்துடன் கூடவே இல்லாவிட்டாலும் தூரத்தில் இருந்து செயல்படுகிறாள். தன் தம்பி மனைவிக்கு ஒன்றுமே தெரியாது என்று கூறித் தம்பிமகள் மோகனாவைத் திசை திருப்புகிறாள். நாத்தனார், மாமியார் என்ற உறவுநிலையில் உள்ள பெண்கள் வீட்டுக்கு வரும் மருமகள்களை அடக்கி ஆள்பவர்கள் என்பது மரபுவழிச் சிந்தனை. அந்த அடிப்படையிலேயே ஆசிரியர் ரங்க தேவியைப் படைத்துள்ளார்.

### மருமகள்

கூட்டுக்குடும்பத்தில் வாழும் அரச குல மருமகள்களாக.

1. இளங்கோபிச்சி (கோ.இ.க)
2. வானதி (ந.பு.நா)

ஆகியோர் இடம்பெறுகின்றனர்.

இளங்கோபிச்சி தன் கணவன் மாறுவேடத்தில் பல்லவநாடு சென்றபோது தன் மாமனார் விஜயாலயச் சோழனை அருகிருந்து கவனிக்கிறாள். அரண்மனையில் எவ்வளவோ பணியாட்கள் இருந்தபோதும் தான் அங்கிருந்து கண்விழித்துக் கவனிக்கிறாள். தன் கணவன் பல்லவ

நாட்டில் வேறொரு பெண்ணுடன் தொடர்பு கொண்டுள்ளான் என்பதைக் கேள்விப்பட்டு ஆரம்பத்தில் கண்ணீர் விடும் இளங்கோபிச்சி மருமகளாக ஆற்றவேண்டிய கடமையிலிருந்து மாறவில்லை.

வானதி 'மருமகள்' என்ற உறவுநிலையில் இருந்தபோதும் வயதில் குறைந்தவள் என்பதால் அந்த உறவு விரிவாகப் பேசப்படவில்லை.

### பாட்டி

குந்தவையின் பாட்டி கல்யாணி. குந்தவைக்குச் சோழ அரசர்களின் வரலாற்றைக் கல்யாணிப் பாட்டி கூறுகிறாள். கூட்டுக்குடும்பத்தில் வாழும் கல்யாணிப்பாட்டித் தாயை இழந்த குந்தவையைத் தன் அரவணைப்பில் வைத்துள்ளாள். கூட்டுக்குடும்பங்களில் வளரும் குழந்தைகள் பல கதைகளைப் பாட்டிமார் மூலமே அறிகின்றனர். அதே சூழ்நிலை குந்தவை குடும்பத்திலும் உள்ளது. அறிவுத் திறம் நிறைந்த குந்தவைக்குக் கல்யாணிப்பாட்டி, "இந்த உலகத்து இன்ப துன்பங்களைப் பொறுத்து ஏற்றுக்கொள்ளும் இதயம் வேண்டும். அதிலும் குறிப்பாக அரச குடும்பத்தினர்க்கு அவசியம் வேண்டும்"[51] என்று கூறுகிறாள். இதைப் பேத்திக்குக் கூறுவதால் பேத்தி குந்தவையும் எதையும் பொறுக்கும் தன்மை பெறுகிறாள்.

### அரசகுலம் அல்லாத கூட்டுக்குடும்பத்தில் மகளுறவு

1. சித்திரவல்லி (சி.வ)
2. சந்திரபிரபா (தி.வ)

இவ்விரு பெண்களும் அரசகுலம் அல்லாத கூட்டுக்குடும்பத்தின் மகள்கள் ஆவர்.

சித்திரவல்லி தன் தாயை இழந்து தந்தையால் வளர்க்கப்பெற்றாலும், அவர்கள் குடும்பத்தில் தந்தை வழி உறவினர்களுடன் வாழும் நிலை பெற்றுள்ளாள். சித்திரவல்லி தந்தையின் மீது பாசம் கொண்டுள்ளாள். வீட்டுவேலைகளை அக்கறையோடு செய்கிறாள்.

ஜெயசிம்மன்மீது காதல் கொள்ள ஆரம்பித்ததும் தன் வீட்டில் உள்ள இளஞ்சென்னியை வெறுக்கிறாள்.

சித்திரவல்லிக்கு ஆபத்து நேரும் காலத்தில் இளஞ்சென்னி உதவுவதை அவள் விரும்பவில்லை. தந்தை வழி உறவென்பதால் பொறுத்துக்கொள்கிறாளே தவிர அவன்மீது உண்மையான அன்பில்லை.

சந்திரபிரபா தந்தையுடனும் தாத்தாவுடனும் வாழ்வதாகச் சித்தரிக்கப்பெற்றுள்ளாள். இது தந்தைவழிக் கூட்டுக்குடும்பமாகத் திகழ்கிறது. சந்திரபிரபாவின் இளமைப்பருவம் நாவலில் சுட்டப்பெறுவதால் காதலுக்கு அவள் முக்கியம் தரும் அளவுக்கு உறவுக்கு இடம் தரவில்லை. அவள் தன் காதலனை நினைத்துக் கலங்கியிருக்கின்ற போது அவளது தாத்தா அவளுக்கு ஆறுதல் கூறுகிறார்.

## அரசகுலம் அல்லாத கூட்டுக்குடும்பத்தில் மனைவியுறவு

1. அல்லி (தி.வ)
2. வண்டார்குழலி (உ.ச)

இரண்டு பெண்களும் கூட்டுக் குடும்பத்தில் 'மனைவி' என்ற உறவு நிலையில் உள்ள பெண்களாவர். அல்லி தன் கணவன் கோவிந்தனுடனும், தன் தந்தையுடனும் வாழ்கிறாள். இக்கூட்டுக் குடும்பத்தில் அல்லியின் கணவன் கோவிந்தன் நல்லவனாகப் படைக்கப்பெறவில்லை. மகளுக்கு நன்மை செய்யக் கருதி அவளது தந்தை மகளுடன் தங்கியிருந்திருக்கலாம் எனக்கருத இடமுண்டு. அல்லியின் தந்தையும் அல்லியும் கோவிந்தன் தவறுகளைத் தட்டிக்கேட்கின்றனர்.

வண்டார்குழலி உதயசந்திரனின் மனைவி. உதயசந்திரன் பல்லவநாட்டுப் படைத்தளபதியாக இருப்பதால் எப்போதாவது தான் தன் வீட்டிற்கு வருவான். உதயசந்திரனின் தாய், மனைவி, குழந்தை ஆகியோர் சேர்ந்து வாழ்ந்துவருகின்றனர். ஊர்மக்கள், "உதயசந்திரன் இந்தப் பன்னிரண்டு ஆண்டுகளில் வண்டார்குழலி அம்மையை ஒருமுறைதான்

பார்த்திருக்கிறாராம்"[52] என்று பேசிக்கொள்கின்றனர். இந்நிலையில் குடும்பத்தைப் பொறுப்புள்ள மனைவியாய் இருந்து கவனித்து வருகிறாள்.

தன் கணவன் நீண்ட நாட்களுக்குப் பிறகு தன்னைப் பார்க்கவந்தபோது யாழிசைத்து மகிழ்விக்கிறாள். யாழையும் அவளையும் உதயசந்திரன் கண்டு, கேட்டு மகிழ்கிறான். அந்நேரம் கணவனைப் பிரிந்து நீண்டநாள் வாழும் மனைவியின் தவிப்பு வெளிப்படுகிறது.

உதயசந்திரன் படைத்தலைவனாக இருப்பதால் ஊர்மக்கள் நாடு, மன்னன், படைத்தலைவன் பற்றி என்ன பேசிக்கொள்கிறார்கள் என்பதையறிந்து உதய சந்திரனுக்குக் கூறுகிறாள். திருமணத்திற்குப் பின் கணவனுக்கு எல்லாவகையிலும் உதவுபவள் மனைவி. அவனைப் பிரிந்த காலத்து அவனுக்காகக் காத்திருப்பவள். இல்லத்தில் தம்மனைவி தனக்காகக் காத்திருக்கிறாள் என்ற எண்ணமே ஆண்களை விரைவாக வினைமுடித்து மீள உதவுகிறது. இப்படி ஒருவருக்காக ஒருவர் வாழ்ந்து வருவதால்தான் குடும்பங்கள் கோவில்களாகின்றன. கூட்டுக்குடும்பத்தில் வாழும் வண்டார்குழலி தன்கணவன் மீது கொண்ட அன்பை வெளியில் காட்டாமல் வாழ்கிறாள். அவன் வந்தவுடன் தன் ஆசைகளை எல்லாம் கூறுகிறாள்.

## அரசகுலம் அல்லாத கூட்டுக் குடும்பத்தில் தாயுறவு

உதயசந்திரனின் தாய் கூட்டுக்குடும்பத்தில் இடம்பெறுபவள். தன்மகன் நாட்டுக்காக உழைக்கிறான். அவனால் குடும்பத்தை அருகிருந்து கவனிக்க இயலவில்லை. இந்நிலையில் மருமகள் வண்டார்குழலியையும், பேரன் அவனிச் சந்திரனையும் கவனித்துக் கொள்கிறாள்.

உதயசந்திரனின் தாய் 'ஊர்த்தலைவியாக' உள்ளாள். அதனால் உதயசந்திரன் ஊரையும், வீட்டையும் மறந்து நாட்டிற்குச் சேவை செய்கிறான். மகனின் நாட்டுப்பற்றைப் பார்த்துத் தாய் வியக்கிறாள். அதே சமயத்தில் உதயசந்திரனைப் பற்றி ஊர்மக்கள் கூறுவனவற்றை மகனிடம் எடுத்துக்கூறி நல்வழியில் இருந்து என்றும் மாறக்கூடாது என்று அறிவுரை கூறுகிறாள்.

தான் எப்போதும், நாட்டைத்தவிர வேறு எதையும் நினைப்பதில்லை என்று தாய்க்கு உறுதி கூறிய உதயசந்திரன் மீண்டும் நாட்டைக் காப்பாற்ற படைவீரனுடன் செல்கிறான். கூட்டுக்குடும்பத்தில் தாயின் கவனிப்பில் தன் குடும்பம் உள்ளது என்ற நிம்மதியான சூழல் உதயசந்திரனை நாட்டுக்காக உழைக்க வைக்கிறது.

## முடிவுரை

திருமணம் என்கிற சமுதாய ஒப்பந்தத்தில் குடும்பம் என்கிற நிறுவனம் உருவாகிறது. குடும்பத்தில் கணவன் மனைவியை மையமிட்ட உறவுகள் உருவாக்கப் பெறுகின்றன.

குடும்பம் என்கிற அமைப்பு எல்லாச் சமூகத்திலும் காணப்பெறுகிறது. உடல், உள்ளத் தேவைகளைப் பூர்த்திசெய்து சமுதாயத்தோடு இயங்குவதற்குக் குடும்பம் நல்ல கருவியாக விளங்குகிறது.

குடும்பத்தில் தனிக்குடும்பம், கூட்டுக்குடும்பம் என்ற இருவகை காணப்பெறுகிறது. விவசாய யுகத்தில் கூட்டுக்குடும்பம் செல்வாக்குப் பெற்றது. இயந்திரயுகத்தில் தனிக்குடும்பம் செல்வாக்குப் பெற்றிருக்கிறது. இந்நிலைக்குப் புறச்சமூகச் சூழல் ஒருவகைக் காரணியாகும்.

தந்தைவழிக்குடும்பம், தாய்வழிக்குடும்பம் என்ற பாகுபாட்டில் தந்தைவழிக் குடும்பமே தமிழர் பண்பாட்டில் நடைமுறையில் காணப்பெறுகிறது. இக்குடும்பவகையில் ஆணாதிக்கமும் கற்புக்கோட்பாடும் சிறப்பாக இயங்கும். இச்சமூகக் கூட்டுக் குடும்பத்தில் தந்தைவழிக் கூட்டுக்குடும்பம் முதன்மை பெறும்.

கணவன் மனைவி என்கிற இருவரின் அன்பில் தோன்றி எல்லோருக்காகவும் வாழவேண்டும் என்ற நோக்கில் தமிழரின் இலக்கணம் வரையறுக்கப் பெறுகிறது. வள்ளுவர் குறிப்பிடும் 'குடி', குடும்பம் மற்றும் உறவுகளுடன் தொடர்புடையதாகக் கருதப்பெறும்.

கூட்டுக் குடும்பத்திலும், தனிக்குடும்பத்திலும் குடும்ப மதிப்புகள் (Values) மரபாகப் போற்றப் பெறுகின்றன. தந்தைவழிக் குடும்பத்தில் பெண் அடித்தளமாக அமைய உறவும், உறவு சார்ந்த மதிப்புகளும் வாழ்க்கையில் தொடர்புபெற்று அமையும்.

தமிழ்ப் பண்பாட்டில் சிறப்புப் பெற்றுத் திகழும் குடும்பம், குடும்ப உறவுகள் அவ்வக்கால இலக்கியத்தில் பதிவு பெறுகின்றன. விக்கிரமன் உருவாக்கிய வரலாற்று நாவல்களில் அப்பதிவுகள் இடம்பெற்ற விதம் இவ்வியலில் மதிப்பிடப் பெற்றது.

அம்முறையில் பெண், கன்னிப் பெண்ணாக வாழ்தல் இயலாது. திருமணத்தின் வழி, குடும்ப இயக்கத்திற்குள் மாறவேண்டும் என்பது விக்கிரமனின் சிந்தனையாகும். வரலாற்றுக் காலத்தில் பலதார மணங்கள் இருந்தாலும் ஒருவனுக்கு ஒருத்தி என்ற கோட்பாட்டை விக்கிரமன் முன் வைப்பதாகக் கருதலாம். வரலாற்று நாவல்களில் அரசகுலத்தவர் பாத்திரங்களாகச் சித்தரிக்கப் பெறுவர். இவர்களுடைய திருமணங்கள் அரசியல் சார்பு பெற்று அமையக் காணலாம்.

படையெடுப்பைத் தடுக்க, படையுதவிபெற, பழங்காலப் பகையை மறக்க, நன்றியுணர்வை வெளிப்படுத்த என்கிற நிலையில் திருமணங்கள் நிகழ்ந்ததை விக்கிரமன் தம் நாவல்களில் பதிவு செய்துள்ளார்.

அரசகுலம் சாராத பாத்திரங்களில் தனிக்குடும்பமும், அரசகுலம் சார்ந்த பாத்திரங்களில் கூட்டுக்குடும்பமும் உள்ளது. தனிக்குடும்பத்தில் முழுமைபெற்ற குடும்பம், முழுமையில்லாத குடும்பம் என்ற பாகுபாட்டை இனங்காணலாம். கணவன் மனைவி இடம்பெற்ற குடும்பம் முழுமைக் குடும்பம். இவர்களில் ஒருவர் குறைந்தால் அது முழுமையில்லாக் குடும்பம், முழுமையில்லாக் குடும்பம் இவர் நாவல்களில் மிகுந்திருப்பதைக் காண முடிகிறது.

முழுமைபெற்ற குடும்பத்தில் மகள், மனைவி, தாய் என்ற பெண் உறவுகளும் முழுமையில்லாக் குடும்பத்தில் மகள், மனைவி, தாய் என்ற பெண் உறவுகளும் வகைப்படுத்தப் பெறுகின்றன.

மகளுறவு நிலையில் பெற்றோர்களிடம் நெருக்கம் மிகுந்தும், காதல் வருகிற நிலையில் நெருக்கத்தை மீறியும் மகள் செயல்படுகிறாள்.

முழுக்குடும்ப நிலையில் மனைவி உறவில் உள்ள பெண்கள் கணவன் சொற்கேட்டும் தக்கசமயத்தில் வழிநடத்தியும் குடும்ப மேம்பாட்டிற்காகப் பாடுபடுவதுமாக உள்ள தன்மை ஆய்வின்வழி உணரப்பெற்றது.

பெண் உறவுகளில் தாய்மைக்குச் சிறப்பிடம் உண்டு. விக்கிரமன் முழுமைபெற்ற குடும்பத்தில் தாயுறவை மூன்று பாத்திரங்களில் உணர்த்துகிறார். குழந்தைகளின் நலத்துக்குத் தாய் செயல்தான் அத்திவாரம் என்பதை இத்தாய்ப் பாத்திரங்களின் வழித் தெரிவிக்கிறார்.

தனிக்குடும்ப வகையில் முழுமையில்லாக் குடும்பத்தில் மனைவி உறவு சிறக்க வாய்ப்பில்லை. மகள் உறவுகள் மிகுந்திருக்கின்றன. மகள்களை வளர்க்கும் பொறுப்பு சில குடும்பங்களில் தாயிடமும் சில குடும்பங்களில் தந்தையிடமும் உள்ளது. தந்தை வளர்ப்பில் உள்ள மகள்கள் மிகுதியாய்ப் படைக்கப் பெற்றுள்ளனர்.

முழுமையில்லாக் குடும்பத்தில் தாயுறவு குழந்தைகள் உருவாக்கத்தில் முதன்மையாக்கப் பெறுகிறார்கள். அரசகுடும்பங்களில் அரசர்களின் உருவாக்கம் இவர்கள் வழியாக நடக்கிறது.

அரசகுலம் சார்ந்த கூட்டுக் குடும்பங்கள் மிகுதியாகப் படைக்கப்பெற்ற நிலையை ஆய்வின்வழி உணரமுடிகிறது. இக்குடும்பங்களில் மகள், மனைவி, தாய், பிற உறவுகள் சித்தரிக்கப் பெறுகின்றன.

மூத்த உறவுகளுக்கும், அரசியல் உணர்வுகளுக்கும் மதிப்புக் கொடுப்பவர்களாகக் கூட்டுக்குடும்ப மகள்கள் உள்ளனர்.

மனைவி உறவில் கணவனோடு இணைந்தும், சிலசமயம் பயந்தும், ஆதிக்க அரசியல் நடத்தியும், அரசியலை மிகுதியாகச் சாராமலும், இயங்குகிற நிலையைச் சித்தரித்துள்ளார். கூட்டுக் குடும்பங்களில் உள்ள பெண்களுக்குப், பிற பெண்ணால் பாதிப்பு ஏற்படுகிற நிலையையும் எடுத்துரைக்கிறார்.

அரசகுலம் சார்ந்த தாயுறவு அரசனை நெறிப்படுத்துகிற உறவாகவும் குழந்தைகளின் நலத்தை, நாட்டை நெறிப்படுத்துவதாகவும் அமைகிறது. பிற உறவுகளில் அத்தை, நாத்தனார், பாட்டி போன்ற சில உறவுகள் கதைப்போக்கில் சித்தரிக்கப் பெறுகின்றன.

அரசகுலம் அல்லாத கூட்டுக்குடும்பத்தில் உள்ள தாய், குடும்பத்தில் ஆண்கள் இல்லாத நிலையிலும் குடும்பத்தை நிர்வகிக்கிற பாங்கை அறிய முடிகிறது.

திருமணம், குடும்பம், குடும்ப உறவுகள் இவைகளில் வரலாற்றுக்காலச் சூழலையும் அக்காலத்தில் நிலவிய பண்பாடு மற்றும் சமூகச் சூழலயும் உள்வாங்கிப் பெண் உறவுகளைப் படைத்த விதம் கருதத்தக்கதாகும்.

# சான்றாதாரங்கள்

1. Robert L.Sudharland, "Introductory Socialogy', P,249.
2. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.எ,142.
3. இளங்கோவடிகள், 'சிலப்பதிகாரம்', புகார்க்காண்டம், ப,5253.
4. சித்திரலேகா, லட்சுமி சூடாமணி நாவல்கள், ப,62.
5. சீ.பக்தவச்ல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப,336.
6. The world book of Encyclopaedia, (Vol7), P,22.
7. வாழ்வியல் களஞ்சியம் (தொகுதி எண் இல்லை) ப,599.
8. கே.மாதவன் (தமிழாக்கம்) பெட்ராண்ட் ரஸல் 'திருமணமுறைகள்', ப,29.
9. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.எ,1138.
10. சாலினி இளந்திரையன், மனிதநேய மணிநெறிகள், ப,9.
11. பி.சி.கணேசன், குடும்பம் ஒருகோவில், ப,96.
12. விக்கிரமன், கன்னிக்கோட்டை இளவரசி, ப,22.
13. விக்கிரமன், 'நந்திபுரத்து நாயகி', ப,304.
14. விக்கிரமன், கன்னிக்கோட்டை இளவரசி, ப,84.
15. விக்கிரமன், ஒருவாள் ஒருமகுடம் இருவிழிகள், ப,246.
16. மேலது, ப,300.
17. விக்கிரமன், கடல்மல்லைக் காதலி, ப,34.
18. மேலது, ப,34.
19. விக்கிரமன், மாணிக்க வீணை, ப,116.
20. ஜே.கா.சுரேந்திரன். 21 ஆம் நூற்றாண்டை நோக்கிப் பெண்கள், ப,220.
21. வினோபா, புலனடக்கமும் மக்கட்பேறும், ப,20.
22. விக்கிரமன், ஒருவாள் ஒருமகுடம் இருவிழிகள், ப,274.
23. மேலது, ப,276.
24. சித்ரா, தமிழ்ப் புதினங்களில் தாய், ப,2.
25. விக்கிரமன், 'ஆலவாய் அரசி', ப,85.

26. விக்கிரமன், பாண்டியமகுடம், ப,17.

27. விக்கிரமன், உதயசந்திரன், ப,41.

28. விக்கிரமன், காஞ்சிசுந்தரி, ப,239.

29. விக்கிரமன், சோழஇளவரசன் கனவு, ப,347.

30. விக்கிரமன், மாணிக்க வீணை, ப,157.

31. விக்கிரமன், மாணிக்க வீணை, ப,158.

32. விக்கிரமன், வல்லத்து இளவரசி, ப,71.

33. மேலது, ப,40.

34. மேலது, ப,48.

35. விக்கிரமன், மாறவர்மன் காதலி, ப,218.

36. விக்கிரமன், கங்காபுரிக்காவலன், ப,444.

37. மேலது,

38. விக்கிரமன், தெற்கு வாசல் மோகினி, ப,220.

39. மேலது ப,232.

40. விக்கிரமன், மதுரைமகுடம் ப,99.

41. விக்கிரமன், கொன்றைமலர்க்குமரி, ப,48.

42. மேலது ப,53.

43. மேலது ப,105.

44. விக்கிரமன், இராஜாதித்தன் சபதம், ப,26.

45. விக்கிரமன், சோழமகுடம், ப,95.

46. விக்கிரமன், இராஜாதித்தன் சபதம், ப,27.

47. மேலது ப,25.

48. விக்கிரமன், கங்காபுரிக் காவலன், ப,40.

49. மேலது ப,36.

50. விக்கிரமன், நந்திபுரத்து நாயகி, (பாகம் II), ப,522.

51. விக்கிரமன், நந்திபுரத்து நாயகி, (பாகம் I), ப,20.

52. விக்கிரமன், உதயசந்திரன், ப,224.

# 5. அரசியலில் பெண்கள்

மனிதகுலம் நாடோடி வாழ்க்கை, கால்நடை மேய்ப்பு வாழ்க்கை, விவசாய வாழ்க்கை என்று படிப்படியாக பரிணாமம் பெற்று வளர்ந்து வந்துள்ளது. துவக்கத்தில் தனிமனிதனாக இருந்தாலும் குழுக்களாக வளர்ந்து, காலப்போக்கில் சமூக உணர்வுகளை மனிதன் பெறுகின்றான். குறிப்பாக விவசாயம் சார்ந்த நிலைத்த வாழ்வு வாழும் காலத்தில் அரசு தோற்றம் பெற்றதாகக் கூறுவர்.

அரசுகளுக்கிடையே ஆதிக்கநிலை உருவாகும் போது போரும், சிந்தனைகள் பக்குவமடைகிறபோது அமைதியும் ஏற்படுகிறது. சமூகத்தின் அடிப்படைக் கூறுகளில் ஒன்றான அரசியல் காலந்தோறும் பல வளர்ச்சி நிலைகளைப் பெற்று, இன்றைய நிலையை எய்தியுள்ளது.

வரலாற்று நாவலாசிரியர்கள் வரலாற்றுக் கால அரசியலைத் தம் நாவல்களில் பதிவு செய்துள்ளனர். அவ்வகையில் வரலாற்று நாவல்களைப் புனைந்த விக்கிரமனும் தாம் படைத்த வரலாற்றுக் கால அரசியலை நாவலில் இடம்பெறச் செய்துள்ளார். ஆய்வுத் தலைப்பிற்கேற்ப அரசியலில் பெண்கள் குறித்து ஆய்வதாக இவ்வியல் அமைகிறது.

## அரசியல் விளக்கம்

மனிதன் பல வளர்ச்சி நிலைகளைப் பெற்று இன்றைய சமூகத்தினை உருவாக்கியுள்ளான். சமூகம் திடீரெனத் தோன்றிவிடவில்லை. காலந்தோறும் புதுப்புது மாற்றங்களையும் ஏற்றங்களையும் இறக்கங்களையும் பெற்று வளர்ந்து வருவதைச் சமூகவியல் அறிஞர்கள் சுட்டிக்காட்டியுள்ளனர்.

“அரசு, அறநெறித்தொகுதி, கலை வளர்ச்சி ஓரளவு வளர்ந்த பொருளியல் ஆகிய நான்கும் வளர்ந்த சமூகத்தின் அடிப்படை”[1] என்ற சிந்தனை முற்சுட்டிய கருத்தை அரண்செய்யும். சமூகத்தின் அடிப்படைக் கூறுகளில் அரசுக்கு முதலிடம் கொடுக்கப்பெற்றிருப்பது கருதத்தக்கதாகும்.

ஒரு சமூகம் நிலை பெற்றிருப்பது அதன் இராச்சியத்தையும், அரசாங்கத்தையும் பொறுத்திருப்பதால் "அரசியலைத் தலைசிறந்த அறிவுப்பகுதி"[2] (Master Science) எனக்கருதுவதில் பொருத்தமிருப்பதாகக் கருதலாம்.

மேற்குறித்த கருத்துக்களின் வழி சமூகக் கூறுகளில் அரசியல் பெற்றிருக்கும் இடத்தை அறியலாம்.

துவக்ககாலத்தில் அரசு முடியாட்சியாக இருந்தது. "முற்காலத்தில் அரசு என்பது தனிமனித ஆட்சியாகவோ அல்லது கொடுங்கோலாட்சியாகவோ இருந்தது. அதன்பின் சில மனிதர்கள் சேர்ந்து வாழும் ஆட்சியாக இருந்தது. அதன்பின்தான் மக்களால் ஆளப்படும் ஆட்சி வந்தது"[3] இச்சிந்தனையின் வழி அரசியல் வளர்ந்த விதத்தைச் சற்றுச்சுருக்கமாக அறிய முடிகிறது.

## இலக்கியமும் சமூகமும்

இலக்கியத்திற்கும் சமூகத்திற்கும் நெருங்கியத் தொடர்பு உண்டு. சமுதாயத்தில் வாழும் படைப்பிலக்கிய ஆசிரியனிடமிருந்து இலக்கியம் முகிழ்ப்பதால் சமுதாயச் செய்திகள் பதிவாகும்போதுதான் எதார்த்தம் கிடைக்கிறது. இலக்கியத்தில் அவ்வக்காலச் சமுதாயச் செய்தியினையும் இடம்பெறச் செய்யலாம் அல்லது வரலாற்றுக் காலச் சமூகச் செய்திகளையும் இடம்பெறச் செய்யலாம். பொதுவாக வரலாற்று நாவல்களில் வரலாற்றுக் காலச்சமூக நிலையினை உள்வாங்கித் தம் இலக்கியத்தில் வெளிப்படுத்துவார்கள். அவ்வகையில் சமூகக் கூறுகளில் ஒன்றான அரசியல் பற்றியும் இலக்கியத்தில் இடம்பெறச் செய்வது இயல்பாகிறது.

ஆய்வுக்கு எடுத்துகொண்ட விக்கிரமனின் வரலாற்று நாவல்களில் வரலாற்றுக் கால அரசியல் பின்புலங்கள் இடம்பெற்றுள்ளன. ஆய்வுத் தலைப்பினை ஒட்டி அரசியலில் பெண்கள் பற்றி இனிவரும் பகுதியில் விளக்கமாகக் காணலாம்.

## அரசியலில் பெண்களின் பங்கு

"சமுகத்தில் பெண் சமுகத்திற்குச் சிறப்பான இடமுண்டு எனினும் அரசியல் என்ற நிலையில் பெண்ணின் பங்கு சிறப்பான இடத்தை வகிக்கிறதா? என்பது கேள்விக் குறியாகவே இருக்கிறது. நார்ஸ் நாட்டின் அரசி பொடிஷியா போன்ற சில வரலாற்றுச் சிறப்புமிக்க பெண்கள் அரசியாக இருந்தும் ரோமப்பேரரசில் விடுதலை உணர்வும். முற்போக்குச் சிந்தனை இருந்தும் அரசியலில் ஆணாதிக்கப் போக்கு இருந்திருக்கிறது. செனட்டில் பெண்கள் மறுதலிக்கப்பட்டிருக்கிறார்கள்"[4] இக்கருத்திலிருந்து பெண் அரசியாக இருந்தாலும் ஆணாதிக்க நிலை அவர்களுக்கு இணையான பங்களிப்பை வழங்கவில்லை. இந்தியாவில் வரலாற்றுக் காலத்தில் சிறப்புமிக்க பெண்கள் குறிப்பிட்டுச் சொல்லும்படியாகவே அமைகிறார்கள். அரசியலில் அறிவுரை கூறும் தத்துவவாதிகளாகப் பெண்கள் அக்காலத்தில் திகழ்ந்திருக்கிறார்கள்.

"கார்க்கி, வசக்னவி, மைத்ரேயி போன்றவர்கள் பொது விவாதங்களில் கலந்துகொண்ட தத்துவ ஞானிகளாய் இருந்தனர்"[5] பெண்கள் ஆண்களைப்போன்று வில், அம்பு போன்ற ஆயுதங்களைப் பயன்படுத்தினர். அவர்கள் ஆசிரியர்களாகவும், அதிகாரிகளாகவும் பணிபுரிந்தனர். போர்த்தொடர்பிலும், நிர்வாகத் தொடர்பிலும் அரசியல் நிலையில் பெண்கள் பங்கேற்றமையை உணரமுடிகிறது.

பண்டைத் தமிழகத்தில் பெண்கள் அரசர்களோடும், அரசியலோடும் தொடர்பு பெற்றமையை எடுத்துக் காட்டுகளின் வழி உணரலாம். பெண்பாற் புலவரான ஔவையார் அதியமானுடன் நட்பு வைத்திருந்தார். கண்ணகி அரசனுடன் வாதாடி அரசநீதி இயங்குவதற்குக் களம் அமைத்துக் கொடுக்கிறாள். ராணி மங்கம்மாள் போன்றோர்கள் வட நாட்டில் இருந்த இலட்சுமிபாய் ஜான்சிராணிக்கு இணையாக நாட்டை ஆண்டிருக்கிறார்கள். பொதுவாக நோக்குமிடத்துப் பெண்கள் அரசியலில் தொடர்பு பெற்றிருந்தாலும் அத்தொடர்பைப் பரந்துபட்ட நிலையில் காணமுடியவில்லை.

## *விக்கிரமனின் வரலாற்று நாவல்களில் பெண்கள்*

விக்கிரமன் வரலாற்றில் ஆர்வம் கொண்டவர். வரலாற்று உணர்வு, சமூகம், பிறகூறுகள் போன்றவற்றை முறையாக இலக்கியத்தினின்றும், பிறவற்றினின்றும் சேகரிக்கிறவர். கல்கியின் வழித்தடத்தில் நடைபயில்கின்றவர். அவர் நாவல்களில் இடம்பெறும் பெண்மாந்தர்களில் பலர் அரசியலில் ஈடுபடும் போக்குச் சித்தரிக்கப்பெறுகிறது. அச்சித்தரிப்பின் வழி விக்கிரமன் பெண்ணுலகத்திற்குச் சொல்லும் செய்தி கருத்தில் கொள்ளப்பெறலாம்.

"சமூகத்தில் செய்தி இல்லாத நாவல் எலும்பில்லாத சதைப்பிண்டமாகும்"[6] என்கிற சிந்தனை இங்கு நினைவிற்குரியதாகும்.

அரசகுலம் சார்ந்த பெண்களில் பதினேழுபேர் அரசியலில் ஈடுபடுகின்றனர். அரசகுலம் சாராத பெண்களில் இருபத்தேழு பெண்கள் அரசியலில் ஈடுபடுகின்றனர்.

அரசியலில் ஈடுபடும் அரசகுலப் பெண்களில் எட்டுப்பேர் கதைத்தலைவியராகவும், அரசகுலம் சாராத பெண்களில் பதின்மூன்று பேர் கதைத் தலைவியராகவும் சித்தரிக்கப்பெறுகின்றனர்.

ஐந்து அரச குலப் பெண்கள் தாய்நிலையிலிருந்து அரசியலில் ஈடுபடுகின்றார்கள். அரசியலில் ஈடுபடும் அரசகுலம் சாராத பெண்களில் மிகுதியானவர்கள் திருமணம் ஆகாத இளம்பெண்களாக உள்ளனர்.

அரசகுலம் சார்ந்த பெண்கள் இடம்பெறாமல் நாவல்கள் படைக்கப்பெற்றுள்ளன. ஆனால் அரசகுலம் சாராத பெண்களின் அரசியல் பங்கு அனைத்து நாவல்களிலும் இடம்பெறுகின்றது.

ஆய்விற்கு எடுத்துக்கொள்ளப் பெற்ற விக்கிரமனின் நாவல்களில் அரசியலில் தொடர்புடைய பெண்கள் பற்றி விளக்குவதாகப் பின்வரும் அட்டவணை அமைகிறது

அட்டவணை 5.1

## அரசியலில் பெண்கள்

| எண் | ஆண்டு | நாவல் பெயர் | அரசகுலம் சார்ந்த பெண்கள் | அரசகுலம் சாராத பெண்கள் |
|---|---|---|---|---|
| 1. | 1960 | பரிவாதினி | - | பரிவாதினி |
| 2. | 1960 | உதயசந்திரன் | - | - |
| 3. | 1961 | பாண்டிய மகுடம் | வானவன் மாதேவி | மலர்க்கொடி |
| 4. | 1961 | காஞ்சி சுந்தரி | - | காஞ்சனா, சுந்தரி |
| 5. | 1965 | நந்திபுரத்து நாயகி | குந்தவை, சிறிய பஞ்சவன் மாதேவி செம்பியன் மாதேவி | - |
| 6. | 1965 | வல்லத்து இளவரசி | ரங்கமாதேவி | - |
| 7. | 1974 | சித்ரவல்லி | - | சித்ரவல்லி, குணரேகா, |
| 8. | 1978 | ஆலவாய்அரசி | மங்கம்மாள் | செவிலி செண்பகம், அங்கயற்கண்ணி. |
| 9. | 1978 | மாறவர்மன் காதலி | - | குமுதா |
| 10. | 1979 | இராஜாதித்தன் சபதம் | வீரமாதேவி | காமவல்லி |
| 11. | 1979 | கடல்மல்லைக் காதலி | - | ராஜசுந்தரி, காபாலிகை. |
| 12. | 1979 | தியாகவல்லபன் | அறம் வளர் செல்வி | அல்லிவிழி |
| 13. | 1979 | தெற்கு வாசல் மோகினி | - | தேவகுஞ்சரி |
| 14. | 1980 | யாழ்நங்கை | - | பைரவி, பொன்னருவி |
| 15. | 1981 | சோழ இளவரசன் கனவு | வைரக்கண்ணி | மீன்விழி, மயிலழகு |
| 16. | 1983 | சோழ மகுடம் | செம்பியன் மாதேவி | மலர்மங்கை |
| 17. | 1983 | வஞ்சிநகர் வஞ்சி | - | மயில்விழி |
| 18. | 1988 | கன்னிக் கோட்டை இளவரசி | சித்ராதேவி | எழினி |
| 19. | 1991 | மாணிக்கவீணை | லோகமாதேவி | சைலேந்திரி, சாலினி, காபாலிகை |
| 20. | 1993 | மதுரைமகுடம் | மங்கம்மாள், முத்தம்மாள் | ரூபமதி, தேனாட்சி |
| 21. | 1994 | மங்கலத்தேவன்மகள் | - | சிந்தாமணி |
| 22. | 1994 | ஒரு வாள் ஒரு மகுடம் இருவிழிகள் | புவனமுழுதுடையாள் சந்திரவதனா. | - |
| 23. | 1994 | கங்காபுரிக்காவலன் | வீரம்மாள்(எ)வீரமாதேவி | - |

அரசியலில் ஈடுபட்ட பெண்களைக் கீழ்க்கண்டவாறு பகுத்து விளக்கலாம்.

1. அரசகுலம் சார்ந்த பெண்கள்

2. அரசகுலம் சாராத பெண்கள்

## 1. அரசகுலம் சார்ந்த பெண்கள்

அரசகுலம் சார்ந்த பெண்கள் அரசியலில் ஈடுபடுவதை விக்கிரமன் தம் நாவல்களில் பதிவு செய்துள்ளார். சில அரச குலப்பெண்கள் வரலாற்று மெய்ம்மைகளுடன் தொடர்புடையவர்களாக உள்ளனர். சிலர் கற்பனைப்பாத்திரங்களாகவும் சித்தரிக்கப்பெற்றுள்ளனர்.

அரசகுலம் சார்ந்த பெண்களில் சோழநாட்டுப்பெண்கள் அரசியலில் மிகுதியாக ஈடுபடுவதாக விக்கிரமன் சித்தரிக்கிறார். கல்கி படைத்த பொன்னியின் செல்வனில் தோய்ந்த விக்கிரமன் அதைத் தொடர்ந்து எழுதியதால் சோழநாட்டு அரசியலை விரும்பிப் படைக்கிறார் எனக்கருதலாம். மேலும் ஆசிரியர் சோழநாட்டில் பிறந்தவராகையால் அந்நாட்டு அரசியலைப் படைக்க ஆர்வம் மிகுந்திருக்கலாம்.

பாண்டியநாடும் நாயக்கரும் சமநிலையில் பாத்திரங்களைப் பெற்றுள்ளன. சாளுக்கியநாடும் பல்லவநாடும் வகைக்கொருவராக அரசகுலப் பெண்களைப் பெற்றுள்ளதாக ஆசிரியர் சித்திரிக்கிறார்.

சேர நாட்டைப் பற்றிய செய்திகள் நாவலில் இடம்பெறுகின்றன. ஆனால் அந்நாட்டை முழுமையான அடிப்படையாகக்கொண்டு நாவல்கள் படைக்கப்பெறவில்லை. அதனால் பெண்பாத்திரங்கள் இடம்பெறவில்லை எனக்கருதலாம்.

அரசகுலம் சார்ந்த பெண்கள் தங்களைத் தீவிரமாக அரசியலில் ஈடுபடுத்திக்கொள்பவராகவும் உள்ளனர் (குந்தவை, மங்கம்மாள், சித்ராதேவி). மென்மையாக - மிதமாக ஈடுபடுத்திக்கொள்கிற பெண்களும் உள்ளனர் (செம்பியன் மாதேவி, சிறிய பஞ்சவன் மாதேவி). மங்கம்மாள் இரண்டு நாவல்களில் இடம்பெற்றுள்ளாள் (ஆ.அ,ம.ம). நாட்டின் அடிப்படையில் அரசகுலப் பெண்களைப் பின்வருமாறு அட்டவணையின் வழி விளக்கலாம்.

அட்டவணை 5.2

## அரசியலில் ஈடுபட்ட அரசகுலப் பெண்களின் வகைப்பாடு

| எண் | நாவலின் பெயர் | சேர நாடு | சோழநாடு | பாண்டிய நாடு | பல்லவ நாடு | நாயக்க நாடு | சாளுக்கிய நாடு |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | பாண்டியமகுடம் | - | - | வானவன் மாதேவி | - | - | - |
| 2. | நந்திபுரத்துநாயகி | - | குந்தவை, சிறியபஞ்சவன்மாதேவி செம்பியன் மாதேவி | - | - | - | - |
| 3. | வல்லத்து இளவரசி | - | - | - | - | ரங்கமாதேவி | - |
| 4. | ஆலவாய் அரசி | - | - | - | - | மங்கம்மாள் | - |
| 5. | இராஜாதித்தன் சபதம் | - | வீரமாதேவி | - | - | - | - |
| 6. | தியாக வல்லபன் | - | அறம்வளர்செல்வி | - | - | - | - |
| 7. | சோழஇளவரசன் கனவு | - | - | - | வைரக் கண்ணி | - | - |
| 8. | சோழ மகுடம் | - | செம்பியன் மாதேவி | - | - | - | - |
| 9. | கன்னிக்கோட்டை இளவரசி | - | - | சித்ரா தேவி | - | - | - |
| 10 | மாணிக்க வீணை | - | - | - | - | - | - |
| 11. | மதுரைமகுடம் | - | - | முத்தம்மாள் | - | மங்கம்மாள் | லோகமாதேவி |
| 12. | ஒருவாள் ஒருமகுடம் இருவிழிகள் | - | புவனமுழுதுடையாள், சந்திரவதனா | - | - | - | - |
| 13. | கங்காபுரிக்காவலன் | - | வீரமாதோவி | - | - | - | - |

அரசகுலம் சார்ந்த பெண்களின் அரசியல் ஈடுபாட்டு நிலைகளைக் கீழ்க்கண்ட தலைப்புகளில் விரிவாகக் காணலாம்.

1. சோழநாட்டைச் சார்ந்த அரசகுலப் பெண்கள்
2. பாண்டிய நாட்டைச் சார்ந்த அரசகுலப் பெண்கள்
3. நாயக்கர் நாட்டைச் சார்ந்த அரசகுலப் பெண்கள்
4. பல்லவ நாட்டைச் சார்ந்த அரசகுலப் பெண்கள்
5. சாளுக்கிய நாட்டைச் சார்ந்த அரசகுலப் பெண்கள்

## 1. சோழநாட்டைச் சார்ந்த அரச குலப்பெண்கள்

சோழ நாட்டைச் சார்ந்த அரசகுலப் பெண்களாக ஒன்பது பேர் சித்தரிக்கப்பெற்றுள்ளனர்.

1. குந்தவை
2. சிறிய பஞ்சவன் மாதேவி
3. செம்பியன் மாதேவி
4. சந்திரவதனா
5. புவன முழுதுடையாள்
6. செம்பியன் மாதேவி
7. அறம் வளர் செல்வி
8. வீரமாதேவி
9. வீரம்மாள் என்ற வீரமாதேவி

இப்பெண்கள் அரசியலில் பங்குபெறும் தன்மை கீழே விரிவாக ஆராயப் பெறுகிறது.

### 1. குந்தவை

குந்தவை 'நந்திபுரத்து நாயகி'யில் இடம்பெறும் தலைமைப் பாத்திரம். கதைமுழுவதும் இழையோடிக் கதையை நடத்திச் செல்லும் பெண்.

இவள் சுந்தரசோழனின் மகள் ஆவாள். இவளது சகோதரன் அருண்மொழிவர்மன். இவன் பிற்காலத்தில் 'முதலாம் இராசராசன்' என்று முடிசூட்டிக் கொண்டவன். குந்தவையின் மற்றொரு சகோதரன் ஆதித்த சோழன். அவன் பகைவர்களால் கொல்லப்பட்டான். குந்தவையின் காதலன் வாணகோவரையன் வந்தியத்தேவன் ஆவான் அவன்மீது ஆதித்தனைக்கொன்றான் என்று பழிசுமத்தி, கொலையாளி என்று கருதி அவனைச் சிறையிலடைக்கின்றனர். சுந்தரசோழன் தன்மகன் ஆதித்தன் இறந்தபின் அதே கவலையில் நலிவுற்று இறந்தான். நாடிருந்த குழப்பமான சூழ்நிலையில் சுந்தரசோழனின் சகோதரன், குந்தவையின் சிறிய தந்தை உத்தமசோழன் ஆட்சிப்பொறுப்பை ஏற்கிறான். அரசியலறிவு நிரம்பப்பெற்ற குந்தவை சோழநாட்டின் நன்மைக்காகப் பல முடிவுகளை எடுக்கிறாள். குந்தவையின் அரசியல் ஈடுபாடு குறித்து விரிந்த செய்திகளைப் பின்வரும் உட்தலைப்புகளின்வழிக் காணலாம்.

1. அரசனை உருவாக்கும் ஆற்றல்
2. வியக்கவைக்கும் அரசியல் பண்புகள்
3. கடமையும் காதலும்
4. உற்றாரும் எதிரியும் பாராட்டும் பண்புகள்
5. மனதில் பதிந்த வரலாற்றுப் பாத்திரம்

## 1. அரசனை உருவாக்கும் ஆற்றல்

குந்தவையைப்பற்றிச் சோழநாட்டு மக்கள் அனைவரும் அறிவர். தைரியமும் துணிச்சலும் அரசியல் நுட்பமும் வாய்ந்த குந்தவையின் அறிவுரைப்படி அருண்மொழி வர்மன் கடல்கடந்து கலைகளைக் கற்கவும், அரசியல் அனுபவ அறிவு பெறவும் செல்கிறான். அவனை ஊக்கப்படுத்தி அனுப்பியவள் குந்தவை. நாட்டைவிட்டு எளிதாகக் கடல்கடந்து சென்றுவிட முடியுமா? என்று நினைத்த தன் தம்பியிடம் "தம்பி சோழநாட்டை எப்பொழுதும் இதே நிலையில் வைத்திருக்க உன் எண்ணமா? சீனர்களைப்

பார், யவனர்களைப் பார்! சோணர்களைப் பார். அவர்கள் எப்படியெல்லாம் பார்முழுவதும் சுற்றிவந்து பண்டம் விற்கிறார்கள். திரவியம் தேடிவந்து நாட்டை வளப்படுத்துகிறார்கள். காம்போஜம், சாவகம், சீனம் முதலிய நாடுகளுக்குச் சென்று அவர்கள் திறமையைக் கண்டு நம் திறமையை நாம் வளர்த்துக்கொள்ளவேண்டும்”[7] இவ்வாறு குந்தவை எடுத்துக்கூறி மனம்தளர்ந்த தம் தம்பியை ஊக்கப்படுத்தி அனுப்புகிறாள்.

சோழ நாட்டில் ஆதித்த சோழன் இறந்தபிறகு அரசுரிமைக்காகப் போட்டி வந்துவிடக்கூடாது. அதை மாற்றார் பயன்படுத்திக் கொள்வார்கள். அதனால் இழப்புகளைச் சந்திக்க நேரும் என்று கருதிய குந்தவை அந்த நேரத்தில் அருண்மொழி நாட்டில் இல்லாமல் இருப்பதே நல்லது என்று கருதி அவனைச் சமாதானப்படுத்தி, அறிவுரை கூறி வெளிநாடு அனுப்புகிறாள்.

அருண்மொழிவர்மன் நாடுபோற்றும் அரசனாக வேண்டுமெனில் காலம் கனியும் வரைப் பொறுத்திருந்து உலகில் அறிய வேண்டியதை அறிந்தபிறகே அரசனாக வேண்டும். அதுவே நாட்டுக்கும் நல்லது என்று கருதித் தன் திறத்தால் அவனை ஒரு சிறந்த அரசனாக உருவாக்குகிறாள். அதனால் காளாமுகன் இளவரசரைப்பார்த்து “இளவரசே! கடல்கடந்து சென்று வந்த பிறகு நீங்கள் பதின்மடங்கு துணிவு பெற்று விட்டீர்கள். ஈழத்துப் போரில் காட்டிய பராக்கிரமத்தை விட நூறு மடங்கு புஜபலம் பெற்றுவிட்டீர்கள். இளையபிராட்டி உங்களை வெளிநாடு அனுப்பியது மிகச் சரிதான்”[8] என்கிறார். அநிருத்தப்பிரம்மராயர் என்ற முதலமைச்சரே ‘காளாமுகன்’ என்ற பெயரில் நாட்டின் நன்மைக்காக மறைந்து வாழ்கிறார். முதலமைச்சர் பாராட்டும் அளவுக்குச் சிறப்புப் பெற்ற குந்தவை, இராசராசனை உருவாக்கிய பெருமைக்குரியவள்.

இராசராசன் தன் சகோதரி இல்லாவிட்டால் தான் இவ்வாறு சிறந்தவனாக உருவாகியிருக்கமுடியாது என்று சிந்திக்கிறான். அதனால்தான் “அக்கா உங்களது பேரறிவுக்கு நான் தலைவணங்க வேண்டும் வெளிநாட்டுக்குப் போகச் சொன்னதால் ஏராளமான புத்தறிவு பெற்றேன். பற்பல நாடுகளைக் கண்டேன். பலவிதமான மனிதர்களுடன் பழகி அனுபவம் பெற்றேன்”[9] என்று உணர்ந்து கூறுகிறான். அரசியலறிவு பெற்ற குந்தவை நல்ல அரசன் உருவானால் அவன்வழி நல்லநாடு உருவாகும் என்ற சிந்தனையில் செயல்படுகிறாள்.

## 2. வியக்கவைக்கும் அரசியல் பண்புகள்

பொதுவாகப் பெண்களை மென்மையானவர்கள், சித்ததிடம் இல்லாதவர்கள், சார்ந்து வாழும் தன்மைபடைத்தவர்கள் என்று வாழ்க்கையும் இலக்கியங்களும் காட்டுகின்றன. நந்திபுரத்து நாயகியில் வரும் குந்தவை பகைவர்கள் நாட்டைச்சூழ்ந்துள்ள நிலையிலும் மனவலிமையோடு செயல்படுகிறாள். இது அரசியலுக்கு வேண்டிய உயர்பண்பு. குந்தவை திடமான நம்பிக்கை உடையவள் என்றும், இளையபிராட்டியாரின் நெஞ்சத்தில் தைரியக்கோட்டை இருக்கிறதா, எதற்கும் அஞ்சா அரண் இருக்கிறதா என்றும் காளாமுகராலும் சீனத்துவணிகராலும் பாராட்டப் பெறுகிறாள்.

காஞ்சியில் தன் சகோதரன் ஆதித்தன் இறந்த அரண்மனையில் தங்கியிருந்த குந்தவையை, வீரநாராயணன் (சோழநாட்டு வீரன்) வரவிருக்கும் ஆபத்துக்குப் பயந்து தஞ்சைக்குப் புறப்படுமாறு கூறுகிறான். குந்தவை அதனைப் பொருட்படுத்தாமல் தன் சகோதரன் ஆதித்தனைப் பழிவாங்கிய அரண்மனையில்தான் ஆபத்து எப்போதும் உள்ளதே என்று போர்க்கள வாழ்க்கையை அங்கமாகக்கொண்ட ஒரு வீரனைப்போல் பேசுகிறாள். தன் சகோதரனை வெளிநாட்டுக்கு அனுப்பிய பின் ஏற்பட்ட பல இன்னல்களையும் இன்முகத்தோடு ஏற்றுக்கொண்டாள். அரசபதவி

பெரிதுதான். அது தரும் பாரமும் பெரியது. அதைச் சமாளிக்கத் தனிப்பண்புகள் வேண்டும். அந்த அரசியல் பண்புகள் குந்தவையிடம் காணப்பெறுகின்றன.

சோழநாட்டைக் குந்தவை ஆளவில்லையேயொழிய ஆளும் அரசிக்குள்ள பொறுப்புக்கள், கவலைகள் யாவும் அவள் மனதில் நிறைந்திருந்தன. ஆயினும் "உறுதி எனும் உரம்படைத்த அவள் மனோசக்தியின் முன் எதனாலும் நிற்க முடியவில்லை"[10] என்ற செய்தி அவளது உறுதிநிறைந்த உள்ளத்தைப் புலப்படுத்துகிறது. இராசராசன் மனைவி வானதி கருவுற்றிருக்கிறாள். அப்போது இராசராசன் சிறியபஞ்சவன் மாதேவியை மணந்துகொள்வதாக உறுதியளித்து விடுகிறான். வானதியின் மகனே பின்னால் அரசுரிமைக்கு உரியவனாவான். இந்நிலையில் பழுவேட்டரையர் குந்தவையை நம்புகிறார். "ராஜதந்திரம் கைவரப்பெற்றவள்"[11] என்று புகழப்பெறும் குந்தவையிடம் பழுவேட்டரையர் தன்மகள் பஞ்சவன் மாதேவிக்கு எது நன்மையோ அதைச் செய்யும்படிக் கூறுகிறார். தம்மைச் சுற்றிக் குழப்பங்கள் மிகுந்த சூழ்நிலையில் குந்தவை நிதானத்துடன் செயல்படுகிறாள்.

இராசராசனை முல்லைத்தீவில் கண்டு காதல்கொண்ட இன்பவல்லியும் அரண்மனை வந்து சேர்கிறாள். இன்பவல்லியை இராசராசன் சந்தித்தால் அவன் மனம் மாறிவிடும் என்று கருதி இன்பவல்லியிடம் இராசராசனைச் சந்திக்கக்கூடாது என்று சத்தியம் வாங்குகிறாள். இன்பவல்லி குந்தவையைப் பற்றி நினைக்கும்போது எதையும் செய்யும் ஆற்றல் பெற்றவளாக உள்ளாளே என்று மனதிற்குள் வியக்கிறாள். குந்தவை நினைத்தால் ஒருத்தியை இராணியாக்கவும் முடியும், ஒன்றும் இல்லாமல் ஆக்கவும் முடியும் என்ற இன்பவல்லியின் நினைப்பு குந்தவையின் அரசியலறிவுக்குக் கிடைத்த பாராட்டு. அரசியல்திறன், அரசாட்சியைத்

திறம்பட நடத்தும் பேராற்றல், தன்னம்பிக்கை , துணிச்சல் அனைத்தும் இருந்ததால் சோழநாட்டு அரசகுல ஆண்பிள்ளைகள் அவள் கிழித்த கோட்டைத் தாண்டுவதில்லை.

### 3. கடமையும் காதலும்

அரண்மனைப் பெண்களின் காதல் கரந்த காதலாக இருக்க இயலாது. அனைவரும் அறிந்த ஒன்றாகி விடும். குந்தவை வந்தியத் தேவனைக் காதலிக்கிறாள். இதை அனைவரும் அறிவர். சோழநாட்டுப் படைத்தலைவன் பார்த்திபேந்திரன் எப்படியும் குந்தவையைத் தான் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்று நினைக்கிறான். அதனால் அரண்மனை ஆட்களைக் கையில் வைத்துக் கொண்டு வந்தியத்தேவன் ஆதித்தசோழனைக் கொன்றான் என்று பொய்க்குற்றம் சாட்டிச் சிறையிலடைத்தான். அரசன் இடும் கட்டளைக்கு அரசகுலத்தவர்களும் உட்பட்டவர்களே என்பதை குந்தவை உணர்ந்திருக்கிறாள். ஒருதடவை கூட மன்னராக இருந்த தன் சிறிய தந்தையிடம் குந்தவை தன் காதலனுக்காக வாதாடவில்லை. அரசியல் நெறிதெரிந்து உள்ளுக்குள் குமைந்தபோதும் வெளியில் காட்டிக்கொள்ளாமல் சோழ நாட்டைச் சிறந்த நாடாக உருவாக்குவதிலேயே கண்ணும் கருத்துமாக இருக்கிறாள்.

“என் சகோதரரை எவர் கொன்றார் என்பதை என் வாழ்நாளில் கண்டுபிடித்து விடுவேன். வயது முதிர்ந்த காலத்திலாவது வாணர்குல வீரரைக் (வந்தியத்தேவன்) குற்றமற்றவர் என நிரூபித்து விடுதலை செய்வேன்”[12] என்று மனதிற்குள் சபதம் செய்கிறாள்.

இளமையும் அழகும் மிகுந்த குந்தவை, தன் சொந்த வாழ்க்கையைப் பற்றிய இன்பக்கனவுகளைக் காணவில்லை. அரசகுலத்துப் பிற பெண்களைப் போல மிகுந்த நேரம் கலையிலும் பொழுதுபோக்கிலும் ஈடுபட வில்லை. எந்நேரமும் சோழநாட்டைப்பற்றியே சிந்திக்கிறாள். நாட்டை ஆளும் ஓர் அரசனின் மனநிலையிலேயே செயல்படுகிறாள். “என்சுகமும்

துக்கமும் என்வரையில் இருக்கட்டும். இந்தச்சோழநாடு சண்டை, பூசல் ஏதுமின்றி சுபிட்சமாகத் திகழ்வது ஒன்றே போதும். அதைத்தவிர வேறு எதிலும் எனக்குப் பிரியமில்லை"[13] என்று வானதியிடம் கூறும் குந்தவையின் கூற்று இங்கு கருதத்தக்கது. இதயத்தை இரும்பாக்கிக் கடமையை முன்னிறுத்தி வாழ்கிறாள்.

## 4. உற்றாரும் எதிரியும் பாராட்டும் பண்புகள்

குந்தவையின் பாட்டியார் செம்பியன் மாதேவியார் குந்தவையின் அரசியலில் ஈடுபாட்டையும் திறனையும் அறிந்து பாராட்டுகிறார். காண்பவரின் உள்ளக் கிடக்கையை அறியும் ஆற்றல் கொண்ட குந்தவை பிடிவாதகுணம் கொண்டவளாக இருந்த போதும் குறைகள் கண்டவிடத்து, அதைத்தைரியமாகச் சுட்டிக்காட்டும் தன்மை கொண்டவள், ஆட்சியாளனுக்குரிய தகுதிகளைக் குந்தவை பெற்றிருப்பதைக் கண்ட செம்பியன் மாதேவியார் "பெண்ணே ஆண்டவன் உன்னைத்தான் இந்தநாட்டை ஆளும் அதிபதியாகப் படைத்திருக்க வேண்டும். அல்லது பெண்ணுக்கு ஆளும் உரிமையையாவது அளித்திருக்கவேண்டும்"[14] என்று புகழ்ந்து கூறுகிறார். மேலும் இராசராசன், அவன் மனைவி வானதி, சிறியபஞ்சவன் மாதேவி, இன்பவல்லி, அநிருத்தப் பிரம்மராயர் அனைவரும் அவளது அறிவுத்திறனைப் பாராட்டுகின்றனர்.

குந்தவை எதிரியும் பாராட்டும் அளவுக்குத் திறம் பெற்றவள். இரவிதாசன் என்ற தீயவன் சோழர்களுக்கு எதிராகச் சதித்திட்டம் தீட்டுபவன். சோழநாட்டை வெறுப்பதால் குந்தவையையும் அவளது அரசியலறிவையும் வெறுக்கிறான். அவளது திறமையால் அல்லவோ சோழநாடு வெல்கிறது என்று பொறாமைப் படுகிறான். "பெண்புலியான அவள் அந்த அரண்மனையை அன்றோ ஆட்டிப்படைக்கிறான். அவளது திட்டம் தோல்வியடையப் போகிறது"[15] என்று கருவுகிறான். சோழநாட்டை வாழவைக்கும் குந்தவை வாடித்துடிக்க வேண்டும் என்பதே இரவிதாசன் எண்ணம்.

“சோழகுலக்கொடியெனத் திகழும் குந்தவையே! நீ வாடித்துடிக்க வேண்டும். சோழசாம்ராஜ்யம் அழிவுபட்டு மீன்கொடியின்கீழ் உன் கண்ணெதிரே தஞ்சமடையவேண்டும்”[16] என்று இரவிதாசன் நினைக்கக் காரணம் குந்தவையின் திறமையால் ஏற்பட்ட பொறாமையாகும். நாட்டை ஆளும் ஆண்மக்கள் அடையும் துயரமெல்லாம் குந்தவையையும் வந்தடைகிறது. எதிரிகளுக்கு நஞ்சாகத் திகழ்ந்த குந்தவை ‘கருநாகம்’ என்று பகைவரால் கூறப்பெறுகிறாள். எனவே அவளை அழிக்க எதிரிகள் நேரம், காலம் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் குந்தவையோ தன்வலி, மாற்றான் வலி அறிந்த மாதாக விளங்குகிறாள்.

### மனதில் பதிந்த வரலாற்றுப் பாத்திரம்

குந்தவை தன்தம்பி இராசராசனை உருவாக்கியது போல அவனது மகன் இராசேந்திர சோழனையும் அரசநெறிமுறையிலிருந்து பிறழாது வளர்க்கிறாள். தன் அத்தையின் பராமரிப்பில் வளரும் இராசேந்திரன் வரலாற்றில், குந்தவைக்குச் சிறப்பான இடமுண்டு. வரலாற்றுப் பாத்திரமான குந்தவையின் பங்களிப்பைச் சோழ வரலாற்றிலும், பெண்களின் அரசியல் வரலாற்றிலும் அறியலாம்.

“இளையபிராட்டியை இராணி மங்கம்மாளுடன் ஒப்பிடலாம் என்கின்றனர். குந்தவை ஓர் அரசகுமாரி அரசியல் விவகாரங்களில் முக்கியப் பங்கு வகிப்பவர். இராணி எலிசபெத் இங்கிலாந்து நாட்டின் இளவரசி. இவரும் அரச விவகாரங்களில் மற்றவர்களின் யோசனையினைக் கேட்டாலும் இறுதியில் தம் அறிவுக்கும் மனதுக்கும் தோன்றியவாறே முடிவெடுக்கின்றனர். நாட்டில் போர் ஏதும் மூளாமல் அமைதி நிலவுவதையே இருவரும் விரும்புவர். இராணி எலிசபெத்தைப் போலவே குந்தவையும் மக்களின் நாடித்துடிப்பைத் தன் கண்காணிப்பில் வைத்திருந்தாள். இருவரிடமும் மக்களும், அரசாங்க அதிகாரிகளும் பெருமதிப்பும், மரியாதையும்

கொண்டிருந்தனர். இருவரும் திட்டமிட்டுச் செயலாற்றுபவர்"[17] என்ற கருத்து குந்தவையின் அரசியலீடுபாட்டை வெளிப்படுத்துகிறது. சோழர் வரலாற்றில் இடம்பெற்ற குந்தவை இராசதந்திரத்தோடு அரசியலில் ஈடுபடுகிறாள்.

## 2. *சிறியபஞ்சவன் மாதேவி*

மிகப்பெரிய வீரரும், சோழநாட்டிற்குத் தன் உயிரைத் தியாகம் செய்தவருமான பெரிய பழுவேட்டரையரின் மகள் சிறிய பஞ்சவன் மாதேவியாவாள். இவளது தந்தை இறந்துவிட்டதால், சிறிய தந்தை சிறிய பழுவேட்டரையர் சிறியபஞ்சவன் மாதேவியைக் கொடும்பாளூரிலிருந்து வரவழைத்துச் சோழ அரண்மனையில் தங்கவைக்கிறார். உத்தமசோழன் அரசனாக இருப்பதால் அவனுக்குப்பின் அவன்மகன் மதுரன் ஆட்சிக்குவருவான் என்று கருதி சிறியபழுவேட்டரையர், சிறியபஞ்சவன் மாதேவியை மதுரனுக்குத் திருமணம் முடிக்க எண்ணுகிறார். ஆனால் குந்தவை அருண்மொழிவர்மனை அரசனாக்க ஏற்பாடு செய்தவுடன் சிறிய பஞ்சவன் மாதேவியை அருண்மொழிக்கு மணமுடிக்க விரும்புகிறார். அதற்கு அனுமதியும் அருண்மொழி வர்மனிடம் வாங்கிவிடுகிறார். சிறிய பழுவேட்டரையர் தானும், தன் அண்ணனும் சோழநாட்டிற்குப் பாடுபட்டதற்கு நன்றிக்கடனாக சிறியபஞ்சவன்மாதேவி சோழநாட்டரசியாக வேண்டும் என்று விழைகிறார். அரண்மனையில் தங்கியுள்ள சிறிய பஞ்சவன் மாதேவியின் அரசியல் பங்கைக் கீழ்க்கண்ட உட்தலைப்புகளின் வழிக் காணலாம்.

1. அரண்மனை அரசியல்
2. இரகசியம் அறிதலும் உண்மை நிலைப்பாடும்
3. அரசியல்வாதியைத் திருத்துதல்

## 1. *அரண்மனை அரசியல்*

திருமணத்திற்கு முன்பே சோழ அரண்மனைக்கு வந்துவிட்ட சிறியபஞ்சவன் மாதேவி குந்தவையை மதிக்கிறாள். அருண்மொழிவர்மனின் மனைவி வானதியிடம் அன்பு செலுத்துகிறாள். அவனது முல்லைத்தீவுக்

காதலி இன்பவல்லியுடன் அன்பு செலுத்தித் தோழிபோல் பழகுகிறாள். மதுரனோடு நெருங்கிப் பழகியவளுக்குக் கொஞ்சம் கொஞ்சமாக அரண்மனையின் அரசியல் சூழல் புரிகிறது.

வந்தியத்தேவன் சதிகாரர்களால் குற்றம்சாட்டப்பட்டு சிறையில் வாடுவதைச் சிறிய பஞ்சவன்மாதேவி மதுரன் மூலம் அறிகிறாள்.

"வந்தியத்தேவன் பல ஆண்டுகளாகச் சிறையில் வாடுவதற்கு உன் சிறிய தந்தையும் காரணம். என்தந்தையும் அதனின்று விடுபட்டவரல்லர். வந்தியத்தேவன் மீது மாபெரும் கொலைக்குற்றத்தைச் சாட்டினார்கள். அது நீங்கும் காலம் வந்துவிட்டது"[18] என்று கூறிய மதுரன் மூலம் அரசியல் செய்திகளை அறிந்த பஞ்சவன் மாதேவி, அதுவரை அரசியலைத் தன் செவிகளில் நுழையவிட்டறியாதவள். ஆனால் சிலநாட்களிலேயே அவள் மனம் அரசியலில் நியாயத்தை நிலைநாட்ட முயல்கிறது.

குந்தவையை அடைய நினைத்த பார்த்திபேந்திரன் வந்தியத்தேவனைப் பற்றிப் பழுவேட்டரையரிடம் எடுத்துக்கூறி அவன் உதவியுடன் சிறையிலடைக்கிறான். இதையறிந்த சிறியபஞ்சவன்மாதேவி நாட்டில் சூழ்ச்சிக்காரர்களால் தவறுகள் நடந்துவிடக்கூடாது என்று நினைக்கிறாள். குற்றமற்ற வந்தியத்தேவன் தண்டிக்கப்பட்டுவிடக்கூடாது என்ற உயர்ந்த எண்ணம் உடையவளாக உள்ளாள். தன் தந்தையிடம் இதுபற்றிப் பேச முடிவெடுக்கிறாள். இச்சமயத்தில் "வந்தியத்தேவன் விடுதலைக்கு ஏற்பாடு செய்யாவிடில் பார்த்திபேந்திரன் சோழநாட்டைக் கவர்ந்து விடுவான்"[19] என்ற சிக்கலான சூழல் நாட்டிலிருப்பதை அறிந்து தன்பேச்சுத் திறமையால் சோழநாட்டு நலனுக்கு வித்திடுகிறாள்.

## 2. இரகசியம் அறிதலும் - உண்மைநிலைப்பாடும்

சிறிய பழுவேட்டரையருக்குத் தெரியாத செய்திகளைச் சிறிய பஞ்சவன் மாதேவி எடுத்துக்கூறுகிறாள். பார்த்திபேந்திரன் எண்ணத்திற்குப் பழுவேட்டரையர் உதவியபோதும் தற்போது பார்த்திபேந்திரன் மாறிவிட்டார்.

கொள்ளிடக்கரையில் மக்கள் போர்செய்வதாகப் பேசிக் கொள்கிறார்கள். குதிரைகளைச் சோழநாட்டுக்குக் கிடைக்கவிடாமல் படைத்தலைவர் பார்த்திபேந்திரன் எல்லாவற்றையும் காஞ்சிக்குக் கொண்டு சென்றுவிடுகிறார்.

வந்தியத்தேவன் அடைக்கப்பட்டிருக்கும் பாதாளச் சிறைக்கும் நாணயச்சாலைக்கும் இடையே ஒரு குறுகலான வழிஇருக்கிறது. அதன்வழியாக ஒற்றன் வந்தியத்தேவனைச் சந்திக்கிறான். அவன் வந்தியத்தேவனை வெளியில் வந்துவிடும்படி வற்புறுத்தியும் வந்தியத்தேவன் செல்லவில்லை. ஒற்றன் கள்ளத்தனமாக நாணயங்களைப் பாண்டி நாட்டிற்கு அனுப்பியுள்ளான். இச்செய்திகளைப் பழுவேட்டரையரிடம் தெரிவித்த பஞ்சவன்மாதேவி வந்தியத்தேவனின் குணத்தையும், குற்றமற்ற தன்மையையும் உணர்ந்து அவரை விடுதலை செய்யவேண்டும் என்று கூறுகிறாள்.

### 3. *அரசியல்வாதியைத் திருத்தியவள்*

சிறியபஞ்சவன் மாதேவி சோழநாட்டிற்கு எதிராக நடக்கும் இரகசியங்களை அறிந்து பழுவேட்டரையரிடம் கூறியவுடன், அவர் "குழந்தாய்! போதும், போதும் இதோ இப்போதே நான் கடந்த காலப்பிழைகளுக்குப் பிராயச்சித்தம் செய்யப்போகிறேன். ரகசியவழி இருப்பது உண்மையானால் வந்தியத்தேவன் குற்றமற்றவன் என்பதும் உண்மையே"[20] என்று கூறி உடனடியாகப் பாதாளச் சிறை சென்று, இரகசியவழி அறிந்து, வந்தியத்தேவன் நிலைக்காக உள்ளம் நெகிழ்ந்து அவனை விடுதலை செய்கிறார்.

சோழநாட்டுக்காகப் பழுவேட்டரையர் பாடுபட்டாலும் தனக்கு மிகுதியான நன்மை நடக்கவேண்டும் என்று செயல்படுபவர். அதனால்தான் பார்த்திபேந்திரன் காட்டிய ஆசைவலையில் வீழ்ந்துவிட்டார். அவரைச் சிறியபஞ்சவன்மாதேவி மாற்றுகிறாள். அவள் சிறியவளாக இருந்தபோதும் அரசியல் விவகாரங்களில் மிகுதியாக ஈடுபட்ட அனுபவம் இல்லாதவளாக

இருந்தும் உரியநேரத்தில் விழிப்புடன் செயல்பட்டுச் சோழநாட்டுக்கு நன்மை செய்கிறாள். வந்தியத்தேவன் வெளியில் வராமல் இருந்தால் இரவிதாசன் ஆட்கள் சோழநாட்டைச் சூறையாடியிருப்பார்கள். அதைத்தடுக்க சிறியபஞ்சவன் மாதேவி முயற்சி செய்கிறாள். வெற்றி பெறுகிறாள்.

### 3. *செம்பியன் மாதேவி*

குந்தவையின் தந்தை சுந்தரசோழனின் தந்தை பரகேசரி அரிஞ்சய சோழதேவனுடன் பிறந்தவர் இராசகேசரி கண்டராதித்தர் ஆவார். அவரது மனைவி செம்பியன் மாதேவி. கண்டராதித்தன் செம்பியன் மாதேவி ஆகியோரின் மகன் உத்தமசோழன். அவன் சுந்தரசோழனின் மூத்தவாரிசான ஆதித்தன் இறந்ததால் சோழநாட்டை ஆள்கிறான். மழவரையரின் மகளான செம்பியன் மாதேவி அரண்மனையில் உலாவரும் இராசமாதா. இவள் குந்தவைக்கு உறவு முறையில் பாட்டியானாலும் குந்தவை ‘அம்மா’ என்று அழைக்கிறாள். செம்பியன் மாதேவி தன்னைப் பக்தி நெறியில் ஈடுபடுத்திக் கொண்டுள்ளாள். உத்தமசோழனின் மகன் மதுரனைச் சிவநெறியில் ஈடுபடுத்திச் சிவனேசச்செல்வனாக மாற்றுகிறாள். அரிஞ்சயசோழனின் மனைவி கல்யாணி, செம்பியன் மாதேவியைக் குறிப்பிடும் போது, “கொடுத்துவைத்தவள். சிவநெறியும் பூஜையும் வழிபாடும் என்று பொழுதை நல்வழியில் போக்குகிறாள்”[21] என்கிறாள். அப்படிப் போக்குபவள் நாட்டின் நிலையறிந்து செயல்படுகிறாள். அவளது அரசியலீடுபாட்டைக் கீழ்க்கண்ட உட்தலைப்புகளால் உணரலாம்.

1. திருக்கோயில் பணி
2. அரசியல் ஞானம்

## 1. திருக்கோயில் பணி

செம்பியன் மாதேவியின் கருணை உள்ளமும், சிவநெறியும், அடக்கமும், கம்பீரமும் அனைவருக்கும் பிடித்திருந்தது. நாட்டை ஆளும் மன்னரின் அரசியல் பணிகளில் ஒன்று கோவில்களைப் பராமரிப்பதாகும். பக்தியில் சிறந்து விளங்கிய செம்பியன் மாதேவி கோயில்களைக் கவனித்து அறப்பணியாற்றுகிறாள்.

"கோயில் பூசைக்குரிய நிவந்தங்களை அளிப்பது. முன்பே கற்றளியாக மாற்றப்பட்ட கோவில்களின் நடைமுறையைப் பற்றி விசாரித்து அறிவது. பழைய கோயில்களைப் பழுதுபார்க்கப் பொருள் அளிப்பது என்று அம்மூதாட்டியின் பணிகள் ஓய்வு ஒழிவின்றி வரும்."[22] சில சமயங்களில் கோயில் சொத்தை அதிகாரிகள் சரியாக நிர்வகிக்கவில்லை என்று புகார்களும் வருவதுண்டு. அதைக் கவனிப்பதையும் தனது பொறுப்பாகக்கொண்டார்.

## 2. அரசியல் ஞானம்

செம்பியன் மாதேவியார் சுந்தரசோழருக்குப்பிறகு "ஆட்சி உரிமை நியாயமாக அருண்மொழிக்குத் தானே வரவேண்டும்"[23] என்று கேட்கிறாள். அரசகுல வழக்கத்தையும் முடியாட்சி மரபையும் நன்கு அறிந்தவளாக உள்ளதால்தான் இதைக்கேட்கிறாள். உத்தமசோழர் என்ற மதுராந்தகர் பதவியில் அமர்த்தப்பட்டது அவளுக்கு அதிர்ச்சியாக இருக்கிறது. உத்தமசோழன் தன்மகன்தான் என்றாலும் முறையற்ற அரசபதவி கூடாது என்று நினைக்கிறாள். நேர்மை மிக்க மாதேவியாரிடம் குந்தவை நாட்டின்நிலை கூறி அருண்மொழிவர்மன் தற்போது அரசனாகக்கூடாது என்று கெஞ்சுகிறாள்.

"என் சிறிய தந்தை அறியாப் பருவத்தினராக இருந்ததால்தான் என்தந்தை நாட்டை ஆள நியமிக்கப்பட்டார். தற்போது நாட்டை அவனிடம் தருவதுதான் முறை. அருண்மொழி அனுபவம் பலபெற்றபின் அரசனாகட்டும் அதற்குள் நாட்டிலும் பூசல் அடங்கிவிடும்"[24] என்று குந்தவை

கூறியதைக்கேட்டுச் செம்பியன் மாதேவி நாட்டின் நிலையறிந்து உத்தமசோழன் மன்னராயிருப்பதற்கு ஒத்துக்கொள்கிறாள். அரசியலிலே திறம்பெற்ற இரண்டு பெண்களும் நாட்டில் மன்னரை நியமிக்கும் ஆற்றல் பெற்றிருக்கிறார்கள் என்பதை இதன் வாயிலாக அறியலாம்.

நாட்டில் குழப்பமும் சதியும் போராட்டமும் கலகமும் விளைவிக்கும் சிற்றரசர்களின் சூழ்ச்சியும் தனலாய்க் கொதித்துக் கொண்டிருக்கக் குந்தவை, செம்பியன் மாதேவி ஆகியோரின் முடிவு சோழநாட்டிற்கு நன்மையாய் அமைகிறது. குந்தவையின் அரசியலறிவை அரசியல் நுணுக்கம் தெரிந்த செம்பியன்மாதேவி பாராட்டுகிறாள்.

"பெண்ணே, ஆண்டவன் உன்னைத்தான் இந்த நாட்டை ஆளும் அதிபதியாகப் படைத்திருக்க வேண்டும்"[25] என்று கூறும் செம்பியன் மாதேவி தன்னை அரசியலில் மிகுதியும் ஈடுபடுத்திக் கொள்ளாமல் கோவில் திருப்பணிகளில் மூழ்கிவிடுகிறாள்.

### 4. சந்திரவதனா

'ஒருவாள் ஒருமகுடம் இருவிழிகள்' என்ற வரலாற்று நாவலின் கதைத்தலைவி சந்திரவதனா. இவள் சோழஅரசன் மூன்றாம் இராசராசனின் மகள். இவளது தாய் பட்டத்தரசி புவன முழுதுடையாள். சந்திரவதனா, பழிக்குப்பழி, இரத்தத்துக்கு இரத்தம் என்றிருந்த சுந்தரபாண்டியனின் எண்ணத்தைத் தன் பேச்சால் மாற்றுகிறாள். அரசியலில் அவள் பெறும் பங்கை,

1. சந்திரவதனாவும் காதலும்
2. அரசியல் திறனும் வாதாடும் போக்கும்

என்ற இரு உட்தலைப்புக்களின் வழிக்காணலாம்.

### 1. சந்திரவதனாவும் காதலும்

மதுரையை ஆண்டுவந்த சுந்தர பாண்டியன் சோழநாட்டின் மீது மிகுந்த சினம் கொண்டிருந்தான். ஏனெனில் மூன்றாம் இராசராசனின்

தந்தை குலோத்துங்கன் பாண்டிய நாட்டோடு போரிட்டு, பாண்டியர் தேவியைச் சிறைப்பிடித்து அந்தப்புரத்தில் அடைத்தான். வேலைக்காரியைப்போல் நடத்தினான். சோழநாட்டை மண்ணோடு மண்ணாக்க வேண்டும் என்று நினைக்கிறான். தன் தாய், தாய்ப்பாலோடு வீரத்தையும் சேர்த்து ஊட்டியிருக்கிறாள் என்று ஆவேசம் கொள்கிறான். சோழநாட்டுப் பெண்களைச் சிறைப்பிடித்து அவமானப்படுத்துவதைவிட, சோழர்குலப் பெண்ணை மணந்து அவளை அடிமையாக்கி அந்தப்புர அழகிகளுள் ஒருத்தியாக்க நினைக்கிறான். அவன் நினைக்கும் அந்தப்பெண் சந்திரவதனா.

சுந்தரபாண்டியனின் கருத்தை அறிந்த இராசராசன் தன்மகள் சந்திரவதனாவைத் தெலுங்கு நாட்டரசன் விஜயகண்ட கோபாலனுக்கு மணமுடிக்கக் கருதி அவளது ஓவியத்தை அவனுக்கு அனுப்ப ஏற்பாடு செய்கிறான். ஓவியனாக மாறுவேடத்தில் வருபவன் போசளநாட்டு மன்னன். அவனும் சந்திரவதனாவும் ஒருவரையொருவர் காதலிக்கின்றனர். போசளமன்னன் ஓவியத்தை எடுத்துச் செல்லும் போது பாண்டியநாட்டு ஒற்றன் அதைக் கைப்பற்றுகிறான்.

சந்திரவதனாவின் காதல் நாட்டு அரசியலை மாற்றுகிறது. சுந்தரபாண்டியன் சோழநாட்டைப் பழிவாங்கச் சந்தரவதனாவை மணமுடிக்கநினைக்கிறான். இராசராசன், பாண்டியனை அவமானப்படுத்தத் தன் மகளை வேறொருவனுக்கு மணமுடிக்க விரும்புகிறான். சந்திரவதனாவின் உண்மைக்காதல் போசள மன்னன் மீதிருக்கிறது. அவளது காதல், பின்னால் சோழநாட்டைக் காப்பாற்றுகிறது.

## 2. அரசியல் திறனும் வாதாடும் போக்கும்

சுந்தரபாண்டியன் சோழநாட்டின் மீது படையெடுத்து வருகிறான். சந்திரவதனாவையும் அவளது தோழிகள் இருவரையும் பாண்டிநாட்டு வீரர்கள் கடத்திச்செல்கிறார்கள். இராசராசனும்

புவனமுழுதுடையாளும் நாட்டைவிட்டுத் தப்பித்துக் காட்டிற்குச்சென்று விடுகிறார்கள். இந்நிலையில் சந்திரவதனா சுந்தர பாண்டியனைச் சந்தித்து, "அப்பா, என்னைக் காப்பாற்றுங்கள். என் தாய்தந்தையரைக் காப்பாற்றுங்கள். எங்கள் மூதாதையர் செய்த கொடுமைக்காக எங்கள் நாட்டு மக்களைப் பழிவாங்குவதில் தங்கட்கு என்னபலன்? என் மனத்தை முன்பே ஒருவருக்குக் கொடுத்துவிட்டேன். என் தந்தையின் இடத்திலிருந்து என் விருப்பத்தை நிறைவேற்றுங்கள். சுந்தரபாண்டியன் கொலைகாரன் என்று வருங்காலத்தவர் தூற்றுவதைவிடச் சுந்தரபாண்டியன் பேருள்ளம் படைத்தவர், பகைவருக்கு அருளும் நன்னெஞ்சம் உடையவர் என்று வருங்காலம் வாழ்த்தும் அளவுக்குச் செயல் புரியுங்கள்"[26] என்று அரசியல் அனுபவம் மிக்கவள்போல் மன்னர்க்குச் சிறப்பைத் தருவது எது? என்று எடுத்துரைக்கிறாள்.

சந்திரவதனா கூறியதைக் கேட்காது சுந்தரபாண்டியன் பிடிவாதம் பிடிக்கிறான். சோழன் செய்த கொடுமையைப் பேசும் மக்கள் பாண்டியன் செய்ததையும் பேசட்டும் என்று வெகுண்டெழுகிறான். அப்போது சந்திரவதனா, சோழநாட்டுப் பெண்ணானவள் பாண்டி நாட்டுக்காகப் பேசுகிறாள். மனித உள்ளத்திற்குப் புகழ்ச்சி பிடிக்கும். அதுவும் மன்னர்களுக்கு மிகவும் பிடிக்கும். எனவே சரியான நேரத்தில் "பழைய கதை பழையகதையாகவே போகட்டும். நாம் புத்திலக்கியம் படைப்போம். சங்கத்தமிழ் வளர்த்த பாண்டியர் புதிய சரித்திரம் படைக்கட்டும். உங்களால் முடியும் அப்பா"[27] என்கிறாள். அவளது பேச்சு ஆன்றவிந்தடங்கிய முதிர்ந்த அரசியல் அறிஞரின் பேச்சாக அமைந்துவிடுகிறது. சுந்தரபாண்டியன் மனம்மாறுகிறது. போரைவிடுத்துச் சோழநாட்டை இராசராசனுக்கே கொடுத்துச் செல்கிறான். சந்திரவதனாவால் சோழமகுடமும், வாளும் காப்பாற்றப்பட்டன.

## 5. புவனமுழுதுடையாள்

புவனமுழுதுடையாள் மகத நாட்டரசன் வாணகோவரையரின் மகள். 'ஒருவாள் ஒரு மகுடம் இருவிழிகள்' என்ற நாவலில் வரும் கதைத்தலைவி சந்திர வதனாவின் தாய். மூன்றாம் இராசராசனின் பட்டத்தரசி. இவள் அரசியல் வழிமுறைகள் தெரிந்தவளாகவும், தோல்வியுறும் நிலையிலும் பகைவர்களிடம் அடிபணிந்துவிடக்கூடாது என்பதிலும் தெளிவான எண்ணம் கொண்ட பெண்ணாக உள்ளாள். நாடாளும் பேரரசர்களுக்குக்கூட இல்லாத துணிச்சல் இவளுக்கு இருக்கிறது. சோழநாட்டு அரசியலில் இடம்பெறும் இவளது அரசியல் ஈடுபாட்டைக் கீழ்க்கண்ட உட்தலைப்புக்களின் வழியறியலாம்.

1. அரசனுக்கு அறிவுறுத்தும் அரசியல் ஆலோசகர்
2. இருபற்றுக்கள்

### 1. அரசனுக்கு அறிவுறுத்தும் அரசியல் ஆலோசகர்

சோழநாட்டுப் பட்டத்தரசியர் புவன முழுதுடையாள் என்ற பெயரால் அழைக்கப்பெற்றிருக்கின்றனர். அதை, "புவன முழுதுடையாளொடும் வீற்றிருந்தருளிய கோப்பரகேசரி வன்மரான ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவருக்கு யாண்டு ஒன்பதாவது"[28] என்று கல்வெட்டுக் குறிப்பிடுகிறது. இராசராசனின் மனைவி, பட்டத்தரசி புவனமுழுதுடையாள் என்று அழைக்கப்பெறுகிறாள்.

சுந்தரபாண்டியனின் வஞ்சினமும், வளர்ச்சியும் கண்டு இராசராசன் அஞ்சுகிறான். பாண்டியருடன் போசளர், வாணகோவரையர் போன்ற அரசர்களும் சேர்ந்துள்ளனர். இச்சூழலைப் புரிந்துகொண்ட அரசி புவனமுழுதுடையாள் தாமாக முன்வந்து மகள் சந்திரவதனாவைப் பாண்டிய அரசருக்கு மணமுடித்து வைத்து விட்டால் பகைமை ஒழியும் என்று மன்னருக்கு அறிவுரை கூறுகிறாள். எதையும் அரசியின் ஆலோசனைப்படி செய்யும் இராசராசன், மகள் திருமணம் பற்றித் தன்பட்டத்தரசி சொன்னதைக் கேட்கவில்லை. அதைப் பின்னால் உணர்கிறான்.

தனது ஆலோசனையை மன்னர் கேட்காததை அறிந்து வேறுசில யோசனைகளைக் கூறுகிறாள். "மதுரையைப் பற்றித் தீவிரமாகச் சிந்திக்கவேண்டும். பாண்டியர்களைத் தலையெடுக்க விடாமல் செய்து நம்புதல்வனை மதுரையின் பிரதிநிதியாக அமைக்கவேண்டும் அதுதான் சரி"[29] என்கிறாள். அதே சமயம் தன்மகளை விஜயகண்ட கோபாலனுக்கு மணமுடிக்கக்கூடாது என்று மன்னரைத் தடுக்கிறாள். போர் மூண்டுவிட்ட சூழலில் சிற்றரசர்களைப் படை உதவிக்கு வற்புறுத்துமாறு ஆலோசனை கூறுகிறாள். தன்நாடும் தன்மகளும் பாண்டியன் வசம் செல்வதை விரும்பாத இராசராசன் பாண்டியனிடம் சென்று தம் மகளை ஒப்படைக்குமாறு கேட்க விரும்புகிறான். அதைக்கேட்பதற்கு, புவனமுழுதுடையாள் ஒத்துக்கொள்ளவில்லை.

## 2. இருபற்றுக்கள்

சோழநாட்டு மகுடம் காப்பாற்றப்பட வேண்டும். தன் மகள் வாழ்வு மகிழ்வுடன் திகழவேண்டும் என்ற இரண்டிலும் புவனமுழுதுடையாள் கவனமாக உள்ளாள். பாண்டியனிடம் சோழன் எதற்காகவும் கெஞ்சிநிற்றல் கூடாது என்று நினைக்கும் புவனமுழுதுடையாள் தன் கணவனிடம், "சோழநாட்டின் பரம்பரை மகுடத்தைப் பாண்டியர்கள் அபகரித்துவிடக்கூடாது. சோழநாட்டுக்குப் பெருமை தேடித்தந்த தாங்களா இப்படிப் பேசுகிறீர்கள்"[30] என்று கூறி சோர்ந்துபோன சோழனின் மனதிற்குத் தெம்பூட்டுகிறாள். போசள மன்னனுக்குத் தன்பெண்ணைக் கொடுத்து அவன் துணையுடன் ஏன் பாண்டியனை முறியடிக்கக்கூடாது என்று சிந்திக்கிறாள்.

நாடு, மகள்வாழ்வு இரண்டிலும் பற்றுக்கொண்டு திகழும் புவனமுழுதுடையாளின் அரசியல் ஈடுபாடு சோழநாட்டின் மானங்காப்பதாக உள்ளது. நாட்டின் நிலை, பகைவரின் நிலையைத் தெளிவாக உணர்ந்துள்ளாள்.

## 6. செம்பியன் மாதேவி

சோழமகுடத்தில் வரும் செம்பியன் மாதேவி தன்மகன் மதுரனை நாட்டின் அரசனாக்கிவிட வேண்டும் என்ற ஆவலில் உள்ளாள். சிவபக்தி நிறைந்தவள். அரசன் கண்டராதித்தன் மீது அளவிலா அன்பும், மதிப்பும் கொண்டவள். சோழ நாட்டரசியலில், செம்பியன் மாதேவியின் பங்கை,

1. சோழமகுடம் 'பொன்விலங்கு'.
2. பரந்த நோக்கு.

என்ற இரு தலைப்புக்களின் வழிக் காணலாம்

### 1. சோழமகுடம் 'பொன்விலங்கு'

செம்பியன் மாதேவிக்கு நீண்ட நாட்களாகக் குழந்தைப் பேறு இல்லை. அதனால் கண்டராதித்தனின் சகோதரன் அரிஞ்சயன் தான் அரசனாக வேண்டும் என்று நினைத்தனர். பின்னால் அரசியார் கருவுற்று ஆண்குழந்தை பிறக்கிறது. அதனால் நாட்டில் பலர் குழப்பம் செய்தார்கள். அரிஞ்சயனை அரசனாக்குவதில் அவரது மாமா பழுவேட்டரையர் மும்முரமாக இருந்தார். செம்பியன் மாதேவியாருக்குத் தன்மகன் நாட்டை ஆளவேண்டுமே என்ற கவலை. ஆர்ப்பாட்டமில்லாமல் அமைதியாய்ச் செயல்படுகிறாள். "நாடு குழப்பமாயிருக்கிறது குழந்தை மதுரனைப் பற்றித்தான் கவலை"[31] என்று அடிக்கடி அரசனிடம் எடுத்துரைக்கிறாள். கண்டராதித்தர் அரசாட்சிமேல் அதிக ஆசை கொள்ளவில்லை. எந்த நேரமும் அதை உதறிவிடத் தயார் என்று கூறியபோது அரசியார் அதிர்ச்சி அடைகிறாள். ஆயினும் ஒரு காலத்தில 'சோழமகுடம் பொன்விலங்கு' என்று கருதிய கண்டராதித்தரின் மனநிலையறிந்து, நாட்டில் குழப்பம் நீங்கித் தெளிவு ஏற்படும் வரை அமைதிகாக்கிறாள்.

## 2. பரந்த நோக்கு

அரசியலில் தந்திரங்கள் வெற்றி தருவதுபோல் பொறுமையும், பரந்த நோக்கும் சிறப்புப் பெறும். நாடிருக்கும் சூழலில் மதுரன் சிறியவனாக இருப்பதால் கண்டராதித்தர் அரிஞ்சயனை இளவரசனாக்குகிறார். கைகேயியைப் போன்ற சுயநலம் செம்பியன் மாதேவியிடம் இல்லை. மன்னர் முடிவை எதிர்க்கவில்லை. தன் மகனுக்காகப் பிடிவாதம் செய்யவில்லை. அதுவே நாட்டிற்கு நன்மை என நினைக்கிறாள். இருவரும் சேர்ந்து முடிவெடுத்து அரிஞ்சயனை அரசனாக்குகிறார்கள்.

## 7. அறம் வளர் செல்வி

சோழஅரசன் இராசராசனின் சகோதரி அறம்வளர்செல்வி 'தியாக வல்லபனில்' இடம்பெறுகிறாள். இவள் 'நெறியுடைப் பெம்மாள்' என்ற இயற்பெயரைக் கொண்டவள். இவளைச் சேரநாட்டுப் படைத்தலைவனுக்கு மணமுடித்துக்கொடுத்தனர். வல்லபன் என்ற ஆண்குழந்தை பிறந்தவுடன் இவளது கணவன் இவளைவிட்டு நீங்கினான். சென்ற இடம்தெரியவில்லை. தெய்வபக்தி நிறைந்தவளாக இருந்ததால் வாழ்க்கைச் சோதனைகளை இறைவன் திருவிளையாட்டு என்று எண்ணி மனதைத் திடப்படுத்திக்கொண்டுத் தன்மகனை அறிவுடையவனாகவும், அரசியலில் ஆற்றலுடையவனாகவும் வளர்ப்பதில் கவனம் செலுத்துகிறாள். அவளது அரசியல் ஈடுபாட்டைக் கீழ்க்காணும் உட்தலைப்புக்களின் வழியறியலாம்.

1. சோழநாட்டின் வளர்ப்பு
2. மகனின் அரசியல் வாழ்வு
3. அரசாட்சி அறிவுரை

## 1. சோழநாட்டின் வளர்ப்பு

கங்கைகொண்ட சோழபுரத்துக் கங்கப்பேரேரிக்கு அருகே தோப்பின் நடுவே பர்ணசாலை போன்று அமைந்திருந்த குடிலில் அறம்வளர் செல்வி சிவபூஜை செய்வதிலும் பசுக்களைப் பராமரிப்பதிலும்

தன்வாழ்நாளைக் கழித்துக்கொண்டிருக்கிறாள். இராசராசனின் மனைவி அவனிமுழுதுடையாள் இறந்துவிட அவளுக்குப்பிறந்த இரண்டு ஆண் குழந்தைகளையும் இராசராசனின் தாய் வளர்த்து வருகிறாள்.

இராசராசனுக்கு மனவேதனையால் உடல்நலம் பாதிக்கப்பெறுகிறது. எனவே இளவரசுப்பட்டம் சூட்டவேண்டிய நிலை. அவரது சிறுகுழந்தைகட்கு எப்படிச் சூட்டுவது என்பதில் குழப்பம் ஏற்படுகிறது. இராசராசன் தன் சகோதரியின் மகன் வல்லபனுக்கு இளவரசுப்பட்டம் சூட்டிக் குழந்தைகள் பெரிதாகும்வரை நாட்டை அவன்கையில் ஒப்படைக்க நினைக்கிறான். அதற்காக மலாடுடையாரையும். முதல் அமைச்சர் நம்பிப் பல்லவராயனையும் அறம்வளர் செல்வியிடம் அனுப்புகிறார். தன் குழந்தைகளை வளர்க்க இராசராசன் தன்னை அழைக்கிறான் என்று அறம்வளர் செல்வி நினைக்கிறாள். வந்தவர்களோ, "சோழநாட்டை வளர்க்கத் தங்களை அழைக்கிறார்"[32] என்கிறார்கள். இப்பெண்ணால்தான் இனிச்சோழ நாட்டிற்கு வாழ்வு, நாட்டை வளர்ப்பவள் இனி இவளே என அவர்கள் கூறியதால் முதலில் அந்தப் பொறுப்பை ஏற்கத்தயங்கிய அறம்வளர் செல்வி நன்கு யோசித்து அப்பொறுப்பைக் கையிலெடுக்கிறாள்.

## 2. மகனின் அரசியல் வாழ்வு

தன் கணவனை இழந்ததால் தன் நாட்டையும் அறம்வளர்செல்வி இழந்திருந்தாள். தன் மகனை வளர்த்துக் கீழைச்சாளுக்கிய நாட்டின் அரசனாக்க நினைக்கிறாள். வல்லபனின் முப்பாட்டனார்களான குலோத்துங்கன், விமலாதித்தன் போல வல்லபனைச் சிறந்த மன்னனாக்க வேண்டும் என்று அரும்பாடுபட்டு வளர்க்கிறாள். "மகனே என் இலட்சியம் நீ அரசனாக வேண்டும் என்பதே"[33] என்று கூறி வளர்க்கிறாள். சிறுவயதில் தன்மகனை வேங்கி நாட்டுக்கு அனுப்பி அங்கிருந்து வந்தவர்களிடம் தன்மகனைப் பற்றி அறிந்து கொள்கிறாள்.. அந்நாட்டிலிருந்து வருபவர்களிடம்

தன்மகனுக்கு அங்கு ஆதரவு இருப்பதையும் அவனது வீரத்தையும் அறிந்துகொள்கிறாள். அவனது கவனத்தை எங்கும் சிதறவிடாமல் ஒன்று சேர்த்து நாட்டை ஆளும் சக்தியாக அவனை உருவாக்கிவிடவேண்டும் என்று செயல்படுகிறாள். நாட்டின்மீது ஈடுபாடுகொண்டு மகனை வீரமிக்கவனாக வளர்க்கும் இத்தாயர் "ஸ்பார்ட்டா தாயர்"[34] எனப்படுவர்.

### 3. அரசாட்சி அறிவுரை

வல்லபன், சந்திரபிரபா என்ற சாதாரணக் குடும்பத்துப் பெண்ணைக் காதலிப்பதை அறம்வளர்செல்வி அறிகிறாள். சந்திரபிரபா அறம்வளர்செல்வியிடம் வந்து தனக்கும் வல்லபனுக்கும் உள்ள காதலை எடுத்துக்கூறிச் சேர்த்து வைக்கும்படி வேண்டுகிறாள். அறம்வளர்செல்வி வல்லபனின் காதலிக்குத் தகுந்த வார்த்தைகள் சொல்லி அனுப்பிவிடுகிறாள். வல்லபன் தன் தாயிடம் தன் காதலே பெரிது என்று வாதிடுகிறான். அப்போது அரசனாக வேண்டியவனின் கடமைகளை எடுத்துக் கூறுகிறாள்.

### 8. வீரமாதேவி

பராந்தகச் சோழனின் மகள் வீரமாதேவி. இராட்டிரகூட மன்னன் கோவிந்தனுக்கு அவளை மணமுடித்துக்கொடுக்கின்றனர். அங்கு ஏற்பட்ட அரசியல் குழப்பத்தால் கோவிந்தன் நாடிழந்து மனைவி வீரமாதேவியுடன் சோழநாடு வருகிறான். இச்சூழல் வீரமாதேவியை மிகவும் வருத்துகிறது. அவளது சகோதரன் இராஜாதித்தன், சகோதரியின் இந்நிலை கண்டு துடிக்கிறான்.

வீரமாதேவி அரசியலில் ஈடுபடவில்லை. ஆனால் அவளது வாழ்க்கை அரசியல் பூசலுக்குக் காரணமாகிவிடுகிறது. "தஞ்சையிலுள்ள ஒருபெண்ணுக்காகச் சபதம் ஒன்று செய்து அதை நிறைவேற்றக் கண்ணும் கருத்துமாக இருக்கிறேன்"[35] என்று கூறும் இராஜாதித்தன் தன் சகோதரிக்கு நாட்டை மீட்டுக்கொடுப்பதே தன் வாழ்வின் இலட்சியம் என்று போராடுகிறான். இறுதியில் கங்கநாட்டரசன் பூதுகனால் கொல்லப்படுகிறான்.

உரிமையற்ற வாழ்வு வாழ விரும்பாத வீரமாதேவி தான் பிறந்தகத்தில் மகிழ்ச்சியாயில்லை. அவள் வருகை அரண்மனையில் அனைவரையும் வருத்துகிறது. தன் வீட்டுப்பெண்ணின் துயர்துடைக்க வேண்டுமே என்று துணிந்த இராஜாதித்தனின் அரசியல் வாழ்க்கை சகோதரிக்காகவே அமைகிறது. இறுதிவரை அவனால் போராட இயலவில்லை.

## 9. வீரமாதேவி

வீரமாதேவி, 'கங்காபுரிக் காவலனில்' இடம் பெறுபவள். சோழ அரசன் இராசராச சோழனின் மகன் இராசேந்திரசோழன். இவன் தன் அத்தை குந்தவையால் வளர்க்கப்பெற்றவன். இவன் முக்கோக்கிழான் அடிகள், பஞ்சவன், மாதேவி, அரிந்தவன் மாதேவி முதலிய பெண்களை மணந்து வாழ்ந்து வருகிறான். இவனது படைத்தலைவன் முத்துக்குமரன். முத்துக்குமரனின் தங்கை வீரம்மாள். இவள் சிறந்த நடனமங்கையாகத் திகழ்கிறாள். இவளது அழகிலும் கலையிலும் தன்மனத்தைப் பறிகொடுத்த இராசேந்திர சோழன் அவளைத் திருமணம் செய்து அரசியாக்கினான். அந்த 'வீரம்மாள்' நாவலில் 'வீரமாதேவி' என்று அழைக்கப்பெறுகிறாள். இவள் நாட்டிற்கும் மன்னனுக்கும் ஆற்றும் பணியைக் கீழ்காணும் உட்தலைப்புக்களின் வழி உணரலாம்.

1. புகழ்நிலைக்கப் புலனடக்கம்
2. கலையின் மீது காதல்
3. *தன்னலமின்மை*

### 1. புகழ் நிலைக்கப் புலனடக்கம்

வீரமாதேவியை மன்னன் மணந்தது மற்ற அரசிகளுக்குப் பிடிக்கவில்லை. அவளுக்கு வாரிசு உருவானால் நாட்டில் குழப்பம் வரும் என்று தூற்றினர். அது உண்மை எனப் புரிந்துகொண்ட வீரமாதேவி அரசன் தன்னை அடைய நினைத்து ஆசையோடு வரும்போதெல்லாம்

விலகிவிடுகிறாள். நாட்டின் எதிர்கால நலன்காக்கும் அறச்செல்வியாக வாழ்ந்து வருகிறாள். கோயில்களையும் புதுநகரங்களையும் உருவாக்க வேண்டும். அதனால் காலங்காலமாகத் தன்கணவன் இராசேந்திர சோழனின் புகழ் நிலைக்க வேண்டும் என்பதில் கவனமாக உள்ளாள்.

## 2. கலையின் மீது காதல்

நாட்டை ஆள்வதும் போருக்குச் செல்வதும். தூதுபோவதும் மட்டும் அரசியல் செயல்கள் அல்ல. நாட்டின் செழுமையைப் பிரதிபலிக்கக் கூடிய கலையார்வத்தை வளர்ப்பதும். கலையை வாழவைப்பதும் அரசியல் என்ற நாணயத்தின் மறுபக்கமாகும். "இராசேந்திரன் புதிய நகரத்தை நிர்மாணிக்காமல் தில்லையம்பதியை மேலும் விரிவுபடுத்தியிருக்கலாம். ஆனால் அவனுக்கு எல்லாம் புதுமையாக, மகத்தானதாக இருக்கவேண்டும் என்ற ஆர்வம் உண்டு. அந்த ஆர்வத்தைத் தூண்டியவள் இந்த வீரமாதேவிதான்"[36] என்ற கருவூர்த்தேவரின் கூற்று இங்குக் கருதத்தக்கது.

காட்டு வெளியைக், கண்ணுக்கு எட்டியவரை பொட்டல் வெளியாக இருந்த இடத்தை மாற்றி அங்கே கைலாயத்தையே படைத்துவிடப்போகும் எண்ணத்தை வீரமாதேவி இராசேந்திரனுக்கு ஏற்படுத்துகிறாள். அரசனது பிறமனைவியர் மூவரும் அரசபோகத்திலும். அரசன் காட்டும் அன்பிலும் திளைத்து வாழ்ந்திருக்க, வீரமாதேவி கோவில் சிற்பம் போன்ற கலைப்பணிகளை அரசனைப்போல். அமைச்சனைப்போல் கவனித்துவருகிறாள்.

## 3. தன்னலமின்மை

பேரரசன் இராசேந்திரன் வீரமாதேவியின் செயல்களைத் தன்மகன் ஆதித்த சோழனிடம், "காட்டுப்பகுதியைத் திருத்தி அங்கே கோயில் எழச்செய்தவள் வீரமாதேவி. கங்கைக்கரைக்குத் தானும் வர ஆசைப்படாமல் தன்னந்தனியாளாகச் சிற்ப அற்புதங்கள் நிறைந்த பெரிய கோயிலைக் கட்டி முடித்தவள். கோயில் கட்டும்போதே வீதிகள் அமைந்தன.

வீடுகள் எழுந்தன. மாளிகைகள் கட்டப்பட்டன. அதற்கெல்லாம் காரணம் யார்? கோயிலுக்கும், ஏரிக்கும் என்பெயர் சூட்டப்பட வேண்டும் என்று வற்புறுத்தியவள் வீரமாதேவி”[37] என்று கூறுகிறான்.

வீரமாதேவி தன்னுடைய பெயரைத்தான் புதிதாகக்கட்டப்பெற்ற கோவிலுக்கும், ஏரிக்கும் சூட்டப்போகிறாள் என்று எல்லோரும் நினைத்தனர். தன்னலமில்லா வீரமாதேவி அரசனின் புகழ்நிலைக்க வேண்டும் என்று கருதிக்கோவிலுக்குக் ‘கங்கை கொண்ட சோழபுரம்’ என்றும், ஏரிக்குச் ‘சோழகங்கம்’ என்றும் பெயரிட்டு இராசேந்திரனின் பெயரை வரலாறு மறக்காமல் செய்கிறாள். இராசேந்திரன் கலைவாழ்வு, அரசியல் வாழ்வு இரண்டையும் வீரமாதேவி தன்னலமின்றிச் சிறக்கச் செய்கிறாள்.

## 2. பாண்டிய நாட்டைச் சார்ந்த அரசகுலப் பெண்கள்

1. முத்தம்மாள்,
2. வானவன் மாதேவி,
3. சித்ராதேவி

இம்மூன்று அரசகுலப் பெண்களும் பாண்டி நாட்டரசியலில் ஈடுபடுகின்றனர்.

### 1. முத்தம்மாள்

மதுரை மகுடத்தில் இடம்பெறும் முத்தம்மாள் தென்காசிப் பாண்டியன் நாயக்கருக்குக் கப்பம்கட்டித் தென்காசியை ஆள்பவன். முத்தம்மாள் எழில் வடிவமானவள். “பாண்டியர் பரம்பரைப் பெண்களுக்குரிய செழுமையும், கம்பீரமும் முத்தம்மாளிடம் குடிகொண்டிருந்தன. பாண்டியனின் அடையாளச் சின்னத்தை அவள் விழிகள் புலப்படுத்தின. இராஜகம்பீரத்துடன் அரச குலப்பெண்களுக்கான இயற்கை அழகும் ஒன்றுசேர நின்றாள்”[38] இந்த இளம் பெண் நாயக்கமன்னர் சொக்கநாத நாயக்கரின் மகன் முத்துவீரப்பனைக் காதலித்து, நாயக்கர்கால அரசியலில் இடம்பெறுகிறாள். அவளது அரசியலீடுபாடு கீழ்வரும் உட்தலைப்புக்களின் வழி புலப்படுகிறது.

1. நாட்டுநிலை அறிந்தவள்

2. நாட்டுப்பற்றும், பரம்பரை மகுடமும்

3. அரசியல் ஆதங்கம்

## 1. நாட்டுநிலை அறிந்தவள்

சொக்கநாத நாயக்கரும் மங்கம்மாளும் ஓய்வெடுக்கக் குற்றாலம் வந்திருந்தபோது அழகாத்திரியின் ஆட்கள் சொக்கநாத நாயக்கரைக் கடத்திச் செல்கிறார்கள். இதை அறிந்த முத்தம்மாள் தன் தந்தையின் செயல்பாடு குறித்து எண்ணிப் பார்க்கிறாள். தன் தந்தை இந்நேரத்தில் அரசிக்கு உதவாமல் இருந்தாலும், இழந்த மகுடத்தைப் பெற இதுவே தருணம் என்று தன்மனதிற்குள் திட்டம் வகுக்கிறாள். அவளது காதல் நிறைவேறினால் பாண்டிநாடு மீண்டும் தலையெடுக்கும் என்று நினைக்கிறாள். இளம்பெண் நாட்டுநிலையறிந்து செயல்படுவதால் நாட்டின் நிலைமை மாறுகிறது.

## 2. நாட்டுப்பற்றும் பரம்பரை மகுடமும்

சொக்கநாதரைக் கடத்திச் சென்ற பிறகு மங்கம்மாள் தன்னந்தனியே விடப்பட்டுள்ளாள். அவளிடம் சென்று முத்தம்மாள் பேசும்போது மங்கம்மாள் இவள்தான் பாண்டிய மன்னரின் ஒரே வாரிசு! அதிலும் பெண்வாரிசு!! என்று ஏளனமாக ஏற இறங்கப் பார்க்கிறாள். நேரிடையாகக் கேட்கவும் செய்கிறாள். அப்போது முத்தம்மாள், "நான் பாண்டிய குலத்தின் ஒரே வாரிசு! எனக்குச் சகோதரர்கள் இல்லை. நான் பெண்ணாக இருந்தாலும் என்னை என்தந்தை ஓர் ஆண்மகனுக்குரிய கம்பீரத்துடன் வளர்த்திருக்கிறார். எங்கள் பரம்பரையின் கௌரவத்தை நிலைநாட்ட நான் உறுதி பூண்டிருக்கிறேன். எந்த நாட்டு இளவரசனுக்கு நான் மாலையிட நேர்ந்தாலும் ஒருநாளாவது மதுரை நகரத்து அரண்மனையில் வீற்றிருக்கும் நிலையை ஏற்படுத்துவேன்"[39] என்று

மனதிற்குள் நினைத்துக்கொள்கிறாள். தானும் தன்தந்தையும் தற்போது அடிமையாக இருந்தாலும் அரசியலில் மாறுதல் நேரும் காலம் வரும் என்று தனக்குத்தானே சபதம் செய்கிறாள்.

நாட்டின் மீது உள்ள பற்று, பாண்டிநாட்டுத் திறம் அனைத்தும் வெளிப்படும்படிச் செயல்படுகிறாள். முத்தம்மாள் அரசகுலத்தைச் சார்ந்த அழகுப்பதுமையல்ல. அரசியலறிவு நிரம்பப்பெற்ற அறிவுப்பெட்டகம். முத்தம்மாள் தன் மனக்கருத்தை தேனாட்சி மூலம் மங்கம்மாளிடம் கூறவைக்கிறாள். அப்போது "ஆண்வாரிசின்றிப் பாண்டியவம்சம் இந்தத்தலைமுறையுடன் முடிந்துவிடும் என்று மங்கம்மாள் மனப்பால் குடிக்கிறார். பாண்டிய குலம் என்ற ஒன்று இருந்தது என்ற சுவடே தெரியாமல் மறைத்துவிட நினைக்கிறார். அவரது எண்ணம் நிறைவேறாது என்று கூறு"[40] என்கிறாள்.

### 3. அரசியல் ஆதங்கம்

பாண்டியர்களின் பரம்பரை மகுடம் நாயக்கர்களால் சூட்டப்பட்டுள்ளது. அதிலும் உள்நாட்டுப்பகை. சொக்கநாதரின் மகன் முத்துவீரப்பன் தன்காதலி முத்தம்மாளிடம் நாட்டின் நிலைகூறி வேதனைப்படுகிறான். மதுரை மகுடத்தை அடையத் தன்னுடைய சித்தப்பா அழகாத்திரியும் மற்றும் பகைவர்களும் ஆசைப்படுகிறார்கள். அதனால்தான் இவ்வளவு தொல்லை என்கிறான். மற்றவர்களின் ஆசை தேவையில்லாதது என்று முத்தம்மாள் தன்நாட்டு மகுடம்குறித்து ஆதங்கப்படுகிறாள். "மதுரை மகுடத்தின் மீது பரம்பரையாக உரிமைகொண்டாடுபவர்கள் அப்படி ஆசைப்படலாம். உரிமை அற்றவர்கள் எல்லோரும் ஏன் அப்படி நினைக்கிறார்கள். அவர்கள் தோற்றுத்தான் போவார்கள்"[41] என்கிறாள். முத்தம்மாள் முத்துவீரப்பன் காதலால் பாண்டிய மகுடம் மீண்டும் பாண்டியர்க்கே கிடைத்தது. அவள் பெற்றெடுத்த ஆண்மகவை மங்கம்மாள் வெறுத்தபோதும் முத்தம்மாள் மதுரை மக்களின் அன்பும் ஆதரவும் பெற்றுத் திகழ்கிறாள்.

## 2. வானவன் மாதேவி

வானவன்மாதேவி 'பாண்டிய மகுடம்' என்ற நாவலில் இடம்பெறுகிறாள் இவள் மதுரையை ஆண்ட வரகுண பாண்டியனின் மனைவி ஆவாள். சேரநாட்டில் பிறந்தவள். இவள் இராசசிம்மப் பாண்டியனின் தாய். தன் மகனைப் பாண்டியநட்டைச் சிறப்பாக ஆளும் மன்னனாக உருவாக்க நினைக்கிறாள். வரகுண பாண்டியனுக்கு வேறொரு பெண்ணுடன் ஏற்பட்ட தொடர்பால் மதிவாணன் பிறந்தான். மதிவாணன் தாய் இறந்துபட அவனை, அவனது மாமன் வளர்த்துப் பாண்டிய நாட்டின் அரசனாக்க நினைக்கிறான். இதையறிந்த வானவன்மாதேவி அரசியலில் ஈடுபடுகிறாள்.

மதிவாணன் தன்திறமையால் வாள்வீச்சு, வில்எய்தல் முதலிய போர்க்கலைகளைக் கற்றுப் பாண்டிநாட்டுப்படைக்குத் தலைவனாகிறான். இந்நிலையில் மதிவாணனைக் கண்ட வானவன்மாதேவி இவனால் தன்மகன் இராசசிம்மனுக்குத் துன்பம் வரக்கூடும் என்றுகருதி அவன் யார் என்பதைத் தன்மகனிடம் கூறுகிறாள். இராசசிம்மனோ அதைத் துன்பமாகக் கருதாமல் இன்பமாகக் கருதித் தன் தமையனான மதிவாணனை ஆட்சியில் அமர்த்த எண்ணினான். அவனுக்காகத் தன் பதவியை இழக்கவும் துணிகிறான். வானவன் மாதேவி தாய்நிலையிலிருந்து தன்மகனைக் கண்டிக்கிறாள்.

தாயின் அரசியல் சிந்தனை மகன் இராசசிம்மனுக்குப் பிடிக்கவில்லை என்றபோதும் வானவன் மாதேவி தன் மகனுக்காகப் பல அரசியல் திட்டங்களை உருவாக்குகிறாள். சேரர்களுடன் ஒன்று சேர்வது இராசதந்திரம் என்கிறாள். மதிவாணன் மாமனை இராசசிம்மன் விடுதலை செய்ததற்காக அவனைச் சீறுகிறாள். அதேசமயம் உள்நாட்டுக் குழப்பத்தை வைத்து வேற்றுநாட்டுப் படைகள் பாண்டிநாட்டில் நுழைந்துவிடக்கூடாது என்று நினைக்கிறாள். தாயும் மகனும் மாறுபட்ட எண்ணமுடையவர்களாக உள்ளனர்.

அரசியலறிவும், தாய்மை உணர்வும் அவளை வேதனைப்பட வைக்கிறது. மதிவாணன் அரசியை மதிக்கும் நற்குணம் படைத்தவனாக இருந்தபோதும் வானவன் மாதேவி தன்மகன் இராசசிம்மன் தான் பதவிக்கு வரவேண்டும் என்பதில் கவனமாக உள்ளாள். அதற்காக அரசியல் விதிகளை மாற்றப்பார்க்கிறாள். ஆனால் இராசசிம்மன் உறுதிக்கு முன் அவளது தாயின் அரசியல் தந்திரம் தோற்றுப் போகிறது.

### 3. *சித்ராதேவி*

1268 முதல் 1308 வரை மதுரையை ஆட்சிபுரிந்த பாண்டிய மன்னன் மாறவர்மன் குலசேகரன் ஆவான். இவனது மகன் சுந்தரபாண்டியன். மாறவர்மனின் மற்றொரு மகன் வீரபாண்டியன். இவன் மாறவர்மனின் ஆசைநாயகிக்குப் பிறந்தவன். சுந்தரபாண்டியனின் தாய்மாமன் விக்கிரமபாண்டியன். விக்கிரமபாண்டியனின் மகள் சித்ராதேவி. வீரபாண்டியன் பெரியவனானதும் காட்டில் மறைந்து வாழ்ந்து எப்படியாவது சுந்தரபாண்டியனை வென்று பாண்டியநாட்டுக்கு அரசனாகிவிடவேண்டும் என்று முயற்சிக்கிறான். சுந்தரபாண்டியனும் வீரபாண்டியனும் சித்ராதேவியை அடைவதிலும் போட்டிபோடுகின்றனர். இந்நிலையில் சித்ராதேவி அரசியலில் ஈடுபட்டுக் கன்னிக் கோட்டைக்கு இளவரசியாகிறாள். அவளது அரசியல் பங்கை,

1. அரசியல் சிந்தனை
2. உயர்ந்த இலட்சியம்
3. மாலிக்காபூர் பாராட்டு

என்ற உட்தலைப்புக்களின் வழியறியலாம்.

### 1. *அரசியல் சிந்தனை*

சித்ராதேவிக்கு இரு இளவரசர்களின் போக்கும் பிடிக்கவில்லை. “பெண்பித்துப்பிடித்து அலையும் இளவரசர்களால் நாட்டை ஆளமுடியாது தந்தையே! நாடு வேண்டுமா? பெண் வேண்டுமா? என்று கேட்டால்

பெண்தான் வேண்டும் என்று கூறக்கூடிய இளவரசர்களுக்குப் பெண்ணும் கிடைக்கப் போவதில்லை. நாடும் கிடைக்கப் போவதில்லை”[42] என்று முதிர்ந்த அரசியல் ஞானத்தோடு பேசுகிறாள். அரசகுல ஆண்பிள்ளைகளால் சிந்திக்க இயலாதவற்றைச் சித்ராதேவி சிந்திக்கிறாள். மகுடத்திற்காக மட்டுமல்லாது மங்கைக்காகவும் வாளெடுத்துப் போர்செய்யச் சித்தமாயிருக்கிறார்களே என்று அவர்களுக்காக இரங்குகிறாள். தாயற்ற சித்ராதேவியை அவளது தந்தை சுதந்திரமாக வளர்க்கிறார். பாண்டிய இளவரசர்களுள் ஒருவருக்குத் திருமணம் செய்துவைக்க விரும்பினார். ஆனால் சித்ராதேவி நாட்டை மறந்து பெண்ணை விரும்பித் திரியும் ஆண்மையை வெறுக்கிறாள்.

## 2. *இலட்சியம்*

துவார சமுத்திரம் ஹொய்சளர்களின் தலைநகரம். அங்கு ஹொய்சள மன்னர் வீரவல்லாளர் ஆட்சிபுரிகிறார். கண்ணனூர் கொப்பம் என்ற ஊரில் உள்ள கோட்டையில் ஏற்கனவே ஹொய்சளர்கள் தங்கியிருக்கிறார்கள். அதைப் பாண்டியர்கள் கைப்பற்றிக் கொள்கின்றனர். தற்போது ஹொய்சளர்கள், சித்ராதேவியை ஹொய்சளமன்னன் வீரதேவனுக்கு மணமுடித்தால் மீண்டும் கண்ணனூர்க் கோட்டையைத் தாங்கள் எடுத்துக்கொள்ளலாம் என்று நினைக்கின்றனர்.

இத்தகைய அரசியல் சூழலில் பாண்டிநாட்டில் பலகுழப்பங்கள் வர டில்லியை அரசாண்ட அலாவுதீனின் படைத்தலைவன் மாலிக்காபூர் பாண்டிநாட்டுப் பொருட்களை அபகரிப்பதற்காகப் படையெடுத்து வருகிறான். இதையறிந்த சித்ராதேவி கண்ணனூர் கொப்பம் கோட்டையைப் பழுது பார்த்து அதை வெறும் பெண்கள் தங்குமிடமாக மாற்றுகிறாள். அது அவளுடைய இலட்சியமாக இருந்தது. அதற்காகப் பல விதிமுறைகளையும் வகுக்கிறாள். பலபெண்கள் கணவனை விட்டுவிட்டுக் கோட்டையில் வந்து தங்கிப் பணியாற்றுகிறார்கள். சித்ராதேவியிடம் “உலகுக்கு ஓர் எடுத்துக்காட்டாய் இந்தக் கன்னிக் கோட்டை விளங்கவேண்டும் என்பது

தானே தங்கள் இலட்சியம்"[43] என்று கூறும் எழினி சித்ராதேவியின் நெருங்கிய தோழியாவாள். அவளும் தன் கணவனை விட்டுப்பிரிந்து கோட்டையில் தங்கியுள்ளாள்.

அரச குலத்தைச் சார்ந்த சித்ராதேவி கன்னிக்கோட்டையில் பெரும்புதுமை படைக்கிறாள். அங்கேயுள்ள பெண்களுக்கு வாளும், வேலும் எய்தும் பயிற்சி அளிக்கிறாள். ஹொய்சள மன்னன் ஆட்களும் இளவரசன் வீரதேவனும் கன்னிக்கோட்டையின் இரகசியவழியறிந்து உள்ளே வந்து விடுகின்றனர். பெண்கள் அனைவரும் ஒன்றுகூடி அவனைச் சிறைப்பிடித்து விடுகின்றனர்.

ஹொய்சள மன்னன் யாருக்கும் தலை வணங்காதவன். அவனுக்கு ஓர் பெண் எதிரே தலை குனிந்து நிற்கும் நிலை ஏற்பட்டது. அடுத்து என்ன நேருமோ என்ற கவலை அவனைச் சூழ்ந்தது என்ற கருத்தால் சித்ராதேவியின் வீரமிகுந்த செயலையும் இலட்சியத்தையும் அறியலாம்.

### 3. மாலிக்காபூர் பாராட்டு

மாலிக்காபூர் கன்னிக்கோட்டையை நோக்கிப் படையெடுத்து வந்தபோது பெண்கள் ஆயுதங்களுடன் கன்னிக்கோட்டைச் சுவர்களில் நிறுத்தப் பெறுகின்றனர். இதையறிந்த மாலிக்காபூர் ஓர் நாட்டு அரசனையே கலங்கவைக்கும், தர்பார் நடத்தும் கன்னிக்கோட்டை இளவரசியைச் சந்திக்க நினைக்கிறான். மூன்று அரசர்கள் அடைய நினைக்கும் அந்த இளவரசியின் சிறப்பை அறிந்து, கன்னிக்கோட்டையைத் தான் தாக்காமல் மதுரையில் கவர்ந்த முத்துமாலையைச் சித்ராதேவிக்குப் பரிசாக அளிக்கிறான். உறவேயானாலும் நாட்டின்மீது அக்கறை இல்லாத அரசகுமாரர்களை வெறுக்கும் சித்ராதேவி, தனியாய் அரசியல் நடத்தும் ஆற்றல் பெற்றவளாகத் திகழ்கிறாள்.

## 3. நாயக்க நாட்டு அரசகுலப் பெண்கள்

அரசியலில் ஈடுபடும் நாயக்கர் நாட்டு அரசகுலப் பெண்கள் இருவர் 1. இராணி மங்கம்மாள் இரண்டு நாவல்களில் (மதுரை மகுடம், ஆலவாய் அரசி) இடம்பெறுகிறாள். மதுரை மகுடத்தில் தலைமை ஓங்கு பாத்திரமாகவும் ஆலவாய் அரசியில் கதைத்தலைவியாகவும் வருகிறாள். 2. மற்றொரு பெண் ரங்கமாதேவி (வல்லத்து இளவரசி) இவர்களது அரசியல் ஈடுபாடு தனித்தனியே விரிவாகப் பார்க்கப்பெறுகிறது.

### 1. மங்கம்மாள் (மதுரை மகுடம்)

மங்கம்மாள் அரசியலறிவும், துணிவும் மிகுந்த பெண். நாயக்கர் ஆட்சி மதுரையில் நடந்த காலத்தில் மதுரை மக்களால் விரும்பப்பெற்ற பெண். மங்கம்மாளின் கணவர் சொக்கநாதர் ஆட்சியின் இறுதிக்காலத்தில் நாட்டில் பல குழப்பங்கள் தலைதூக்குகின்றன. அப்போது மங்கம்மாள் தன்னை அதிகமாக அரசியலில் ஈடுபடுத்திக்கொள்கிறாள். அது சிலருக்குப் பிடிக்கவில்லை. ஆனாலும் தன் பிடிவாதத்தால் அரசனையே நடத்திச் செல்லும் அதிகாரமிக்க.. பெண்ணாக உள்ளாள். அவளது அரசியல் ஈடுபாட்டைக் கீழ்க்காணும் உட்தலைப்புகளின் வழி உணரலாம்.

1) அரசியல் நாட்டம்.

2) மன்னரையும் பயப்பட வைக்கும் வேகம்

3) முன்யோசனை

4) சிரச்சேதம்செய்யவும் தயங்காமை

5) அடிமையின் உதவிமறுப்பு.

### 1. அரசியல் நாட்டம்

நாட்டின் குழப்பத்தைக் கண்ட மங்கம்மாள், “ஆட்சிப்பொறுப்பை, உத்தரவிடும் உரிமையைத், திட்டமிடுவதைக், குற்றவிசாரணையை நாமே ஏற்றால் என்ன? “அரசிமங்கம்மாள்’ என்கிறார்கள் ‘ராணி மங்கம்மாள்’ என்கிறார்கள். அந்தபுரத்திற்குள் முகத்திரையிட்டு நாம்

அடைந்து கிடப்பதில்லை. அப்படிப்பட்ட பயமற்ற உணர்வு நம்மிடம் இருக்கும்போது அரசர்பெயரால் நாமே ஆட்சியை மேற்கொண்டால் என்ன"[44] என்று தன்நிலைமையும் திறமையையும் நன்கு புரிந்து கொண்டு அரசியலில் நாட்டமும் அக்கறையும் கொண்டு மங்கம்மாள் தன்னை அரசியலில் ஈடுபடுத்திக்கொள்கிறாள். மன்னரை யாரும் நெருங்கவிடாமல் செய்து ஆட்சிக்குதிரையின் இலகானைத் தான் பிடித்துக்கொள்ளவேண்டும் என்று நினைக்கிறாள்.

## 2. மன்னரையும் பயப்படவைக்கும் வேகம்

மங்கம்மாளின் வேகமான அரசியல் கொள்கை மன்னர் சொக்கநாதரைப் பயப்படவைக்கிறது. மங்கம்மாளின் மனதில் எவ்வளவோ கனவுகள், இலட்சியங்கள் உள்ளன. தான்சொன்னபடி மன்னர்கேட்கவில்லை என்ற ஆத்திரம் உள்ளது. அதனால் சொக்கநாதர், மங்கம்மாள் எதிரியாக மாறிவிடுவாளோ என்று அஞ்சுகிறார். அதை நேரடியாகக் கேட்கிறார். மங்கம்மாளின் நெஞ்சம் அவரது கேள்வியால் வேதனைப்படுகிறது.

"பெரும் ஆபத்திலிருந்து இந்த நாட்டையும் தங்களையும் காப்பாற்றுவதற்காக இரவும் பகலும் எந்தநேரமும் மலர்ந்த முகத்துடன் செயலாற்றிவரும் என்னைப்பார்த்து இந்த வார்த்தை சொன்னது நீங்கள்தானா?"[44] என்று குமுறுகிறாள். மங்கம்மாள் நாட்டுப்பற்று மிக்கவளாக, நல்லாட்சிக்குப் பாடுபடுபவளாக அரசியலில் ஈடுபட்டுத் தன் கணவரையும் நாட்டையும் காப்பாற்றுபவளாக உள்ளாள்.

## 3. முன்யோசனை

சொக்கநாதருக்கு உடல்நிலை சரியில்லாததால் மங்கம்மாளுடன் குற்றாலத்தில் வந்து தங்குகிறார். நாட்டு நிலவரத்தை அறிந்த மங்கம்மாள் "இராயசமும் பிரதானியும் நமக்கு எதிராக ஏதோ சூழ்ச்சி செய்கிறார்கள் என்று என் உள்ளுணர்வு கூறுகிறது"[45] என்று எடுத்துக்கூறுகிறாள். பகை வளர்ந்தபின் களைவது கடினம் என்பதில் கவனம்

செலுத்தி முன்யோசனையாகச் செயல்பட நினைக்கிறாள். ஆனால் சொக்கநாதரோ வீணாக எல்லோர்மீதும் சந்தேகப்பட்டால் ஆட்சி நடத்த முடியாது என்று அவள் எண்ணத்தை மாற்றுகிறாள். பின்னால் அழகாத்திரி சுயநலமாகச் செயல்பட ஆரம்பித்ததும் மங்கம்மாவைப் புரிந்து கொண்டு அவள் முன்யோசனையைக் கேட்கவிலலையே என்று சொக்கநாதர் வருந்துகிறார். “மங்கம்மா நீ நினைத்தபடி அழகாத்திரி பொல்லாதவன் தான். அவன் நமக்கு துரோகம் இழைக்க முன்வந்து விட்டான்”[46] என்று வாய்விட்டுப் புலம்புகிறான்.

### 4. சிரச்சேதம் செய்யவும் தயங்காதவள்

குற்றாலத்தில் மங்கம்மாள் அருகில் இல்லாத நேரம் பார்த்து அழகாத்திரி சொக்கநாதரைத் தூக்கிவந்துவிடுகிறான். மங்கம்மாள் என்ற பெண் பேச்சைக்கேட்டு தன் அண்ணன் அழிந்துவருவதாகக் கடிந்துகொள்கிறான். “வீராதி வீரர் என்ற பெயர் பெற்ற நீங்கள் இப்படி ஒரு பெண்ணுக்கு அடிமையாகி விடலாமோ”[47] என்று மங்கம்மாவின் வளர்ச்சியைக் கண்டு பொறாமை கொண்ட அழகாத்திரி பேசுகிறான். மங்கம்மாவை ‘சூழ்ச்சிக்காரி’ என்றும், இந்தநாட்டுக்கு வந்துள்ள ‘தாடகை’ என்றும் ‘சூர்ப்பணகை’ என்றும் இழிசொற்களையெல்லாம் பயன்படுத்துகிறான். மங்கம்மாவின் திறம்அறிந்த சொக்கநாதர் சங்கிலியில் கட்டுண்ட அந்த நிலையிலும் “உன் அண்ணி மங்கம்மாவின் காதில் இது விழுந்து விட்டால் உன்னைத்தண்டிக்காமல் விடமாட்டாள். இந்தக்கணமே உன்னைச் சிறைப்படுத்தக் கட்டளையிடுவாள். சிரச்சேதம் செய்யுமாறு சொன்னாலும் ஆச்சர்யப்படுவதற்கில்லை”[48] என்கிறார். தீயவர்களுக்கு இடமளிக்கமறுக்கும் மங்கம்மாள் இழிபட்டங்களை வாங்குகிறாள். இது உலகஇயல்பு. இருப்பினும் அரசாளத்தெரிந்த, ஆட்சி பீடத்தில் அமர்ந்தவர்களால் அவள் பாராட்டுப் பெறுவது அவளது அரசாட்சித் திறமையைப் புலப்படுத்துகிறது.

## 5. அடிமையின் உதவி மறுப்பு

குற்றாலத்தில் தங்கியிருந்தபோது தனக்கு ஆபத்து வந்தும் மங்கம்மாளுக்குப் பாண்டியர்களிடம் உதவிகேட்க மனம்வரவில்லை. தனக்குக் கப்பம் கட்டும் தென்காசிப் பாண்டியனின் உதவியைப் பற்றி முத்துவீரப்பன் கூறியபோது அவள் அதைக் கேட்கச் சம்மதிக்கவில்லை. உதவிகேட்டுச் சென்றால் பாண்டியரிடம் அடிமையாகி விடுவோமோ என்று மனம் சஞ்சலப்படுகிறது. கூடவே இருந்து குழிபறிக்கும் கொடுமையாளர்களான அழகாத்திரி, பிரதானி போன்றோரை அடையாளம் கண்ட மங்கம்மாள் தன் மகன் முத்துவீரப்பனைக் கண்டு மகிழ்கிறாள். அவனால் நாயக்கர் ஆட்சி பிழைக்கும் என்று நம்புகிறாள்.

## மங்கம்மாள் (ஆலவாய் அரசி)

சந்திரகிரியின் அரசன் லிங்கம நாயக்கன். அவன் மகள் மங்கம்மாள்• சொக்நாத நாயக்கர் மோகனாங்கியைக் காதலித்து அவளை அடையமுடியாமல் போகவே வாழ்வை வெறுக்கிறார். அச்சமயம் மங்கம்மாவைச் சந்திக்கிறார். அவளது அழகும் திறமையும் அவரைக்கவர அவ்ளை மணமுடிக்கிறார். மங்கம்மாள் மதுரை மக்களை மிகவும் நேசிக்கிறாள். 'ஆலவாய் அரசி' என்ற நாவலில் இடம்பெறும் மங்கம்மாளின் அரசியலீடுபாட்டைக் கீழ்க்காணும் உட்தலைப்புகளின் வழி உணரலாம்.

1. நாடும் மக்களும்
2. அரசியல் ஆலோசனை
3. தகுதி வாய்ந்த அரசி

## 1. நாடும் மக்களும்

நாட்டைப்பற்றி முழுமையாக அறிந்துகொண்ட மங்கம்மாள் நாட்டு நலனிலும், மக்களின் நலனிலும் மிகுந்த அக்கறை எடுத்துக்கொள்கிறாள். "மங்கம்மாளுக்குப் பாண்டிய நாட்டு மக்கள் மீது அபார அன்பு. அவர்களது கள்ளங்கபடமற்றத் தன்மை அவளை மிகவும்

கவர்ந்துவிட்டது. வறுமையும் பிணியும் நாட்டிலே இருக்கக்கூடாது என்று அவள் விரும்பினாள்"[49] என்ற கருத்தின் மூலம் மக்கள் மீது அவள் கொண்ட அக்கறையை உணரலாம். நாட்டு நலனில் ஆர்வம்கொண்ட ஓர் ஆண்மகனைப்போல் செயல்படுகிறாள். சந்திரகிரியிலிருந்து மதுரை வரும்போது வழியிலுள்ள சாலைகளெல்லாம் பழுதடைந்து இருப்பதைப் பார்த்து அகலமான சாலைகளை ஏன் அமைக்கக்கூடாது என்று நினைக்கிறாள். சாலை அமைப்புப் பற்றி ஒரு பெண்ணுக்கு ஆசை தோன்றுவது விசித்திரம்தான். மங்கம்மாள் மனதில் பெருஞ்சாலைகள் அமைப்பதைப் பற்றியும், சாலைகளின் இருமருங்கிலும் நிழல்தரும் மரங்களை வளர்ப்பது பற்றியும் வழிப்போக்கர்கள், யாத்ரீகர்கள் களைப்புத்தீரத் தங்கிச் செல்ல விடுதிகள் கட்டுவது பற்றியும் சிந்திக்கிறாள். இதையறிந்த சொக்கநாதர் வியக்கிறார். மதுரைப் பகுதி மக்கள் இன்றும் "மங்கம்மாள் சாலை, மரம் நிறைந்த சோலை" என்று கூறி மங்கம்மாள் சிறப்பை நினைவு கூர்கின்றனர். "மங்கம்மாளின் காலகட்டத்தையும், அவள் தென்தமிழகத்தில் கோலோச்சியிருந்ததையும் வரலாறு குறிப்பிடும்."[50]

## 2. *அரசியல் ஆலோசனை*

நாட்டில் கருவூலம் காலியானபோது பாளையக்காரரிடமிருந்து வரிவசூல் சரியாக நடக்காததைச் சுட்டிக்காட்டுகிறாள். அரசியலில் தன்னை ஈடுபடுத்தி ஆலோசனை கூறும் மங்கம்மாளைக் கேட்டே சொக்கநாதர் செயல்படுகிறார் என்பதை "தான் செய்யும் எந்தச் செயலையும் செய்வதற்கு முன்பு ஒருமுறை மங்கம்மாவின் ஆலோசனையைக் கேட்டுவிடவேண்டும் என்னும் வழக்கத்தையும் ஏற்படுத்திக்கொண்டார்"[51] என்னும் கூற்றால் உணரலாம். அரசியல் ஆலோசனை கூறுவதில் சொக்கநாதருக்கு அமைச்சர் போல் மங்கம்மாள் செயல்படுகிறாள்.

## 3. தகுதி வாய்ந்த அரசி

சொக்கநாதரின் சகோதரன் அழகிரியும், பிரதானி வெங்கண்ணாவும் சொக்கநாதரைக் கொல்லத் திட்டமிடுகின்றனர். ஏற்கனவே அவர் காதல் கொண்டிருந்த மோகனா உயிருடன் உள்ளது போல் வெங்கண்ணா மகள் கமலியைக் காட்டி மேல்மாடத்திலிருந்து சொக்கநாதரைக் கீழே தள்ளிக் கொல்ல திட்டமிடுகின்றனர். இதையறிந்த மங்கம்மாவும், அங்கயற்கண்ணியும் அங்கு சென்று சொக்கநாதரைக் காப்பாற்றுகின்றனர். இதை அறிந்த அவையோர் அழகாத்திரியையும் வெங்கண்ணாவையும் சிரச்சேதம் செய்யவேண்டுமெனக் கூறுகின்றனர். அப்போது சொக்கநாதர் "மங்கம்மாள் இந்த நாட்டை ஆளுவதற்கு முழுதும் தகுதிவாய்ந்த அரசி என்று கூறி அவளிடம் கேட்டே முடிவு செய்யவேண்டும்"[52] என்கிறார். மங்கம்மாளின் அறிவுரைப்படி, ஆலோசனைப்படி மன்னர் இயங்கியிருக்கிறார் என்பதை நாவல் முழுவதும் காணமுடிகிறது. பெண்கள் "கணவனின் அறிவுப்பூர்வமான சிந்தனையில் பங்கேற்கும் அறிவுத்திறமிக்க நெருக்கமானவர்களாக (Mental Intimacy)"[53] உள்ளனர் என்ற கருத்து இவண் கருதத்தக்கது. சிரச்சேதம் செய்யவும் தயங்காதவள் மங்கம்மாள் என்று கருதப்பட்ட நிலையிலிருந்து நாட்டை ஆளும் பொறுப்பையும் அதிகாரத்தையும் பெறும்போது மங்கம்மாள் மாறுபடுகிறாள். பொறுமை காக்கிறாள். அழகாத்திரியையும் வெங்கண்ணாவையும் வெறுமனே தண்டித்தலில் பயன்இல்லை என்று கருதி,

> "இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
> நன்னயம் செய்து விடல்"[54]

என்ற குறளுக்கேற்ப இருவருக்கும் அவரது ஆசைப்படி நாட்டை ஆளும் பொறுப்பை அளிக்கிறாள். அழகாத்திரிக்குத் தஞ்சையை ஆளும் பொறுப்பையும், வெங்கண்ணா தொடர்ந்து பிரதானிப் பொறுப்பை வகிக்கும்படியும் கூறுகிறாள். அழகாத்திரி அரசப்பதவிக்காக அலைகிறான்.

அதை அவனிடம் கொடுக்கின்ற போது தொந்தரவு செய்யமாட்டான். வெங்கண்ணாவும் இனித்தவறு செய்யத் தயங்குவார் என்று கருதுகிறாள். மிகப்பெரிய அரசியல் தந்திரங்கள் வாய்க்கப்பெற்ற மங்கம்மாள், நாயக்கர் ஆட்சியில் ஓர் அழியாச்சித்திரமாய் அமைந்து விடுகிறாள். இன்னும் மதுரையில் உள்ள மங்கம்மாள் சத்திரம் மங்கம்மாள் ஆட்சியைப் பறைசாற்றி நிற்கும் நினைவுச் சின்னமாய் உள்ளது.

### 3. ரங்கமாதேவி

தஞ்சையை ஆண்ட இரகுநாத நாயக்கரின் மகள் ரங்கமாதேவி. மகன் விஜயராகவ நாயக்கர். இரகுநாத நாயக்கருக்குப் பிறகு விஜயராகவ நாயக்கர் ஆட்சியில் அமர்கிறார். இவர் இராசதந்திரமும் திறமையும் அற்றவராகத் திகழ்ந்ததால் நாயக்கர் ஆட்சி சிறக்கவில்லை. இரகுநாத நாயக்கருக்குத் தன்மகள் ரங்கமாதேவியின் மீது அதிக அன்பு. அவளது திறமையைக்கண்டு ஆட்சிப் பொறுப்பை அவளிடமே ஒப்படைக்க நினைக்கிறாள். அதனால் தக்க அரசகுமாரனைப் பார்த்து அவளுக்கு மணமுடிக்க நினைக்கிறார். உரிய வரன் அமையாததால் திருமணம் நடைபெறாது தள்ளிக்கொண்டே போகிறது. தந்தையின் இறப்புக்குப்பின் திருமணம் தடைபடுகிறது. விஜயரகுநாத நாயக்கரின் மனைவிக்கும் ரங்காதேவிக்கும் ஒத்துக்கொள்ளாததால் ரங்கமாதேவி வல்லத்தில் அமைந்த கோட்டையில் தங்குகிறாள். நாயக்கர் அரசியலில் ஈடுபடுகிறாள். அவளது அரசியலீடுபாட்டை,

1) தன்னாட்சிக்குத் தயார்செய்தல்
2) அரசனை மிஞ்சும் அறிவு
3) அரசியல் ஆலோசனை

ஆகிய தலைப்புகளின் வழியறியலாம்.

### 1. தன்னாட்சிக்குத் தயார் செய்தல்

ரங்காமாதேவி வல்லத்துக்கோட்டையின் இளவரசியாகத் தன் சகோதரனின் மகள் மோகனாவை உருவாக்க நினைத்துச் செயல்படுகிறாள். தஞ்சையை விட வல்லத்துக்கோட்டையின் வலிமை ஓங்கும்படிச் செய்து, அனைவரையும் தன் அதிகாரத்தின்படி நடக்கச் செய்யலாம் என்று கனவு காண்கிறாள். அதற்கு ஏதுவாக மோகனாங்கியின் மனதை மாற்றுகிறாள். தனியாட்சிக்குத் தயார்ப்படுத்துகிறாள். "வருங்காலத் தஞ்சை அரசி நீதான். இந்த நாட்டின் அரசாட்சி உன்கையில் தான். நீ அசட்டையாக இருந்துவிட்டால் தஞ்சையைச் சூறையாடக் கழுகுகள் பல காத்திருக்கின்றன"[55] என்கிறாள். இதையறியாத மோகனாங்கி பெண்ணுக்கு ஏது அரசுரிமை என்று குழம்புகிறாள். ஆனால் பெண்ணுக்கு அரசுரிமை இல்லையென்று எந்தச்சட்டமும் சொல்லவில்லை. அப்படியே சொல்லியிருந்தாலும் புதுமாதிரியைத் தொடங்கலாம் என்று மோகனாங்கிக்குத் தைரியம் கொடுக்கிறாள். துணிச்சலும், அரசியல் அனுபவமும், சட்ட நுணுக்கமும் தெரிந்த ஆற்றல் மிக்க பெண்ணாய் வரும் ரங்கமாதேவி 'வல்லத்து இளவரசி' என்ற வரலாற்று நாவலின் கதைத்தலைவியாகப் படைக்கப்படாத போதும் கதை முழுவதும் நிறைந்து கதையை நடத்திச்செல்லும் முழுமையான பாத்திரமாகப் படைக்கப்பெற்றுள்ளாள்.

### 2. அரசனை மிஞ்சும் அறிவு

மோகனாங்கியைத் தனக்கு வேண்டிய கந்ததேவன் மகன் சந்தனதேவனுக்கு மணமுடிக்க எண்ணுகிறாள். அவனுடன் நல்ல தொடர்பு வைத்திருந்தால் பிறரால் தஞ்சைக்கு ஆபத்து வராது என்று நினைக்கிறாள். தஞ்சைக்கு ஆபத்து வந்தால் வல்லமும் பாதிக்கப்படும். தஞ்சைக்குத் தொல்லை வந்தாலும் தன்னால்தான் வரவேண்டும் என்ற அகங்காரம் அவளிடம் இருக்கிறது.

ரங்கமாதேவியின் திட்டத்தை மோகனாங்கி முழுமையாகப் புரிந்துகொள்ளவில்லை. விஜயராகவன் புரிந்துகொண்டு தன்மகளை எச்சரிக்கிறான். ஆனால் ரங்கமாதேவியின் திட்டத்தை எதிர்க்கும் ஆற்றல் அவனிடம் இல்லை. பயங்கரமான எண்ணத்தைக் கொண்டுள்ள ரங்கமாதேவி தன் திட்டத்திற்குத் தன்மகளைக் கருவியாக்கிவிடுவாளோ என்று அஞ்சுகிறான். தன் சகோதரனை மிஞ்சிய ஆற்றலும் அறிவும் பெற்ற ரங்கமாதேவிக்கு கந்ததேவனால் பல உதவிகள் தேவைப்பட்டபோதும் அவனையும் அலட்சியமாகவே நடத்துகிறாள்.

### 3. அரசருக்கு ஆலோசனை

தனக்கும் தன் சகோதரனுக்கும் மனவேறுபாடு இருந்தாலும் கடைசியில் அதாவது மதுரை மன்னன் படையெடுப்பை அறிந்தவுடன் அதையெல்லாம் மறந்துவிடுகிறாள். மோகனாங்கி மீது கொண்ட காதலால் சொக்கநாதர் தஞ்சைமீது படையெடுக்கிறார். அப்போது விஜயராகவ நாயக்கருக்கு அறிவுரை கூறி மோகனாங்கியை வல்லத்தில் தங்கவைக்கச் சொல்கிறார். மோகனாங்கியின் காரணமாகத் தஞ்சைக்குப் பேராபத்து வருவதை எடுத்துக் கூறுகிறாள். மதுரைப்படைகளை எதிர்க்கும் ஆற்றல் கந்ததேவனுக்கு உண்டு என்று எடுத்துக் கூறுகிறாள். தஞ்சைக்கு உட்பகையும், வெளிப்பகையும் உள்ளது என்று கூறி மோகனாங்கி மனதை மாற்றப்பார்க்கிறாள். விஜயராகவ நாயக்கரும் மோகனாங்கியும் ஒத்துக்கொள்ளாததால் மதுரைப் படையெடுப்பைத் தடுக்க முடியவில்லை. விஜயராகவ நாயக்கர் வெடிமருந்து வைத்துத் தன்னையும் தன்குடும்பத்தையும் அழிக்கிறார்.

### 5. பல்லவநாட்டு அரசகுலப் பெண்கள்

பல்லவநாட்டு அரசகுலப்பெண்கள் மிகுதியாக அரசியலில் ஈடுபட்ட செய்திகள் இல்லை. விக்கிரமனின் சில நாவல்கள் பல்லவர் வரலாற்றையும் கலையையும் மையமாகவைத்து அமைந்திருந்தாலும்

‘வைரக்கண்ணி’ என்ற ஒரு அரசகுலப் பெண்மட்டும் அரசியலில் தொடர்புடையவளாக உள்ளாள்.

### வைரக்கண்ணி

'சோழ இளவரசன் கனவு' என்ற நாவலில் வரும் வைரக்கண்ணி பல்லவநாட்டின் ஒரு பகுதியின் இளவரசியாவாள். இவளது மாமன் இவளைப் பல்லவ மன்னன் அபராஜிதவர்மனுக்கு மணமுடித்துக் கொடுக்க நினைக்கிறான். வைரக்கண்ணி, மாறுவேடத்தில் பல்லவநாடு வந்த சோழன் ஆதித்தனைக் காதலிக்கிறாள். ஆதித்தன் வைரக்கண்ணியைத் தன்நாட்டிற்குக் கவர்ந்துசெல்கிறான். இதை அவமானம் என்று கருதியதால் பல்லவமன்னனுக்கும் சோழமன்னனுக்கும் இடையே போர் நடக்கிறது.

அபராஜிதன், “ஆதித்தா மிகவும் சாமர்த்தியமாக வைரக்கண்ணியை அபகரித்து வந்ததாக எண்ணவேண்டாம். அவளை உன் அந்தப்புரத்தில் அமர்த்திப் பட்டத்தரசியாக்கலாம் என்று கனவு காணவேண்டாம். முதலில் தஞ்சைக்கோட்டை பிடிபட்டவுடன் அந்த வேல்விழியாளைச் சிறைப்படுத்திக் காஞ்சி கொண்டு செல்வதுதான்”[56] என்று கூறுவதிலிருந்து அரசகுலப்பெண்கள் போர் முதலிய அரசியல் செயல்களுக்குக் காரணமாக இருப்பதை அறியலாம்.

இரண்டு அரசர்களுக்கிடையில் சிக்குண்ட வைரக்கண்ணி பெரும்போருக்குக் காரணமாகிறாள். போரில் அபராஜிதன் ஆதித்தனால் கொல்லப்படுகிறான். தானே அரசியலில் புகுந்து வைரக்கண்ணி செயலாற்றவில்லை என்றாலும் அரசியல் சூழலின் மாற்றத்திற்கு அவள் காரணமாகிறாள்.

## 6. சாளுக்கிய நாட்டு அரசகுலப்பெண்கள்

சாளுக்கிய நாட்டு அரசகுலப்பெண்களின் அரசியலீடுபாடு பற்றி ஆசிரியரால் மிகுதியாகச் சொல்லப்படவில்லை. சாளுக்கிய நாட்டரசி லோகமாதேவியின் அரசியல் பங்கு குறைந்த அளவிலே உள்ளது.

## லோகமாதேவி

'மாணிக்க வீணையில்' இடம்பெறும் லோகமாதேவி சாளுக்கிய நாட்டு மன்னனின் பட்டத்தரசியாவாள். கோயில் பணிகளில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டவள். அவளுடைய மாமனார் புலிகேசின் கோயில் கட்டுவதற்காக ஏராளமாகக் கற்களையும் பாறைகளையும் கொண்டுவந்து சேர்த்திருப்பதை அவள் கண்டாள். அந்தக்கோயில் பணியைத் தான் பூர்த்திசெய்ய வேண்டும் என்று கருதினாள். அதன்படியே அவளது முயற்சியால் கோயில் கட்டப்படுகிறது.

பல்லவ நாட்டிலிருந்து மாணிக்க வீணையைக் கவர்ந்துவரச் சாளுக்கியர்கள் சூழ்ச்சிசெய்கிறார்கள். அதில் பல பெண்கள் ஈடுபடுத்தப் பெறுகிறார்கள். இதை லோகமாதேவி அறிகிறாள். பல்லவநாட்டுக் காபாலிகப்பெண் தேவசோமை பல அரசியல் சிக்கல்களில் ஈடுபடுகிறாள். அவள் எல்லா நாட்டிற்கும் சென்றுவரும் ஆற்றல் படைத்தவள். அவளுடைய காதலன் ருத்ரதேவன் சாளுக்கியநாட்டிலே சிறைப்படுத்தப்படுகிறான். அவனை விடுவிப்பதற்காகத் தேவசோமை லோகநாயகியைச் சந்தித்து, "தேவி சாளுக்கிய நாட்டுப் பேரரசிக்கு உண்டான சகலவித சாமர்த்திய ராஜிய தந்திரங்களும் அறிவாற்றலும் தங்களிடம் நிறைந்து இருக்கின்றன. நினைத்ததை நிறைவேற்றிக்கொள்ளும் சக்தியும் தங்களிடமிருக்கிறது"[57] என்று கூறுகிறாள். தன் காதலனை மீட்டுத்தரும்படி அரசியிடம் கெஞ்சுகிறாள். தேவசோமையின் துணிவைக் கண்ட லோகமாதேவி அவளுக்கு உதவுகிறாள். அரசியலில் மிகுதியாக இடம்பெறாத லோகமாதேவி அவ்வப்போது அரசியலில் ஈடுபட்டு, நாட்டின் அரசியாக இருந்து பணியை முறையாகச் செய்கிறாள்.

## 2. அரசகுலம் சாராத பெண்கள்

அரசகுலம் சாராத பெண்கள் அரசியலில் ஈடுபடுவதை விக்கிரமன் தம் வரலாற்று நாவல்களில் மிகுதியாகப் படைத்துள்ளார். இவ்வகைப் பெண்கள் பெரும்பாலும் இளம்பெண்களாகவும், பதியிலார் மற்றும் கலைப்பெண்களாகவும் இருப்பதை ஆய்வின் வழி உணரமுடிகிறது.

அரசகுலம் சாராத பெண்களில் சிலர் அரசியலில் தானாக விரும்பி ஈடுபடுகின்றனர். சிலர் அதை விரும்பாவிட்டால் கூட பிறரால் அதாவது அரசர், படைத்தலைவர், மாற்றரசர் முதலியோரால் அரசியலில் ஈடுபடுத்தப் பெறுகின்றனர். அவ்வாறு ஈடுபடுத்தப்பெற்ற பெண்கள் தம்மை நீதிக்காக, நேர்மைக்காகத் தியாகம் செய்கின்றனர். பலநிலைகளில் அரசியலில் ஈடுபட்ட அரசகுலம் சாராத பெண்கள் பற்றிய செய்திகளை நாட்டின் அடிப்படையில் அட்டவணையிட்டுப் பகுத்துப் பார்க்கலாம்.

அட்டவணை 5.3 **அரச குலம் சாராத பெண்களின் அரசியலீடுபாடு.**

| எண் | நாவலின் பெயர் | சேர நாடு | சோழநாடு | பாண்டிய நாடு | நாயக்க நாடு | பல்லவ நாடு | சாளுக்கிய நாடு | காம்போஜம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | வஞ்சிநகர் வஞ்சி | மயில்விழி | - | - | - | - | - | - |
| 2. | சோழஇளவரசன் கனவு | - | - | - | - | மீன்விழி, மயிலழகு | - | - |
| 3. | யாழ்நங்கை | - | பைரவி, பொன்னருவி | - | - | - | - | - |
| 4. | மாணிக்கவீணை | - | - | - | - | - | தேசோமை சாலினி | சைலேந்திரி |
| 5. | மங்கலத்தேவன் மகள் | - | சிந்தாமணி | - | - | - | - | - |
| 6. | தெற்குவாசல் மோகினி | - | தேவகுஞ்சரி | - | - | - | - | - |
| 7. | சித்திரவல்லி | - | சித்திரவல்லி | - | - | - | குணரேகா | - |
| 8. | காஞ்சிசுந்தரி | - | - | - | - | காஞ்சனா, சுந்தரி | - | - |
| 9. | கடல்மல்லைக் காதலி | - | - | - | - | இராஜசுந்தரி | - | - |
| 10 | பரிவாதினி | - | - | - | - | - | பரிவாதினி | - |
| 11. | இராஜாதித்தன் சபதன் | - | காமவல்லி | - | - | - | - | - |
| 12. | மதுரை மகுடம் | - | - | ரூபமதி, தேனாட்சி | - | - | - | - |
| 13. | ஆலவாய் அரசி | - | - | - | செவிலி செண்பகம் அங்கயற்கண்ணி | - | - | - |
| 14. | கன்னிக்கோட்டை இளவரசி | - | - | எழினி | - | - | - | - |
| 15. | சோழமகுடம் | - | மலர்மங்கை | - | - | - | - | - |
| 16. | மாறவர்மன் காதலி | - | - | குமுதா | - | - | - | - |
| 17. | பாண்டிய மகுடம் | - | - | மலர்க்கொடி | - | - | - | - |
| 18. | தியாகவல்லபன் | - | அல்லிவிழி | - | - | - | - | - |
| 19. | கொன்றை மலர்க்குமரி | - | மலர்மங்கை | - | - | - | - | - |

அரசகுலம் சாராத பெண்களைப் பற்றிய செய்திகளைக் கீழ்க்கண்ட தலைப்புக்களில் வகைப்படுத்தலாம்.

1. சேரநாட்டு அரசகுலம் சாராத பெண்கள் (1)
2. சோழநாட்டு அரசகுலம் சாராத பெண்கள் (9)
3. பாண்டியநாட்டு அரசகுலம் சாராத பெண்கள் (5)
4. நாயக்க நாட்டு அரசகுலம் சாராத பெண்கள் (2)
5. பல்லவநாட்டு அரசகுலம் சாராத பெண்கள் (5)
6. சாளுக்கிய நாட்டு அரசகுலம் சாராத பெண்கள் (4)
7. காம்போஜ நாட்டு அரசகுலம் சாராத பெண்கள் (1)

### 1. சேரநாட்டைச் சார்ந்த அரசகுலம் சாராத பெண்

*மயில்விழி*

சேரநாட்டைச் சார்ந்த அரசகுலம் சாராத பெண் மயில்விழி அரசியலில் ஈடுபட்டுள்ளதை இத்தலைப்பின்வழி அறியலாம். ஆசிரியர் சேரநாடு தொடர்பான வரலாற்று நாவல்களை மிகுதியாகப் படைக்கவில்லை. அதனால் பாத்திரங்களின் எண்ணிக்கை குறைகிறது. சோழநாட்டு நடனப் பெண்ணான மயில்விழி சோழநாட்டில் கோவிலில் நிருத்தியாஞ்சலி ஆடும் மரகதவல்லியின் வளர்ப்பு மகள் ஆவாள். சேரநாட்டவனைக் காதலித்துத் திருமணம் செய்துகொண்டதால் சேரநாட்டில் வாழ்கிறாள். பல பெண்களுக்கு நடனம் பயிற்றுவித்துச் சேரநாட்டில் வாழும் மயில்விழியைப் பற்றிச் சோழமன்னர் பின்னால்தான் அறிகிறார். சோழநாட்டில் மரகதவல்லி நோய்வாய்ப்பட்டவுடன் கோவில் நிருத்தியாஞ்சலி பாதிக்கப்பெறுகிறது. மரகதவல்லியின் வளர்ப்புமகள் எங்கே என்று அரசர் விசாரிக்கிறார். உண்மை தெரிகிறது. சேரநாட்டில் உள்ள மயில்விழியைக் கவர்ந்துவரச் சோழன், சேரனோடு போர் தொடுக்கிறார். அக்காலகட்டத்தில் மயில்விழியின் அரசியல் ஈடுபாடு எவ்வாறிருந்தது என்பதைக் கீழ்க்காணும் தலைப்புக்களின் வழி அறியலாம்.

1. பெண்ணால் போர்

2. அரசனுக்கு அறிவுரை

3. ஒற்றும் தூதும்

4. முடிவறியுமுன்...

## 1. பெண்ணால் போர்

மூன்றாம் குலோத்துங்கன் சேரநாட்டோடு போர் செய்ததைக்,

"கொங்கான சோழசேரள மண்டலத்து

வெங்கால நாட்டுக் கருவூரான முடிவழங்கு

சோழபுரத்துத் திருவானிலை மாதேவர்"[58]

என்ற செய்தி உறுதியாக்குகிறது. இந்தப் போரிற்கான காரணத்தை ஆசிரியர் விக்கிரமன் தன் நாவலில் கலைமீது ஆர்வமும் இறைப்பற்றும் கொண்ட சோழன் ஒரு நடனமங்கைக்காகப் போரிடுகிறான் என்கிறார். அம்மங்கை மலர்விழி ஆவாள். அவள் இரு அரசர்களிடமும் பேசிப் போரைத் தடுக்கமுயல்கிறாள்.

## 2. அரசனுக்கு அறிவுரை

சோழன் தங்கியிருந்த பாசறைக்குச் சேரமன்னன் மயில்விழியை அனுப்புகிறான். நடனமாடும் குறத்திபோல் சென்ற மயில்விழி சோழன் படைபலத்தை அறிகிறாள். சோழநாட்டிலிருந்து வந்த தூதர்களைச் சேரன் சிறையிலடைத்தபோது அவர்களைத் தப்பிக்கச் செய்கிறாள். இரண்டு அரசர்களின் போர் நடவடிக்கை அவள் மனதைப் பாதிக்கிறது. அதனால் அவள் சோழ மன்னனிடம், "சோழ சக்கரவர்த்திகளே! உங்கள் திறமையை வஞ்சி நகரமே புகழ்கிறது. அதை அறியாமல் சேரர்கள் தங்களை எதிர்க்க முற்படுவது அறிவற்ற செய்கை. நான் உங்கள் உப்பைத் தின்றவள். மரகதவல்லியிடமிருந்து கலையைக் கற்றவள். ஆனாலும் வஞ்சிக்கோட்டைக்கு **ஆபத்து** ஏற்பட்டிருக்கும் வேளையில் நான்

இங்கிருப்பது சேரர்களுக்குத் துரோகம் செய்ததாகும்”[59] என்று கூறி பாசறையிலிருந்து செல்கிறாள். இரண்டு அரசர்களுக்கும் அறிவுரை கூறிப் போரைத் தடுக்க முயல்கிறாள்.

## 3. ஒற்றும் தூதும்

சோழனைச் சந்தித்த மயில்விழி, அவர்கள் போர் தொடுக்கும் நாள், வரும் வழி அனைத்தையும் அறிந்துவந்து சேர அரசனிடம் கூறுகிறாள். தன்னைச் சோழமன்னன் கங்கைகொண்ட சோழபுரத்துக்கு அனுப்பப்போகும் இரகசியத்தைச் சேர மன்னனிடம் கூறுகிறாள்.

மயில்விழி ஒற்றறிந்தும், தூதாகச் சென்றும் இரு அரசர்களுக்கும் நடந்தபோரைத் தடுக்க இயலாது தவிக்கிறாள். போர் மூண்டுவிட்டது. சேரமன்னன் வீரசோமன் கை சோழமன்னனால் துண்டிக்கப்பட்டுவிட்டது. அதை எடுத்துக் கொண்டு சோழமன்னனிடமே செல்கிறாள். அக்காட்சியைக் கண்ட சோழமன்னர், “மயில்விழி ஏன் அரசாங்க காரியத்தில் தலையிடுகிறாள். நேற்றுத் துணிவுடன் சோழ வீரர்களிடையே வந்தாள். இப்போது துண்டிக்கப்பட்ட கரத்துடன் வந்து நிற்கிறாள்”[60] என்று குழம்புகிறார்.

மயில்விழி சேரமக்களின் சார்பாகப் பேச வந்ததாகக் கூறுகிறாள். சேரநாட்டில் புலிக்கொடியை ஏற்ற நினைத்த சோழன் மயில்விழியைப் பார்த்தவுடன் மனம்மாறி, அவளது வேண்டுகோளுக்கிணங்கிச் சேரமக்களுக்குத் துயரிருக்காது என்கிறான்.

## 4. முடிவறியுமுன்

மயில்விழிக்குச் சேரநாட்டை விட்டுச் சோழநாட்டிற்குப் போகப் பிடிக்கவில்லை. சோழன் புலிக்கொடியைச் சேரநாட்டில் பறக்கவிட்டு, சேரமன்னனிடம் அந்த நாட்டை அளித்துவிட்டு மயில்விழியைச் சோழநாடு அழைத்துப்போக விரும்புகிறான். சோழன் அரியணையில் அமர்ந்து அதன்பின் வீரசோமனுக்கு மகுடம் சூட்டுகிறான். சோழனின் உள்மனத்தை

அறியாத மயில்விழி அரியணையில் அமர்ந்த சோழன், சேரநாட்டை இனி இழக்கமாட்டான் என நினைத்து, தம்மையும் கவர்ந்து செல்வான் என்று கருதி நஞ்சுண்டு உயிர்துறக்கிறாள்.

## 2. சோழநாட்டு அரசகுலம் சாராத பெண்கள்

1. பைரவி (யா.ந)
2. பொன்னருவி (யா.ந)
3. சிந்தாமணி (ம.தே.ம)
4. தேவகுஞ்சரி (தெ.வா.மோ)
5. சித்ரவல்லி (சி.வ)
6. காமவல்லி (இரா.ச)
7. மலர்மங்கை (கொ.ம.கு)
8. அல்லிவிழி (தி.வ)
9. மலர்மங்கை (சோ.ம)

ஆகிய ஒன்பது பெண்கள் சோழநாட்டு அரசியலில் ஈடுபடுகின்றனர். இவர்களுள் காமவல்லி மட்டும் நடுத்தர வயதைக் கடந்தவளாகப் படைக்கப் பெற்றுள்ளாள். அல்லிவிழி திருமணமாகி ஒரு குழந்தைக்குத் தாயானவள். மற்ற பெண்கள் திருமணமாகாத இளம் பெண்கள்.

### 1. பைரவி

பைரவி சோழநாட்டுப் பாடினிப்பெண். தஞ்சை மாளிகைக்குப் பைரவி அடிக்கடி செல்கிறாள். சோழ அரசன் விசயாலயனுக்குப் பாடினியையும் பாணனையும் பண்ணிசைக்கச் சொல்லிக் கேட்பது வழக்கம். பைரவி கலையிற் சிறந்தவளாக இருந்ததால் எல்லா நாட்டையும் நேசிக்கிறாள். புலவர்களாயிருந்து நாட்டுநலனில் அக்கறை கொண்ட சங்ககாலப் புலவர்களைப் போல் செயல்படுகிறாள். அவளது அரசியலீடுபாடு,

1. எல்லார்க்கும் நன்மை
2. அடிப்படைக் கடமை

என்ற இருதலைப்புகளின் வழி ஆராயப்பெறுகிறது.

## 1. எல்லார்க்கும் நன்மை

அரசியலில் ஈடுபடுபவர் தான் சார்ந்த நாட்டுக்கும், அந்நாட்டு மன்னனுக்கும் மட்டும் விசுவாசிகளாய் இருக்கமுடியும். பைரவி இதில் மாறுபட்டுள்ளாள். பாண்டிய நாட்டை வரகுணபாண்டியன் ஆண்டு வருகிறான். பல்லவநாடு அபராஜிதப் பல்லவனால் ஆளப்பெறுகிறது. சோழன் விசயாலயனும் அவனது மகன் ஆதித்தனும் சோழநாட்டை விரிவுபடுத்தத் தக்க தருணம் பார்த்திருக்கின்றனர். பாண்டிய மன்னன் சோழநாட்டைக் கைப்பற்றக் கருதுகிறான். அதனால் எயினன் என்பவனைச் சோழநாட்டுப் படைபலம் அறியப் பாண்டி நாட்டுக்கு அனுப்புகிறான்.

எயினன் பாண்டி நாடு செல்லும் வழியில் வெள்ளத்தில் மாட்டிக்கொள்கிறான். அவனை பைரவி காப்பாற்றுகிறாள். தன்வீட்டில் அவனைத் தங்கவைக்கிறாள். பகைநாட்டு ஒற்றனுக்கு இடமளிப்பது தவறு என்று பைரவியின் தோழி பொன்னருவி கூறியபோது, "எனக்கு அனைவரும் சமமே. இந்த யாழை மீட்டியவாறு பாண்டியர் பாசறைக்கும் செல்வேன். சோழவீரர்கள் நடுவிலும் செல்வேன்"[61] என்கிறாள். எயினனிடம் பைரவி அவன் ஒற்றனாகச் செயல்படாவிட்டால் சோழநாட்டில் வேலை வாங்கித்தருவதாகக் கூறுகிறாள். எல்லா நாடுகளின் மீதும் அக்கறை கொண்ட பைரவியின் அரசியல் ஈடுபாடு நன்மை பயப்பதாய், தீமை நீக்குவதாய் உள்ளது.

## 2. அடிப்படைக் கடமை

நடுவுநிலைமையோடு செயல்படும் பைரவியைச் சோழநாட்டார் நம்பவில்லை. பைரவி எயினனுடன் சேர்ந்து பாண்டியனுக்கு நன்மை செய்கிறாளோ என்று சந்தேகப்படுகின்றனர். சோழநாட்டாரைப் பாண்டியநாட்டார் தாக்கும் செயல் தொடங்கிவிடுகிறது. அந்நேரத்தில் பைரவி துணிவுடன் செயல்படுகிறாள். நூறு போர்வீரர்களை யாழிசைப்பவர்கள் போல் வேடமிட்டுப் பாண்டியர் பாசறைக்கு அழைத்துச் சென்று பாண்டியர்

தோல்வியுறச், சோழர் வெற்றிபெற உதவுகிறாள். சோழன் விசயாலயன் பைரவியைப் பாராட்டும்போது "பைரவியின் பங்கு இப்போரில் மகத்தானது. அவள் தக்கசமயத்தில் திட்டம் வகுத்திராவிட்டால் நாம் வென்றிருக்க முடியாது"[62] என்கிறான். பொன்னருவி தன் தவறுணர்ந்து பைரவியைப் பாராட்டுகிறாள். அதற்குப் பெருமிதம் கொள்ளாத பைரவி ஒரு நாட்டிற்கு அதன் மக்கள் செய்யும் கடமையையே தானும் செய்ததாகக் கூறுகிறாள்.

கடமை உணர்ந்த பைரவி தன்மனதில் அனைத்து நாட்டுக்கும் இடமுண்டு என்பதன் அடையாளமாகச் சோழனிடம் சிறைப்பட்டுள்ள பாண்டிநாட்டு ஒற்றனை - எயினனை தனக்குப் பரிசாகத் தரும்படி கேட்கிறாள். சோழன் இதில் பெருந்தன்மையோடு நடக்கவேண்டும் என்று சாமர்த்தியமாகப் பேசித் தன் காதலனைப் பெறுகிறாள்.

## 2. பொன்னருவி

விசயாலயச் சோழனுக்கு உறுதுணையாகப் போர்க்களங்களில் போரிட்டு, விழுப்புண்கள் பெற்றுக், குற்றுயிராய்க் கிடந்து பிழைத்தவன் கரபத்திரன் ஆவான். அவனது மகள் பொன்னருவி. இவள் பைரவியின் தோழி. நாட்டின் நிலைமையை நன்கறிந்தவள். கரபத்திரன் அறியாத நாட்டு நடப்புச் செய்திகளைக்கூட அறிந்து தந்தைக்குக் கூறும் ஆற்றல் படைத்தவள். பாண்டியர் படையெடுப்பைப்பற்றி கரபத்திரன் கூறியவுடன் அவன், "இவளுக்கு எப்படி ராசாங்க ரகசியங்கள் தெரிந்திருக்கின்றன"[63] என்று வியக்கிறான். இவ்வளவு திறம் படைத்த பொன்னருவியின் அரசியல் ஈடுபாட்டைக் கீழ்க்காணும் உட்தலைப்புக்களின் வழியறியலாம்.

1. நாட்டுப்பற்று
2. மன்னன் கடமையை மடந்தை செய்தல்.

## 1. நாட்டுப்பற்று

பைரவி பாண்டிநாட்டு ஒற்றனுக்கு அடைக்கலம் கொடுத்ததைப் பொன்னருவி விரும்பவில்லை அதற்காக வருந்துகிறாள். பைரவியுடன் சண்டையிடுகிறாள். "இந்த நாட்டிற்குப் பெரும் ஆபத்து

ஏற்படப்போகிறது. அதைத்தடுத்துப் பாண்டிய விரோதிகளிடமிருந்து நாட்டைக் காக்க வேண்டும் என்று நான் நினைக்கிறேன்"[64] என்று சூலநாதனிடம் கூறும் பொன்னருவித் தம்மால் நாட்டைக் காத்துவிட முடியும் என்று நம்பிக்கை கொண்டுள்ளாள். நம்பிக்கைக்கு அடிப்படைக் காரணம் அவளிடமிருந்த நாட்டுப்பற்றும் உரம்வாய்ந்த உள்ளமுமாகும்.

## 2. *மன்னன் கடமையை மடந்தை செய்தல்*

பாண்டியர் சோழநாட்டின் மீது படையெடுத்து வருகின்றனர். பல்லவநாட்டிற்கு இச்செய்தி தெரிந்தால் பல்லவ அரசன் சோழனுக்கு உதவக்கூடும் எனக்கருதி பொன்னருவி சூலநாதனைப் பல்லவ நாட்டிற்குத் தூது அனுப்புகிறாள். போர்க்காலங்களில் மன்னன் எதைச் செய்யவேண்டுமோ அதைச் சாதாரணப் பெண்ணான பொன்னருவி செய்கிறாள். பைரவியின் பொதுநலப்போக்கு இவளுக்குப் பிடிக்கவில்லை. அதனால் அவள் நட்பை உதறுகிறாள். பைரவி செய்வது நாட்டுக்குச் செய்யும் துரோகம் என்று சாடுகிறாள். சாதாரண நிலையில் உள்ள பெண் பொன்னருவியின் நாட்டுப்பற்று நாவல் முழுவதும் விஞ்சி நிற்கிறது.

## 3. *சிந்தாமணி*

காடவர் கோன் எழிசைமோகன் திருமுனைப்பாடியை ஆளும் குறுநில மன்னனாவான். திருமுனைப்பாடி சோழநாட்டுக்குட்பட்டதால் சோழனுக்கு ஏழிசைமோகன் கப்பம் கட்டி வருகிறான். இவன் பல்லவ வம்சத்தைச் சார்ந்தவன். வசதி படைத்தவன். அம்பலவாணன் என்பவன் ஏழிசைமோகனுக்கு எல்லா வகையிலும் உதவுபவன். அவ்வூரில் மாதேவன் என்பவன் வாழ்ந்து வருகிறான். அவனுக்குச் சிந்தாமணி, செண்பகம் என இரண்டு மகள்கள் உள்ளனர். ஏழிசை மோகனும் அம்பலவாணனும் ஏழைகளையும் அழகு மிகுந்த பெண்களையும் தன் கட்டுப்பாட்டிற்குள் வைத்து அடிமைபோல் நடத்துகின்றனர்.

இவர்களிருவரும் செய்யும் கொடுமைகளைச் சோழ அரசருக்குத் தெரியப்படுத்துவதற்குச் சிந்தாமணியும் அவளது தந்தையும் சோழநாட்டிற்கு வருகின்றனர். ஊரில் விழாக்களும் முக்கியமான நிகழ்ச்சிகளும் நடந்ததால் மன்னரைச் சந்திக்க முடியவில்லை. படைத்தலைவன் நம்பியைச் சந்தித்து நாட்டுநிலையை ஏழிசைமோகன், அம்பலவாணன் கொடுமைகளைக் கூறிவிட்டுத் திரும்புகின்றனர். சிந்தாமணி நம்பியிடம் மனதைப் பறிகொடுக்கிறாள்.

அதன்பின்னும் அம்பலவாணன் சிந்தாமணி குடும்பத்தை அடிமையாக்கி, அழகுநிறைந்த சிந்தாமணியைக் காடவர்கோன் அடையவேண்டும் என்பதற்கு உதவுகிறான். சிந்தாமணி அதை வெறுக்கிறாள். இறுதிவரை உறுதியோடு இருக்கிறாள். நாட்டுநிலையைத் தந்தையுடன் சென்ற சிந்தாமணி துணிவுடன் எடுத்துக் கூறியதால் நம்பி அதை மன்னனிடம் கூறி, சோழ அரசனிடமிருந்து, 'யாரும் அடிமைகளாக மனிதர்களை வைத்துக் கொள்ளக் கூடாது' என்ற ஓலையைப் பெற்றுவந்து சிந்தாமணியைக் காப்பாற்றுகிறான்.

கொண்ட கொள்கையில் உறுதி, அம்பலவாணனைப் பேச்சால் அடக்கும் தகுதி, மக்களை அடிமையாக்கும் குறுநில மன்னன் வர்க்கத்தை மன்னனுக்கு உரிய நேரத்தில் தெரியப்படுத்துதல், நம்பியிடம் நாட்டு அரசியல் பற்றிப் பேசும் அச்சமின்மை ஆகிய பண்புகள் கொண்டு திகழும் சிந்தாமணி இறுதியில் நம்பியை மணக்கிறாள்.

### 4. தேவகுஞ்சரி

தேவகுஞ்சரி, சோழநாட்டில் கோவிலில் நடனமாடும் பரவை நங்கையின் மகள் ஆவாள். இவள் கதையில் 'குஞ்சரி' என்றழைக்கப் பெறுகிறாள். சோழநாட்டை இராசராசன் ஆண்டுவருகிறான். சோழநாடு பாண்டியநாட்டுக்குத் திறைப்பணம் கட்டிவாழும் அடிமை நாடாக உள்ளது. பாண்டியநாட்டைச் சுந்தரபாண்டியன் ஆண்டு வருகிறான். சோழநாட்டில்

உள்ள சிற்றரசர்கள் சோழநாட்டிற்கு எதிராகச் செயல்படுகிறார்கள். இதையறிந்த நாட்டுப்பற்று மிக்கக் குஞ்சரி நாட்டரசியலில் ஈடுபடுகிறாள். அவள் அரசியல் பங்கைக் கீழ்க்காணும் உட்தலைப்புக்களின் வழியறியலாம்.

1. மண்ணையும் மன்னனையும் காத்தல்
2. தூதனுப்புதல்
3. தேசபக்தி
4. தியாகத்துக்குத் தயார்
5. மன்னன், மக்கள், மணவாளன் எண்ணத்தில்....

## 1. மண்ணையும் மன்னனையும் காத்தல்

குஞ்சரியின் அரசியல் ஈடுபாடு பலருக்குப் பிடிக்கவில்லை. பெண் அரசியலில் ஈடுபட்டால் நாடு சிறக்காது என்று ஆரம்பத்தில் மக்கள் அவளைத் தூற்றுகின்றனர். ஆனால் குஞ்சரி பாண்டிய நாட்டுப் படையெடுப்பின் போது ஒற்றாராய்ந்து, தூது அனுப்பி, அரசனை மாளிகையில் இருந்து அப்புறப்படுத்தச் செய்து சோழமண்ணையும் மன்னனையும் காக்கிறாள். தெய்வ அருளும் இராசபக்தியும் மிக்க பரம்பரையில் வந்த குஞ்சரியிடம் தெய்பக்தியும் நாட்டுப்பற்றும் இருக்கிறது. அதை வளர்த்துக்கொள்ள சோமசர்மாவிடம் கந்தனின் புகழையும் சிவனின் திருவிளையாடலையும் எடுத்துச் சொல்லித் தன் அறிவை மேலும் வளர்த்துக்கொள்கிறாள். நாட்டுப்பற்று அவளது அக்கறையால் வளர்கிறது. பதியிலாதார் வாரிசான குஞ்சரியின் எண்ணம் முழுவதும் அரசனையும் நாட்டையும் பற்றியதாக உள்ளது.

## 2. தூதனுப்புதல்

இராசராசன் திறமையாக நாட்டை ஆண்டாலும் உட்பகை, நாட்டில் பல இன்னல்களை வரவழைக்கிறது. மணவாளன் என்ற சிற்றரசன் குஞ்சரியை அடைவதிலேயே குறியாக உள்ளான். குஞ்சரி அதை வெறுக்கிறாள். மேலும் சிற்றரசர்களை ஒடுக்கச் சோழ அரசனுக்கு உதவியாகத்

தெலுங்கு மன்னனை வரவழைக்க நினைக்கிறாள். அவனுக்குக் கொடுத்தனுப்பும் ஓலையைக் குஞ்சரியே சோதிடரின் சீடர் ஒருவரிடம் சென்று கொடுக்கிறாள். குஞ்சரியின் செயல் வேகத்தாலும் அரசன் அவள்மீது கொண்ட நம்பிக்கையாலும் இத்தூது நடைபெறுகிறது. தூதனுப்புதலை அறிந்த மணவாளன் ஆட்கள் குஞ்சரியைத் தேட ஆரம்பிக்கின்றனர்.

### 3. தேசபக்தி

மணவாளன் குஞ்சரியை அடைவதிலும் அவன் தலையிடாத வண்ணம் சோழநாட்டை அடைவதிலும் குறியாய் உள்ளான். குஞ்சரியின் வீட்டிற்குச் சென்று அவள் தாயிடம் "குஞ்சரி அரசியல் சூழ்ச்சிகளில் ஈடுபடக்கூடாது. அவள் வேலை நாட்டியமாடுவது. அரசகுடும்பத்தவர்க்கு ஆசை நாயகியாய் இருப்பது. அரசியலில் தலையிடுவது அன்று என்று மிரட்டுகிறான். குஞ்சரியின் தாய் தன்மகள் இவ்வாறு குல விரோதமாகச் செயல்படுகிறாளே என்று வருந்துகிறாள். அதற்கு அரசனுக்கு நெருங்கியவராகவும் கோட்டைக் காவல்புரிபவராகவும் உள்ள நம்பி காளிராயர், "அவளுக்கு இளமையிலேயே பகுத்தறியும் உணர்வு இருக்கிறது. யார் செய்த புண்ணியமோ, எந்தப்பேரறிஞன் இரத்தமோ, அவள் உடலில் உண்மை தேசபக்தியாக ஓடுகிறது. உன் மகளைப் போன்ற நாட்டுப்பற்றுடையவர்களும் இருக்கிறார்கள்"[65] என்று அவளைச் சமாதானப் படுத்துகிறார். குஞ்சரியின் தேசபக்தியை அவரது கூற்றால் உணரலாம்.

### 4. தியாகத்துக்குத் தயார்

குடந்தையிலிருந்து சோமசர்மா வீட்டிற்குச் சென்ற குஞ்சரி தன்வீட்டிற்குத் திரும்பிவந்து கொண்டிருந்த போது வேளக்காரப் படையினர் பேசுவதைக் கேட்கிறாள். ஏற்கனவே குஞ்சரியைத் தேடிக்கொண்டிருந்ததால் மணவாளன் ஆட்கள் அவளைச் சிறைப்பிடிக்கின்றனர். அப்போது குஞ்சரி தன் வாழ்வை வெறுக்கிறாள். தன் உயிரையும் நாட்டுக்குத் தியாகம் செய்யத் தயார் என நினக்கும் அவளுள்ளம், "மண்ணைக் காப்பாற்ற இந்தப்

பொய்யுடலைத் தியாகம் செய்யத் தயார். ஆனால் நாட்டு விரோதிகளிடமா தன்மானம் இழப்பது. நாட்டைக் காக்கக் கூடியவர்களுக்கு உடல்பொருள் ஆவியைத் தரலாம்”[66] என்று வருந்துகிறது.

மாளிகையைச் சேர்ந்தவர்கள், வாரியத்தலைவர்கள், படைகளைச் சேர்ந்தவர்கள், குறுநிலமன்னரோடு தொடர்புகொண்டவர்கள் என்று பலருடன் பழகும் போது சோழநாட்டவருக்கு நலிவு ஏற்படத் தொடங்கியிருப்பதைப் புரிந்துகொண்ட குஞ்சரி தன்னை நாட்டுக்குத் தியாகம் செய்யத் தயார்ப்படுத்திக் கொள்கிறாள்.

“சோழநாட்டின் மீது அன்னியர் படையெடுப்பைத் தடுக்கவும் மன்னரது கரங்களைப் பலப்படுத்தவும் தன்னாலியன்றதைச் செய்யவேண்டும்”[67] என்று முடிவெடுத்த குஞ்சரி பகைவர்களால் சிறைப்பிடிக்கப்படுகிறாள். அரச விவகாரங்களில் இவ்வளவு தூரம் ஈடுபடுவது குஞ்சரியைப் பொறுத்தவரையில் வரம்புக்கு மீறிய, வயதுக்குமீறிய செயல்தான் என்றாலும் அவளுள்ளத்தே எழுந்த நாட்டுப்பற்று எவ்வித இடரையும் ஏற்கத் தயாராக இருக்கிறது. எதிரிகளால் சிறைப்பிடிக்கப்பட்ட குஞ்சரி அங்கிருந்து தப்பித்து நாடகக் குழுவுடன் சேர்கிறாள்.

பிறப்பாலே தனது அழகையெல்லாம் புலப்படுத்தி ஆடவரைமயக்கும் நெறியுடைய குலத்தில் வந்த குஞ்சரி கல்லிலும் முள்ளிலும் காட்டிலும் மேட்டிலும் அலைகிறாள். நாட்டிற்காக நாடு காக்கும் நல்லரசருக்காக அலையும் அவள் நன்றாக வாழ்ந்தால்தானே அரசருக்கும் நல்லது என்று காளிங்கராயர் அவளைப்பற்றிச் சிந்திக்கிறார். தன்னலம் மறந்த தியாகம் குஞ்சரியிடத்தில் வெளிப்படுகிறது. சிறுவயதிலிருந்தே குஞ்சரி இறைவனுக்குச் செய்யும் தொண்டும் நாட்டிற்குச் செய்யும் தொண்டும் ஒன்றே என்ற சிந்தனையுள்ளவளாக உள்ளாள்.

## 5. மக்கள், மன்னன், மணவாளன் எண்ணத்தில்

சோழநாட்டில் ஒற்றர்கள் நம்பும்படியாக இல்லை. காடவராயன், சம்புவராயன் போன்றோர் பாண்டியர் படைகளுக்கு உதவுவதாக உள்ளனர். காடவராயன் மணவாளன் குஞ்சரி தெலுங்கு அரசருக்குக் கொடுத்தனுப்பிய ஓலையைக் கைப்பற்றி விடுகிறான். அதனால் குஞ்சரி துன்பப்படுத்தப் படுகிறாள். அப்போது மன்னர், "குஞ்சரி தன் குலத்தொழிலை விட்டு நாட்டுப்பணிக்காகத் தன்னை அர்ப்பணிக்க வந்தபோது நாம் ஆமோதித்தோம். அவள் இளம் வயதினள். நாட்டிய அரசி, அழகு தெய்வம். அவளுக்கு எந்த இடையூறும் வரக்கூடாது"[68] என்கிறார். குஞ்சரியின் உயர்ந்த எண்ணம் அவருக்குப் புலப்படுகிறது. மன்னருக்கு எதிராகச் செயல்படும் மணவாளனோ, அரசனுக்கு நன்றியாக இருப்பதுவேறு, அரசகாரியங்களில் அரச குடும்பத்தார்கள் போல் செயல்படுவது வேறு, ஆனால் குஞ்சரி சதிவேலைகளில் ஈடுபடுகிறாள் என்று நினைக்கிறான். குஞ்சரி தனக்குக் கெட்டபெயர் வந்தாலும் பரவாயில்லை என்று அரசியலில் தொடர்ந்து ஈடுபடுகிறாள்.

ஊர்மக்கள் "பெண் அரசியலில் தலையிட்டு எந்தநாடு விளங்கிற்று"[69] என்று பேசுவதைத தன்காதுபடவே கேட்கிறாள். அப்போது தன் உடல் மனிதர்களுக்குத் தோன்றியது அல்ல என்று நினைக்கும் குஞ்சரி தன்னைப்பற்றிப் பிறர் பேசுவதையெல்லாம் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொள்கிறாள். சிறக்கிறாள். சோழநாட்டைத் தன் காதலன் என்றும் அவனைக் காக்கத் தான் பாடுபடுவதாகவும் கூறும் குஞ்சரியின் ஈடுபாடு அவளைச் சோழநாட்டின் காவல்தெய்வமாக்குகிறது. அவளே 'தெற்கு வாசல் மோகினி' என்றழைக்கப் பெறுகிறாள்.

## 5. சித்திரவல்லி

சித்திரவல்லி மாவலிராயனின் மகள். மாவலிராயன் உலைக்கூடம் வைத்துச் சோழநாட்டிற்கு வில்லும் வாளும் செய்து கொடுக்கிறான். முதலாம் இராசாதிராசன் என்ற சோழமன்னன்

சாளுக்கியர்களோடு போரிட்டு அங்கிருந்து துவாரபாலகர் சிலையைத் தன்நாட்டிற்குக் கவர்ந்து வருகிறான். அந்தச் சிலையை மீண்டும் கவர்ந்து செல்லவும் சோழர்களை வெல்லவும் சாளுக்கிய இளவரசன் ஜெயசிம்மன் குணரேகா என்ற பெண்ணையும் உதவிக்கு அழைத்துக் கொண்டு சோழநாட்டிற்கு வருகிறான். சித்திரவல்லி ஜெயசிம்மனைச் சந்திக்கிறாள். இருவரும் காதல் கொள்கின்றனர். ஜெயசிம்மனை இன்னார் என்றறியாத சித்திரவல்லி அவனைச் சோழநாட்டு வீரன் என்று நம்புகிறாள். அவள் தொடர்ந்து நாட்டரசியலில் ஈடுபடுவதைக் கீழ்க்கண்ட உட்தலைப்புகளின் வழி உணரலாம்.

1. போரில் ஈடுபாடு.
2. நாட்டு நிலையறிதல்
3. அரசனுக்கு அறிவுரை
4. நாட்டின் மானம் காத்தல்.

### 1. போரில் ஈடுபாடு

சோழநாட்டுப் படைவீரனைப்போல் நடித்த ஜெயசிம்மன் அவளிடமிருந்து சோழநாட்டு வீரர்களின் எண்ணிக்கையைத் தெரிந்துகொள்கிறான். தன் தந்தை அனுப்பும் வில், வாளிலிருந்து அவளுக்கு எண்ணிக்கை சரியாகத் தெரிகிறது. சோழருக்கும் சாளுக்கியருக்கும் போர் தொடங்குகிறது. ஜெயசிம்மன் சோழநாட்டுக்காகப் போரிடப்போவதாகக் கூறுகிறான். இதை உண்மையென்று நினைத்த சித்திரவல்லி, “நாளை இந்நேரம் இந்தக் கோட்டை வாயில் வழியே நமது படைகள் அணிவகுத்துச் செல்லும். முரசு முழங்கும் புலிக்கொடி அசைந்தாடும். மதில்மேல் ஏறி நின்று கையசைத்து என் அன்பைத் தெரிவிப்பேன்”[70] என்கிறாள். இவளது நாட்டுப்பற்றை உணர்ந்த ஜெயசிம்மன் “உன்னைப் போல் நூறுபெண்கள் நாட்டுப்பற்றுடன் இருந்தால் இந்த நாட்டை யாராலும் வெல்லமுடியாது”[71] என்று பாராட்டுகிறான்.

## 2. நாட்டு நிலையறிதல்

சித்திரவல்லி மூலம் அரசியல் இரகசியங்களை அறியும் ஜெயசிம்மன் சோழநாட்டவன் அல்ல என்பதைத், தனக்கு முறைப்பையனான இளஞ்சென்னி மூலம அறிகிறாள். "எனக்கு அரசியல் விவகாரங்கள் தெரியாதா? வீட்டுக்குள் அடைந்து கிடக்கும் பேதை என்று நினைத்தாயா?"[72] என்று வீரமாகப் பேசிய சித்திரவல்லி குணரேகாவுடன் நட்புக் கொண்டு ஜெயசிம்மன் கடத்தவிருந்த துவாரபாலகர் சிலையை வெளியில் செல்லவிடாமல் செய்கிறாள்.

## 3. அரசனுக்கு அறிவுரை

ஜெயசிம்மனைப்பற்றிய உண்மை தெரிந்தும் சித்திரவல்லி தன் காதலால் அவன் மனதை மாற்றலாம் என்று நினைக்கிறாள். அவனோ இவள் மனதை மாற்ற முயன்று தோற்றுப் போகிறான். இவர்கள் பேசிக் கொண்டிருந்ததை சாளுக்கியப் படை வீரர்கள் ஜெயசிம்மனின் சகோதரன் ஆகவமல்லனிடம் தெரிவிக்கின்றனர். அவன் உத்தரவுப்படி ஜெயசிம்மனும் சித்திரவல்லியும் சிறையிலடைக்கப் படுகின்றனர். சிறைக்கூடத்தில் சித்திரவல்லி "அன்பே தங்களைத் தங்கள் சகோதரர் சந்தேகித்து விட்டார். இன்னும் நேரமிருக்கிறது. சோழச் சக்கரவர்த்திகளுக்கு விசுவாசமாக நடந்துகொள்ளுங்கள். தங்கள் மனதை மாற்றுவதாக அரசரிடம் கூறிவந்துள்ளேன்"[73] என்கிறாள். ஜெயசிம்மன் அதைக்கேட்காமல் சிறையிலிருந்து தப்புகிறான்.

## 4. நாட்டின் மானம் காத்தல்

சோழருக்கும் சாளுக்கியருக்கும் போர் தொடங்க, சோழன் இராசாதிராசன் ஜெயசிம்மனால் தாக்கப்பட்டுக் கீழே விழுகிறான். அவன்கீழே விழுவதற்குள் அவனது கிரீடத்தைக் கீழே விழுந்துவிடாமல் சித்திரவல்லி தாங்கிப் பிடிக்கிறாள். அவ்விடத்தை விட்டு கிரீடத்துடன் ஓடிய சித்திரவல்லியைச் ஜெயசிம்மன் ஓடவிடாமல் தடுக்கிறான். சித்திரவல்லி

அவனிடமிருந்து தப்பித்து, போர்ப்பாசறையில் தங்கியிருந்த இராசாதிராசனின் மகன் இராசேந்திரன் தலையில் கிரீடத்தைச் சூடிப் போர்க்கள இழப்பை எடுத்துக்கூறி, அவன் காலில் விழுந்து உயிர் துறக்கிறாள்.

"சித்திரவல்லி நாட்டின் மானத்தைக் காக்கத் தன் உயிரையும் காதலையும் துரும்பென எண்ணினாள்"[74] என்று பாராட்டிய இராசேந்திரன் சித்திரவல்லியின் தந்தையிடம் மூன்று கிராமங்களை இறையிலி நிலமாகத் தருகிறான்.

## 6. காமவல்லி

காமவல்லி, பதியிலாதார் குலத்தைச் சேர்ந்த பெண் ஆவாள். இவள் இல்லத்திற்கு அரசாங்கத்தில் உயர்பதவியில் உள்ளோர் அடிக்கடி வந்து செல்வர். அதனால் காமவல்லிக்கு அரசியல் செய்திகள் அனைத்தும் தெரிகின்றன. சோழநாட்டரசன் பராந்தகன் நோய்வாய்ப்பட்டு உள்ள நிலையில் இளவரசன் இராஜாதித்தன் அரசுப்பணிகளைக் கவனித்து வருகிறான். அவனது சகோதரி வீரமாதேவி நாடிழந்து தன் கணவனுடன் அரண்மனையில் வந்து தங்கியுள்ளாள். அவளது நாட்டைப் பகைவர்களிடமிருந்து திரும்பப்பெற்று அவளுக்கு அளிப்பதை இராஜாதித்தன் சபதமாகக் கொண்டுள்ளான்.

காமவல்லியின் கண்காணிப்பில் குழலி, குஞ்சரி என்ற இரு பெண்கள் வளர்கிறார்கள். அவர்களைக் கங்கநட்டிற்குச் செல்லும் கலைக்குழுவுடன் அனுப்பி கங்கநாட்டிற்கு விரோதமாகச் செயல்பட்டு வரும் பூதுகனின் உள்ளம் அறிந்துவரத் திட்டம் தீட்டுகிறார்கள். இராஜாதித்தனும் ஒற்றர்படைத் தலைவன் பரமேஸ்வரனும் காமவல்லியை அழைத்து இதுபற்றிப் பேசுகின்றனர். அரச விபரங்கள் அனைத்தும் அறிந்துள்ள காமவல்லியைப் பற்றி இராஜாதித்தன் கூறும்போது "உங்கள் ஒற்றர் படையை விடக் காமவல்லியின் திறம் அதிகம்தான் என்று நினைக்கிறேன்"[75] என்கிறான். பதியிலாதார் குலப்பெண் காமவல்லி அரசசேவை செய்யத் தன்னை

அர்ப்பணித்துவிட்டதாகக் கூறுகிறாள். “தேசசேவையே தேவசேவை”[76] என்று கூறும் காமவல்லி குழலி, குஞ்சரி இருவரையுமே நாட்டுக்காக அயல்நாடு அனுப்பச் சம்மதிக்கிறாள்.

நாட்டுநிலை அறிந்திருத்தல், மன்னனோடு சேர்ந்து நாட்டுக்காகப் பாடுபடுதல், அவர்களோடு ஒத்துழைத்தல் முதலிய செயல்களைச் செய்யச் சித்தமாயிருக்கும் காமவல்லி அரசனின் பாராட்டைப் பெறுகிறாள்.

**7. *மலர்மங்கை (சோ.ம)***

மலர்மங்கை இராட்டிரகூட நாட்டுப்பெண். சோழநாட்டில் தங்கிச் சோழஅரசனின் நன்மைக்காகப் பாடுபடுகிறாள். பராந்தகச் சோழனின் மூத்தமகன் இராஜாதித்தன் இறந்ததால் அரசபதவி அவனது சகோதரன் கண்டராதித்தருக்குக் கிடைக்கிறது. பழுவேட்டரையரின் சகோதரியைப் பராந்தகன் மணந்து அவள் வழி அரிஞ்சயன் என்ற ஒரு மகன் இருக்கிறான். எனவே கண்டராதித்தருக்குப் பிறகு அரிஞ்சயனைச் சோழநாட்டின் அரசனாக்கப் பழுவேட்டரையர் முயல்கிறார். அதற்குப் பலர் உதவுகின்றனர். கண்டராதித்தர் இறைப்பற்று மிகுந்தவராதலால், அவரையும் அவரது வாரிசையும் அழிக்க ஆடலிலும், பாடலிலும், தெய்வபக்தியிலும் சிறந்திருந்த மலர் மங்கையை எதிரிகள் அழைத்து வருகின்றனர். மலர்மங்கை அரசனின் குலத்தைக் காக்க அரண்மனை நிகழ்வுகளையும், பகைவர்களின் சூழ்ச்சியையும் அறிந்து செயல்படுகிறாள். அவளது அரசியல் பங்கை,

1. அரசபக்தி
2. மங்கை காப்பாற்றிய மகுடம்

ஆகிய இரு உட்தலைப்புக்களின் வழி அறியலாம்.

**1. *அரசபக்தி***

இறைப்பற்றும் கலைஆர்வமும் மிக்க கண்டராதித்தரைக் கண்டபின் மலர்மங்கை அவருக்குப் பல நன்மைகளைச் செய்கிறாள்.

கண்டராதித்தனின் மகன் மதுரனைக் கடத்திச் சென்றுவிட்டால் அதே கவலையில் அரசி இறந்துவிடுவாள். அரசி இறந்தால் மன்னர் கண்டராதித்தரும் இறந்துவிடுவார் என்று பகைவர்கள் சதிசெய்கின்றனர். சதியின் முதல்கட்டமாக, "இளவரசரை ஒருவரும் அறியாமல் தூக்கிச் சென்றுவிட வேண்டும். முடிந்தால் நாகபட்டினத்தில் கலம்ஏறிக் கடல் கடந்து சென்று விடவேண்டும்"[77] என்று முடிவெடுக்கின்றனர். இத்திட்டத்தை அறிந்த மலர்மங்கை அரசகுடும்பத்தினர் மீது பற்றும் பக்தியும் கொண்டு, அரண்மனையில் குழந்தை மதுரனைப் பார்த்துக்கொள்ளச் செவிலி இருந்தபோதும் அந்தப் பொறுப்பைத் தானே எடுத்துக்கொண்டு செயல்படுகிறாள். சதிகாரர்களால் ஒன்றும் செய்ய இயலவில்லை. சோழவாரிசு காப்பாற்றப்பெறுகிறது.

## 2. மங்கை காப்பாற்றிய மகுடம்

கண்டராதித்தர் சிவப்பற்று மிக்கவர். எனவே இவரது பகைவர்கள் சிவனடியார் வேடத்தில் வந்து கண்டராதித்தரைக் கொல்லத் திட்டம் தீட்டுகின்றனர். தங்கச் சுரங்கத்திற்கு அடியார்கள் கண்டராதித்தரைக் கூட்டிச் சென்று அங்கே சுரங்கத்தை மூடிவிடவேண்டும் என்று முடிவெடுக்கின்றனர். இதையறிந்த மலர்மங்கை இச்செய்தியைச் சொல்ல வேகமாக அரண்மனைக்கு ஓடுகிறாள். அப்போது அவளது காதலன் கூத்தன் அவளைச் சந்தித்துத் தன் காதலை மீண்டும் வெளிப்படுத்துகிறான். ஆனால் மலர்மங்கையோ முதலில் சோழமன்னனையும் நாட்டையும் காப்பதே கடமை. அதன்பின்தான் காதல் என்று கூறித் தொடர்ந்து ஓடிவரும்போது வேறொரு ஆள் கத்திவைத்து மிரட்டி அவளைப் பிடித்துக்கொள்கிறான்.

அவர்களிடமிருந்து சாதுர்யமாகத் தப்பித்த மலர்மங்கை பகைவர்கள் சதியை அம்பலப் படுத்துகிறாள். அவளது பணியைப் பாராட்டும் ஊர்மக்கள், "மதுரனைக் கவர்ந்து செல்லச் செய்யப்பட்ட சதிகளை மங்கை தடுத்துவிட்டாள். இப்பொழுதும் அவள்தானே போலிச்சிவனடியார்களின்

சதித்திட்டத்தைக் கண்டுபிடித்து எச்சரித்தாள். கடைசி நொடியில் சதிகாரர்கள் சிக்கிவிட்டனர். அரசர் பிழைத்தார். நாடு பிழைத்தது. சோழமகுடம் பிழைத்தது"[78] என்று கூறுகின்றனர்.

கோவிலில் நடனமாடிய போதும், அரண்மனையில் நுழைந்தபோதும் அவளைப் பற்றி அவதூறு மொழிகள் எழுகின்றன. அதையெல்லாம் பொருட்படுத்தாமல் சோழநாட்டுக்கு வரவிருந்த தீங்கைக் களைவதிலேயே கண்ணாய் இருக்கிறாள். அரசனின் உயிரும் அரசகுலவாரிசும் மலர்மங்கையால் காப்பாற்றப் பெறுகிறது. சோழநாட்டில் ஆங்காங்கு நடக்கும் சதித்திட்டங்களை அவ்வப்போது அறிந்து கொள்ளும் ஆற்றலும் துணிச்சலும் வேகமும் மலர்மங்கையிடம் இருக்கிறது.

### 8. அல்லிவிழி

சோழன் இராசராசனின் மனைவி அவனிமுழுதுடையாள், இரட்டைக் குழந்தைகளை ஈன்றவுடன் இறந்துவிடுகிறாள். அக்குழந்தைகளை மன்னனின் தாய் தன் பராமரிப்பில் வளர்க்கிறாள். குழந்தைகளுக்குப் பாலூட்ட அப்பொழுதுதான் குழந்தை பெற்று, அதை இழந்துவாடிக்கொண்டிருக்கும் அல்லிவிழி என்ற பெண் அமர்த்தப்படுகிறாள். அல்லிவிழியின் கணவன் கோவிந்தன் அரண்மனையில் வேலை செய்கிறான்.

சோழனின் பகைவர்கள் குழந்தைகளை அழித்துவிட முயல்கின்றனர். அரண்மனையில் வேலைபார்க்கும் கோவிந்தனைக் கையாளாகக் கொண்டுள்ளனர். இதையறிந்த அல்லிவிழி குழந்தைகளைக் காக்க முற்படுகிறாள். அரச குடும்பத்திற்கு விசுவாசமாக இருக்கவேண்டும் என்று நினைக்கிறாள். அதனால் முதலில் தன் கணவனைத் திருத்திவிடக் கருதி. அவனுக்கு அறிவுரை கூறுகிறாள். "உங்கள் மேலதிகாரி படைத்தலைவர். அவர் சொல்படி நடக்கிறீர்களா? உரிமையற்ற ஒருவர் அரசருக்குத் துரோகம் செய்யப் பார்க்கிறாரே, அவர்சொல்படி தானே கேட்கிறீர்கள்?"[79] என்று குமுறும் அல்லிவிழி தன் கணவனை அரசகுடும்பத்துக்கு உதவும்படிக் கேட்கிறாள்.

கோவிந்தன், இராசராசனின் எதிரி மல்லப்பனுக்கே உடந்தையாகச் செயல்படுகிறான். அவன் செய்கையை வெறுக்கும் அல்லிவிழி அவனை எப்படியாவது திருத்தவேண்டும் என்று கருதி அவன் செல்லும் இடங்கள் அறிந்து அங்கெல்லாம் சென்று இரகசியமாகப் பேசும் செய்திகளை அறிகிறாள்.

நாடு இருக்கும் சிக்கலில் தீமையை அழிக்க முற்படும் அல்லிவிழி சாதாரணப் பெண்ணாக இருந்தாலும் அரசியல் உணர்வற்று இல்லாமல் தம்மால் முடிந்ததைச் செய்யப் பாடுபடுகிறாள். அவளது முயற்சியால் இறுதியில் குழந்தைகள் காப்பாற்றப் பெறுகின்றனர்.

### 9. மலர் மங்கை (சொ.ம.கு)

சோழமன்னன் கண்டராதித்தனைக் கொல்வதற்காக உதயன், மதுவணர் என்ற இரண்டு சூழ்ச்சிக்காரர்களால் அழைத்துவரப்பட்ட பெண் மலர்மங்கை ஆவாள். ‘கூத்தன்’ என்ற கலைஞனிடம் ஆடல் பாடல்களைக் கற்றவள். சிதம்பரம் கோயிலில் மிகச்சிறப்பாக நடனமாடிய மங்கையைக் கண்டராதித்தர் தஞ்சைக்கு அழைத்துச் செல்கிறார். அவரது நல்ல குணத்தையும், சிவபக்தியையும் பார்த்து அவருக்குத் தீமை செய்யவிருந்த கொடியவர்கள் சதிக்கு உடந்தையாகாமல் செயல்படுகிறாள். (சோழமகுடம், என்ற நாவலில் மலர்மங்கையின் அரசியலீடுபாடு விரிவாகப் பார்க்கப் பெற்றுள்ளது).

## 2. பாண்டியநாட்டு அரசகுலம் சாராத பெண்கள்

1. ரூபமதி - (மதுரைமகுடம்)
2. தேனாட்சி - (மதுரைமகுடம்)
3. எழினி - (கன்னிக் கோட்டை இளவரசி)
4. குமுதா - (மாறவர்மன் காதலி)
5. மலர்க்கொடி - (பாண்டிய மகுடம்)

இப்பெண்கள் ஐந்து பேரும் அரசகுலம்சாராத பெண்கள். இவர்கள்

பாண்டியநாட்டு அரசியலில் ஈடுபடுகின்றனர். இவர்களில் எழினி மட்டும் திருமணமான பெண். மற்ற பெண்கள் திருமணமாகாதவர்கள். இவர்கள் தோழியாக (தேனாட்சி, எழினி) கதைத்தலைவியாக (குமுதா, மலர்க்கொடி) பகைவர்களை மயக்கி இரகசியம் அறிபவளாக (ரூபமதி) இடம்பெற்று, அவரவர்கள் சார்ந்த நாட்டுக்கு உதவுகின்றனர்.

## 1. ரூபமதி

ருஸ்தம்கான் பாண்டியநாட்டின் ஒற்றர் படைத்தலைவன். சொக்கநாத நாயக்கரின் நம்பிக்கைக்கு உகந்தவன். சொக்கநாதரையும், மங்கம்மாளையும் வெறுக்கும் ராயசமும், பிரதானியும் அவர்களை அழிக்கப் பல சூழ்ச்சிகள் செய்கின்றனர். ருஸ்தம்கான் அரசனின் விசுவாசியாக இருப்பதால் ரூபமதியைச் சந்திக்கும்போது அவள் யார் என்பதை அறிந்து கொண்டு அவளிடம் நாட்டுநிலையைக் கூறித் தனக்கு ஆதரவாகச் செயல்படும்படி கேட்டுக்கொள்கிறான். அதன்படி அரசியலில் ஈடுபடும் ரூபமதியின் செயல்களை,

1. மன்னர் மீது மதிப்பு.
2. ஒற்று வேலை,

என்ற இரு உட்தலைப்புக்களின் வழியறியலாம்.

## 1. மன்னர்மீது மதிப்பு

மதுரையைச் சேர்ந்த ரூபமதி ஏழைப்பெண். அழகான பெண். பசித்துன்பம் போக்க பிரதானி சொல்படிக் கேட்கிறாள். நாட்டியம் ஆடத்தெரிந்த ரூபமதியைப் பிரதானி தனக்குச் சாதகமாகப் பயன்படுத்த நினைக்கிறான். பிரதானியைக் காணவந்த ருஸ்தம்கான் அங்கு ரூபமதியைப் பார்த்து அவளிடம் துருவித்துருவிப் பலகேள்விகளைக் கேட்கிறான். அதற்கு அவள், “இன்று இங்கு நீங்கள் வரும்போது உங்கள் மனதுக்குப் பிடிக்கும் விதத்தில் நடந்துகொள்ளுமாறு உத்தரவிட்டதும் பிரதானிதான்”[80] என்கிறாள். ரூபமதியை மறைவிடத்தில் வைத்து ராயசமும் பிரதானியும் ருஸ்தம்கானின்

வரவுக்காகக் காத்திருக்கின்றனர். இவர்களின் தீய நடவடிக்கையை ருஸ்தம்கானிடம் ரூபமதி வெளிப்படுத்துகிறாள். அரசர்மீதும், நாட்டின் மீதும் மதிப்பும், மரியாதையும் உள்ள பெண்ணாகையால் அவர்களின் பல திட்டங்களை ருஸ்தம்கானிடம் கூறுகிறாள்.

## 2. ஒற்றுவேலை

மன்னரைக் காப்பாற்றும் ருஸ்தம்கான் தான் வெற்றிபெற ரூபமதியின் உதவியை நாடுகிறான். "நீ ஏழையாய் இருந்தாலும் ஆண்டவன் உனக்கு அழகை நிறையக் கொடுத்திருக்கிறார். பிரதானியிடம் முன்பு போலவே பழகி அங்கு நடக்கும் விஷயத்தை உடனுக்குடன் தெரிவிக்கவேண்டும்"[81] என்று கூறி ரூபமதியின் ஒத்துழைப்பைக் கேட்கிறான். ரூபமதி ஒத்துக்கொள்கிறாள். ஒரு ஒற்றனைப் போல் எவ்வாறு ரூபமதி செயல்பட வேண்டும் என்று கூறுகையில் "முக்கியச் செய்தி இருந்தால் இரவு பதினோரு மணிக்குக் குதிரை லாயத்திற்கு வந்துவிடு. முக்கியச் செய்தி இல்லாவிடில் மலைக்கோட்டை வாசலில் ஒரு மல்லிகைப் பூவுடன் நில். ஆபத்தான செய்தியென்றால் எந்த நேரமும் குதிரை லாயத்திற்கு வந்துவிடு. எந்த ஆபத்தும் நேராமல் காக்கிறேன்"[82] என்று உத்தரவிடுகிறான். அதன்படி செயல்படும் ரூபமதி பாண்டி நாட்டைத் தீயவர்களிடமிருந்து காப்பதற்கு உதவுகிறாள். பெண்கள் அரசியலில் நல்லவர்களாலும், தீயவர்களாலும் பயன்படுத்தப் பெற்றிருக்கின்றனர் என்பதை ரூபமதி பாத்திரப்படைப்பு மூலம் உணரலாம்.

## 2. தேனாட்சி

மதுரையில் சொக்கநாத நாயக்கரின் ஆட்சி நடைபெற்றபோது பாண்டியர், நாயக்கருக்கு அடங்கியவராகத் தென்காசியில் தங்கி ஆட்சிபுரிகிறார். தென்காசிப் பாண்டியன் மகள் முத்தம்மாளின் தோழி தேனாட்சி, முத்தம்மாளுடன் தங்கியிருப்பதால் நாட்டின் அரசியல் பற்றி

அறிந்து வைத்துள்ளாள். அரசில் பதவி வகிக்காவிட்டாலும் இளவரசிக்குத் தோழி என்பதால் அரசியல் சிக்கல்கள், அதற்கான தீர்வுகள் அவளுக்குத் தெரிகிறது.

மதுரை சொக்கநாதர் நாயக்கர் குற்றாலத்தில் தங்கியிருந்தபோது அழகாத்திரியின் ஆட்கள் அவரைச் சிறைப்பிடிக்கின்றனர். தனியே விடப்பட்ட மங்கம்மாள், முத்தம்மாள் கண்காணிப்பில் இருக்கிறாள். இந்நேரத்தில் தென்காசிப்பாண்டியர் நாயக்கருக்கு உதவலாம். ஆனால் உதவமாட்டார். ஏனெனில் மங்கம்மாள் ஏற்கனவே பாண்டியர்களிடம் சூளுரைத்த அரசி. அதனால் அவளுக்கு உதவக்கூடாது என்பது ஒன்று, இழந்த பாண்டிய மகுடத்தைப் பெறுவதற்கு இதுதான் தருணம் என்பது மற்றொன்று என்பதைத் தேனாட்சி மிகத்தெளிவாக முத்தம்மாளிடம் எடுத்துக் கூறுகிறாள். இதிலிருந்து அவளது அரசியலறிவு தெரிகிறது.

தேனாட்சியின் திறமையான பேச்சைக் கேட்ட முத்தம்மாள், "அடி தேனாட்சி! நீ பெரிய அறிவாளி!! அரசாங்கத்தில் உனக்குப் பெரும் பொறுப்பு அளிக்க வேண்டும்"[83] என்று அவளைப் பாராட்டுகிறாள். தேனாட்சியின் அரசியல் செயல்பாடுகள் மதுரைமகுடத்தில் குறைவாக இருந்தாலும், அவளுக்கு அரசியல் அறிதிறன் இருக்கிறது. இவளது நட்பு முத்தம்மாளைத் துணிவுடன் செயல்பட வைக்கிறது.

### 3. எழினி

எழினியின் தந்தை பாண்டிய நாட்டு வீரமரபினர். அவர் ஒரு ரோமானியப் பெண்ணை விரும்பி மணந்தார். அவர்களின் குழந்தை எழினி. எழினி குழந்தையாக இருக்கும் போதே அவளது தந்தை மதுரை அருகே ஏற்பட்ட ஒரு கலகத்தில் கொல்லப்படுகிறார். பிரிவாற்றாது தாயும் இறக்கிறாள். அனாதையாக விடப்பட்ட எழினி, உறவினர் ஒருவர் வீட்டில் வளர்ந்து வருகிறாள். பின் கன்னிக்கோட்டை இளவரசி சித்திராதேவியைச் சந்தித்து.

அவளுக்குத் தோழியாய் இருந்து உதவுகிறாள். அவளது அரசியலீடுபாடு கீழ்க்காணும் உட்தலைப்புக்களின் வழி அறியப் பெறுகிறது.

1. போர் - ஆற்றல்
2. காவலனுக்குக் கட்டளை

## 1. போர் - ஆற்றல்

போரில் ஈடுபடுபவர்கள் பெரும்பாலும் ஆண்களே. தொல்காப்பியரும் "எண்ணரும் பாசறைப் பெண்ணொடும் புணரார்"[84] என்கிறார். வரலாற்று நாவல்களில் புறநானூற்றில் காணப்படும் வீரத்திற்கு இணையாகப் பெண்கள் படைக்கப்படுகின்றனர். வீரக்கோலம் உடைய பெண்கள் சங்க காலத்தில் "மூதின் மகளிர்"[85] என்றழைக்கப் பெறுகின்றனர். "இத்தகைய பெண்களின் வீரத்தை, இன்றைய எழுத்தாளர்களும் இனம் கண்டுள்ளனர்"[86]

`கன்னிக்கோட்டைக்கு வருவதற்கு முன்னால் எழினி, நம்பி என்பவனை மணக்கிறாள். அவன் பாண்டிய ஆட்சிக்கு எதிராகத் திட்டம் வகுக்கும் சுந்தரபாண்டியனுக்குக் கையாளாக இருக்கிறான். அது எழினிக்குப் பிடிக்கவில்லை. தனக்குக் கணவனாயிருப்பவன் யாருக்கும் தீங்கு செய்யக் கூடாது என்று கருதி அவனை விட்டுப் பிரிகிறாள்.

எழினியின் துணிவான போக்கை அரசி சித்ராதேவி பாராட்டுகிறாள். பல பெண்களையும் கன்னிக் கோட்டையில் தங்குவதற்காக எழினி அழைத்து வருகிறாள். அவர்களையும் தன்னையும் பற்றி இளவரசியிடம் கூறும்போது "உங்களுக்கு உறுதுணையாக இருக்க வந்து சேர்ந்துவிட்டேன். என்னுடன் வந்த பெண்கள் நம்பிக்கை மிகுந்தவர்கள். இட்ட கட்டளையை நிறைவேற்றக் காத்திருக்கிறோம். எனக்கு வாள் வித்தை எல்லாம் தெரியும்"[87] என்கிறாள். இவள் தலைமையில் பெண்படை கன்னிக்கோட்டையில் தங்கியுள்ளது.

சுந்தரபாண்டியன் இவளைக் கொல்லத் திட்டமிடுகிறான். தப்பிவிடுகிறாள். வீரபாண்டியன் இவளிடம் தவறாக நடக்க முயற்சிக்கிறான். அப்போது அவனை வாள்கொண்டு தாக்கவும் துணிகிறாள். வீரபாண்டியனிடம் கோபமாகப் பேசும் எழினி, "மதுரைப் பொக்கிஷத்தைக் கவர்ந்தது போல் என் பொக்கிஷத்தைக் கவரப்பார்க்கிறாய். ஒரு பெண்ணிடம் என்ன ஆயுதம் இருக்கமுடியும் என்ற துணிவுதானே? இந்தா உன்னிடம் ஆயுதம் ஏதும் இல்லை என்ற கவலை வேண்டாம். இந்தவாளை எடுத்துக்கொள். இருவரும் போர் புரிவோம்"[88] என்கிறாள். இதைக்கேட்ட வீரபாண்டியன் தன்செயல் மறந்து தன்தவறுக்காக வருந்துவதுபோல் பேச ஆரம்பிக்கிறார். ஆண்களை அஞ்சவைக்கும் போர்க்கலையில் சிறந்தபெண்ணாக எழினி படைக்கப்பெற்றுள்ளாள்.

## 2. காவலருக்குக் கட்டளை

ஹொய்சள மன்னன் கன்னிக் கோட்டையை முற்றுகையிட்டபோது கோட்டை மதிலிலிருந்து பெண்கள் அம்பு எய்தனர். படை கலைந்தோடியது. ஹொய்சள நாட்டு இளவரசனும் சோதிடரும் இரகசிய வழியாகச் சித்ராவைச் சந்திக்க வருகின்றனர். எழினி அவர்களைச் சிறைப்பிடிக்கிறாள். சித்ராவுக்கு முன் கொண்டுவந்து நிறுத்துகிறாள். சோதிடர் ஹொய்சள இளவரசரிடம் சித்ராதான் தங்களின் குலவிளக்கு. இளவரசரை மணக்கப் போகிறவள் என்கிறார். அப்போது எழினி குறுக்கிட்டு எங்கள் இளவரசி தங்களை மணக்க வேண்டுமானால் பாண்டியநாட்டைக் காப்பாற்றுவதாக உறுதிகூறவேண்டும். பாண்டிய நாட்டை ஆக்கிரமிக்க வருபவர்களை முறியடிக்க வேண்டும். என்று ஒரு மாமன்னர் எதிரியிடம் வினவுவது போலவும் கட்டளையிடுவது போலவும் பேசுகிறாள். ஒரு போர் வீரனைப்போல், அமைச்சனைப்போல், தன்னலம் துறந்து செயல்படும் எழினி அரசியல் ஈடுபாட்டில் சிறந்து நிற்கிறாள்.

## 4. குமுதா

'மாறவர்மன் காதலி' நாவலில் கதைத்தலைவியாகப் படைக்கப்பெற்றுள்ள குமுதா ஓர் அனாதைப் பெண் ஆவாள். பாண்டியர்களுக்கும் சோழர்களுக்கும் நடந்த போரில் குமுதத்தின் தந்தை இறந்துவிட்டதால் சோழர்கள் மீது அவளுக்கு வெஞ்சினம் இருக்கிறது. இயற்கையாகவே துடுக்குத்தனமும் அச்சமின்மையும் மிகுந்த அவள் உள்ளம் அவளுக்கு ஏற்பட்ட துயரத்தில் மேலும் கடினமாகிறது.

பராக்கிரமப் பெருமாள் உலைக்களம் வைத்திருக்கிறான். சிறு வயதில் தன் தந்தையுடன் அங்கு செல்லும் குமுதம் பாண்டியநாட்டின் பழம்பெருமைகளைக் கேட்டறிகிறாள். பின்னால் அவள் தந்தையை இழந்தவுடன் அவள்மீது அனுதாபமிக்க அரசுத்தலைவர்கள் பாண்டியனிடம் கூட்டிச் செல்கிறார்கள். இவ்வாறு கொஞ்சம் கொஞ்சமாக அவளது நாட்டுப்பற்றும், அரசியல் ஈடுபாடும் வளர்ந்து சிறக்கிறது. கீழ்க்காணும் உட்தலைப்புக்களில் அவளது அரசியலீடுபாடு ஆராயப் பெறுகிறது.

1. போர்த்திட்டத்தில் பங்கு,
2. பேராற்றல்,
3. நிலமகளைக் காதலித்தல்,

### 1. போர்த்திட்டத்தில் பங்கு

பாண்டிய நாட்டின் விடுதலைக்காக வல்லபன் மேற்கொண்ட இரகசிய முயற்சிகளில் குமுதம் பங்குகொள்ள முன்வருகிறாள். தன்னை அரசு தொடர்பான செயல்களில் ஈடுபடுத்திக் கொண்ட குமுதம் பெருமாள், காங்கேயன், மாறன் ஆகிய மூவருடன் சேர்ந்து சோழநாட்டிற்குச் செல்கிறாள். சோழநாட்டில் யாரும் அறியாமல் தங்கி, அந்நாட்டின் படைபலம் அறிந்து, வல்லபனுக்குத் தெரிவிக்கிறாள். பாண்டியர்கள் சோழநாடு நோக்கிப் படையெடுத்து வரும்போது அவர்களுடன் சேர்ந்து சோழர்களைத் தாக்குவது என்ற பெரிய போர்த்திட்டத்தில் குமுதா தானும் ஒருத்தியாக உள்ளாள்.

## 2. பேராற்றல்

சோழ நாட்டிற்குச் சென்றவுடன் பாண்டிய நாட்டிலிருந்து தன்னுடன் வந்த மாறனைப் பிரிகிறாள். அவனை விரும்புவதால் சில மாதங்களுக்குப் பின் அவன் வேறொரு பெண்ணுடன் பழகுவதைக் கண்ணாரக் கண்டு வேதனைப் படுகிறாள். ஆயினும் தன் பணியை மறந்தால் சோழ நாட்டுக்குத் தீமை உண்டாகும் என்று கருதி மனதை அடக்குகிறாள். சோழநாட்டு அரண்மனையில் பணிப்பெண்ணாகச் சேர்ந்து அங்குள்ள இரகசியங்களை அறிந்து பெருமாளிடமும், காங்கேயனிடமும் தெரிவிக்கிறாள். மாறு வேடத்தில் ஒரு துறவி வந்து குமுதாவைச் சந்தித்து இரண்டு நாடுகளின் அரசியல் நிலைமைகளைப் பேசுகிறார். அவர்மீது சந்தேகம் கொண்ட குமுதா காங்கேயனிடம் இந்தத்துறவி சோழ அரசருக்கு வேண்டியவராக இருக்கலாம். அல்லது அரசபரிவாரங்களுடன் வந்தவராயிருக்கலாம் என்று பல சந்தேகங்களை எழுப்பிப் பேசுகிறாள். இதைக்கேட்ட காங்கேயன், "ஆகா! பெண்ணே நீ பெரும் ராஜதந்திரியாக இருக்க வேண்டியவள். தவறிப் பெண்ணாகப் பிறந்து விட்டாய்"[89] என்கிறான். அப்போது பாண்டியநாட்டில் புகழ்பெற்ற அரசியாகத் திகழ்ந்த மங்கையர்க்கரசியை எடுத்துக்காட்டி அவரைப் பேச்சில் மடக்குகிறாள்.

## 3. நிலமகளைக் காதலித்தல்

அரண்மனையில் பணிப்பெண்ணாக வேலை பார்த்த போதும் குமுதாவின் எண்ணம் சோழநாட்டைப் பற்றி அறிவதிலேயே உள்ளது. துறவி அவளது அரசியல் ஞானத்தைப் பார்த்து வியக்கிறார், 'பெண்களில் மகத்தானவள்' என்று மாறன் புகழ்கிறான். மாறன் தனக்கு ஏற்பட்ட துன்பத்திலிருந்து தப்பிக்கவே வேறொரு பெண்ணுடன் பழகியதாகக் கூறிக் குமுதா மீது கொண்ட உண்மையான காதலை வெளிப்படுத்துகிறான். குமுதா "பிறந்த பாண்டிய நாட்டிற்குச் செய்ய வேண்டிய கடமையை ஆற்றிய பிறகே இதய உணர்வைக் காட்டுவேன்"[90] என்று கூறி அவனது காதலை மறுத்துவிடுகிறாள்.

சோழநாட்டிற்கும் பாண்டிய நாட்டிற்கும் ஏற்பட்ட போரில் குமுதாவைக் காதலித்த மாறன் இறக்கிறான். பாண்டியநாடு வெல்கிறது. துறவி குமுதாவின் செயல்களைப் பாராட்டுகிறார். குமுதா சோழநாட்டில் தங்கி நாட்டின்நிலை, கருவூலவளம் அறிந்து பாண்டியர்களுக்குச் சொல்லிப் பாண்டிய நாட்டைத் தலைநிமிரச் செய்கிறாள். தன்காதலனைப் பறிகொடுத்த குமுதா பாண்டிய மண்ணையே காதலிக்கிறாள்.

### 5. மலர்க்கொடி

பராந்தக பாண்டியன், வானவன் மாதேவியை மணப்பதற்கு முன் பொதிகைமலைச் சாரல் சென்றிருந்தபோது ஒரு பெண்ணைக் காதலிக்கிறான். அவளுக்குப் பிறந்த மகன் மதிவாணன். அவன் தன் மாமனால் வளர்க்கப்பட்டுப் பாண்டியனின் படைத்தளபதி ஆகிவிடுகிறான். தான் அரசகுல வாரிசு என்பதை அறியாமல் இருக்கும் மணவாளனின் காதலி மலர்க்கொடி ஆவாள். அவளது அரசியல் பங்கைக் கீழ்க்காணும் உட்தலைப்புக்களின் வழியறியலாம்.

1. மன்னனை விஞ்சிய வீரம்.
2. நாட்டுநலன்.

### 1. மன்னனை விஞ்சிய வீரம்

மலர்க்கொடியின் தந்தை சோழநாட்டைச் சார்ந்தவன். பாண்டிநாட்டில் தங்கி அவ்வப்போது சோழநாட்டுக்கு அரசியல் இரகசியங்களைத் தெரிவிப்பது அவன் வேலை. வானவன் மாதேவிக்கும் பராக்கிரம பாண்டியனுக்கும் பிறந்த மகன் இராசசிம்மன். இவனிடம் வானவன் மாதேவி, மணவாளன் பராந்தக பாண்டியனின் மகன்தான் என்பதைக் கூறுகிறாள். அப்பொழுது இராசசிம்மன், மணவாளன் மூத்தவன் என்பதால் அவனே நாட்டை ஆளவேண்டும் என்று கருதி மணவாளனிடமே சென்று இந்த இரகசியத்தைக் கூறுகிறான். மணவாளன் மறுக்கிறான். இதை மறைந்திருந்து கேட்ட மலர்க்கொடி தன் தந்தையிடம் கூறுகிறாள்.

மலர்க்கொடியின் தந்தையும், மணவாளனின் மாமனும் சேர்ந்து மணவாளனைப் பாண்டியநாட்டு மன்னனாக்க வேண்டும் என்று செயல்படுகிறார்கள். இதை மணவாளனிடம் மலர்க்கொடி, "என்தந்தை போக்கு எனக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்கவில்லை. பாண்டியநாட்டுச் சுதந்திர கிரீடம் இருக்குமிடத்தைக் கண்டுபிடித்து அதைக் கவர்ந்து வருவதே என் தந்தையின் நோக்கம். உங்கள் மாமனுடன் தோழமை பூண்டதே அதற்குத்தான்"[91] என்கிறாள். இச்சூழலை அறிந்து குழம்பிப்போன மணவாளன் இதிலிருந்து விடுபட எங்காவது சென்றுவிட வேண்டும் என்று முடிவெடுக்கிறான்.

இதையறிந்த வீரம் மிகுந்த மலர்க்கொடி "எங்காவது போய்விடுவதா? நீங்களா இப்படிப் பேசுகிறீர்கள். ஒருநாளும் இதற்கு நான் ஒப்பமாட்டேன். விரோதிகள் தலைவாசலில் நிற்கும்போது கோழைபோல் ஓடுவது சரியன்று"[92] என்று எடுத்துரைக்கிறாள். நாட்டு விடுதலைதான் ஆண்மகனுக்கு முதன்மையாய் இருக்கவேண்டும் என்று உணர்த்துகிறாள்.

## 2. நாட்டுநலன்

மதிவாணனும் இராசசிம்மனும் சேர்ந்து பல திட்டங்கள் தீட்டுகின்றனர். இராசசிம்மன் படையுதவி கேட்டுச் சேரநாட்டிற்குச் செல்கிறான். மதிவாணன் பாண்டியர்களின் பரம்பரைக் கிரீடத்தோடு ஈழம் நோக்கிச் செல்கிறான். இருவரும் வெளிநாடுகளில் தங்கிப் படைதிரட்டிப் பின் வலிமையோடு சோழர்களை எதிர்க்க முடிவு செய்கின்றனர்.

பதவி வேண்டாம், நாடு வேண்டாம் என்றிருந்த மதிவாணனை நாட்டுக்காக உழைக்க வைத்தவள் மலர்க்கொடி ஆவாள். அவளது தைரியமும், வீரமும், அன்பான சொற்களும் மதிவாணனை மனம் மாறச் செய்கின்றது. தான் வாழும் நாட்டு நலனே தன் காதலைவிடச் சிறந்தது என்று நினைக்கும் மலர்க்கொடி மதிவாணனுக்குச்சிறந்த ஆலோசகராகச் செயல்படுகிறாள்.

## 4. நாயக்கர் நாட்டு அரசகுலம் சாராத பெண்கள்

1. செவிலி செண்பகம்

2. அங்கயற் கண்ணி

என்ற இரண்டு பெண்களும் நாயக்கர் காலம்பற்றி எழுதப்பெற்ற வரலாற்று நாவல்களில் இடம்பெறும் அரச குலம்சாராத பெண்களாவர். அவர்களது அரசியல் பங்கு இவண் ஆராயப்பெறுகிறது.

### 1. செண்பகம்

செண்பகம் சொக்கநாத நாயக்கரின் செவிலித்தாய். அவள் சொக்கநாதரின் தந்தைக்கு ஆசை நாயகியாக இருந்தவள். அவர்களுக்குப் பிறந்தமகன் அழகாத்திரி. எனவே அவனையும் அரசனாக்கவேண்டும் என்று செண்பகம் முயற்சி செய்கிறாள். அரசாட்சியைப் பிடிக்க எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும் என்று அழகாத்திரிக்கு அறிவுரை கூறும்போது, *"அழகிரி! நீ அரசனாகப் போகிறாய் அப்படிப்பட்ட உயர்ந்த பதவியை அடைய வேண்டிய நீ தந்திரமும் புத்திசாலித்தனமும் அறியாமல் இருக்கலாமா? வெங்கண்ணாவைச் சந்தித்தவுடன் நீ தந்திரமாக நடந்துகொள்ள வேண்டும்"*[93] என்று அறிவுரை கூறுகிறாள். அரச குடும்பத்தோடு பழகியதால் இராசதந்திரம் பெற்றவளாக உள்ளாள்.

தன்மகன் எதற்கும் தயாராக இருக்க வேண்டும் என்கிறாள். வாழ்க்கையில் இதுதான் வேண்டும் என்றிருந்தால் வெற்றி அடைவது அரிது என்று கூறுகிறாள். தன் மகனிடம் தாயக்கட்டையைக் காட்டி, *"இந்தத் தாயக்கட்டையில் என்ன இருக்கிறது பார். இதை உருட்டினால் தாயம் விழுந்தாலும் விழலாம். பன்னிரண்டு விழுந்தாலும் விழலாம். எதற்கும் தயாராயிரு"*[94] என்று பேசும் செவிலியின் பேச்சு அவளது அரசியலறிவைப் புலப்படுத்துகிறது.

## 2. அங்கயற் கண்ணி

சொக்கநாத நாயக்கரின் நண்பன் செவந்தி. செவந்தியின் மனைவி அங்கயற்கண்ணி. சொக்கநாதர் மங்கம்மாவைத் திருமணம் செய்து கொண்டபின் அங்கயற்கண்ணி மங்கம்மாளுக்கு நெருங்கியவளாகிறாள். சொக்கநாதரை வெங்கண்ணாவும் அழகாத்திரியும் கொல்லப் பார்க்கின்றனர். அதனால் அவரைத் தஞ்சைக்கு அழைக்கின்றனர். இதையறிந்த மங்கம்மாள் திருவரங்கத்திற்கு போவதாகச் சொல்லிவிட்டு அங்கயற்கண்ணியின் துணையுடன் தஞ்சை செல்கிறாள்.

சொக்கநாதர் ஏற்கனவே காதலித்த பெண் மோகனாங்கி. அவள் இறந்துபட்டாலும் அவள் மீது மாறாத பிரியம் கொண்டிருக்கிறார். எனவே வெங்கண்ணாவின் மகள் கமலியை இராசகுமாரிபோல் அலங்கரித்து, அங்கு சொக்கநாதரை அழைத்துப்போய் மேல்மாடத்திலிருந்து கீழே தள்ளிவிடத் திட்டம் தீட்டுகின்றனர். இதையறிந்த மங்கம்மாவும் அங்கயற்கண்ணியும் இருளில் மறைந்திருக்கின்றனர். கமலியை, மோகனா என்று நினைத்த சொக்கநாதர் இருளில் அவள் பின்னாலேயே போகிறார். அங்கயற்கண்ணி அங்கிருந்து பாய்ந்து அவரை இழுத்து வருகிறாள். கமலி மண்டபத்தின் மேல்பகுதியிலிருந்து வீழ்ந்து இறக்கிறாள். சொக்கநாதர் உயிரை அங்கயற்கண்ணி காப்பாற்றுகிறாள்.

சொக்கநாதர் திருமணமே வேண்டாம் என்றிருந்த போது செவ்வந்தியும் அங்கயற்கண்ணியும் திருமணம் செய்து கொண்டனர். சொக்கநாதர் நிலைக்காக வருந்தினர். அங்கயற் கண்ணியும் செவ்வந்தியும் உடனிருந்து அவருக்குத் தைரியம் சொல்லி மங்கம்மாளைத் திருமணம் செய்ய உதவுகின்றனர். அங்கயற் கண்ணி துணைப்பாத்திரமாக படைக்கப்பெற்றாலும் தலைமைப் பாத்திரங்களின் வாழ்வுக்கும் திறமை வெளிப்பாட்டிற்கும் காரணமாக அமைகிறாள்.

## 5. பல்லவநாட்டு அரசகுலம் சாராத பெண்கள்

1. மீண்விழி (சோழ இளவரசன் கனவு)
2. மயிலழகு ( " )
3. காஞ்சனா (காஞ்சிசுந்தரி)
4. சுந்தரி ( " )
5. இராசசுந்தரி (கடல் மல்லைக்காதலி)

இவர்கள் பல்லவ நாட்டு அரசியலில் தம்மை ஈடுபடுத்திக் கொண்ட அரசகுலம் சாராத பெண்களாவர். இப்பெண்கள் அனைவரும் திருமணம் ஆகாத இளம்பெண்கள். ஆடல், பாடல், நாடகம் முதலிய கலைகளில் தம்மை ஈடுபடுத்திக்கொண்டவர்கள்.

### 1. *மீன்விழி*

மீன்விழியும், மயிலழகும் சிற்பி சிவநேசனின் மகள்கள் ஆவர். இருவரும் பல்லவநாட்டு அரசியலில் தங்களை ஈடுபடுத்திக் கொள்கின்றனர். மீன்விழி ஆதித்தனுடன் பல்லவநாடு வந்த கங்கநாட்டு இளவரசன் விக்கியண்ணனைக் காதலிக்கிறாள். நாட்டுப்பற்று மிக்க இப்பெண் அரச அதிகாரிகளுக்கே கட்டளையிடும் உரிமை பெற்றிருக்கிறாள். அவளது அரசியல் ஈடுபாட்டைக் கீழ்வரும் உட்தலைப்புக்களின் வழியறியலாம்.

1. அழுத்தமும் கண்டிப்பும்
2. நாட்டு நிலையறிதல்
3. படையைப் பற்றிய கவலை
4. பகைவனுக்குப் பால்வார்த்தல்

### 1. அழுத்தமும் கண்டிப்பும்

பல்லவநாட்டில் சிற்பங்களை உருவாக்குவதிலும், கற்கோயில்களை அமைப்பதிலும் வல்லவர் சிற்பி சிவநேசன், எப்போதும் தன்னுடன் பலசிற்பிகளை வைத்துக்கொண்டு சிற்பவேலை பார்த்துக்கொண்டிருப்பார். அவரைச் சந்திக்க அடிக்கடி பல்லவ மன்னன் அபராஜிதன் வருவான். அப்போது மீன்விழி அரசருடன் நன்றாகப்பேசுவாள்.

"பல்லவ நாட்டுக் கோட்டத்தலைவர்கள், அதிகாரிகள் அனைவரையும் அவள் அறிவாள். கோயில்களைப் பார்க்க வரும் அபராஜிதனுடன் சமதையாக உரையாடும் துணிவு பெற்றிருந்தாள். அதனால் அவளை மதித்தனர்"[95] என்ற கூற்றால் மீன்விழியின் திறமையை அறியலாம்.

கள்ளம் கபடமற்ற மீன்விழி நேருக்குநேர் விழி இமைக்காமல் பார்த்துப் பேசுவதும் அதே சமயம் அழுத்தமாகவும் கண்டிப்பாகவும் உரையாடுவதும் அவளது பிறவிக்குணங்கள். அதனால் அவளைக் கண்டாலே அஞ்சி நடுங்குபவர்களும் உண்டு. அரசியலில் ஈடுபடும் பெண்ணுக்கு அஞ்சாமை தேவை என்பதை மீன்விழி பாத்திரப் படைப்பு உணர்த்துகிறது.

## 2. நாட்டு நிலையறிதல்

மீன்விழி துணிச்சலான பெண்ணாக இருந்ததால் பல்லவ நாட்டின் அரசியல் செய்திகளை அவளால் அறிந்து கொள்ளமுடிகிறது. பல்லவ நாட்டில் உள்ள சத்திரத்தில் மீன்விழி வேலை பார்த்து வந்ததால் அங்குவந்து செல்வோர் மூலம் தன் நாட்டைப் பற்றியும் பிறநாட்டைப் பற்றியும் அறிந்திருக்கிறாள். அவ்வப்போது அரசனிடமும் தன் தந்தையிடமும் இது பற்றிக் கூறுகிறாள். சத்திரத்திற்கு வந்து தங்கிய ஆதித்தனிடம் "சோழநாடு பல்லவநாடு என்ற பிரிவினையே தவறு"[96] என்கிறாள். அபராஜிதன் விட்டுக்கொடுத்த பகுதிகளைச் சோழர்கள் இப்போதுதான் விரிவுபடுத்தத் தொடங்கியிருக்கிறார்கள் என்பதை ஆதித்தனிடம் எடுத்துக்கூறி விவாதிக்கும் மீன்விழி இருநாட்டின் நிலையையும் நன்குணர்ந்தவளாக உள்ளாள்.

## 3. படையைப் பற்றிய கவலை

குதிரைகளைச் சத்திரத்திலிருந்து ஆதித்தனும் விக்கியண்ணனும் திருடிச் சென்றுவிடுகின்றனர். படைவீரர்களின் கவனக்குறைவால் இவ்வாறு நடந்துவிடுகிறது. அப்போது மீன்விழி "இப்படிக் கவனக்குறைவாக இருக்கும் நமது படை வீரர்கள் படையெடுப்புக் காலத்தில்

என்ன செய்யப் போகிறார்கள்"[97] என்று கவலை கொள்கிறாள். மன்னனும் படைத்தலைவனும் ஆராய வேண்டிய பகுதியை மீன்விழி உணர்ந்து அரசனுக்குத் தெரியப்படுத்துகிறாள்.

### 4. பகைவனுக்குப் பால் வார்த்தல்

குறும்புத்தனமும் துணிவும் நிறைந்த மீன்விழியைத் தங்களுக்கு ஏற்றவிதத்தில் அரசியலில் பயன்படுத்த ஆதித்தனும், விக்கியண்ணனும் முடிவெடுக்கின்றனர். ஏனெனில் "அவள் சிற்பியின் மகளாக மட்டும் இருப்பாள் என்று எனக்குத் தோன்றவில்லை. பல்லவ ஆட்சியாளருக்கு மிகவும் நெருங்கிய ஒரு முக்கியமானவளாக இருப்பாள் என்று தோன்றுகிறது"[98] என்று அவர்கள் மீன்விழியைக் கணிக்கின்றனர். இதையெல்லாம், அவள் நடந்துபோகும் விதம், அவளைத் தொடர்ந்து செல்லும் வீரனின் பணிவு, அவள் திரும்பித்திரும்பி ஏதோ சொல்லும் போது வீரர்கள் கேட்டுக்கொள்ளும் முறை ஆகியவற்றிலிருந்து அறிந்துகொள்கிறார்கள். பல்லவ நாட்டில் செல்வாக்குப் பெற்றிருக்கும் மீன்விழியை வைத்துப் பல திட்டங்களைத் தீட்ட வேண்டும் என்று ஆதித்தனும் விக்கியண்ணனும் நினைக்கின்றனர். மீன்விழியும் விக்கியண்ணன் மீதுகொண்ட காதலால், பல்லவ நாடு பற்றிய இரகசியங்களை அவர்களிடம் தெரிவிக்கிறாள். காதல் அவள் அறிவை மறைக்கிறது. அதனால் பகைவர்களுக்கு நன்மை செய்ய வேண்டிச்சோழநாட்டிற்குப் புறப்படவும் தயாராகி விடுகிறாள். பகைவன் என்றறியாது பால்வார்க்கிறாள்.

சோழ நாடு சென்று கொண்டிருக்கும்போது பட்டரின் மனைவி மூலம் விக்கியண்ணன் ஏற்கனவே திருமணமானவன் என்பதறிந்து, தன் தவறுணர்ந்து ஆதித்தன் எவ்வளவோ சொல்லியும் கேளாமல் படைவீரனைப் போல் குதிரை மீது ஏறிப் பல்லவநாடு வருகிறாள்.

## 2. மயிலழகு

மயிலழகு மீன்விழியின் சகோதரி. தன் அத்தையுடன் மாமல்லபுரத்தில் தங்கி நடனம் கற்றாள். திருத்தணிகைக் கோவிலில் நடனமாடிக் கொண்டிருக்கிறாள். அவளின் கலையழகைக் கண்ட சோழன் ஆதித்தன் அவளைத் தன் நாட்டிற்கு அழைக்கிறான். பல்லவ நாட்டில் தற்போது பலரும் நடனத்தை மறந்துவிட்டு வேறுதொழில் செய்யத் துணிந்து விட்டனர் என உணர்ந்த மயிலழகு நடனத்தைத் தான் துறக்கவிரும்பவில்லை. அதனால் பல்லவமன்னன் அபராஜிதனிடமே தான் சோழநாடு செல்லப்போவதாகக் கூறுகிறாள். அதைக்கேட்ட அரசன் சினத்துடன் சோழர்கள் தனக்கு அடங்கியவர்கள் என்கிறான். அப்போது மயிலழகு "தஞ்சை அரசர்கள் பல்லவ அரசருக்கு அடங்கிய மக்கள் அல்லர். சோழநாட்டு ரசிகர்கள் என்னை அழைத்தார்கள் எங்கு அன்பும் ஆதரவும் இருக்கிறதோ அங்கு செல்லவிரும்புகிறேன். அங்கு தங்க வாய்ப்பு இல்லையென்றால் அங்கிருந்து பாண்டிநாடு செல்வேன்"[99] என்று துணிச்சலுடன் உரையாற்றுகிறாள். அரசன் நிலை, எல்லை, மக்கள் நிலை உணர்ந்து பேசுகிறாள்.

சோழநாட்டிலிருந்து வந்த தூதுவன் அமுதனை மயிலழகு காதலிக்கிறாள். இதையறிந்த பல்லவன் அமுதனைச் சிறைப்பிடிக்கிறான். அவன்மூலம் சோழ நாட்டு இரகசியங்களை அறியலாம் என நினைக்கிறான். மயிலழகு அவனைச் சிறையில் சென்று ஒரு தடவை சந்திக்கிறாள். அதன்பின் அமுதன் சிறையிலிருந்து தப்பிக்கிறான். ஆனால் பல்லவவீரர்கள் அவனைக் கொன்றனர். மனமுடைந்த மயிலழகு சோழநாடு செல்லும் எண்ணத்தைக் கைவிடுகிறாள்.

பல்லவருக்கும் சோழருக்கும் போர்தொடங்க உள்ளதால், பல்லவ நாட்டுப்படை தஞ்சைக்குச் செல்லும் போது மயிலழகும் உடன் செல்லவேண்டும் என்று பல்லவ மன்னன் விரும்புகிறான். மயிலழகு

செய்யவேண்டியதை அவளிடம் கூறும்போது படைகள் தஞ்சையை நெருங்கும் முன் மயிழலகு மட்டும் தனியே தஞ்சையை அடையவேண்டும், ஆதித்த சோழனைச் சந்திக்கவேண்டும், அவன் தங்குமிடம் போன்ற இரகசியங்களை அறிந்து தம் படையினருக்கு உதவவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறான். ஆனால் மயிலழகு தனக்கு ஏற்பட்ட மனவேதனை காரணமாக அவள் மனம் மாறி இறைத்தொண்டில் ஈடுபட்டும் பல்லவநாட்டிலேயே தங்குகிறாள்.

மயிலழகு விரும்பாமலே அரசியலில் ஈடுபடுத்தப்படுகிறாள். அரசியலை வெறுக்கும் பெண்கள் இறையை நாடுவதைக் காணமுடிகிறது. காதலை வெறுக்கும் பெண் (மீன் விழி) மறுபடியும் நாட்டை நேசிக்கிறாள். பல்லவ அரசியலில் இவ்விரு பெண்களும் அரசியலால் பாதிக்கப்பட்டவர்களாகப் படைக்கப்பெற்றுள்ளனர்.

### 3. காஞ்சனா

பல்லவநாட்டைப் பூர்வீகமாகக் கொண்ட குமாரதேவன் வாதாபியில் வாழ்ந்து வருகிறான். அவ்வப்போது காஞ்சிக்குச் சென்று வந்தவன், பின் அங்கு படைத்தலைவன் ஆகிறான். வாதாபியில் சுவர்ணகுமாரி என்ற ஆடல்அழகியை மணக்கிறான். அவள் கருவுற்றபின் அவளை விட்டுப்பிரிகிறான். அவள் இரண்டு பெண்குழந்தைகளை ஈன்றெடுத்தபின் உயிர் துறக்கிறாள். அந்தக் குழந்தைகள் காஞ்சனாவும். சுந்தரியும் ஆவர். காஞ்சனா சிறுவயதிலேயே பல்லவநாடு வந்து பலகலைகளைக் கற்று அரசகுடும்பத்துக்கு நிகரான வாழ்வைப் பெறுகிறாள். விழாக்காலங்களில் நடைபெறும் பல நாடகங்களில் வேடம் பூண்டு நடித்து மக்கள் உள்ளத்தைப் பித்தாக்கும் வனப்புமிக்கவளாகத் திகழ்கிறாள்.

பல்லவ மன்னன் இராசசிம்மனின் நண்பன் விஜயன், பல்லவநாட்டிற்கு வந்துள்ளான். அவனைக் காதலித்த காஞ்சனா, அவன்மூலம் பல்லவ அரசனையும் கவரப்பார்க்கிறாள். அதற்குக் காபாலிகன் உதவுகிறான்.

காஞ்சியிலிருந்து நாடகத்திற்காக மாமல்லபுரம் சென்ற காஞ்சனா சாளுக்கிய நாட்டிலிருந்து மாறுவேடத்தில் பல்லவநாடு வந்துள்ள விநயாதித்தனைப் பார்க்கிறாள். அவன் விஜயன் என்று தவறாகப் புரிந்து கொண்டு பழகுகிறாள். அவன் இதைத் தனக்குச்சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு காஞ்சனா மூலம் பல அரசியல் செய்திகளை அறிகிறான்.

காஞ்சனாவையும் சுந்தரியையும் பயன்படுத்தித் தங்கள் காரியத்தைச் சாதிக்கலாம் என்று சாளுக்கியர் நினைக்கின்றனர். பல்லவ நாட்டைப் பூர்வீகமாகக் கொண்ட அப்பெண்கள் வன்மம் மறந்து, காதல்வயப்பட்டு, நல்லவர்களாகிப் பல்லவநாட்டிற்கு நன்மை செய்கிறார்கள். இறுதியில் காஞ்சனா புத்தபிட்சினி ஆகிறாள்.

### 4. சுந்தரி

காஞ்சனாவுடன் பிறந்த சுந்தரி தன்தாய்க்குத் துரோகம் செய்த தந்தையை வெறுக்கிறாள். கலைகளைக் கற்றுச் சிறந்த சுந்தரி பல்லவநாட்டில் 'மல்லிநாதர்' என்ற சிற்பியைச் சந்தித்ததும் மனம் மாறுகிறாள்.

தன் தந்தை குமாரதேவனை உயிர்போகும் தறுவாயில் சந்தித்து வேதனை அடைகிறாள். "காஞ்சி அரண்மனையில் எப்படியாவது நாட்டியப் பெண்ணாக நுழைந்துவிடவேண்டும். அவர்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமாக வேண்டும். சாளுக்கிய மன்னன் கீர்த்திவர்மனும் மற்றவர்களும் காஞ்சிவரும்போது அவர்களுக்கு உதவி அரசகுடும்பத்தையே பூண்டோடு அழிக்கவேண்டும்"[100] என்ற திட்டத்துடன் சுந்தரி காஞ்சிக்கு வருகிறாள். பல்லவநாட்டின் சிறப்பறிந்து மல்லிநாதர் அறிவுரையால் மனம் மாறினாள். இராசசிம்மனின் நண்பன் விஜயன் மிகச் சிறந்த கலைஞன். அவனைக் காதலித்து, திருமணம்செய்து கொள்கிறாள்.

### 5. இராஜசுந்தரி

இராஜசுந்தரி மாமல்லையில் தங்கிக் கோவிலில் நடனமாடி வருபவள். உயர்வாழ்வைப் பெற்றவள். சாளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தன்,

சமுத்திரநாதன் என்பவனைப் பல்லவநாட்டில் தங்கவைத்து அங்கு குழப்பம் செய்யத்திட்டமிடுகிறான். மேலும் காஞ்சி நர்த்தகி இராஜசுந்தரி அவன் வசப்பட்டால் பல்லவர்களின் கொட்டத்தை நொடியில் அடக்கி விடலாம் என்று சூழ்ச்சி செய்கிறான். இதைப் பற்றி ஏதும் அறியாமலேயே இராஜசுந்தரி அரசியல் விவகாரங்களில் புகுத்தப்பெறுகிறாள்.

இராஜசுந்தரியை வளர்த்த செவிலித்தாயின் மூலம் தாம் சிறுவயதிலிருந்து பல்லவநாட்டில் தங்கியிருப்பது, பல்லவரைப் பழிவாங்கவே என்பதை அறிகிறாள். மேலும் பல்லவ இளவரசர் நரசிம்மரை இராஜசுந்தரி தன் வலையில் விழச்செய்ய வேண்டும் என்று அறிவுரை கூறுகிறாள். சமுத்திரநாதனுக்கு உடந்தையாகச் செயல்படும் செவிலி, "சாளுக்கிய அரசன் காஞ்சியில் ஆணை செலுத்தும்போது நீதான் அரசி"[101] என்று வாழ்த்தி இராஜசுந்தரியைக் கலம் ஏற்றிச் சாளுக்கிய நாட்டிற்கு அனுப்புகிறாள். இதை அறிந்த நரசிம்மன் தன் காதலி வாழ்ந்து வரும் நாகநாட்டிற்குக் கலத்தில் இராஜசுந்தரியை அனுப்பிவிடுகிறான். சிறிது காலம் சென்று நாகநாட்டு இளவரசி பச்சைக்கொடியை நரசிம்மன் மணந்து கொள்கிறான். தன் படைத்தலைவன் குமாரதேவனுக்கும் இராஜசுந்தரிக்கும் மணமுடித்து வைக்கிறான். அழகுமங்கையாகவும் ஆடலரசியாகவும் விளங்கிய இராஜசுந்தரி அவளாக அரசியலில் ஈடுபடாத போதும் மற்றவர்களால் பகடைக்காயாகப் பயன்படுத்தப்பெறுகிறாள்.

### 6. சாளுக்கிய நாட்டு அரசகுலம் சாராத பெண்கள்

1. சாலினி (மா.வீ)
2. தேவசோமை (மா.வீ)
3. குணரேகா (சி.வ)
4. பரிவாதினி (ப.வா)

இந்நான்கு பெண்களும் சாளுக்கிய நாட்டு அரசியலில் ஈடுபடுகின்றனர்.

## 1. *சாலினி*

பல்லவநாட்டின் கலைச்சிறப்பை உணர்ந்த சாளுக்கிய மன்னன் ‘சாலினி’ என்ற பெண்ணைப் பல்லவநாட்டிற்கு அனுப்பிப் பரிவாதினி என்ற புகழ்பெற்ற வீணையை யாரும் அறியாமல் கவர்ந்துவர நினைக்கிறான். அதன்படி சாலினி அனுப்பப்பெறுகிறாள். அவளுக்கு உதவியாக ஒற்றர்களும் அவ்வப்போது பல்லவநாட்டிற்கு அனுப்பப்பெறுகிறார்கள்.

பரமகுரு என்ற வீணைக் கலைஞன் பல்லவமன்னருக்குப் பரிவாதினியை எவ்வாறு இசைக்கவேண்டும் என்று கற்றுக்கொடுக்கிறான். அவனுக்கு உதவி செய்பவள் போல் சாலினி அவனுடன் தங்கி வீணையைக் கவரத்திட்டம் தீட்டுகிறாள். நாளடையவில் பரமகுருமேல் காதல் ஏற்படுகிறது. சாளுக்கிய மன்னன் சொன்னபடி யாருக்கும் தெரியாமல் வீணையைக் கவர்ந்து சாளுக்கிய நாடடிற்கு அனுப்பிவிட்டுத் தான் மட்டும் பல்லவநாட்டில் தங்கிவிட நினைக்கிறாள். சாலினியின் சாகசப் பேச்சும் அரசியல் சாதுர்யமும் கதைப்போக்கில் வெளிப்படுகிறது. யாரும் தன்னைச் சந்தேகிக்காதபடி நடிக்கும் பண்பு, மாற்றான் நாட்டில் தங்கி ஒற்றுவேலை பார்க்கும் ஓர் ஆண் மகனின் துணிவு அவளிடம் உள்ளது. தன்கையில் எப்போதும் ஒரு சுருள் கத்தி வைத்துள்ளாள்.

சாளுக்கிய நாட்டு ஒற்றன் குமரேசன், சாலினி–பரமகுரு காதல் பற்றி அறியாது அவளைக் காதலிக்கிறான். சாலினி மீது சந்தேகம் கொண்ட பல்லவமன்னன் உண்மையான வீணை ‘பரிவாதினியை’ மறைத்து வைத்துவிட்டுப் போலி வீணை ஒன்றை அனைவருக்கும் தெரியும்படி வைக்கிறார். அதுதான் உண்மையான வீணை என்று கருதிய சாலினி ஒற்றன் மூலம் அவ்வீணையைக் கவர்ந்து சாளுக்கிய நாட்டிற்கு அனுப்புகிறாள்.

குமரேசன் சாளுக்கிய நாட்டிற்குச் சாலினி உண்மையானவளாக இருந்தால் தன்னுடன் வந்துவிடவேண்டும் என்றும் பல்லவநாட்டில் சாலினி தங்கினால் எந்நேரமும் ஆபத்து ஏற்படலாம் என்றும்

கூறுகிறாள். பல்லவன் சந்தேகம் கொண்டால் "கோட்டைக்கதவுகள் மூடப்படும், அவள் சமாதி இங்கு எழுப்பப்படும்" என்று கூறிச்சாலினியைப் பிடித்து வலுக்கட்டாயமாக இழுக்கிறான். அதை ஏற்காத சாலினி அவனுடன் எதிர்த்துச் சண்டையிட்டுக் கத்தியால் குத்திக் கொல்கிறாள். பரிவாதினியைக் கவர வேடமிட்டு அலையும் தேவசோமையும் சாலினியைச் சாளுக்கிய நாட்டிற்கு வரும்படி வற்புறுத்துகிறாள். சாலினி மறுக்கிறாள். இவருவருக்கும் நடந்த சண்டையில் தேவசோமை தன் கையிலிருந்த சூலாயுதத்தால் சாலினியைக் கொல்கிறாள்.

அரசியலில் ஈடுபட்ட சாலினி எந்தச் சூழ்நிலையிலும் பின்வாங்காமல் சாளுக்கிய அரசன் இட்டக் கட்டளையை நிறைவேற்றி அவனுக்கு விசுவாசமாக உள்ளாள். தற்காப்புப் போர்க்கலைகள் பயின்றுள்ளாள். கடமையை முடித்துக் காதலை நிறைவேற்ற விரும்புகிறாள். கடமை முடிகிறது. காதலால் வாழ்வும் முடிகிறது.

## 2. தேவசோமை

தேவசோமை மண்டை ஓட்டை மாலையாக அணிந்த காபாலிகப் பெண் ஆவாள். சிவனை வணங்கிக் காடுகளிலும் மலைகளிலும் சுற்றித்திரியும் மதவெறியர்களின் கூட்டத்தைச் சேர்ந்தவள். கையில் சூலாயுதம் கொண்டுத் திரிபவள். மது அருந்தும் பழக்கமுள்ளவள். பல்லவநாட்டில் காபாலிகர்கள் அழிக்கப்பட்டதால் சாளுக்கிய நாட்டில் தஞ்சம் புகுந்தவள்.

சாலினியைக் கொன்றுவிட்டுக் குமரேசன் கையில் நழுவிக்கிடந்த வீணையைச் சாளுக்கிய நாட்டிற்குக் கொண்டு வருகிறாள். அதைச் சாளுக்கிய மன்னரிடம் கொடுக்கும் போது "பரிவாதினி என்ற அற்புத மாணிக்க வீணையை வைத்திருப்பதால் பல்லவனுக்குக் கலைக்கர்வம் அதிகம். அவன் கொட்டத்தை அடக்க முதல்வழி இதுதான்"[102] என்று பேசுகிறாள்.

துணிவும் எடுத்தக் காரியத்தை வெற்றிகரமாக முடிக்கும் பண்பும் தேவசோமையிடம் உள்ளது. அவள் வீணையைக் கவர்ந்து வந்தமைக்காகச் சாளுக்கிய மன்னன் பரிசளிக்க நினைத்து "உன் மகத்தான சேவைக்கும் நான் பரிசளித்தாக வேண்டும். மக்கள எதிரே உன்னைப்பாராட்டினால் இந்தச் சாளுக்கிய நாட்டில் உன் மதிப்பு உயரும்"[103] என்று புகழ்கிறான்.

தேவசோமை கொண்டுவந்தது உண்மையான வீணையில்லை என்பதைப் பின்னால் அறிந்த சாளுக்கிய மன்னன், தேவசோமையைச் சிறையிலடைத்துத் தண்டனை கொடுக்கச் சொல்கிறான். அரசியலில் ஈடுபடும் தேவசோமைக்குப் பாராட்டும் கிடைக்கிறது. பழியும் சேர்கிறது. பல்லவநாட்டில் சாளுக்கியனுக்கு உதவுவதாக வாக்களித்த சித்திரமாயனும் தேவசோமையைத் தன் அரசியல் திட்டங்களுக்குப் பயன்படுத்துகிறான். தேவசோமை கண்டிப்பாகவும், அழுத்தம் திருத்தமாகவும் பேசுவது அவனுக்குப் பிடித்திருக்கிறது. துடுக்கான பேச்சும், நறுக்கான சொல்லும் உடைய தேவசோமை ஆண்களோடு நெருங்கிப்பழகும் பண்புடையவளாதலால் அரசியல் ஈடுபாடு அவளுக்கு இலகுவாகிறது.

### 3. குணரேகா

குணரேகா, சாளுக்கிய மன்னன் ஜெயசிம்மனுக்குச் சோழநாட்டில் தங்கி உதவுவதற்காக யாரும் அறியாமல் சோழநாடு வருகிறாள். நன்கு நடனமாடத்தெரிந்தவள். அதனால் அரசனையும், அரசனைச் சார்ந்தவர்களையும் அறிகிறாள். ஜெயசிம்மன் துவாரபாலகர் சிலையைக் கவர்ந்து செல்வதை அறிந்து சோழநாட்டுப் பிரம்மராயர் உண்மையான சிலையை மறைத்து வைத்துவிட்டுப் பொய்யான சிலையைத் தாராசுரம் அனுப்புகிறார். சிலையுடன் இளஞ்சென்னியும் குணரேகாவும் செல்கின்றனர்.

ஜெயசிம்மன் இடையில் தோன்றி இளஞ்சென்னியைத் தாக்கிக் கீழே தள்ளிவிட்டுக் குணரேகாவைக் குதிரை மீதேறிச் செல்லச் சொல்கிறான். ஆண்வேடமிட்டுக் கொள்ளும்படி கூறுகிறான். அரசியலில் பங்குகொண்ட குணரேகா ஜெயசிம்மனுக்கு உதவிவிட்டுப் பின் அவனை மணக்கலாம் என நினைக்கிறாள். ஜெயசிம்மன் அவளை அரசியலுக்கு மட்டும் பயன்படுத்துகிறான்.

வெறும் பலத்தை மட்டும் கொண்டு ஒரு நாட்டை வென்றுவிடமுடியாது என்று கூறும் பிரம்மராயர், “இது அறிவுத்திறனோடு, பெண்கள் அரசியலில் புகுந்து தங்கள் திறமையைப் புலப்படுத்தும் காலம்”[104] என்று பெண்களின் அரசியலீடுபாட்டைக் குறிக்கிறார். சோழர்படை தங்கியிருந்த இடத்தில் குணரேகா நடனமாடுகிறாள். அவளுக்குப் பரிசளித்த சோழன் ஜெயசிம்மனைச் சந்திக்க வேண்டாம் என்கிறான். ஜெயசிம்மனை வெறுத்திருந்த குணரேகா தன்னைப்பற்றி சோழமன்னனிடம் கூறமுயலும் நேரத்தில் ஜெயசிம்மன் அங்குவந்து மிரட்டுகிறான். சீற்றம் கொண்ட குணரேகா “நான் நாட்டியப் பெண் மட்டுமல்ல. நாகப் பாம்பு. அடிபட்ட வேங்கை இருதயத்தில் குத்துண்டு இரத்தம் சிந்தாமல் தேக்கி வைத்திருப்பவள்”[105] என்று கூறுகிறாள். நேர்மையாகச் செயல்பட நினைப்பவளின் சினம் இச்சொற்களில் தெரிகிறது. குணரேகாவின் கொள்கைகளை அறிந்து கொண்ட பிரம்மராயர் இந்தக் காலத்தில் ஆண்களை விடப்பெண்கள் அரசியலில் சாமர்த்தியமாக விளங்குகிறார்கள் என்கிறார். ஆசிரியர் தன் கருத்தை இவ்வாறு வெளிப்படுத்துகிறார்.

குணரேகாவை ஜெயசிம்மன் சமாதானப்படுத்த முயன்றபோதும் அவனது பொல்லாத செய்கையைப் புரிந்துகொண்டு சித்திரவல்லியுடன் நல்ல நட்பை வளர்த்துக்கொள்கிறாள். சிலையைக் கொண்டு செல்லும் போது குணரேகாவின் கால் சிதைந்து விடச் சோழநாடு வந்து

இறைவனுக்குமுன் நடனமாட முடியாத நிலையில் மலர் வணக்கம் செய்கிறாள். தன் நாட்டு மன்னனுக்கு அரசியலில் உதவியபோதும் அவனது போக்குத் தவறு என்றறிந்தவுடன் மனம் மாறுகிறாள். சித்திரவல்லியின் நாட்டுப்பற்றோடு தன்னை ஒப்பிட்டுப் பார்த்து வெட்கிப்போகிறாள்.

### 4. *பரிவாதினி*

அஜந்தா குகை ஓவியங்களைப் பற்றி அறிந்திருந்த சிற்பியின் மகள் பரிவாதினி, தன் தாய் பெருந்தேவியிடம் நடனக் கலையைக் கற்றவள். அஜந்தா குகை ஓவியங்களை அறியப் பல்லவமன்னன் மகேந்திரவர்மன் மாறுவேடத்தில் அஜந்தா குகைக்குச் செல்கிறான். அப்போது பரிவாதினி அவனுக்கு உதவுகிறாள். இதையறிந்த சாளுக்கிய மன்னன் புலிகேசின் சினம்கொண்டு புத்தபிட்சுக்களைக் கண்டு பேசி அவனுக்கு உதவுபவர்களை இரகசியமாகக் கண்காணிக்கச் செய்கிறான்.

பரிவாதினியுடன் சேர்ந்து அஜந்தா குகை ஓவியங்களைக் கற்றுவந்த மகேந்திரனுக்குக் காய்ச்சல் வர பரிவாதினி மூலிகை மருந்துகளால் அவரைக் குணப்படுத்துகிறாள். இதைக் கவனித்த புத்தபிட்சுகளின் சூழ்ச்சியால் பரிவாதினி மடிகிறாள்.

தீய எண்ணம் ஏதுமில்லாமல் கலையைக் கற்க உதவிய பரிவாதினி அரசியல் சூழ்ச்சி செய்கிறாள் என்று கருதப்பெறுகிறாள். பெண் அறிந்தும், அறியாமலும் அரசியல் வலை அவளைச் சுற்றிப் பின்னப்படுகிறது. தனக்குக் கலையைக் கற்றுத்தந்த பரிவாதினியை மறக்காத மகேந்திரவர்மன் தான் கண்டுபிடித்த வீணைக்குப் 'பரிவாதினி' என்று பெயரிட்டு அவள் பெயரை வாழவைக்கிறான்.

### 7. காம்போஜ நாட்டு அரசகுலம் சாராத பெண்

'சைலேந்திரி' என்ற ஒரு பெண் மட்டும் காம்போஜ நாட்டிலிருந்து வந்து பல்லவ அரசனுக்கு உதவுபவளாகப்

படைக்கப்பெற்றுள்ளாள். வீணை கற்றுக்கொள்வதற்காகப் பல்லவ நாடு வரும் சைலேந்திரி பல்லவ நாட்டில் காணப்படும் அரசியல் சிக்கலில் மாட்டிக்கொள்கிறாள். ஒற்று, தூது, போர் என்ற வேலைகளில் சைலேந்திரி ஈடுபடவில்லை.

மகேந்திரவர்மனால் உருவாக்கப்பட்ட 'பரிவாதினி' என்ற வீணை சாளுக்கிய அரசர்களால் எந்நேரமும் கவரப்படும் என்ற சூழ்நிலை பல்லவ நாட்டில் ஏற்படுகிறது. பல்லவ மன்னன் போலி வீணை ஒன்றைச் செய்து பல்லவ நாட்டில் வைத்துவிட்டு உண்மையான வீணையைச் சைலேந்திரியின் மூலம் காம்போஜ நாட்டிற்கு அனுப்புகிறான். சாளுக்கிய மன்னன், பல்லவ மன்னனின் கலைச்சிறப்பைக் களவாட நினைக்கிறான். அதன்மூலம் பல்லவர்களின் புகழ் மறையும் என்று நம்புகிறான். அவன் ஆசை நிறைவேறாமல் போனதற்கு சைலேந்திரியின் பாத்திரப்படைப்பு பொறுப்பாகிறது.

சைலேந்திரி, வீணை கற்க வந்த பெண் என்பதால் அவளைப் பற்றி யாரும் சந்தேகம் கொள்ளவில்லை. உண்மையான வீணை மறைக்கப்பட்டு விட்டதால் பல்லவ நாட்டில் அதன் காரணமாக வீசிய அரசியல் சூறாவளி அடங்குகிறது. இவ்வாறு சைலேந்திரி உதவுகிறாள்.

## முடிவுரை

சமூகத்தின் பல கூறுகளுள் அரசியலுக்குச் சிறப்பான இடமுண்டு. அரசியலும் காலந்தோறும் தேவைக்கேற்பப் புதுப்புது பரிணாமங்களைப் பெற்று வளர்ந்திருக்கிறது. சமூகத்தின் நிகழ்வுகள் இலக்கியத்தில் பதிவாகின்றன. அவ்வகையில் அரசியல் குறித்த நிகழ்வுகளும் இலக்கியத்தில் பதிவாகியிருக்கும். அரசியலில் பெண்களின் பங்கை மதிப்பிடுவதாக இவ்வியல் அமைகிறது.

அரசகுலம் சாராதவர்களும் அரசியலில் ஈடுபடுவதை விக்கிரமன் தம் நாவல்களில் மிகுதியாகப் படைத்துள்ளார். அதற்கடுத்த நிலையில் அரச குலம் சார்ந்த பெண்கள் அரசியலில் ஈடுபடுவதாகச்

சித்தரித்துள்ளார். அரசகுலம் சாராத பெண்களில் திருமணம் ஆகாதவர்களே மிகுதியாக உள்ளனர். அரசகுலத்தில் தாய் நிலையிலிருந்து அரசியலில் ஈடுபடுபவர்கள் மிகுதியாக உள்ளனர். அரசகுலம் சாராத பெண்களைக் கதைத் தலைவியராக மிகுதியாகப் படைத்துள்ளார். அரசகுலம் சார்ந்த பெண்களில் சோழநாட்டுப் பெண்களை மிகுதியாகப் படைத்துள்ளதாக அறியமுடிகிறது.

அதற்கடுத்த நிலையில் பாண்டியநாடு, சாளுக்கியநாடு ஆகியவற்றைச் சார்ந்த அரசகுலப் பெண்கள் படைக்கப் பெற்றுள்ளனர். சேரநாட்டைச் சார்ந்த பெண்கள் முழுமையாக நாவல்களில் சித்தரிக்கப் பெறவில்லை.

குந்தவை (ந.பு.நா) அறம்வளர்செல்வி (தி.வ) புவனமுழுதுடையாள் (ஒ.வா.ஒ.ம.இ.வி) ஆகிய பெண்கள் சோழநாட்டரசியலில் தீவிரமாகச் செயல்பட்டவர்களாகச் சித்தரிக்கப்பெற்றுள்ளனர். செம்பியன் மாதேவி (சோ.ம, கொ.ம.கு) அரசியலில் இருந்து திருக்கோவிலுக்குப் பணிசெய்பவளாக இடம்பெறுகிறாள்.

சந்திரவதனாவின் (ஒ.வா.ஒ.ம.கி.வி) காதல் அரசியல் சார்பு பெற்றதாகக் கருதப்பெறுகிறது. குடும்பம் மற்றும் அரசியல் ஆகிய இரண்டு இயக்கங்களையும் பெண்கள் இயக்குபவர்களாக உள்ளனர்.

பாண்டியநாட்டுப் பெண்களில் முத்தம்மாள் (ம.ம) வானவன் மாதேவி (பா.ம) சித்திராதேவி (க.கோ.இ) ஆகியோர் அரசியல் விவேகத்துடனும், நாட்டுப்பற்றுடனும் அரசியல் பேசுபவர்களாகச் சித்தரிக்கப் பெற்றுள்ளனர். சித்திராதேவியின் அரசியலீடுபாட்டை மாலிக்காபூர் பாராட்டிய திறம் விக்கிரமனால் எடுத்தாளப்பெற்றது. இவள் ஆண்களைப் போலவே போர்செய்யும் ஆற்றலுள்ளவளாகச் சித்தரிக்கப் பெற்றுள்ளாள்.

ராணி மங்கம்மாள் (ஆ.அ;ம.ம) நாயக்கநாட்டு அரசியலில் திறமையுடன் ஈடுபட்ட வரலாற்றுப் பாத்திரமாகச் சித்தரிக்கப் பெற்றுள்ளாள். அரசியல் நுட்பம், முன்யோசனை, அரசியல் ஆலோசனை, தகுதிவாய்ந்த அரசியாய் இருத்தல் போன்ற நிலையில் சித்தரிக்கப் பெற்றுள்ளாள்.

தஞ்சைநாயக்கர் அரசியலில் ரங்கமாதேவி விவேகமிக்க செயல்பாடுள்ளவளாகச் சித்தரிக்கப் பெற்றுள்ளாள். அரசர்க்கே ஆலோசனை சொல்லுமளவிற்கு அரசியல் ஞானம் பெற்றவள்.

பல்லவநாட்டு அரசகுலப் பெண்களில் வைரக்கண்ணியின் காதலால் பல்லவ நாட்டிற்கும் சோழநாட்டிற்கும் பகை ஏற்பட்டுப் போர் நடக்கிறது. இவள் அரசியல் செய்யாவிட்டாலும் இவளை வைத்தே அரசியல் நடக்கிறது. சாளுக்கிய நாட்டு அரசகுலப்பெண் லோகமாதேவியின் அரசியல் பங்கு குறிக்கத்தக்கது.

அரசகுலம் சாராத பெண்களில் இளம்பெண்கள், பதியிலாதார், மற்றும் கலைப்பெண்கள் அரசியலில் ஈடுபட்டிருந்ததை ஆய்வின்வழி உணரமுடிகிறது.

சோழநாட்டரசியலில் இவ்வகைப் பெண்கள் மிகுதியாகவும், அடுத்த நிலையில் பாண்டிய நாடும், அதற்கடுத்துச் சமநிலையில் பல்லவ[illegible] சாளுக்கிய நாட்டுப் பெண்களும் சித்தரிக்கப்பெற்ற விதம் ஆய்வில் மதிப்பிடப் பெற்றது. சேரநாட்டு மயில்விழி (வ.வ) அரசனுக்கு அறிவுரைகூறி, ஒற்றும் தூதும் செய்பவளாகச் சித்தரிக்கப் பெற்றுள்ளாள். பைரவி, (யா.ந) பொன்னருவி (யா.ந) சிந்தாமணி (ப.கா) தேவகுஞ்சரி (தெ.வா.மோ) சித்திரவல்லி (சி.வ) காமவல்லி (இரா.ச) மலர்மங்கை (சோ.ம, கொ.ம.கு) அல்லிவிழி (தி.வ) இப்பெண்கள் சோழநாட்டரசியலில் ஈடுபட்ட அரசகுலம் சாராத பெண்களாவர். இவர்கள் நாட்டுப்பற்று, மன்னனுக்குக் கடமையாற்றுதல், தூதுசெல்லல், நாட்டிற்காகத் தியாகம் செய்தல் போன்ற நிலைகளில் நாட்டுக்காகவும் அரசியலுக்காகவும் உழைக்கின்றவர்களாகச் சித்தரிக்கப் பெற்றுள்ளனர்.

ரூபமதி (ம.ம), தேனாட்சி (ம.ம), எழினி (க.கோ.இ), குமுதா (மா.வ.கா), மலர்க்கொடி (பா.ம) ஆகியோர் பாண்டியநாட்டைச் சார்ந்த அரசகுலம் சாராத

பெண்கள். மன்னன் மீது மதிப்புக் கொண்டு ஒற்றுவேலை, போர்வேலை ஆகியவற்றில் இவர்கள் ஈடுபட்ட நிலை விக்கிரமனால் வெளிப்படுத்தப் பெற்றுள்ளது.

நாயக்க நாட்டரசியலில் செவிலி செண்பகம், (பா.ம), அங்கயற்கண்ணி (பா.ம) குறிக்கத் தகுந்தவர்கள். மீன்விழி (சோ.இ.க), மயிலழகு (சோ.இ.க), காஞ்சனா (கா.சு), சுந்தரி (கா.சு), இராஜசுந்தரி (க.ம.கா) ஆகியபெண்கள் பல்லவநாட்டரசியலில் ஈடுபட்ட பாங்கு விரித்துரைக்கப் பெற்றுள்ளது.

சாலினி (மா.வீ), தேவசோமை (மா.வீ), குணரேகா (சி.வ), பரிவாதினி (ப.வா) முதலிய பெண்கள் சாளுக்கிய நாட்டைச் சேர்ந்த அரசகுலம் சாராத பெண்களாவர். ஒற்றறிதல், வேற்றுநாட்டுப் பொருள் கவர்தல், தான் சார்ந்த நாட்டு மன்னனுக்கு உதவியாய் இருத்தல், தன் நாட்டு இரகசியங்களைக் கலைமீது கொண்ட ஆர்வத்தால் வெளியிடுதல் போன்ற வேலைகளில் இவர்கள் ஈடுபடுகின்றனர்.

காம்போஜ நாட்டைச் சார்ந்த சைலேந்திரியின் (மா.வீ) அரசியலீடுபாடு குறிக்கத்தக்கது.

## சான்றாதாரங்கள்


1. பா.இறையரசன், தமிழர் நாகரிக வரலாறு, ப,22.
2. கலைக் களஞ்சியம், தொகுதி ஒன்று, ப,155.
3. World University Encyclopadea - (Volume 12), P,4035.
4. Fathima Ehtesham Siddiqu, Political women, Page, 40.
5. முத்து சிதம்பரம், பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும், ப,109.
6. சபா.அருணாசலம், தமிழ் நாவல்களில் காந்தியத்தாக்கம், ப,137.
7. விக்கிரமன், ந.பு.நாயகி (முதல் பாகம்), ப,153.
8. விக்கிரமன், ந.பு.நாயகி (முதல் பாகம்), ப,272.
9. விக்கிரமன், ந.பு.நாயகி (முதல் பாகம்), ப,278.
10. விக்கிரமன், ந.பு.நாயகி (மூன்றாம் பாகம்), ப,479.
11. விக்கிரமன், ந.பு.நாயகி (மூன்றாம் பாகம்), ப,493.
12. விக்கிரமன், ந.பு.நாயகி (முதல் பாகம்), ப,255.
13. விக்கிரமன், ந.பு.நாயகி (மூன்றாம் பாகம்), ப,482.
14. விக்கிரமன், ந.பு.நாயகி (மூன்றாம் பாகம்), ப,255.
15. விக்கிரமன், ந.பு.நாயகி (முதல் பாகம்), ப,186.
16. விக்கிரமன், ந.பு.நாயகி, (முதல் பாகம்), ப, 187.
17. பி.சின்னையா, விக்கிரமன் நந்தி புரத்து நாயகி ஓர் ஆய்வு, ப,57.
18. விக்கிரமன், ந.பு.நாயகி (முதல் பாகம்), ப,441.
19. விக்கிரமன், ந.பு.நாயகி (முதல் பாகம்), ப,443.
20. விக்கிரமன், ந.பு.நாயகி (முதல் பாகம்), ப,481.
21. விக்கிரமன், ந.பு.நாயகி (முதல் பாகம்), ப,496.
22. விக்கிரமன், ந.பு.நாயகி (முதல் பாகம்), ப,520.
23. விக்கிரமன், ந.பு.நாயகி (மூன்றாம் பாகம்), ப,250.

24. விக்கிரமன், ந.பு.நாயகி (மூன்றாம் பாகம்), ப,254.

25. விக்கிரமன், ந.பு.நாயகி (மூன்றாம் பாகம்), ப,254.

26. விக்கிரமன், ஒரு வாள் ஒரு மகுடம் இருவிழிகள், ப,324.

27. விக்கிரமன், ஒரு வாள் ஒரு மகுடம் இருவிழிகள், ப,325.

28. பா.ராசமாணிக்கனார், தமிழர் ஆட்சி, ப,39.

29. விக்கிரமன், ஒரு வாள் ஒரு மகுடம் இருவிழிகள், ப,274.

30. விக்கிரமன், ஒரு வாள் ஒரு மகுடம் இருவிழிகள், ப,320.

31. விக்கிரமன், சோழ மகுடம், ப,60.

32. விக்கிரமன், தியாகவல்லபன், ப,62.

33. விக்கிரமன், தியாகவல்லபன், ப,79.

34. Tod's Annals of Rajasthan OP-eit - P-64

(முத்துஇலக்குமி, சாண்டில்யன் நெடுங்கதைகளில் பெண்மை என்ற நூலில் ப,81 இல் எடுத்தாளப்பெற்றுள்ளது).

35. விக்கிரமன், இராசாதித்தன் சபதம், ப,297.

36. விக்கிரமன், கங்காபுரிக் காவலன், ப,257

37. விக்கிரமன், கங்காபுரிக் காவலன், ப,485

38. விக்கிரமன், மதுரை மகுடம், ப,171.

39. விக்கிரமன், மதுரை மகுடம், ப,172.

40. விக்கிரமன், மதுரை மகுடம், ப,174.

41. விக்கிரமன், கன்னிக்கோட்டை இளவரசி, ப,

42. விக்கிரமன், கன்னிக்கோட்டை இளவரசி, ப,83

43. விக்கிரமன், மதுரை மகுடம்,ப,99.

44. விக்கிரமன், மதுரை மகுடம்,ப,101

45. விக்கிரமன், மதுரை மகுடம்,ப,97

46. விக்கிரமன், மதுரை மகுடம்,ப,148.

47. விக்கிரமன், மதுரை மகுடம்,ப,146.

48. விக்கிரமன், மதுரை மகுடம்,ப,147.

49. விக்கிரமன், மதுரை மகுடம்,ப,201.

50. Encyclopaedia of women Biography Edited by Nagendra K.Singh XPH Publishing corporation New Delhi - 2001, P,320.

51. விக்கிரமன், ஆலவாய் அரசி, ப,203.

52. விக்கிரமன், ஆலவாய் அரசி, ப,220.

53. முத்துலெட்சுமி, சாண்டில்யன் நெடுங்கதைகளில் பெண்மை, ப,77.

54. திருக்குறள், இன்னா செய்யாமை, குறள்எண்:315.

55. விக்கிரமன், வல்லத்து இளவரசி, ப,76.

56. விக்கிரமன், சோழஇளவரசன் கனவு, ப,419.

57. விக்கிரமன், மாணிக்கவீணை, ப,146.

58. விக்கிரமன், வஞ்சிநகர்வஞ்சி, முன்னுரை.

59. விக்கிரமன், வஞ்சிநகர்வஞ்சி, ப,149.

60. விக்கிரமன், வஞ்சிநகர்வஞ்சி, ப,156.

61. விக்கிரமன், யாழ்நங்கை, ப,25.

62. விக்கிரமன், யாழ்நங்கை, ப,127,128.

63. விக்கிரமன், யாழ்நங்கை, ப,11.

64. விக்கிரமன், யாழ்நங்கை, ப,53.

65. விக்கிரமன், தெற்குவாசல் மோகினி, ப,26.

66. விக்கிரமன், தெற்குவாசல் மோகினி, ப,47.

67. விக்கிரமன், தெற்குவாசல் மோகினி, ப,54.

68. விக்கிரமன், தெற்குவாசல் மோகினி, ப,100.

69. விக்கிரமன், தெற்குவாசல் மோகினி, ப,162.

70. விக்கிரமன், சித்திரவல்லி, ப,111.

71. விக்கிரமன், சித்திரவல்லி, ப,111.

72. விக்கிரமன், சித்திரவல்லி, ப,140.

73. விக்கிரமன், சித்திரவல்லி, ப,242.

74. விக்கிரமன், சித்திரவல்லி, ப,251.

75. விக்கிரமன், இராஜாதித்தன் சபதம், ப,156.

76. விக்கிரமன், இராசாதித்தன் சபதம், ப,157.

77. விக்கிரமன், சோழமகுடம், ப,32.

78. விக்கிரமன், சோழமகுடம், ப,285.

79. விக்கிரமன், தியாகவல்லபன், ப,66.

80. விக்கிரமன், மதுரை மகுடம், ப,95.

81. விக்கிரமன், மதுரை மகுடம், ப,94.

82. விக்கிரமன், மதுரை மகுடம், ப,94.

83. விக்கிரமன், மதுரை மகுடம், ப,170.

84. தொல், பொருள், கற்பியல், 34.

85. முத்துலெட்சுமி, பாண்டியன் நெடுங்கதைகளின் பெண்மை, ப,100.

86. K.Kailasapathy, Tamil Heroic Poetry, P,269.

87. விக்கிரமன், கள்ளிக்கோட்டை இளவரசி, ப,66.

88. விக்கிரமன், கள்ளிக்கோட்டை இளவரசி, ப,69.

89. விக்கிரமன், மாறவர்மன் காதலி, ப,120.

90. விக்கிரமன் மாறவர்மன் காதலி, ப,208.

91. விக்கிரமன், பாண்டிய மகுடம், ப,79.

92. விக்கிரமன், பாண்டிய மகுடம், ப,80.

93. விக்கிரமன், ஆலவாய் அரசி, ப,115.

94. விக்கிரமன், ஆலவாய் அரசி, ப,63.

95. விக்கிரமன், சோழஇளவரசன் கனவு, ப,19.

96. விக்கிரமன், சோழஇளவரசன் கனவு, ப,115.

97. விக்கிரமன், சோழஇளவரசன் கனவு, ப,21.

98. விக்கிரமன், சோழஇளவரசன் கனவு, ப,98.

99. விக்கிரமன், சோழஇளவரசன் கனவு, ப,215.

100. விக்கிரமன், காஞ்சி சுந்தரி, ப,100.

101. விக்கிரமன், கடல் மங்கைக் காதலி, ப,299.

102. விக்கிரமன், மாணிக்க வீணை, ப,294.

103. விக்கிரமன், மாணிக்க வீணை, ப,297.

104. விக்கிரமன், சித்திரவல்லி, ப,182.

105. விக்கிரமன், சித்திரவல்லி, ப,187.

# 6. கலையில் பெண்கள்

விக்கிரமனின் வரலாற்று நாவல்களில் சித்தரிக்கப்பெறும் பெண்களில் கலையில் ஈடுபட்ட பெண்களுக்குச் சிறப்பான இடமுண்டு. அவ்வாறு கலையில் ஈடுபட்ட பெண்களை விளக்கவியலில் ஆய்வதாக இவ்வியல் அமைகிறது.

## கலை விளக்கம்

மானிட வாழ்வு உண்ணல், உறங்கல், உடுத்தல் முதலியவற்றோடு நிறைவு பெறுவதில்லை. வாழ்க்கை சுலபமாகவும், மகிழ்வாகவும் அமைவதற்கு கலைகள் துணை நிற்கின்றன. கலைகள் அறிவு மற்றும் உணர்வோடு தொடர்புடையவை. மனித சமூக வளர்ச்சியில் கலைகளுக்குத் தனித்த பரிணாமம் உண்டு.

"கலை தன் அழகுக் கூறால் மக்கள் உள்ளங்களை இன்புறுத்துகிறது. வாழ்வில் ஏற்படும் சோர்வையும், துன்பத்தையும் களையும் கருவியாகப் பயன்படுகிறது."[1] இக்கருத்திலிருந்து கலைக்கு அழகியல் கூறு இருப்பதையும், அதனால் மகிழ்ச்சிப் பயன்பாடு இருப்பதையும் உணரலாம். இத்தகைய பயன்பாட்டினால் வாழ்வில் ஏற்படும் சோர்வை மனிதன் தவிர்க்க வாய்ப்பாகிறது.

தொழிலுக்கும் கலைக்கும் தொடர்பு உண்டு என்பது சிலர் சிந்தனையாகும். "மனித வாழ்விற்கு உதவுகிற எல்லாத் தொழில்களையும் கலைகள் என்று கூறலாம்"[2] என்ற கருத்துக் குறிப்பிடத்தக்கதாகும்.

"அன்றாட வாழ்வில் அழகுத் தொடர்புடையனவே கலைகள்"[3] என்றும் விளக்கம் கூறுவர். அவ்வகையில் கலைக்குப் பல விளக்கங்கள் இருப்பதை உணரலாம். பொதுவாக அழகும், பயன்பாட்டில் இன்புறுத்தலும் இருப்பதைக் கலையென மதிப்பிடலாம்.

கலைகள் ஆண், பெண் இருபாலர்க்கும் பொதுவானவை. விளையாட்டு எவ்வாறு இருபாலர்க்கும் பொதுவாக விளங்குகிறதோ அதுபோலவே கலைகளும் இருபாலர்க்கும் பொதுவாக விளங்குகின்றன. அழகு, மென்மை இவற்றின் அடிப்படையில் அமைந்த கலைகள் பெண்களுடன் தொடர்பாகின்றன. வலிமை, வீரம், அறிவுத்திறம் ஆகியவற்றைச் சார்ந்த கலைகள் ஆண்களுடன் தொடர்பாகின்றன. இத்தொடர்பு நிலைக்கு மாறாகவும் கலைகள் தொடர்பு பெறலாம். "ஆய கலைகள் அறுபத்து நான்கு"[4] என்ற வழக்கு நிலை இங்குக் கருத்தில் கொள்ளப்பெறலாம்.

### *கலையில் பெண்கள்*

பொதுவாக அழகு பெண்களோடு தொடர்புடையது. அவ்வகையில் அழகுணர்ச்சியை மையமிட்ட கலைகளும் பெண்களோடு இணையும்போது சிறப்பிடம் பெறுகிறது. கலையின் வாயிலாகப் பெண்கள் தம்மையும், சூழலையும் அழகுப்படுத்துகிறார்கள், இன்பமூட்டுகிறார்கள். கலை உணர்வு பெண்களிடம் இயல்பாகவே இடம் பெற்றிருப்பதாகக் கூறுவர். குழந்தை வளர்ப்பு முதல் பெண்களது அனைத்துச் செயல்களிலும் கலை அழகு மிளிர்ந்து விளங்குவதாகக் காணலாம்.

வாழ்க்கையில் ஒரு கூறாக இருந்த கலை காலப்போக்கில் வாழ்க்கையிலிருந்து பிரிந்து வளர்ச்சி பெற்ற நிலையை வரலாற்று வழியில் அறியலாம். சங்க காலத்தில் அந்நிலை உருப்பெற்றதாக மதிப்பிடலாம். ஏனெனில் கலை தொழில்போலக் கருதப்பெற்றதால் பாணர், விறலியர், கூத்தர் ஆகியோர் சமூகத்தில் தனித்து இயங்கினர். ஆடல், பாடல், இசைக்கருவிகளை இசைத்தல் ஆகியன அவர்களுக்கே உரித்தாயின. ஆனால் அவர்கள் அல்லாத பெண்கள் கலையோடு தொடர்புபடுத்திய நிலை இருந்ததாகத் தெரியவில்லை.

சிலப்பதிகாரத்திலும் கூடக் கணிகையர் குல மாதவிக்குக் கலையில் தேர்ந்த பயிற்சி இருந்தமை இங்குக் கருத்திற்குரியதாகும். மேற்குறித்த நிலைக்கு அறிஞர்கள் குறிப்பிடும் சிந்தனைகள் நினைவிற்குரியன.

"கலையில் உணர்ச்சி மிகுதி, உணர்ச்சி ஒழுக்கக்கேட்டிற்கு வித்தாகும் என்ற உட்கிடக்கையால் தான் சங்க காலச் சான்றோர்கள் பெண்களுக்குக் கலைநயம் இருந்தது என்று பாடவில்லை போலும். பிறர்நெஞ்சு புகாக் கற்பை வேண்டிய காலத்தில் கலை வாழ்வு பெண்ணெழிலைப் பிறர்துய்க்கும் பொருளாக்கிவிடும் என்று கருதியும் விடுத்திருக்கலாம்."[5]

சமணம், பௌத்தம் சமயங்கள் தமிழகத்தில் செல்வாக்குப் பெற்றபோது இசை, இசை சார்ந்த கலைகள் ஆகியன வரவேற்கப்படவில்லை. பொதுவாகச் சமணத்தில் பெண்களுக்குச் சிறப்புக் கொடுக்கப்பெறவில்லை. பெண்கள் வீடு பேற்றிற்கு நேராய்ப் போக முடியாதென்றும் மறுபடியும் ஆண் பிறப்பெடுத்துத்தான் போகவேண்டும் என்றும் நம்பிக்கை வைத்திருந்தனர். இச்சூழலில் பக்தி இயக்கம் இசையை மையமிட்டே வந்தது. "நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பும் ஞானசம்பந்தர்" என்ற வழக்கும் கருதத்தக்கதாகும். பெண்களும், இல்லறமும் போற்றப்பெற்றது. கலைகளின் வாயிலாக இறைவனை அடையலாம் என்ற கருத்தும் வளம்பெற்றது. இறைவனையே 'நடராசன்' என்றும், 'கூத்தப்பெருமான்' என்றும் 'கூத்தன்' என்றும் குறித்தனர்.

எனினும் கலையில் ஈடுபட்ட பெண்களால் சமூகத்திற்குப் பெரும் மாற்றம் ஏற்படவில்லை. கலைகள் கோயில் சார்ந்து வளம்பெற்றன. கலைக்குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள் திருக்கோயிலோடு தொடர்புடையவர்களாக வாழவேண்டி இருந்தது. இவர்கள் திருமணம் செய்வதற்கு வாய்ப்பில்லை. 'பதியிலார்' என்று அவர்கள் அழைக்கப்பெற்றனர்.

இராசராச சோழன் காலத்தில் தஞ்சாவூர்ப் பெரியகோயிலைச் சார்ந்து இப்பதியிலார் வாழ்ந்ததைக் கல்வெட்டுச் சான்றுகள் மெய்ப்பிக்கின்றன.

வரலாற்றுக் குறிப்பிலிருந்து வரலாற்று நாவல் எழுதுகிறவர்கள் முற்சுட்டியவாறு கலைக்கும் பெண்களுக்கும் உள்ள தொடர்பை நன்குணர்ந்து தம் நாவல்களில் வெளிப்படுத்துகின்றனர். அவ்வெளிப்பாடு எதார்த்தமாகவும் இருக்கலாம், கற்பனையாகவும் இருக்கலாம், அந்தப் பெண்களுக்கு ஆதரவாகவும் இருக்கலாம். இவையெல்லாம் படைப்பிலக்கிய ஆசிரியன் ஆளுமையைப் பொறுத்து மாறுபடும். விக்கிரமன் நாவல்களில் கலைப்பெண்கள் எவ்வாறு பதிவு செய்யப்பெற்றுள்ளனர் என்பதை இனிவரும் பகுதியில் காணலாம்.

## *விக்கிரமன் கதைகளில் கலைப்பெண்கள்*

கலைகளை நுண்கலைகள், பயன்கலைகள் என்றிருவகைப்படுத்தலாம். ஓவியம், சிற்பம், இசை, இலக்கியம், நடனம் முதலிய கலைகள் 'நுண்கலைகள்' அல்லது கவின்கலைகள் என்று வழங்கப்பெறும். மருத்துவம், சமையல், ஒப்பனை அறிவுக்கூர்மை, சைகை மொழியறிவு, பிறமொழியறிவு முதலியன பயன்கலைகள் எனப்பெறும்.

விக்கிரமனின் நாவல்களில்வழி புலப்படும் கலைகள் பின்வருமாறு வகைப்படுத்தப்படுகின்றன.

1. நுண்கலைகள்.
2. பயன்கலைகள்.

## 1. *நுண்கலைகள்*

ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பெற்ற இருபத்தைந்து நாவல்களில் 14 நாவல்களில் மட்டும் நுண்கலைப் பெண்களைக் குறித்த செய்திகள் கிடைக்கின்றன. இப்பெண்கள் நுண்கலையில் சிறந்திருந்ததாக நாவல்களில் படைக்கப்பெற்றுள்ளனர். நுண்கலைகள் வரிசைப்படுத்தப்பெற்று அதில் திறம் பெற்றிருந்த பெண்களை நாட்டின் அடிப்படையில் பின்வரும் அட்டவணை விளக்குகிறது.

## நுண்கலைகள்

அட்டவணை 6.1

| எண் | நாவலின் பெயர் | நாட்டின் பெயர் | ஓவியம் | நடனம் | நாடகம் | இசையும் பாட்டும் |
|---|---|---|---|---|---|---|
| 1. | கடல்மல்லைக் காதலி | பல்லவ நாடு | - | இராஜசுந்தரி சந்திரமாலா | இராஜசுந்தரி சந்திரமாலா | - |
| 2. | காஞ்சி சுந்தரி | பல்லவ நாடு | - | காஞ்சனா, சுந்தரி | காஞ்சனா | - |
| 3. | பரிவாதினி | சாளுக்கிய நாடு | பரிவாதினி | - | - | பரிவாதினி |
| 4. | சோழ இளவரசன் கனவு | பல்லவ நாடு | - | மயிலழகு | - | - |
| 5. | சித்திரவல்லி | சோழநாடு | - | குணரேகா | - | - |
| 6. | தெற்கு வாசல் மோகினி | சோழநாடு | - | - | தேவகுஞ்சரி | பரவை நங்கை |
| 7. | நந்திபுரத்து நாயகி | சோழநாடு | - | இன்பவல்லி | - | இன்பவல்லி |
| 8. | மங்கலத்தேவன் மகள் | சோழநாடு | - | சிந்தாமணி | - | செங்கமலம் |
| 9. | வஞ்சி நகர் வஞ்சி | சோழநாடு<br>சேரநாடு | - | மரகதவல்லி<br>மயில்விழி | - | - |
| 10. | சோழ மகுடம் | சோழநாடு | - | மலர்மங்கை | - | மலர்மங்கை |
| 11. | கொன்றை மலர்க்குமரி | சோழநாடு | - | மலர்மங்கை | - | மலர்மங்கை |
| 12. | யாழ்நங்கை | சோழநாடு | - | - | - | பைரவி, பொன்னருவி |
| 13. | மாணிக்கவீணை | பல்லவ நாடு | - | - | - | சைலேந்திரி |
| 14. | கங்காபுரிக் காவலன் | சோழநாடு | - | வீரம்மாள் (எ) வீரம்மாதேவி | - | - |

விக்கிரமனின் பதினொரு நாவல்களில் 24 பெண்கள் நுண்கலைத் தொடர்புடைய பெண்களாகச் சித்தரிக்கப்பெற்றுள்ளனர்.

நாடுகளின் அடிப்படையில் பெண்களை மதிப்பிடும் பொழுது சோழநாட்டைகளமாகக் கொண்டு அமையும் நாவல்களில் கலைப்பெண்கள் மிகுதியாகச் சித்தரிக்கப்பெற்றுள்ளார்கள். சோழர்காலத்தில் "கோயில்களுக்கு நூற்றுக்கணக்கில் நடனமாதுக்கள் இருந்தனர். சோழர்காலம் நடனமாதுக்களின் காலமாகியது. மக்களைச் சமயத்தில் கவரவும், மேற்குடியினரின் பொழுதுபோக்குக்கும் நாடகம், நடனம், கூத்து, நாட்டிய நாடகம் போன்றவை பயன்படுத்தப்பட்டன"[6] என்ற கருத்து இங்குக் கருதத்தக்கது. வரலாற்று மெய்ம்மைகளுக்கேற்ப விக்கிரமனும் சோழநாட்டுக் கதைக்களங்களில் கலைப்பெண்களை மிகுதியாகப் படைத்துள்ளார்.

சோழநாட்டை அடுத்துப் பல்லவநாட்டை மையமாக வைத்து எழுதப்பெற்ற நாவல்களில் கலைப்பெண்கள் மிகுதியாகப் படைக்கப்பெற்றமையை அறிய முடிகிறது.

ஓவியம், நாடகம், நடனம், இசை என்ற கலைப்பாகுபாட்டில் நடனக்கலை சார்ந்து அமையும் பெண்கள் எண்ணிக்கையில் மிகுதியாக இருக்கின்றனர். சித்தரிக்கப்பெற்ற கலைப்பெண்களில் திருமணம் ஆகாத பெண்கள் மிகுதியாக உள்ளனர்.

குடும்பத்துப்பெண்கள் கலைகளில் ஈடுபட்டுக் கலைகளை வளர்த்ததாக நாவலில் பதிவுகள் மிகுதியாக இல்லை. பதியிலார் குடும்பத்தைச் சார்ந்த கலைப்பெண்கள் மிகுதியாகச் சித்தரிக்கப்பெற்றுள்ளனர். கண்ணையும் கருத்தையும் கவரும் கலையாக நடனக்கலை அமைந்துள்ளதால் அக்கலை அதிக முக்கியத்துவத்துடன் சொல்லப்பெறுகிறது. அழகும் இளமையும் அக்கலைக்கு தேவை. எனவே இளம்பெண்கள் அக்கலை சார்ந்து படைக்கப்பெற்றுள்ளதாக மதிப்பிடலாம்.

விக்கிரமன் நாவல்களில் இடம் பெற்றிருக்கும் நுண்கலைப் பெண்களைக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்திப் பார்க்கலாம்.

1. ஓவியக்கலைப் பெண்கள்.
2. நடனக் கலைப் பெண்கள்.
3. நாடக கலைப் பெண்கள்.
4. இசைக்கலைப் பெண்கள்.

மேற்கண்ட கலைகளில் பெண்கள் பங்கு பெற்ற விதத்தை இனி விரிவாகக் காணலாம்.

## 1. ஓவியக் கலைப் பெண்கள்

கலைகளில் ஓவியக்கலைக்குச் சிறப்பான இடமுண்டு. "ஓவியம் என்ற சொல் ஒவ்வு" என்னும் சொல்லில் இருந்து பிறந்தது என்பர். ஒன்றைப் போலவே இருப்பது அல்லது ஒன்றைப் பெறுவது என்பது இதன் பொருளாம்"[7] என்று ஓவியத்தை வரையறுப்பர். மனித நாகரிகத்தை அளவிடக் கூடியவர்கள் பழங்கால ஓவியங்களையும் கருத்தில் கொண்டுள்ளனர்.

தமிழக வரலாற்றில் பல்லவர் காலத்தில் ஓவியங்கள் சிறப்புற்றிருந்தன. இந்நிலைக்கு வரலாற்று மெய்ம்மைகளும் சான்றாகின. "மகேந்திரவர்மன் வாழ்ந்திருந்த ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் ஓவியக்கலை மிகச் சிறப்படைந்திருந்தது. மகேந்திரவர்மன் தமிழ்நாட்டில் புதிதாகக் குகைக் கோயில்களை அமைத்து அக்குகைக்கோயில்களின் சுவர்களில் ஓவியங்களை எழுதினான். சித்திரங்கள் தக்கபடி பாதுகாக்கப்படாவிட்டால் எளிதில் அழிந்துவிடக்கூடியவை. ஆதலால் அக்காலத்துச் சிற்பங்கள் பாதுகாக்கப்படாமல் அழிந்துவிட்டன. மிகுந்துள்ளவை மிகச் சொற்பமே"[8] என்பது வரலாற்று அறிஞர்களின் கருத்தாகும். அழிந்து விடாமல் எஞ்சியிருப்பவைகளில் சித்தன்னவாசல் ஓவியமும் அடங்கும்.

மகேந்திரவர்மன் ஓவியக்கலையில் தேர்ச்சி பெற்றவன். அவனுக்குள்ள பல பெயர்களில் ‘சித்திரக்காரப் புலி’ என்ற சிறப்புப் பெயரும் உண்டு. திருச்சிராப்பள்ளி குகைக்கோயில்களிலும் பல்லாவரத்துக் குகைக்கோயில்களிலும் இப்பெயர் குறித்த பல்லவ தமிழ் எழுத்துக்கள் காணப்பெறுகின்றன.

கல்கி கலைகளின் நிலைகளைப் பயன்படுத்தித் தம் வரலாற்று நாவல்களை உருவாக்கினார். சிவகாமியின் சபதம், பார்த்திபன் கனவு ஆகிய நாவல்களில் இவ்வகைக் கலைகளை மையமிட்டுக் கதைப்பின்னணி நிகழ்ச்சிகளும் அமைந்துள்ளன. தம்முடைய நாவலான சிவகாமி சபதத்தில் அவர் குறிப்பிடும் செய்தியாவது, “தெற்கே பாண்டிய நாட்டின் எல்லையிலிருந்து வடக்கே கிருஷ்ணா நதிவரையில் பரந்திருந்த பல்லவ சாம்ராஜ்யத்தில் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு மகேந்திர சக்கரவர்த்தி சிறப்புடன் ஆட்சிபுரிந்து கொண்டிருந்த காலத்தில் தமிழகமெங்கும் ஓர் அதிசயமான கலை மறுமலர்ச்சி ஏற்பட்டிருந்தது. செந்தமிழ் நாடெங்கும் மகாசிற்பங்களும் சித்திரக்கலைஞர்களும் தோன்றிச் சிற்ப சித்திரக் கலைகளை அற்புதமாக வளர்த்து வந்தார்கள். குன்றுகளைக் குடைந்து கோவிலாக்கும் கலையும் கற்பாறைகளில் சிற்பங்களைச் செதுக்கும் கலையும் சிறந்திருந்தது”[9] இச்செய்தி நர்வலில் கூறப்பெற்றிருந்தாலும் வரலாற்றுடன் பொருந்துவதாகவும் அமைந்துள்ளது.

மகேந்திரவர்மர் சாளுக்கிய நாட்டில் உள்ள அஜந்தா, ஓவியங்களைக் குறித்து அறிந்து கொள்வதில் ஆர்வமுள்ளவராக இருக்கிறார். சிவகாமியின் சபதத்தில் அஜந்தா ஓவியத்தின் இரகசியத்தை அறிவதற்கு ஆயனர் பரஞ்சோதியை அனுப்புவதாகக் கதைப்போக்கு அமைகிறது. வரலாற்று நாவலில் கல்கி ஓவியக்கலைக்குச் சிறப்பிடம் கொடுத்திருப்பதை அவரது பல நாவல்களிலும் அறியலாம். கல்கியின் பொன்னியின் செல்வனால்

கவரப்பெற்றுத் தொடர்ந்து பொன்னியின் செல்வன் பாத்திரங்களை மையப்படுத்தி, விக்கிரமன் நந்திபுரத்து நாயகி என்ற நாவலை உருவாக்கினர். இச்செய்திலிருந்து கல்கியின் தாக்கம் விக்கிரமனிடம் இடம்பெற்றிருப்பதை உணரலாம்.

அத்தாக்கத்தின் விளைவால் 'பரிவாதினி' நாவலை முழுக்க ஓவியக்கலையை மையப்படுத்தி நிகழ்ச்சிகளை அமைத்துச்செல்கிறார். அஜந்தா ஓவியங்கள் அழியாத வர்ண நிறத்தைப்பெற்றிருக்கின்றன.

அவ்வர்ணக் கலவையின் இரகசியத்தை அறியும் பொருட்டு மகேந்திரவர்மனே சாளுக்கிய நாட்டிற்குச் செல்கிறார். அங்கே பரிவாதினி என்ற பெண்ணைச் சந்திக்கிறார். இப்பெண்ணின் தந்தை ஓவியக்கலையில் திறம் பெற்றவர்.

அஜந்தா ஓவியங்களை உருவாக்கும் பொருட்டுத் தலைசிறந்த ஓவியர்களுக்கு இவர் துணையாக இருந்திருக்கிறார். அவரது ஓவியப் புலமை இயற்கையாகவே பரிவாதினிக்கு அமைந்திருக்கிறது.

மகேந்திரவர்மன் மாறுவேடத்தில் சென்று பரிவாதினியிடம் பழகி வர்ணங்களின் இரகசியத்தை அறிய முற்படுகிறான். அதன்படி "சித்தன்னவாசல் மண்டபத்து விதானத்திலே ஓவியங்கள் தீட்டும் பணி ஆரம்பமாயிற்று. ஒருவகைக் களிமண்ணால் ஒரு நெல் அளவுக்கு முதலில் பாறைமீது பூசப்பட்டது. பரிவாதினி பலவித நடனத் தோற்றங்களை ஆடிக்காட்டினாள். அவள் முன்பு ஒருமுறை குறிப்பிட்ட நாதாந்த நடனத்தின் தோற்றம் மகேந்திரனுக்குப் பிடித்திருந்தது. சித்திரசேனன் மஞ்சள் கிழங்கை எடுத்து வரிவடிவமாக அத்தோற்றத்தை வரைந்தான். எந்த எந்த வர்ணத்தை எப்படி எப்படி அமைப்பது என்பதைக் கலந்தாலோசித்தார்கள்."[10] வண்ணங்களை எப்படி உருவாக்குவது என்பதைப் பரிவாதினி சொல்கிறாள். சிறுபாறை ஒன்றை எடுத்துக் கற்கள் சிலவற்றைப் பொடியாக்கினாள். எங்கிருந்தோ பச்சிலை கொண்டுவந்து அதன் சாற்றை அதில் பிழிந்தாள் அப்போது பாறையின் மீது சிவப்பு, பச்சை, மஞ்சள் நிறக்குழம்பு வழிந்தோடியது. அதை அறிந்து கொண்ட மகேந்திரன்

பிற்காலத்தில் பல்லவ நாட்டையே கலைப் பூமியாக்கினான் என்ற செய்தி கதைப்போக்கில் கூறப்பெறுகிறது.

“அஜந்தா கோயில்களிலுள்ள ஓவியங்களில் பயன்படுத்தப் பெற்றவை கனிப்பொருள் வர்ணங்கள் (MINERAL COLOURS) என்று நீலகண்ட சாஸ்திரி கூறுவதை ஆதாரமாக் கொண்டு கல்கி மேற்கண்ட வர்ண இரகசியத்தை அமைத்துக் கொண்டார்”[11] என்று குறிப்பிடுவர். விக்கிரமனும் கல்கியின் தாக்கம் பெற்றதால் அந்நூலைத் தக்க முறையில் பயன்படுத்தித் தனது கதை நிகழ்ச்சிகளில் இணைத்துக் கொண்டுள்ளனர்.

ஓவியக்கலையில் திறம்பெற்ற பரிவாதினி மறைமுக வேடத்திலிருந்த மகேந்திரவர்மனைக் காதலிக்கிறாள். பின்னால் அவன் பல்லவ மன்னன் என்றறிந்ததும் மிகுந்த மரியாதை செலுத்துகிறாள். மகேந்திரவர்மனுக்கு மானிடக் காதலைவிட அஜந்தா குகை வர்ண இரகசியங்களை அறிவதில்தான் காதல். இருப்பினும் பரிவாதினி இரகசியத்தைப் பல்லவனுக்குச் சொன்னமைக்காகக் சாளுக்கியர்களால் கொல்லப் பெறுகிறாள். அவளை மையப்படுத்தியே விக்கிரமன் நாவலுக்கு ‘பரிவாதினி’ என்று பெயரிட்டிருப்பது கலைக்கு அவர் தரும் சிறப்பு எனக்கருத இடமுண்டு.

## 2. நடனக் கலைப்பெண்கள்

நுண்கலைகளுள் ஒன்று நடனக்கலை. கண்ணால் பார்த்ததைக் காதால் கேட்டதை, ஏட்டில் எழுதிவைத்திருப்பதை இதயத்தில் நினைப்பதையெல்லாம் முக உணர்ச்சி மூலம் கரங்களின் மூலம் பாத அசைவுகளின் மூலம் புலப்படுத்தமுடியும் நாட்டியம், நிருத்தியம், அபிநயம் இவையெல்லாம் தெய்வீகக் கலைகள்.

“நிருத்தம் என்ற சொல் அழகிய உடல் அசைவுகளைக் கொண்ட நடனக்கலையைக் குறிக்கும். உடல் அழகினையும். நெளிவுசுளிவுகளின் குழைவுகளையும். தாளக்கூறுகளின் விசித்திரக்

கூர்மையினையும், பொறிபறக்கும் பாத ஜாலங்களையும் இசை, அதன் தாளம் இவற்றின் வல்லின மெல்லினங்களையும் உருவகப்படுத்தும் உன்னதக் கலை நிருத்தியம்”[12] என்று நடனக்கலை வரையறுக்கப்படுகிறது.

சில நொடிகளில் உணர்ச்சியை வெளிப்படுத்தும் இந்தக் கலை பெண்களுக்கு அரிய பெரிய வாய்ப்பாக அமைகிறது. கோயிலில் ஆடிய நடனம் நிருத்தியம் என்றழைக்கப்படுகிறது. நிருத்தியமாடிய பெண்கள் கலையில் திறம் பெற்றவர்களாகக் கருதப்பெற்றனர்.

விக்கிரமனின் வரலாற்று நாவல்களில் இடம்பெறும் நடனக்கலைப் பெண்களைப் பற்றி இப்பகுதி விளக்குகிறது. அப்பெண்கள் நாட்டினடிப்படையிலும் அவர்கள் சார்ந்த குலத்தின் அடிப்படையிலும் வகைப்படுத்தப் பெறுகின்றனர். அதைக் கீழ்க்காணும் அட்டவணை விளக்குகிறது.

அட்டவணை 6.2

## நடனக்கலைப்பெண்கள்

| எண் | நாவல் | நாடு | நடனக்கலைப் பெண்கள் | குலம் |
|---|---|---|---|---|
| 1. | கடல்மல்லைக் காதலி | பல்லவ நாடு | இராஜசுந்தரி | பதியிலாதார் |
| 2. | கடல்மல்லைக் காதலி | பல்லவநாடு | சந்திரமாலா | ஓவியரின் மகள் |
| 3. | காஞ்சி சுந்தரி | பல்லவநாடு | காஞ்சனா | பதியிலாதார் |
| 4. | காஞ்சி சுந்தரி | பல்லவநாடு | சுந்தரி | பதியிலாதார் |
| 5. | பரிவாதினி | சாளுக்கிய நாடு | பரிவாதினி | ஓவியரின் மகள் |
| 6. | சித்திரவல்லி | சாளுக்கிய நாடு | குணரேகா | பதியிலாதார் |
| 7. | தெற்கு வாசல் மோகினி | சோழ நாடு | தேவகுஞ்சரி | பதியிலாதார் |
| 8. | நந்திரபுரத்து நாயகி | முல்லைத் தீவு | இன்பவல்லி | சாதாரண குலம் |
| 9. | மங்கலத்தேவன் மகள் | சோழ நாடு | சிந்தாமணி | சாதாரண குலம் |
| 10. | வஞ்சி நகர் வஞ்சி | சோழ நாடு | மரகதவல்லி | பதியிலாதார் |
| 11. | வஞ்சி நகர் வஞ்சி | சோழ நாடு | மயில்விழி | பதியிலாதார் |
| 12. | சோழ மகுடம் | சோழ நாடு | மலர்மங்கை | பதியிலாதார் |
| 13. | கொன்றை மலர்க்குமரி | சோழ நாடு | மலர்மங்கை | பதியிலாதார் |
| 14. | கங்காபுரிக் காவலன் | சோழ நாடு | வீரம்மாள் | சாதாரண குலம் |
| 15. | சோழ இளவரசன் கனவு | பல்லவ நாடு | மயிலழகு | சிற்பியின் மகள் |

விக்கிரமனின் இருபத்தைந்து நாவல்களில் அட்டவணையில் இடம்பெறும் பன்னிரெண்டு நாவல்களில் நடனக்கலைப் பெண்களைப் பற்றிய செய்திகள் இடம்பெறுகின்றன.

சோழநாட்டைச் சார்ந்த பெண்கள் மிகுதியாக (7) உள்ளனர். பல்லவநாட்டை சார்ந்த பெண்கள் அடுத்த நிலையில் (5) சித்தரிக்கப்பெறுகின்றனர். சாளுக்கிய நாட்டைச் சார்ந்தவர்கள் இரண்டு பேர் ஆவர்.

அரசர்கள் காலத்தில் பதியிலாதார் குலத்தில் உள்ள பெண்கள் கலைகளில் சிறந்திருக்கின்றனர். விக்கிரமன் நாவல்களில் நடனக்கலையில் ஈடுபட்டிருந்த பதின்மூன்று பெண்களில் ஏழுபேர் பதியிலாதார் குலத்தைச் சார்ந்தவர்களாகச் சித்தரிக்கப்பெற்றிருப்பது குறிக்கத் தக்கதாகும்.

கலைக்குடும்பத்தைச் சார்ந்த பெண்கள் கலையில் சிறந்துள்ளனர் என்பதை விக்கிரமனின் நாவல்களில் இடம்பெறும் சந்திரமாலா, பரிவாதினி, மயிலழகு என்ற பாத்திரங்களின் வழியறியலாம். ஓவியரின் மகள்களாகவும் சிற்பியின் மகள்களாகவும் இவர்கள் சித்தரிக்கப்பெற்றுள்ளனர்.

கலை அனைவருக்கும் பொது. கலை ஆர்வமுள்ளவர்கள் சாதாரணக் குடும்பத்திலிருந்தும் கலையில் சிறந்திருக்கிறார்கள் என்பதை இன்பவல்லி, சிந்தாமணி, வீரம்மாள் போன்ற பாத்திரப்படைப்புகள் வழி உணரமுடிகிறது.

நடனக்கலைப் பெண்கள் நாட்டின் அடிப்படையில்,

1. பல்லவ நாட்டு நடனக்கலைப்பெண்கள்.
2. சாளுக்கிய நாட்டு நடனக்கலைப் பெண்கள்.
3. சோழநாட்டு நடனக்கலைப் பெண்கள்.

என்று வரிசைப் படுத்தப்பெற்று இனிவரும் பகுதியில் விளக்கமான செய்திகள் கூறப்பெறுகின்றன.

### 1. பல்லவ நாட்டு நடனக்கலைப் பெண்கள்

இராஜசுந்தரி கடல்மல்லையில் சித்தரிக்கப்பெறுகிறாள். இராஜசுந்தரி பல்லவநாட்டில் செவிலித் தாயுடன் வாழ்ந்து வருகிறாள். சிறந்த நடனக்காரி இராசநர்த்தகி அவளது அழகும் நாட்டியத்திறமையும் போட்டி போட்டுக்கொண்டு அவளது சிறப்பைப் புலப்படுத்தின. ஏகாம்பர நாதர் கோயிலில் அபிநயம் பிடித்து ஆடுபவள் என்பதை "உச்சிவேளை ஏகாம்பரநாதர் சந்நிதியில் நான்இன்று நாவுக்கரசரின் திருத்தாண்டகத்துக்கு அபிநயம் பிடித்து ஆடுகிறேன்"[13] என்ற அவளது கூற்றால் அறியலாம்.

பதியிலார் குலத்தைச் சேர்ந்த பெண்ணாதலால் அவளோடு பேசவும், அவளைக் கண்டு மகிழவும் பெருஞ்செல்வந்தர்களும் அவள் வாசலில் காத்துக்கிடப்பதுண்டு. "தன்னை அணைப்பதற்குத் தன்னுடன் உரையாடுவதற்குத் தன் நாடடியத்தை இரசிப்பதற்குக் காஞ்சி நகரத்து இளையோரும், பெரியவரும் முதியவரும் செல்வந்தரும் செல்வாக்கு உள்ளவரும் ஆளுங் கணத்தவரும் போட்டிபோட்டுக்கொண்டு முந்தி வருகிறார்கள்"[14]. என்று தன்னைப் பற்றி நினைக்கும் இராஜசுந்தரிக்கு அவளது வாழ்க்கை முறை பிடிக்கவில்லை. நாட்டில் அனைவரும் அறிந்தவளாகத் திகழ்வதற்கு இராஜசுந்தரியின் அழகும் கலையுமே காரணம்.

நரசிம்மன் உள்ளத்தில் இராஜசுந்தரி நடன ஆசிரியையாய் இருந்து நாகநாட்டுச் சிறுமிக்குக் கற்றுக் கொடுத்த நடனம் தோன்றுகிறது. "அழகிய முகமும், கரங்களும் செம்பொற்பாதங்களும் காணப்பட்டன. முகத்தில் உள்ள கருவிழிகள், கருவண்டினைப் போல் வட்டமிட்டுப் பறந்தன. இரு கரங்களும் யானையின் துதிக்கையைப் போல் அசைந்தாடின. இருபாதங்களும் மஞ்ஞையின் பாதநெளிவுகளுக்கு இணையாயின"[15] என்ற செய்தியின் மூலம் இராஜசுந்தரி நடனம் சொல்லிக்கொடுக்கும் திறமையை உணரலாம்.

கலையில் சிறந்த பெண்கள் அரசகுடும்பத்தோடு நெருங்கிய உறவு கொண்டவர்களாக இருந்துள்ளனர். அவர்களை அழைத்து அரசர் கலையின் நிலையை விசாரிக்கும் அளவுக்கு மதிப்புப் பெற்றவர்களாகக் கலைப்பெண்கள் திகழ்கின்றனர். பல்லவ மன்னனோடு பகைமை கொண்டிருந்த சாளுக்கிய மன்னன் காஞ்சி நர்த்தகி இராஜசுந்தரி தம் வசப்பட்டால் பல்லவர்களின் கொட்டத்தை அடக்கி விடலாம் என்று திட்டம் தீட்டுகிறான். கலை அனைவருக்கும் பொது என்பதால் கலையில் ஈடுபட்ட பெண்களை அணுகித் தங்களுக்கு நன்மை பயக்கும் வகையில் பயன்படுத்த நினைக்கின்றனர்.

இராஜசுந்தரியின் நாட்டியத்திறமையைக் காஞ்சியில் அனைவரும் அறிகின்றனர். அவளது அழகும், கலைத்திறமையும் அனைவரையும் கவர்கின்றன. அவள் காலடியில் விழப் பெருஞ் செல்வந்தர்கள் சித்தமாய் இருக்கின்றனர்.

சந்திரமாலா ஓவியர் சித்திரசேனரின் மகள். அவளது தாய் நடனக்கலை அறிந்தவள். சந்திரமாலா நடனக் கலையைத் தன் தாயிடம் கற்கிறாள். சந்திரமாலா சாளுக்கிய நாட்டில் உள்ள அஜந்தா குகைப் பகுதியில் பெற்றோருடன் சிறுவயதில் வாழ்ந்து, பின் தன் கன்னிப் பருவத்தில் பல்லவ நாட்டில் கலைத்திறனைக் காட்டுவதாக ஆசிரியர் படைத்துள்ளார்.

பல்லவ நாட்டில் நாட்டியம், நடனம், இசை அனைத்தையும் அறிந்த முத்தம்மாள் பாட்டியுடன் சந்திரமாலா தங்கியுள்ளாள். முத்தம்மா பாட்டியின் கலை உணர்வு சந்திரமாலாவுக்கு ஊக்கமளிக்கிறது. ஆங்காங்கே சென்று நடனமாடி அதில் வரும் வருமானத்தில் சந்திரமாலாவும், முத்தம்மாள் பாட்டியும் வாழ்ந்து வருகின்றனர்.

சந்திரமாலாவின் உடலழகும் கலைத்திறனும் அவளைக் கலையரசியாக்குகிறது. நடனத்திற்கேற்ற தோற்றம் அவளிடம் இருக்கிறது. உயிர்களைக் கொல்லும் காபாலிகர்களிடமிருந்து தனது காதலனையும்

தன்னையும் காப்பாற்றச் சந்திரமாலா தனது நடனத்திறமையைப் பயன்படுத்துகிறாள். காபாலிகர்களிடம் மாட்டிக்கொண்ட "சந்திரமாலா மெல்ல எழுந்தாள். அவளது ஒயிலான இடை அசைந்தது. வாழைத்தண்டு போன்ற தொடையும் முழங்காலும் நெளிந்தன. மார்பகம் துள்ளியது. மூங்கில் கரங்களும் வளைந்தன. துள்ளலும் சுழற்சியும் கூடியிருந்த காபாலிகர்களை மெய்மறக்கச் செய்தன"[16] ஆட்டத்தால் அவர்களை மயங்கச் செய்து சந்திரமாலா தப்பினாள்.

காஞ்சி சுந்தரியில் 'காஞ்சனா' சிறந்த நடன மங்கை. காஞ்சி மாநகரத்து அழகி. ஆடல் பாடல்களில் வல்ல கணிகை அழகும், நடனமும் சேர்கின்ற பொழுது கிடைக்கின்ற சிறப்பை "அழகின் வடிவம் பெண்கள். அழகுக்கு அழகு நாட்டியமன்றோ"[17] என்ற விஜயன் மொழிகளிலிருந்து அறியலாம். அழகும், கலையும் மிக்க காஞ்சனா நடனக் கலையைத் தவமிருப்பது போல் கற்றாள். "தவசிகளுக்குத் தவம் எப்படியோ அப்படித்தான் எனக்கு நாட்டியமும்"[18] என்ற காஞ்சனாவின் கூற்று இங்குக் கருதத்தக்கது.

பல்லவமன்னன் நரசிம்மவர்மன் கலை ஆர்வம் மிக்கவன். அவன் ஆட்சிக்காலத்தில் காஞ்சனா நாட்டியமாடுகிறாள். அவளது நாட்டிய உருவம் நரசிம்மனின் கலை உள்ளத்தில் தலையெடுக்கும். அதை வைத்துக் கற்பனை செய்து அவர் கண்ட அஜந்தா குகைக் காட்சிகளை மனக்கண்ணில் கொண்டு வருவாள். அவரது கலை ஆர்வம் காஞ்சனாவின் கலைத்திறனால் வளம் பெற்றது.

இயற்கைப் பொருள்களின் இயக்கத்தைத் தன் அபிநயத்தில் கொண்டு வரும் ஆற்றல் காஞ்சனாவிடம் இருக்கிறது. அவள் நடனக்காட்சியை விக்கிரமன் "மான்போல் துள்ளுவாள். மயில் போல் மெல்ல நடப்பாள். மலர்ந்த தாமரையாவாள், குவிந்த குமுதமாவாள், முல்லைச் சிரிப்பாவாள், மோகனச் செண்பகமாவாள், நீலக் கடலாவாள், அதில் தவழும்

வெண்கரை அலையாவாள், வானப் பொழிலாவாள், அதில் பூத்துக்குலுங்கும் விண்மீன்களாவாள்"[19] என்று கதைப் போக்கில் எடுத்துரைப்பார்.

'சுந்தரி' தன் தாயிடம் நடனக்கலையைக் கற்கிறாள். தனக்குத் தெரிந்த கலையைப் பயன்படுத்தித் தன் தாய்க்குத் துரோகம் செய்தவரைப் பழிவாங்குவதற்குப் பல்லவநாடு வருகிறாள். பல்லவநாட்டுக் கலை வளர்ச்சி சுந்தரியை ஈர்க்கிறது. அவள் கலைத்திறமை பல்லவ நாட்டில்தான் வெளிப்படுகிறது. தனக்கு அடைக்கலம் தந்த சிற்பி மல்லிநாதர் சிற்பங்களை வடிப்பதற்குப் பல்வேறு அபிநயங்கள் பிடிக்கிறாள்.

தன் காதலன் ஓவியன் விஜயன் ஓவியம் வரைவதற்கு சுந்தரியின் கலை உணர்வு உதவுகிறது. பல்லவநாட்டு ராசநர்த்தகியாகவேண்டும். தன் தாய்க்குத் தீமை இழைத்தவரைப் பழிவாங்க வேண்டும் என்றாசை கொண்ட சுந்தரியின் விழிகளில் வெளிப்பட்ட பழியுணர்வும், கலைத்தாகமும் மல்லிநாதரால் நல்வழிப்படுத்தப்படுகிறது.

மயிலழகு பல்லவநாட்டைச் சார்ந்தவள். சிற்பி சிவநேசனின் மகள். இவள் சோழ இளவரசன் கனவில் இடம்பெறுபவள். அவரது மற்றொரு மகள் மீன்விழி. நடனத்தில் சிறந்த மயிலழகையும், அரசியல் செல்வாக்குப்பெற்ற மீன்விழியையும் மகளாகப் பெற்ற சிற்பியை ஊர் மக்கள் பாராட்டுகின்றனர்.

பல்லவ அரசன் அபராஜிதன் மயிலழகு காஞ்சி ஏகாம்பரேசுவரர் கோவிலில் காலையும் மாலையும் நடனமாடிக் கொண்டிருக்கவேண்டும் என்று கேட்கிறான். ஆனாலும் அதுவரை ஆடிக்கொண்டிருந்த மயிலழகின் மனம், நாளுக்கு நாள் பல்லவநாட்டில் கலையார்வம் குறைந்து வருகிறது என்று கருதிச் சோழநாடு செல்ல விரும்புகிறது. "கலைக்குத் தனியே நாடு, ஊர் ஏது? எங்கே ஆதரவு இருக்கிறதோ அங்கே அது வளர்கிறது"[20] என்ற கூற்று இவண் கருதத்தக்கது. பல்லவ நாட்டுக் கலை, அரசியல் இரகசியங்களை அறிய வந்த ஆதித்தன்

மயிலழகைச் சோழநாடு அழைத்துச் செல்ல விரும்புகிறான். பல்லவ மன்னனும் பிற அரசர்களும் இரகசியமாய்க் கூடும் இடத்தில் மயிலழகின் நடனம் ஏற்பாடாகியிருக்கிறது. ஆதித்தன் அதைத் தனக்குப் பயன்படுத்திக் கொள்ள நினைக்கிறான்.

"செழுமையான மேனியும் கருமைநிறமானாலும் முகத்திலே வீசும் அழகொளியும் ஒவ்வோர் அசைவிலும் காண்பரைச் சுண்டியிழுக்கும் அழகும் கொண்ட மயில்விழியைப் பல்லவ மன்னன் அரசியல் சூழ்ச்சிக்குப் பயன்படுத்துகிறான்."[21] சோழநாட்டிற்குச் செல்ல விருப்பம் கொண்ட மயிலழகு சோழநாட்டிலிருந்து அனுப்பப்பெற்ற அமுதனைக் காதலிக்கிறாள். பகைவர்களால் அமுதன் கொல்லப்பட்டவுடன் தன் மனதை மாற்றிக் கொண்டு கோயில் பணி செய்கிறாள். "மானிடர் முன் ஆடமாட்டேன். இறைவன் முன்தான் ஆடுவேன்"[22] என்று சபதம் செய்த மயிலழகு, மறுபடியும் கோவிலுக்கே தன் கலையை வழங்குகிறாள். கலையில் சிறந்த பெண்கள் சிறக்கக் கோவிலைத் தவிர வேறு இடங்கள் சரியாய் அமையவில்லை.

## 2. சாளுக்கிய நாட்டு நடனக்கலைப் பெண்கள்

பரிவாதினி சாளுக்கிய நாட்டைச் சார்ந்தவள். பரிவாதினி என்ற நாவலில் மகேந்திரவர்மனுக்கு ஓவியக் கலை பற்றி இரகசியங்களை அறிய உதவியவளாகப் படைக்கப் பெற்றுள்ளாள். நடனத்திலும் தேர்ந்திருந்தாள். பரிவாதினியின் தாய் பெருந்தேவி உயர்தரக்கலைக்குடும்பத்தில் பிறந்தவள். பரதமுனிவரின் நடன சாத்திரமும் அறிந்தவள். கலையைக் கற்பவர் அரிதாயிருந்த அக்காலத்தில் பெருந்தேவிக்கு அவளது பெற்றோர் பாட்டும் பரதமும் கற்றுக்கொடுக்கின்றனர். பெருந்தேவி தன் மகள் பரிவாதினிக்கு 'லதாவிகிசக நடனமும்' 'நாதாந்த நடனமும்' ஆடுவதற்குக் கற்றுக் கொடுக்கிறாள் என்று நாவலில் குறிக்கப்பெறுகிறது.

பரிவாதினி ஆடிய நடனத்தில் தமிழகத்தின் சாயல் இருப்பதைப் புரிந்து கொண்ட மகேந்திரவர்மன் பரிவாதினியிடம் நடத்திய

பல்வேறு பேச்சுக்களிடையில் அவளைப் பற்றி அறிந்துகொள்கிறான். கலைக்கு மண் வாசனையுண்டு. அது அதன் அசைவுகளில் தென்பட்டு வரும். பரிவாதினியின் தாய் பெருந்தேவி கொடும்பாளூரில் பிறந்தவள். கொடும்பாளூர் தமிழகத்தின் அருகில் இருப்பதால் பரிவாதினி கற்ற கலையில் தமிழகத்தின் சாயல் தெரிகிறது. அதனால் மகேந்திரவர்மன் 'நீ தமிழகத்தைச் சேர்ந்தவளா?' என்று நேரடியாகவே கேட்கிறாள். இவள் தமிழகப் பகுதியைச் சார்ந்தவள் என்று அறிந்தும் மகிழ்கிறான்.

இசையும் நடனமும் ஒன்றுடன் ஒன்று தொடர்புடையது. மகேந்திர வர்மன் உருவாக்கிய வீணையின் நரம்புகளை அவன் கைகள் மீட்டுகின்றன. அப்போது பரிவாதினி பல பாவங்களை உருவாக்குகிறாள். "கிண்கிணி அணிந்திருந்த மெல்லிய சீரடிகள் தாளமிட ஓர் அற்புட நடனம் உருவாயிற்று"[23] என்ற இக்கூற்றால் பரிவாதியினின் நடனக் கலைத்திறமை புலனாகிறது. மகேந்திரவர்மனும் பரிவாதினியும் சேர்ந்து உருவாக்கிய பாட்டும் பரதமும் காலத்தை விழுங்கின. அவர்கள் இருவரும் நாள்தோறும் சந்தித்துக் கலையைப் பகிர்ந்து கொண்டதால் மங்கையின் நடனமும் குணபரனின் (மகேந்திரவர்மன்) இசையும் கேட்டு மரங்களும் செடிகளும் மெய் மறந்ததாக நாவலாசிரியர் சற்று மிகைப்படுத்திக் கூறுகிறார்.

சாளுக்கிய நாட்டுக் கலைப்பெண்ணாக சித்திரவல்லி என்ற நாவலில் இடம் பெறும். நடனக் கலைப் பெண் 'குணரேகா' ஆவாள். இவள் பதியிலாதார் குலத்தைச் சார்ந்தவள். குணரேகா சாளுக்கிய மன்னன் ஜெயசிம்மனால் சோழநாட்டிற்கு உளவறிய சாளுக்கிய நாட்டிலிருந்து வரவழைக்கப்படுகிறாள். நடன மங்கை குணரேகாவுக்கு ஜெயசிம்மன் மீது காதல். அவளது கலையை நாட்டின் வெற்றிக்காகப் பயன்படுத்த ஜெயசிம்மன் நினைத்தபோது, அக்கலையால் ஜெயசிம்மனை அடையவேண்டும் என்று குணரேகா நினைக்கிறாள்.

நாள் செல்லச் செல்லத் தனக்கு எதிராக ஜெயசிம்மன் அரசியல் சூழ்ச்சிக்காகச் சித்திரவல்லியையும் காதலிக்கிறான் என்று தெரிகிறது. அதனால் குணரேகா அவனுக்கு எதிராக மாறிவிடுகிறாள். பார்வையாளர் மனம் ஒன்றிவிடும் அளவுக்கு நடனமாடி மகிழ்விக்கும் திறம் குணரேகாவிடமிருக்கிறது. காஞ்சிபுரம் சென்று படைவீரர்களை உற்சாகமூட்டுவதற்குக் கலை நிகழ்ச்சிகளை நிகழ்த்துமாறு சோழன் இராசாதிராசன் பணிக்கிறான். அப்போது அவள் ஆடுகிறாள்.

குணரேகாவின் திறமை அந்த நடன நிகழ்ச்சியால் சிறப்பாகப் புலப்பட்டது. “பம்பரம் போல் சுழன்றாடினாள்.பாதங்கள் பூமியில் பரவுகின்றனவோ என்று சந்தேகப்படும் அளவுக்குத் துள்ளி ஆடினாள். மின் வெட்டினைப் போல் குறுக்கும் நெடுக்குமாய்ப் பாய்ந்தாள். நாணலைப் போல் வளைந்தாள். நாகத்தின் விரிந்த படம் போல் நிமிர்ந்தாடினாள், காதல் மடப்பிடிபோல் ஒயிலாக நடந்தாள். காட்டாற்று வெள்ளம் போல் வேகம் காட்டினாள். அலங்கரிக்கப்பட்ட தேர்போல் அசைந்தாடினாள்”[24] இவ்வாறு ஆடிய நடனத்தைக் கண்ட மக்கள் அவள் ஆடி முடித்து மயங்கி விழுந்ததையும் நடனத்தின் ஒரு காட்சி என்று கருதினர். மனதை ஒன்ற வைக்கும் நிலை கலைக்கு உண்டு என்பதைக் குணரேகாவின் கலைத்திறன் மெய்ப்பிக்கிறது.

குணரேகாவின் கலைச்சிறப்பைக் கண்ட இராசாதிராசன் குணரேகாவிற்கு முத்துமாலை ஒன்றைப் பரிசாகக் கொடுக்கிறார். ஜெயசிம்மனுக்கு எதிராகச் செயல்பட்ட குணரேகாவைச் சோழமன்னன் பயன்படுத்திக் கொள்ள நினைக்கிறான். ஜெயசிம்மனைச் சந்திக்கக் கூடாது என்று பணிக்கிறான். சாளுக்கிய நாட்டு வெற்றிக் கொண்டாட்டத்தில் குணரேகாவின் நாட்டிய விருந்தை நடைபெறச் செய்கிறான். பகைமைக்காகப் பயன்படுத்தப்பட நினைத்த கலைமங்கை சோழநாட்டில் பக்குவப்பட்டு நன்மைக்காகச் செயல்படுகிறாள். சோழரின் கலை ஆர்வம் கண்ட குணரேகா, தான் காதல் கொண்ட ஜெயசிம்மனை ஒதுக்கிவிடுகிறாள்.

## 3. சோழநாட்டு நடனக்கலைப் பெண்கள்

நந்திபுரத்து நாயகியில் படைக்கப்பெற்றுள்ள நடனப்பெண் இன்பவல்லி. சோழ அரசன் இராசராசனால் காதலிக்கப்பெற்றவள். முல்லைத் தீவில் வாழ்கிறாள். இராசராசன் சித்திரசேனராக முல்லைத்தீவு சென்றபோது அவனைக் காதலிக்கிறாள். பின் அவன் சொல்லிக்கொள்ளாமல் தன் நாட்டிற்கு வந்துவிட அவனைத் தேடிக்கொண்டு இன்பவல்லியும் சோழநாடு வருகிறாள். குந்தவையின் உதவியுடன் அரண்மனையில் சிறிது நாட்கள் வாழ்கிறாள். அவளது கலைத்திறனும் அங்கு வெளிப்படுகிறது. பின் அரசியல் காரணங்களுக்காகத் தன் காதலன் இராசராசனைச் சந்திக்காமல் வேறிடம் சென்று நடனக் கலைப்பள்ளி நடத்திக்காலம் தள்ளுகிறாள். ஆடல், பாடல் கலைகளில் சிறந்த பெண்ணான இன்பவல்லி "மாயமும் சக்தியும் கூட மயங்கும் கலை ஆற்றல் மிக்கவள்"[25] என்று பாராட்டப் பெறுகிறாள். அழகும் திறமையும் இருந்தும் தன்னை ஓர் அனாதை போலக் கருதிக்கொள்ளும் இன்பவல்லியை அனைவரும் கலையரசி என்று போற்றுகின்றனர். இன்பவல்லியை ஒத்த அழகும், வயதும் உடைய சிறிய பஞ்சவன் மாதேவி "பொன்னும் பொருளும் அழியக்கூடியது! அதைக்கொண்டு ஏழை, செல்வந்தன் என்று நான் மதிப்பிடவில்லை. உன்னிடம் அற்புதமான கலை விளங்குகிறது. கலைச்செல்வம் பெற்றிருக்கும் நீ கலையரசி"[26] என்று பாராட்டுவதிலிருந்து கலையின் சிறப்பு நாவல்வழி வெளிப்படுகிறது.

இன்பவல்லி குந்தவையோடு அரண்மனையில் தங்கியிருந்தபோது அவளது நடனக்கலையை அனைவரும் கண்டு மகிழ்கின்றனர். ஏனெனில் அவளது நடனம் வானுலகிலிருந்து இறங்கிவந்த கந்தர்வ மாது ஆடினாற்போன்றும் சிவபெருமான்மீது காதல் கொண்ட மங்கையின் தன்மையைப் போலவும் இருந்தது. தலைவன் மீது ஊடல் கொண்டு அவனைக் காணாது ஏங்கி, தலைவனின் உருவத்தை நினைத்து மகிழ்பவள் போல் ஆடினாள். அவளது முகத்தில் பரிவு, பாசம், வியப்பு,

திகைப்பு, ஏக்கம்,இன்பம் போன்ற இரசனை உணர்ச்சிகள் மாறித் தோன்றும் படி ஆடினாள். அவளது கலைத்திறன் குந்தவையையும் கவர்கிறது. அதனால் குந்தவை இன்பவல்லியால் அரண்மனையில் இன்னல் வரும் என்று அறிந்தும் அவளை கைவிடவில்லை.

இராசராசனோடு முல்லைத்தீவில் சேர்ந்து ஆடிய குரவைக் கூத்து, அவள் மனதை வருத்துகிறது. கலையால் அரசகுடும்பத்து ஆண்களால் விரும்பப்பெற்ற பெண்கள் அவர்களோடு இறுதிவரை வாழமுடியாத தன்மையைப் பெற்றிருக்கிறார்கள் என்பதை இன்பவல்லி பாத்திரப்படைப்பு புலப்படுத்துகிறது. "கடற்கரையில் சங்குமுக யாழெடுத்துப்பாடிய"[27] இன்பவல்லி தனக்குத் தெரிந்த நடனத்தாலன்றோ இவ்வளவு தொல்லைகள் என்று வருந்தவும் செய்கிறாள். வரலாற்று நாவல்களில் வாழும் கலைப்பெண்கள் கலையால் மகிழ்வோடு வாழ்ந்தது போல மனம் அழியப்பெற்ற நிலைமையையும் அடைந்திருக்கிறார்கள்.

மங்கலத்தேவன் மகள் நாவலில் இடம்பெறும் சிந்தாமணி தமிழ்ப்படித்தவள். இசை பயின்றவள். நிருத்தியம் கற்றவள். அழகான பெண்ணாகத் திகழ்ந்த சிந்தாமணி அம்பலவாணனின் ஆட்களால் சிறைப்பிடிக்கப்பட்டு அரண்மனையில் உள்ள அந்தப்புரத்துப் பெண்களோடு வைக்கப்பெறுகிறாள். சிந்தாமணியின் மனம் இறைவனுக்குத் தொண்டு செய்து கோவிலில் நடனமாடி வாழ விரும்புகிறது. அதனால் அவள் அங்கிருந்து துணிச்சலோடு வெளியேறுகிறாள்.

தன் தாயிடம் பல கலைகளைச் சிந்தாமணி கற்கிறாள். அதில் நடனமும் ஒன்று. "பூசை முடிந்தவுடன் இறைவனுக்குப் பிரியமான தாண்டவ நடனத்தை ஆடி இறைவனை மகிழ்விக்கலாமல்லவா"[28] என்று கூறும் சிந்தாமணி வீரப்பட்டினத்து ஈசர் கோவிலில் மாலை நேரத்தில் தன் தங்கை செண்பகம் பாடக் காலில் சலங்கை கட்டி ஆடினாள். அருகிலிருந்த கிராமத்து மக்கள் அதைக்கண்டு களித்தனர்.

தன் காதலன், நம்பி வந்தாலும் அவனிடம் கோயிலில் நடனமாடி கலை வளர்ப்பதையே தன் மனம் விரும்புகிறது. என்று கூறி அவனது காதலை மறுத்துவிட நினைத்த சிந்தாமணி, நம்பியைக் காலிழந்த நிலையில் கண்டவுடன் மனம் மாறுகிறாள். அவனுக்கு உறுதுணையாக இருக்க நினைத்து அவனுடன் வாழ்கிறாள்.

பதியிலாதார் குடும்பத்தைச் சாராத பெண்களும் கோவிலில் நடனமாடியுள்ளனர். அந்த அளவுக்குக் கலைகளில் தேர்ச்சி பெற்றுத்திகழ்கின்றனர் என்பதை சிந்தாமணி என்ற கலைப்பெண் மூலம் அறியலாம்.

வஞ்சிநகர் வஞ்சி என்ற வரலாற்று நாவல் நடனம் தெரிந்த பெண்ணான மயில்விழியை மையமாக வைத்துப் படைக்கப்பெற்றுள்ளது.

மயில்விழியின் வளர்ப்புத்தாய் மரகதவல்லி. அவளும் நடனக்கலையில் சிறந்தபெண். பதியிலாதார் குலத்தைச் சார்ந்தவள். கோவிலில் நிருத்தியாஞ்சலி ஆடுபவள். அரண்மனையின் ஆதரவில் வாழ்ந்து வருகிறாள். காலில் ஏற்பட்ட வேதனையில் அவளால் நடனமாட முடியாமல் இருந்ததைக் கேள்விப்பட்டு அரசியே மரகதவல்லியைப் பார்க்கவருகிறாள்.

கலைஞர்கள் வருந்தக்கூடாது என்பதற்காகச் சோழநாட்டில் உடுக்க உடை, தங்க வீடு, தட்டாத உணவு முதலியவற்றை அரசே அளிக்கிறது. அதனால் நடனமாட முடியவில்லை என்று வருந்திய மரகதவல்லியைத் தேற்றும் சோழநாட்டரசி "நீ கற்ற நடனக்கலையை உனக்கு நம்பிக்கை உள்ள ஒருத்திக்குக் கற்றுக் கொடுக்க உடனே ஏற்பாடு செய். அதனால் உனக்கு மதிப்புக் குறைவு ஏற்பட்டுவிடும் என்று அஞ்சவேண்டாம். உன் ஜீவிய காலம் வரை உனக்குள்ள அந்தஸ்து செல்வாக்கு வெகுமானம் மதிப்பு ஏதும் குறையாது. இது உறுதி"[29] என்றாள் இதன்மூலம் நாட்டில் கலை வளர்க்கப் பெற்ற விதத்தையும் அதை வளர்ப்பதில்

அரசகுலப்பெண்கள் காட்டும் ஆர்வத்தையும், கவித்துவத்தையும் கலைத் தொண்டு செய்ய முடியாத போது கலைஞர்கள் மதிப்போடு நடத்தப்பட்ட தன்மையையும் உணரலாம்.

மரகதவல்லியால் உருவாக்கப்பட்ட கலை வாரிசு மயில்விழி. இவள் ஓவியன் கருணாகரனுக்கும், நீலவேணிக்கும் பிறந்த மகள். மயில்விழி சிறுகுழந்தையாக இருந்தபோது நீலவேணி இறந்துவிடுகிறாள். கலைமீது ஆர்வமுடைய கருணாகரன் ஒரு காலத்தில் தன் மனதில் குடிகொண்டிருந்த கலையரசி மரகதவல்லியிடம் மயில்விழியை ஒப்படைக்கிறான். மரகதவல்லி மயில்விழிக்கு நடனக்கலையை முழுமையாகக் கற்றுக்கொடுக்கிறாள். கலையைச் சோழநாட்டில் கற்றுக்கொண்ட மயில்விழி காதலைச் சேரநாட்டில் வளர்த்துக் கொண்டதால் திருமணத்திற்குப்பின் சேரநாட்டில் பசுபதீசுவரர் திருக்கோயிலில் நாட்டியாஞ்சலி செய்துவருகிறாள்.

மயில்விழி மிகச் சிறப்பாக நாட்டியமாடியதால் அவளதுதிறமை சேரநாட்டில் மதிக்கப்பெறுகிறது. வீட்டிலேயே பெண்களுக்கு நடன வகுப்புகள் நடத்தி மகிழ்ந்திருக்கிறாள். சேரநாடு சென்று விட்ட மயில்விழியைச் சோழநாடு அழைத்துவரச் சோழன் சேரநாட்டின் மீது படையெடுக்கிறான். மலை நாட்டுப் பெண்ணாக வேடமிட்டுச் சென்ற மயில்விழி சோழ அரசனின் வேண்டுகோளுக்கிணங்கப் படைவீரர்கள் முன்னிலையில் ஆடுகிறாள். சிவபெருமான் திரிபுரம் எரித்ததைக் கண்டு உமையவள் மகிழ்ந்திருக்கச் சிவன் ஆடிய ‘கொடுகொட்டி’ நடனத்தை மயில்விழி ஆடுகிறாள். மலைநாட்டுப் பெண் இந்நடனத்தை அறிந்திருக்க வாய்ப்பில்லை என்று சோழன் சந்தேகிக்கிறான். யானையின் தந்தத்தை ஒடிப்பதற்காகத் திருமால் ஆடிய ‘அல்லியத் தொகுதியை’ மயில்விழி ஆடியபின் மயில்விழி நிச்சயமாக மலைநாட்டுப் பெண் அல்லள் என்பதைச் சோழன் உறுதி செய்கிறான். கலைஞர்களின் கலைத்திறமை எச்சூழ்நிலையிலும் அவர்களை அறியாமலேயே வெளிப்பட்டுவிடும் என்பதை இதன்மூலம் அறியலாம்.

மயில்விழியை மீட்டுச்செல்ல நடந்த போரில் சோழன் வென்றான். ஆனால் மயில்விழி தான் கேட்டுக்கொண்டபடிச் சோழன் நடந்துகொள்ள வில்லையாதலால் அவன் நாட்டுக்குத் தான் சென்று கலைத் தொண்டு செய்யக்கூடாது என்ற எண்ணத்தால் நஞ்சு அருந்தி உயிர் துறக்கிறாள்.

'சோழமகுட' மலர்மங்கை 'நாட்டியப்பெண்' என்று அழைக்கப் பெறுகிறாள். அவளது கலைத் திறமையை அரசர் விரும்புகிறார். வியக்கிறார். "எனக்கும் அரசருக்கும் உள்ள உறவு தெய்வீகமானது. கலை என்னும் பொற்சங்கிலியால் பிணைக்கப்பட்டது"[30] என்ற கூற்று கலைப்பெண் பெற்ற மதிப்பை புலப்படுத்துகிறது. கண்டராதித்தரின் பகைவரால் அவரை அழிக்க அரண்மனைக்கு மலர்மங்கை கொண்டுவரப்படுகிறாள். அரசரோடு நெருங்கிப்பழகும் அவளைப்பற்றி ஊரார் தவறாகப் பேசுகிறார்கள். கலைக்குச் சிறப்புக்கொடுக்கும் கண்டராதித்தனை மலர்மங்கை தன் கலையாற்றலாலும் கண்ணியமான நடவடிக்கையாலும் காப்பாற்றுகிறாள்.

கண்டராதித்தன் மகன் மதுரனுக்கு வரவிருந்த ஆபத்தைத் தடுக்கிறாள். குழந்தையுடன் விளையாடும்போது, "இளவரசே நான் இராட்டிரகூடத்திலிருந்து வந்திருக்கும் நடன நங்கை. எனது நாட்டியத்திறமையை உங்களிடம் புலப்படுத்த விரும்புகிறேன்"[31] என்று கூறிய மலர்மங்கை அரண்மனைக்கு வரவிருந்த ஆபத்தை நீக்க முனையும் போது அக்கலையையும் மறக்கும் நிலை ஏற்படுகிறது.

மலர்மங்கையின் பாட்டையும், நடனத்தையும் கண்ட கண்டராதித்தரின் மனைவி புகழ்கிறாள். சாதாரணக் குலத்துப்பெண்களும் அரசகுடும்பத்தோடு நெருங்கிப் பழக, கலை கைகொடுக்கிறது என்பதை "இந்த இரு திறமைகளும் தன்னிடம் இல்லாவிட்டால் தனக்குச் சோழ அரசகுடும்பத்தாரிடம் பழகுவதற்கு வாய்ப்பு ஏற்பட்டிருக்குமா"[32] என்ற மலர்மங்கையின் கூற்றால் அறியலாம்.

குந்தவையின் சகோதரன் இராசராசனின் மகன் இராசேந்திரன். சிறுவயதில் தன் அன்னையை இழந்தவன். குந்தவையால் வளர்க்கப்பட்டான். ஆட்சிமுறையிலும், போர்க் கலைகளிலும் சிறந்துவிளங்கிய இராசேந்திரன் நடனம், சிற்பம், ஓவியம் முதலிய கலைகளிலும் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தான். அவனது நண்பன் முத்துக்குமரன். அவன் படைத்தலைவனாக இருந்தான். அவனைக்காண அவன் இல்லத்திற்குச் சென்று வந்த இராசேந்திரன் முத்துக்குமரனின் தங்கை வீரம்மாளின் நடனக்கலையைப் பற்றி அறிகிறான். மேலும் அவளை நடனத்தில் சிறந்தவளாக்க முறையாக நடனம் கற்றுக்கொள்ளும் ஆசிரியரிடம் சேர்க்க உதவுகிறான். அதன்படி நடனக்கலையைப் பற்றி முழுவதும் கற்றுணர்ந்த வீரம்மாளை இராசேந்திரன் திருமணம் புரிந்துகொள்கிறான்.

அரசரின் மனைவியர் பலருள் ஒருத்தியாக வந்த வீரம்மாள் நாவலில் வீரமாதேவி என்று அழைக்கப்படுகிறாள். வீரம்மாளுக்கு அரண்மனை வாழ்க்கைப் பிடிக்கவில்லை. வீரம்மாள் கலைகளை அறிந்திருப்பதால் அவளை மட்டுமே அரசர் நேசிக்கிறார் என்று பிற பெண்கள் அவளை வெறுத்தனர். வீரம்மாளுக்குக் குழந்தை பிறந்தால் அதற்கும் அரச உரிமை பெறும் வாய்ப்புக் கிடைக்கும் என்பதாலும் வெறுத்தனர். இதையெல்லாம் அறிந்த வீரம்மாள் இராசேந்திரனின் ஆசைக்கு இணங்கமறுத்துக் கலைக்காக மட்டுமே வாழ்கிறாள்.

காட்டுப்பகுதியில் ஒரு கலைக்கூடம் அமைக்க எண்ணினாள். “தன்னை அவமானப்படுத்திவிட்ட மாளிகைப் பெருமாட்டிகள் எதிரே வீரமாதேவி ஒரு சபதம் செய்துவிட்டாள். அதன் விளைவுதான் காட்டுப்பகுதியில் ஒரு கலைக்கோயில்”[33] என்ற கூற்றின் மூலம் அவளது கலைச்சாதனை புரிகிறது. மேலும் அவளது கலைத்தாகத்திற்கு ஆதரவாக மன்னர் இராசேந்திரன் செயல்பட்டார். சோழநாட்டுப்பெண்கள் எல்லாக் கலைகளையும் முறையாகக் கற்றுக்கொள்ள வேண்டும் என்று விரும்பினார்.

அதனால் வீரம்மாளிடம் "நீ கற்றறிந்த நடனக்கலை வீணாகப் போய்விடக்கூடாது. இங்கு ஒரு நடனப்பயிற்சிச் சாலை ஏற்படுத்தி உனக்கு வேண்டிய உதவியைச் செய்கிறேன். கலையில் பெண்களுக்குத் தேர்ச்சி ஏற்படுமாறு செய்யவேண்டும்"[34] என்கிறார். காட்டில் ஏற்கனவே இன்பவல்லியின் மகள் பூங்கொடியால் ஒரு நடனப்பள்ளி நடத்தப்பட்டது. உணவும் உறைவிடமும் கிடைத்ததால் நாட்டின் பல பகுதியிலிருந்தும் பெண்கள் வந்து நடனம் கற்றுத் தம்மையும் நாட்டியக் கலையையும் இறைவனுக்கு அர்ப்பணித்தார்கள். அப்பள்ளியை வீரம்மாள் மேலும் சிறப்புடையதாக்கினாள்.

தன்னுடன் தனிமையில் மகிழ்ந்திருக்க வேண்டும் என்று நினைத்த இராசேந்திரன் எண்ணத்தை மாற்றிக் கலையின்மீது ஆர்வம் ஏற்படுமாறு வீரம்மாள் செய்தாள். அதனால் சோழநாடு கலைப்பள்ளிகளையும், கலைக்கூடங்களையும் கொண்டதாகத் திகழ்கிறது. அரசர்கள் அக்காலத்தில் பல பெண்களை மணந்ததற்குக் காரணம் கலை ஆர்வம் என்பதையும் வரலாற்று நாவல்களால் அறிய முடிகிறது. சமுதாயக் கட்டமைப்பு, குடும்பக் கலாச்சாரம் இவற்றில் கலை பெற்ற சிறப்பை வீரம்மாள் வாழ்க்கைப் புலப்படுத்துகிறது.

எல்லோரும் கலை ஆர்வமிக்கவர்களாகத் திகழ்ந்தாலும் ஒரு சிலரிடமே அக்கலை சிறப்புடன் திகழ்கிறது. வீரம்மாதேவியின் பிரார்த்தனையின் மூலம் அதை அறிந்து கொள்ளலாம்.

'கலையின் அதிதேவதையே' உன்னைப் பணிகிறேன். வெள்ளைக் கலை உடுத்தி வெண்தாமரைப் பூவில் வீற்றிருக்கும் தேவியே! உன் திருவடிகளில் வணங்குகிறேன். நடனம், இசை ஆகிய அறுபத்து நான்கு கலைகளில் நாயகியே! உன் பாதங்களில் சரணடைகிறேன், சகல கலைகளையும் படைத்தவளே! உன்னைப் பணிகிறேன். நிருத்தியத்தின் மூலம் உன்னை அஞ்சலி செய்யும் ஆற்றல் என்றும் என்னிடமிருந்து அகலாமலிருக்க

அருளவேண்டும். தாங்களிடமிருந்து நான் பெற்ற நடனக்கலையைக் கண்டுதானே அரசர் எனக்கு இவ்வளவு பெரிய வாய்ப்பளித்தார்”[35] என்று தன் கலை வாழ்வு கலைமகள் அருளால் உயர்ந்தது என்று மகிழ்கிறாள். கலைக்கூடத்தில் பணியாற்றும் மாணிக்கசேகரன் வீரம்மாளின் ஊக்கமும் ஆதரவும் இல்லாவிடினும் கலைவாணி இங்கெழுந்து அருளுவது எவ்வாறு என மகிழ்கிறான். கலை வளர அரசர்களின் ஆதரவு மட்டும் போதாது. *கலைஞர்களின் ஊக்கமும் தேவை என்பதை உணரலாம்.*

தெற்குவாசல் மோகினியின் தேவகுஞ்சரி கலைப்பெண்ணாய்ப் படைக்கப்பெற்றுள்ளாள். தேவகுஞ்சரி சோமசர்மா என்ற பண்டிதரிடம் சாத்திரம், புராணத்தை அறிந்து கொள்கிறாள். கங்கை கொண்ட சோழபுரத்துப் பெருவுடையார் கோவிலில் சந்தியாகால நிருத்தியம் செய்பவள். இவளது தாய் பரவை நங்கை, தெய்வ அருளும் இராஜபக்தியும் மிக்க பரம்பரையில் வந்தவள். அவளது மகளாசையால் கலைஞானமும் தெய்வபக்தியும் நாட்டுப்பற்றும் இவளிடம் திகழ்கிறது.

தேவகுஞ்சரி ஆடலிலும், பாடலிலும் சிறந்தவள். அவளது மனம் தெய்வச் சந்நிதானத்தில் நடனமாடி இறைத் தத்துவத்தோடு ஒன்றிவிடுதலில் மிகுந்த ஈடுபாடு கொள்கிறது. கலையோடு பக்தியும் கலந்துவிட்டதால் அவள் புராணங்களில் சொல்லப்படும் தெய்வீகத்தன்மை மிக்குள்ள பெண்களைப்போலவே காணப்பட்டாள். குஞ்சரியின் தாயாரிடம் கோட்டைக்காவலர் நம்பி காளிராயர் “பரவை உன் மகள் நெற்றியில் திருநீறுடன் நடந்துவரும்போது எனக்கு அவள் குலவழக்கத்தில் ஈடுபட்ட நடனமாதினைப்போலவே தோன்றவில்லை. நாவுக்கரச பெருமானின் தமக்கையார் திலகவதியார் போலவும் மங்கையர்கரசியைப் போலவும் காணப்படுகிறாள்”[36] என்றார். நாட்டுப்பற்று, நல்ல குணாதிசியங்கள், கலை, தெய்வீக ஈடுபாடு அனைத்தும் நிறைந்த மங்கையாகத் தேவகுஞ்சரி திகழ்கிறாள்.

களைப்புற்று வருந்தியிருக்கும் வேளையில்கூட கனவுலகில் இருப்பதுபோல் உணர்ந்த குஞ்சரி, இந்திரனிடம் பேசுவதாக உணர்கிறாள். அப்போது அவனிடம் "பாண்டரங்கம், ஆடட்டுமா?"[37] என்று கேட்கிறாள். அந்த அளவுக்கு நடனக்கலையில் தோய்ந்தவள் என்பது தெரிகிறது. தேவகுஞ்சரி நாடகக்குழு ஒன்றிடம் மாட்டிக்கொள்கிறாள். அவர்கள் குழுவில் ஒருவர் வராததால் இவளை நடிக்கச்சொல்கிறார்கள். மறுக்கிறாள். நடனம் தெரிந்த பெண் எளிதாக நடித்துவிடலாம் என்று கூறவே ஒத்துக்கொள்கிறாள். தேவகுஞ்சரியும் அவளது தாயும் தனிமையில் இருக்கும் போது ஆடல் பாடலில் ஈடுபடுவதுண்டு. அப்படிப் பரவைநங்கை பாடும்போது குஞ்சரி ஆடுவதுண்டு. "பிரம்மதேவன் தலையைக்கிள்ளி அதைப் பந்தாக வைத்து ஆடும் பரமசிவனாகி விடுவாள். சூரியனின் பல்லை உடைக்கும் சக்தி ஆகிவிடுவாள். யானையைக் கொல்வாள்' அதன் தோலை அணிவாள். யமனை உதைப்பவள் முப்புரங்களை எரிப்பாள். இவ்வளவும் செய்யும் பரமசிவனாவாள். பிறகு பரமசிவனது புகழ்பாடும் தில்லை நகரத்துப் பெண்களாவாள். சிவன் புகழ்பாடிக்கொண்டே அவர்கள் பொற்சுண்ணம் இடிக்கும் நிலையில் இரண்டறக் கலப்பாள்"[38] இப்படி மகிழ்ந்தாலும் பரவை நங்கைக்கு அவ்வப்போது கவலை பிறக்கும். நாட்டில் கலைஞர்கள் குறைந்து கொண்டு வருகிறார்கள் என்று வருந்துகிறாள்.

காந்தாரப்பண்ணும், குறிஞ்சிப்பண்ணும் ஒருவரும் அறிவதில்லை என்று பெருமூச்சு விடுவாள். அதைக்கட்டிக்காக்கப் பாடுபடுவோம் என்று குஞ்சரி உறுதிமொழி அளிக்கிறாள். அரசரின் கலை உணர்வும் குறைந்துவருகிறது. நாட்டில் ஒழுக்கம் கெட்டுவருகிறது என்று இரண்டு பெண்கள் நாட்டைப்பற்றிக் கவலைப்படுவதிலிருந்து கலையில் சிறந்த பெண்களின் நாட்டுணர்வை உணரலாம்.

தேவகுஞ்சரியின் கலையும் நாட்டில் மதிக்கப்படவில்லை. அவளது அரசியல் ஈடுபாடும். பலருக்குப் பிடிக்கவில்லை. பதியிலாதார்

குடும்பத்தில் பிறந்த அப்பெண்ணைக் கலையோடு கூடிய காமக்கிழத்தியாகவே அனைவரும் பார்க்க விழைந்தனர். இதையறிந்து இறைவனிடம் முறையிட்டுக் குஞ்சரி குமுறி அழுகிறாள். நாட்டியமாடும் பெண்ணுக்கு அரசியல் ஈடுபாடு வேண்டாம் என்று ஊர்மக்கள் பேசுகிறார்கள்.

ஒரு சமயம் மாளிகை நிலாமுற்றத்தில் அரசருக்கும், அந்தப்புரத்து இராஜமாதர்களுக்குமாக அவள் ஆடியபோது அவளை அங்கிருப்பவர்கள் பார்க்கும் பார்வை சரியாய் இராது. கலையரசியான குஞ்சரி அந்தச்சூழலை வெறுத்திருக்கிறாள். கவலை கொண்டு திகழ்ந்த குஞ்சரியால் மனம் மகிழ்ந்து ஆட முடிவதில்லை. அவ்வப்போது கோவிலில் நடனம் ஆடினாலும் சோர்ந்து விடுகிறாள். ஒருநாள் இறைவன் சந்நிதியில் மெய்மறந்து ஆடியபோது மூர்ச்சையானாள். மெய்மறந்து அதைக்கேட்டுக்கொண்டிருந்த மன்னர் அதிர்ச்சியுற்று அவளை ஓய்வு எடுத்துக்கொள்ளும்படிக் கூறினார். இதைப்பட்டத்தரசி விரும்பவில்லை. சிறந்த கலையரசி கலையால் மட்டுமே வாழ முடியவில்லை. பிறந்தது பதியிலார் குலம். அதனால் கொச்சைப் பார்வையிலிருந்து தப்ப முடியவில்லை. நாட்டுப்பற்றினால் அரசர்களோடு நெருங்கும் போது அதற்கு வேறுபெயர் கற்பிக்கப்படுகிறது. பாடலிலும், ஆடலிலும், அழகிலும், பக்தியிலும் சிறந்தும் கலையரசியான தேவகுஞ்சரியால் நிம்மதியாய் வாழமுடியவில்லை. கலையை மதிக்கும் மக்கள் இருக்கும்போதுதான் கலை மேன்மையுறும் என்ற நிலை உணர்த்தப்படுகிறது.

### 3. நாடகக்கலை

“பல நாடுகளில் நாட்டியக்கலையும் நாடகக்கலையும் இணைந்தே வளர்ந்து அமைந்தன. தமிழ்நாட்டிலும் அதே நிலைமை இருந்துவந்ததைக் கூத்து என்னும் பழைய சொல் விளக்குவதாகும்”[39] என்ற் கருத்திற்கிணங்க விக்கிரமன் புதினங்களில் நடனக்கலையில் சிறந்த பெண்கள் நாடகத்திலும் திறமைபெற்றுள்ளனர். “குதித்து ஆடுவது கூத்து’ நடந்து

நடிப்பது நாடகம் கூத்து அல்லது நடனமே நாடகமாகத் தனி வளர்ச்சி பெற்றது"[40] என்ற நாடக இலக்கணப்படி நாடகக்கூறுகளை விக்கிரமன் பயன்படுத்தியுள்ளார்.

சோழர் காலத்தில் புகழ்பெற்ற சோழ அரசர்களின் வரலாற்றை நாடகமாக்கிக் கோவில்களில் நடித்து வந்துள்ளனர். விக்கிரமனின் 'கடல்மல்லைக் காதலியில்', நர்த்தகியாகவரும் 'சந்திரமாலாவும்' காந்திசுந்தரி 'காஞ்சனாவும்' நாடகங்களில் நடிக்கின்றனர். மகேந்திரவர்மன் எழுதிய 'மத்தவிலாசம்' என்ற நாடகம் நாடெங்கும் நடிக்கப்படுகிறது. அதில் சந்திரமாலா நடிக்கிறாள். அதைப்பார்த்த காபாலிகன் "அவளது நடனத்தையும் அவள் நடிக்கும் மத்தவிலாசத்தையும் பார்த்துப் பாராட்டதவர்களே இல்லை"[41] என்று கூறுகிறான். இராஜசுந்தரியும் மத்தவிலாசத்தில் நடிப்பதுண்டு. அதில் சிவபெருமானைக் கேலிசெய்வதாக எழுதியிருப்பதால் சிவன் மீது பற்றுக்கொண்டக் காபாலிகர்கள், புத்தபிட்சுக்கள் அதை வெறுக்கின்றனர். இராஜசுந்தரிக்குப் பல தொல்லைகள் ஏற்படுகின்றன. பல்லவமன்னன் பரமேஸ்வரவர்மன் அவளுக்கு ஆறுதல் கூறுகிறான். "ராஜசுந்தரி ஏன் கலங்குகிறாய் நீ மத்தவிலாசத்தில் நடிப்பதை யாராவது தடுக்கமுற்படுகிறார்களா? அதைப் போல்தான் கடல்மல்லைக்கருகிலுள்ள கிராமத்தில் வாழ்ந்து வந்த சந்திரமாலா எனும் ஒரு நடனப்பெண்ணை ஒருபிட்சு துன்புறுத்த முயன்றிருக்கிறார்"[42] என்ற பரமேஸ்வரவர்மனின் கூற்றால் கலையில் ஈடுபட்ட பெண்களின் பாதுகாப்பு அரசர்கள் கையிலிருந்திருக்கிறது என்பதை அறியலாம்.

நடிப்பு என்பது உரையாடல் முறையில் உணர்வோடு கலந்த பேச்சு. காஞ்சனா காபாலிகப் பெண்ணாக நடிக்கிறாள். காபாலிகப்பெண்கள் மண்டை ஓடு அணிந்து, மது அருந்தி, காடுகளிலும் மேடுகளிலும் அலைந்துதிரியும் தன்மையுடையவர்களாகக் காட்டப்படுகின்றனர். காஞ்சனா காபாலிகப் பெண்ணைப்போல காட்சிதருகிறாள். முகத்தில் சிறு வியர்வைத்

துளிகள் அரும்பப் புருவங்கள் வில்லைப் போல் வளைந்து நெகிழக் காரணமின்றிச்சிரிப்பதும் வார்த்தைகள் குழறுவதும். கண்கள் சிவந்திருப்பதும் கருவிழிகள் சுழல்வதும். கூந்தல் அவிழ்ந்திருப்பதும் கழுத்திலுள்ள மாலைகள் நெகிழ்வதும் கண்கொள்ளாக் காட்சியாக இருக்கின்றன.

மணவாளன் ஆட்களால் கடத்தப்பட்ட தேவகுஞ்சரி அங்கிருந்து தப்பித்து வந்தபோது 'ராஜராஜவிஜயம்' நடத்தும் நாடகக்குழுவினரைச் சந்திக்கிறாள். அன்று நாடகத்தில் முக்கிய பாத்திரமேற்று நடிக்கும்படிக் கூறுகிறார்கள். நடனம், பாட்டு முதலிய கலைகளில் சிறந்திருந்த குஞ்சரியால் எளிதாக நாடகத்தில் நடிக்கமுடிகிறது. யாருக்கும் தெரியாமல் தப்பிப்பதற்கு நாடகக் கலைத்திறன் உதவுகிறது.

## 4. இசைக்கலைப் பெண்கள்

இசைக்கலை ஒலியோடு தொடர்புடையது. அதனால் இதை ஒலிக்கலை என்றும் கூறலாம். "செவி வழிப்புகுந்த இதய நாடிகளைத் தடவி உயிரினங்களை இசையவும் பொருந்தவும் வைக்கின்ற பொழுது இனிய ஒலிகள் இசை என்ற பெயரைப் பெறுகின்றன"[43] என்று ஏ.என்.பெருமாளால் எடுத்தாளப் பெறும் சு.வே.சுப்பிரமணியனின் கருத்து கலைக்கு விளக்கமாய் அமைகிறது. இக்கருத்தின் வழி இனிய ஒலிகள் இசைக்குக் காரணமாக இருப்பதை அறியலாம்.

இறைவனை வழிபடுகையில் மக்கள் ஆடியும் பாடியும் வழிபட்டனர். "இறைவனையும் கூத்தாடும் நிலையிலேயே கண்டு மகிழ்ந்தனர்"[44] விக்கிரமன் நாவல்களில் பாட்டும் இசையும் இறைவனை மையமாக வைத்து வளர்க்கப்பெறுகின்றன.

இசைக்கலையை வாய்ப்பாட்டாக அறிந்திருந்த பெண்களும், இசைக்கருவிகளோடு தொடர்புடைய இசையை அறிந்திருந்த பெண்களும் விக்கிரமன் நாவல்களில் இடம்பெறுகின்றனர்.

இசை உள்ளத்தை உருக்குவது. இனிமையான குரலால் அது இயற்கையையும் இயக்கும் தன்மை படைத்தது. இசைக்கலையை வாய்ப்பாட்டாய்,

1. தேவகுஞ்சரி (தெற்குவாசல் மோகினி)
2. இன்பவல்லி (நந்திபுரத்து நாயகி)
3. செங்கமலம் (மங்கலத்தேவன் மகள்)
4. மலர்மங்கை (சோழ மகுடம்)
5. மலர்மங்கை (கொன்றைமலர் குமரி)
6. பொன்னருவி (யாழ்நங்கை)

ஆகிய பெண்கள் பாடி மகிழ்கின்றனர். இப்பெண்களின் கலைத்திறன் அரண்மனைகளிலும், கோவில்களிலும் வெளிப்படுகிறது.

இசைக்கருவிகளில் யாழ் இசைக்கத் தெரிந்த பெண்களாக,

1. பரவை நங்கை (தெற்கு வாசல் மோகினி)
2. பைரவி (யாழ்நங்கை)
3. பொன்னருவி (யாழ்நங்கை)
4. இன்பவல்லி (நந்திபுரத்து நாயகி)

ஆகியோர் இடம்பெறுகின்றனர்.

வீணை வாசிக்கத் தெரிந்த பெண்களாக,

1. பரிவாதினி (பரிவாதினி)
2. சாலினி (மாணிக்க வீணை)
3. சைலேந்திரி (மாணிக்கவீணை)

ஆகிய மூவரும் படைக்கப்பெற்றுள்ளனர்.

தேவகுஞ்சரியை சோமசர்மா முருகனை வணங்கும்படிக் கூறி மலரொன்றைக் கையில் கொடுக்கிறார். அப்போது பக்தியால் சற்று தடுமாறிய குஞ்சரி "குன்றம் எறிந்தாய் குரை கடலிற் சூர்தடிந்தாய்"[45] என்ற பாடலைப்பாடுகிறாள். தேவார திருவாசகத்தையும் பாடிக்கொண்டேயிருக்க

அவளுள்ளம் விழைகிறது. இனிய குரல்வளம் பெற்ற குஞ்சரி இசையைத் தன் தாய் பரவை நங்கையிடம் கற்கிறாள்.

இன்பவல்லி ஆடல்பாடல் இரண்டிலும் வல்லவள். ஆடிக்கொண்டே பாடும் ஆற்றல் பெற்றவள். முல்லைத்தீவு சென்ற அருண் மொழிவர்மன் அவளது கலைத்திறனைக் கண்டு அவளைக் காதலிக்கிறான். தாழை சூழ்ந்த தடாகத்துக்கரையில் நீண்டு நிமிர்ந்த பாறையின் மேல் அமர்ந்து இன்பவல்லி வானத்தைப்பார்த்து 'குமரன் வரக்கூவுவாய்'[46] என்று பாடுகிறாள். இனிமையான இப்பாடலைக்கேட்ட அருண்மொழிவர்மன் அக்கலைக்கு அடிமையாகிறான்.

மங்கலத்தேவனின் மகள் செண்பகம் நன்கு பாடத்தெரிந்தவள். செண்பகத்தின் அக்கா சிந்தாமணி சிறப்பாக நடனம் ஆடுபவள். திருமணமாகாத இவ்விருபெண்களும் ஊரில் உள்ள தீயவர்களுக்குப் பயந்து ஊர்க்கோயிலில் தங்கி இறைவன் முன் ஆடல், பாடல் நிகழ்த்திக் கோவிலில் வாழ்கின்றனர். சிந்தாமணி தன் காதலன் நம்பியைக் காலிழந்த நிலையில் கண்டவுடன் அவனுக்கு உறுதுணையாக வாழவேண்டும் என்று சொல்கிறாள். செண்பகம் கோவிலில் பாட்டுப்பாடியும் பிறதொண்டுகள் செய்தும் காலத்தைக் கழிக்கிறாள்.

மலர்மங்கையிடம் (சோழமகுடம்) கண்டராதித்தர் திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரும் சுந்தரரும் இறைவன் மீது நெஞ்சுருகப்பாடிய பதிகங்களை பாடவேண்டும் என்று கூறித்தஞ்சைக்கு அழைத்துவருகிறார். அதன்படி மலர்மங்கை அரண்மனையிலும், கோவிலில் வழிபாட்டு நேரங்களிலும் இறைப்பாசுரங்கள் பாடி மகிழ்விக்கிறாள்.

மலர்மங்கை (கொ.ம.கு) சிவபெருமானைக் கண்முன் கொண்டு வந்து நிறுத்தும் பக்திப் பாடல்களைப்பாடும் ஆற்றல் பெற்றவள்.

"பொன்னார் மேனியனே

புலித்தோலை அரைக்கசைத்து

மின்னாள் செஞ்சடைமேல்

மிளிர் கொன்றை அணிந்தவனே”[47]

என்று கோவிலில் அவள் பாடும் பாடல் மன்னன் மனதைக் கவர்கிறது. அதனால் சோழமன்னர் கண்டராதித்தர், “திருச்சிற்றம்பலவாணர் உனக்கு இனிய குரல்வளத்தைக் கொடுத்துள்ளார். முன்பிறப்புப் புண்ணியத்தில் இசைப்புலமையும், இனியகுரலும் நீ பெற்றிருக்கிறாய்”[48] என்று பாராட்டுகிறார். கண்டராதித்தர் இறைப்பற்றும் கலை ஆர்வமும் உடையவர். எனவே, அவரது கருத்தைக் கவரும் கலையாற்றல் படைத்தப்பெண் மலர்மங்கையைப் பகைவர்கள் மன்னர் கண்ணில் படும்படி கோவிலுக்கு அனுப்பிப் பாடவைக்கிறார்கள்.

மன்னனையும் அவன் வாரிசையும் அழிப்பதற்காக அனுப்பப்பெற்ற கலைப்பெண், மன்னன் குலத்தைக் காக்கிறாள். மன்னனிடம் நன்மதிப்புப்பெறுகிறாள். அவளறிந்த கலை மேலும் பாராட்டுப்பெறுகிறது. மலர் மங்கை தன் பாடலின் இனிமையால், இறைவனையே கண்முன் கொண்டுவந்து நிறுத்திவிடுகிறாள்.

‘யாழ்நங்கை’ நாவலில் வரும் பைரவியின் தோழியாகப் படைக்கப்பெற்றுள்ள பெண் பொன்னருவி. இவள் தன் தந்தையுடன் கோவிலுக்குச் சென்று வழிபாட்டு நேரங்களில் பாடல்கள் பாடுபவள். இசைக்கலையை அறிந்திருந்த சாதாரணக் குலத்துப் பெண்ணான பொன்னருவி பைரவிக்குத் தோழியாக மட்டுமல்லாது அவளது மாணவியாகத் திகழ்ந்து இசையறிவு பெறுகிறாள்.

“ஒருகை முகன் தம்பியே

நின்னுடைய தண்டைக்கால் நம்பியே கைதொழுவேன் நான்”[49]

என்ற பாடலைப் பொன்னருவி சிறப்பாகப் பாடுகிறாள். “இசை என்ற சொல்லானது மக்களுடைய மனதை வயப்படுத்துவது.”[50] இசைக்கலை நல்ல வளர்ச்சியைப் பெற்றிருக்கிறது. மன்னர்கள் கலையையும் கலைஞர்களையும் போற்றிப்புகழ்ந்திருக்கிறார்கள் என்பதை அறியமுடிகிறது.

தேவகுஞ்சரியின் தாய் பரவை நங்கை யாழிசைப்பதில் வல்லவள். யாழிசைக்கும் முறை சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி பெருங்கதை போன்ற காப்பியங்களில் விளக்கப்பெறுகின்றன. சங்ககாலத்தில் பாணர்கள் யாழ்இசைத்துப் பாடியுள்ளனர். யாழ், முழவு, குழல் முதலியன இசைக்கருவிகளாகச் சுட்டப்பெறுகின்றன. விக்கிரமன் நாவல்களில் பெண் யாழிசைக்கும் கலையில் சிறந்திருந்த செய்திகள் இடம்பெறுகின்றன. பதியிலாதார் குலத்தைச் சார்ந்த பரவைநங்கை மகிழ்வான மன நிலையிலும் துன்பமான சூழலிலும் யாழ் வாசிக்கிறாள். தன் மகள் குஞ்சரி அரசியலில் ஈடுபட்டு வேதனைப் படுகிறாளே என்ற வேதனையில்,

"ஒருமகள் தன்னை உடையேன்
உலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல் வளர்த்தேன்
செங்கண்மால்தான் கொண்டு போயினான்"[51]

இப்பாடலை யாழில் வாசிக்கிறாள்.

பைரவி யாழ் வாசிக்கும் பாடினி. இவள் தஞ்சை மாளிகைக்குப் பழக்கமானவள். சோழ மன்னன் விஜயாலயனுக்குப் பாணரையும் பாடினியையும் பண்ணிசைக்கச் சொல்லிக் கேட்க ஆசை. அதனால் பாடினி பைரவி மன்னனால் மதிக்கப்பெறுகிறாள்.

"இசைக்கு இனிய ஒரு வடிவம் இருந்தால் அந்த வடிவம் பைரவி போல் தானிருக்கும்"[52] என்பதின் வாயிலாக பைரவியின் நுண்கலைத்திறமையை அறியலாம். பைரவியைப்பற்றிப் புகழ்கின்ற இளவரசன் ஆதித்த சோழன் "அவள் யாழ் மீட்டிப் பாடினால் யாழினியதா பைரவி குரலினியதா என்று கண்டுபிடிக்க முடியாது"[53] என்கிறான். ஞான சம்பந்தரின் காந்தாரப் பண்ணையும் சேரமான் பெருமாள் நாயனாரின் 'பொன் வண்ணத்து அந்தாதியையும்' சுவையோடு பாடவும் யாழில் இசைக்கவும் கற்றிருந்தாள். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்!' பாடலை அடிக்கடி யாழில் இசைக்கிறாள்.

அரசர்களாலும் பொது மக்களாலும் ஈர்க்கப்பெற்ற யாழிசைக்கும் கலையைப் பொன்னருவி பைரவியிடம் கற்கிறாள். வாய்ப்பாட்டில் சிறந்திருந்த பொன்னருவி யாழிசைப்பதிலும் வல்லவள்.

இன்பவல்லி யாழிசைக்கும் ஆற்றல் பெற்றவள். அருண்மொழிவர்மன் தன்னைப்பிரிந்த காலத்து வருந்தும் இன்பவல்லிக்கு அவளது தந்தை ஆறுதல் கூறுகிறார். அதில் மகிழ்ந்த இன்பவல்லி குடுகுடுவெனப் புன்னைமர நிழலுக்கு ஓடுவாள். சங்குமுக யாழெடுத்து மீட்டுவாள். இதன் மூலம் இன்பத்திலும் துன்பத்திலும் கலை வெளிப்பட்டிருக்கிறது என்பதை அறியலாம்.

யாழைப் போன்ற அமைப்புடையது வீணை. பழங்கால இலக்கியங்களில் சுட்டப்பெறுகின்ற யாழ் பிற்காலத்தில் 'வீணை' என்ற பெயரால் வழங்கப்பெறுகின்றது என்று கருத இடமுண்டு.

1. பரிவாதினி (ப.வ)
2. சாலினி (மா.வீ)
3. சைலேந்திரி (மா.வீ)

இம்மூன்று பெண்களும் வீணை மீட்டும் கலையை அறிந்தவர்கள். பரிவாதினி வீணை மீட்டுவதோடு பாடவும், ஆடவும் அறிந்திருக்கிறாள். மகேந்திரவர்மன் பரிவாதினி என்ற வீணையை உருவாக்குகிறான். அதனைப் பரிவாதினி மீட்டுகிறாள். அவள் மீட்டிய வீணையின் இனிமையை உணர்ந்த மகேந்திரவர்மன் "அற்புதமான ஒலி கானப்பறவையின் கலகல எனும் ஓசையையும் அது மிஞ்சியது. பாடிவரும் அருவியில் நாதத்தையும் அது வென்றது. மதுவருந்த மலரை வட்டமிடும் வண்டினத்தின் ரீங்காரத்தையும் அது வென்றது"[54] என்று புகழ்கிறார். பரிவாதினியின் யாழிசைக் கலைத்திறன் இதனால் புலனாகிறது.

சாலினி வீணை மீட்டத் தெரிந்தவள். மகேந்திரவர்மனது 'பரிவாதினி' என்ற வீணை பல்லவர்களின் கலைச்சிறப்புக்கு எடுத்துக்காட்டாய் விளங்குகிறது. அதனால் பகைநாடுகள் பல்லவர்களின்

கலை வளர்ச்சியைக் குறைக்கப் 'பரிவாதினி' வீணையைக் கவர்ந்து செல்லத் திட்டமிடுகின்றனர். எனவே பகைநாடுகளுள் ஒன்றான சாளுக்கிய நாட்டிலிருந்து சாலினி பல்லவ நாட்டுக்கு வீணையைக் கவர அனுப்பப்பெறுகிறாள். வீணைக்கலையில் சிறந்த பெண் என்பதால் பல்லவநாட்டு வீணை வித்துவான் பரமகுரு வீட்டில் தங்குகிறாள். இவளைப் பற்றிய உண்மை தெரியாத பரமகுரு தனக்குப் பின்னாலான கலை வாரிசு இவளாக இருக்கவேண்டும் என்று கருதுகிறான். பரிவாதினி வீணையைச் சாளுக்கிய நாட்டிற்கு அனுப்பிவிட்டு தான் பல்லவ நாட்டிலே தங்கிவிடவேண்டும் என்று நினைத்த சாலினி தேவசோமை என்ற காபாலிகப்பெண்ணால் கொல்லப்பெறுகிறாள். கலையில் சிறந்த பெண் அரசியலில் மாட்டிக்கொண்டு இறுதியில் உயிர்துறக்கிறாள்.

சைலேந்திரி காம்போஜ நாட்டிலிருந்து வீணையைக் கற்றுக்கொள்ளப் பல்லவநாட்டிற்கு அனுப்பப்பெறுகிறாள். சைலேந்திரி பல்லவநாடு வந்ததிலிருந்து பரிவாதினி வீணையைக் கவரச் சதி நடப்பதைக் கவனிக்கிறாள். மகேந்திரவர்மன் ஆட்கள் பரிவதினியைப் போன்றே போலி வீணை ஒன்றைச் செய்து பல்லவ நாட்டில் வைத்துவிட்டு சைலேந்திரியிடம் உண்மையான வீணையைக் கொடுத்து யாரும் அறியாமல் வேற்று நாட்டிற்கு அனுப்பிவைக்கிறார்கள். கலைத்திறன் மிக்க பெண்கள் அக்கலை மேலும் சிறக்க நாடுவிட்டு நாடு செல்வதைச் சைலேந்திரி பாத்திரப்படைப்பின்மூலம் அறியலாம். கலைப்பெண்கள் அரசியலில் அவசரகாலங்களில் நுட்பமாகச் செயல்பட்டுள்ளதையும் காணலாம்.

## 2. பயன்கலைகள்

மருத்துவம், சமையல், பிறமொழியறிவு, மாறுவேடம், அறிவுக்கூர்மை, அணிகலன்களைத் தெரிவுசெய்தல் முதலிய கலைகளைப் பயன்கலைகள் எனக்கூறலாம். இவ்வகைக் கலைப்பெண்களை விக்கிரமன் தம் வரலாற்று நாவல்களில் பதிவு செய்துள்ளார். பயன்கலைகள் குறித்த அட்டவணை பின்வருமாறு அமைக்கப்பெறுகிறது.

# பயன்கலைகள்

அட்டவணை 6.3

| எண் | நாவலின் பெயர் | நாட்டின் பெயர் | பெண்களின் பெயர் | பயன்கலையின் பெயர் |
|---|---|---|---|---|
| 1. | பரிவாதினி | சாளுக்கிய நாடு | பரிவாதினி | மருத்துவம் |
| 2. | கடல்மல்லைக் காதலி | பல்லவநாடு | தேவசோமை | மருத்துவம் |
| 3. | கடல்மல்லைக் காதலி | பல்லவநாடு | முத்தம்மாள் | சமையல் |
| 4. | உதயசந்திரன் | பல்லவநாடு | குமுதவல்லி | சமையல் |
| 5. | கடல்மல்லைக் காதலி | பல்லவ நாடு | இராஜசுந்தரி | மாறுவேடம் |
| 6. | வஞ்சிநகர் வஞ்சி | சோழ நாடு | மயில்விழி | மாறுவேடம் |
| 7. | வல்லத்து இளவரசி | நாயக்கர் நாடு | அங்கயற்கண்ணி | மாறுவேடம் |
| 8. | தெற்குவாசல் மோகினி | சோழ நாடு | தேவகுஞ்சரி | மாறுவேடம் |
| 9. | கடல்மல்லைக் காதலி | பல்லவநாடு | சந்திரமாலா | அணிகலன்கள் அறிதல் |
| 10. | கடல்மல்லைக் காதலி | பல்லவநாடு | இராஜசுந்தரி | பிறமொழி அறிவு |
| 11. | மாணிக்கவீணை | பல்லவநாடு | சைலேந்திரி | பிறமொழி அறிவு |
| 12. | மாணிக்கவீணை | பல்லவநாடு | சாலினி | பிறமொழி அறிவு |
| 13. | மாணிக்கவீணை | பல்லவநாடு | தேவசோமை | பிறமொழி அறிவு |
| 14. | பாண்டிய மகுடம் | பாண்டியநாடு | மலர்க்கொடி | பிறமொழி அறிவு |
| 15. | தெற்குவாசல் மோகினி | சோழ நாடு | தேவகுஞ்சரி | அறிவுக்கூர்மை |
| 16. | சித்திரவல்லி | சோழநாடு | சித்திரவல்லி | அறிவுக்கூர்மை |
| 17. | பகைவனின் காதலி | சோழ நாடு | சிந்தாமணி | அறிவுக்கூர்மை |
| 18. | சோழஇளவரசன் கனவு | பல்லவநாடு | மீன்விழி | அறிவுக்கூர்மை |
| 19. | சோழஇளவரசன் கனவு | பல்லவநாடு | மயிலழகு | அறிவுக்கூர்மை |
| 20. | உதயசந்திரன் | பல்லவநாடு | குமுதவல்லி | அறிவுக்கூர்மை |
| 21. | வல்லத்து இளவரசி | நாயக்கர்நாடு | அங்கயற்கண்ணி | அறிவுக்கூர்மை |

ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பெற்ற இருபத்தைந்து நாவல்களில் பன்னிரெண்டு நாவல்களில் பயன்கலைகள் பற்றிய செய்திகள் இடம்பெறுகின்றன.

நாவலாசிரியர் விக்கிரமன் நாவல்களுக்குக் களமாகக் கொண்ட பாண்டிய, சோழ, பல்லவ, சாளுக்கிய, நாயக்க, சேரநாடுகளில், சேரநாடு தவிர பிற நாட்டுப்பெண்கள் பயன்கலைகளில் சிறந்திருந்த செய்தியை அட்டவணை விளக்குகிறது.

பயன்கலைகளில் அறிவுக்கூர்மைக் கலையில் சிறந்திருந்த பெண்கள் எண்ணிக்கையில் மிகுதியாகவும், மாறு வேடமும், பிறமொழியறிவும் பெற்றிருந்த பெண்கள் அதற்கடுத்த நிலையிலும் உள்ளனர். சமையல், மருத்துவம் ஆகிய கலைகளில், வகைக்கு இரண்டுபேர் படைக்கப்பெற்றுள்ளனர். அணிகலன்கள் அறிதல் கலை வகையில் ஒருவர் படைக்கப்பெற்றுள்ளார்.

பயன்கலைகள் குறித்த செய்திகளை விளக்குவதற்குக் கீழ்க்கண்ட வகைப்படுத்தல், கருத்தில் கொள்ளப்பெறுகிறது.

1. மருத்துவம்
2. சமையல்
3. மாறுவேடம்
4. அணிகலன்களை அறிதல்
5. பிறமொழியறிவு
6. அறிவுக் கூர்மை

## 1. மருத்துவம்

அறுபத்து நான்கு கலைகளில் மருத்துவக் கலையும் ஒன்று. இம்மருத்துவக் கலையில் கையாளப்பெறுவது மூலிகை. காடுகளிலும் மலைகளிலும் உள்ள மூலிகைகளைத் தேடி அவற்றால் மருத்துவம் பார்த்த பெண்களின் பயன்கலையறிவு சில பாத்திரங்களால் வெளிப்படுகிறது.

### பரிவாதினியின் மருந்தியல் அறிவு

பரிவாதினி நாவலில் சித்தரிக்கப்பெறும் பரிவாதினி, மூலிகையறிவு பெற்ற பெண்ணாகப் படைக்கப்பெற்றுள்ளாள். வாழ்க்கைக்குத் தேவையான இன்றியமையாத செயல்கள் கலைகளாக்கப் பெற்றிருக்கின்றன. மகேந்திரவர்மன் அஜந்தாக் காடுகளுக்குச் சென்றிருந்த போது நோய்வாய்ப்படுகிறான். அவனுக்குப் "பரிவாதினி தினமும் மலைப்பகுதிக்குச் சென்று காய்ச்சலுக்குரிய மூலிகை மருந்தினைத் தேடிக் கண்டுபிடித்து அதைச் சாறாக்கிக் கொடுக்கிறாள்."[55] மகேந்திரனின் நோய் குணமாகிறது என்று கதைப்போக்கில் கூறப்பெறுகிறது. திருமணமாகாத இளம் பெண்ணின் மருந்தியல் கலையறிவை நாவல் புலப்படுத்துகிறது.

### தேவசோமையின் மருத்துவ முறை

தேவசோமை கடல்மல்லைக் காதலியில் இடம்பெறுகிறாள். இவள் காபாலிகப் பெண். மண்டை ஓடுகளை மாலையில் அணிந்து உடம்பெல்லாம் திருநீறு பூசிக் கையில் சூலாயுதம் ஏந்திக் காடுகளிலும், மலைகளிலும் திரியும் தேவசோமை நோய் நீக்கும் மருத்துவ முறை அறிந்திருக்கிறாள். தன் கூட்டத்தினரோடு தங்கியிருந்த தேவசோமை இறைவனுக்குப் பலிகொடுப்பதற்காகக் காபாலிகர்களால் கொண்டு வரப்பட்ட இளைஞனைப் பார்க்கிறாள். அவனது கையிலே இருந்த காயத்திலிருந்து குருதி கசிந்தது. இதை யாரும் கண்டுகொள்ளவில்லை. தேவசோமை அங்குமிங்கும் ஓடிச் சென்று அவன்மீது பரிதாபப்பட்டுக் காயத்திற்கு மருந்திட்டுக் கட்டுகிறாள். பெண்கள் மருத்துவக் கலைபற்றி அறிந்திருந்ததோடு அதைத் தக்க நேரத்தில் பயன்படுத்தும் ஆற்றல் பெற்றிருந்ததையும் விக்கிரமன் நாவல்களின் வழி அறியலாம்.

### 2. சமையல்

திறமையோடு சமைத்துக் கலை உணர்வோடு பறிமாறுதல் சமையல் கலையின் சிறப்புகள். சமையல் கலை பற்றிய செய்திகள் விக்கிரமன் நாவல்களில் இடம்பெறுகின்றன. நாட்டுப்புறங்களில் செய்யப்படும்

எளிமையான உணவு சுவையுடையதாகும். கூழும் மோரும் கம்புஅடையும் பற்றி நாவல்களில் சொல்லப்பெறுகின்றன. முத்தம்மா பாட்டி சந்திரமாலாவுக்கும் வல்லபனுக்கும் சுவையான கம்பு அடை செய்து கொடுக்கும் செய்தி கடல் மல்லைக் காதலியில் இடம்பெறுகிறது.

குணதேவனின் காதலி குமுதவல்லி அறுசுவை உணவை அவனுக்காக ஆக்கி வைத்துக் காத்திருக்கிறாள். திருநாராயணனின் மனைவி குமுதவல்லிக்கும் அவளது தந்தைக்கும் சமைத்து உணவளிக்கிறாள். இச்செய்திகள் உதய சந்திரன் நாவலில் இடம்பெறுகின்றன. மேலும் விக்கிரமன் களம் அமைத்த நாடுகளில் ஆங்காங்கே உணவளிக்கும் சத்திரங்கள் உள்ளன. அவற்றில் சமையல் வேலையைக் கவனிக்கவும். உணவிட்டுப் பரிமாறவும் பெண்கள் நியமிக்கப்பெற்றிருக்கின்றனர்.

### 3. மாறுவேடம்

ஒருவர் தன்னை யார் என்று பிறர் அறியாத அளவுக்கு உருவத்தைத்- தோற்றத்தை, ஆடையாலும் ஒப்பனைகளாலும் மாற்றுதல் மாறுவேடமாகும். மாறுவேடம் பயன்கலைகளுள் ஒன்றாகக் கருதப்பெறுகிறது. அரசர்கள் இரவு நேரங்களில் நாட்டின் நிலையறிய மாறுவேடத்தில் ஊர்களில் சுற்றித்திரிந்திருக்கிறார்கள். பழங்காலத்தில் அரசியல் சூழ்ச்சிகளுக்கும் தந்திரங்களுக்கும் மாறுவேடக் கலை பயன்பட்டது.

1. இராச சுந்தரி (க.ம.கா)
2. மயில் விழி (வ.ந.வ)
3. அங்கயற்கண்ணி (வ.இ)
4. தேவகுஞ்சரி (தெ.வா.மோ)

இந்நான்கு பெண்களும் மாறுவேடமிட்ட தன்மையை விக்கிரமன் கதைப்போக்கில் கூறுகிறார்.

*இராஜசுந்தரி அவளது செவிலித் தாயால் வேற்றுநாட்டிற்கு* அனுப்பப் பெறுகிறாள். இராஜசுந்தரியைக் காஞ்சியில் அனைவரும்

அறிவர்.அவள் இராஜநர்த்தகி என்பதால் அவளைச் சமுத்திரநாதன் ஆட்கள் தங்கள் திட்டத்திற்குப் பயன்படுத்த நினைக்கின்றனர். காஞ்சியில் சாளுக்கிய மன்னனின் நடமாட்டம் உள்ளது. எனவே இராஜசுந்தரியைச் சாளுக்கியரிடமிருந்து காப்பாற்றச் செவிலித்தாய் அவளுக்கு மீனவப் பெண் வேடமிட்டு அனுப்புகிறாள். மாறுவேடக் கலை அவளது உயிரைக் காப்பாற்றப் பயன்படுகிறது.

மயில்விழி பல்லவ நாட்டினின்றும் பெயர்ந்து வந்து சேரநாட்டில் நடனமாடி வருபவள். சேரர்களோடு மனவேறுபாடு கொண்டதாலும் மயில்விழியைத் திரும்பப்பெற வேண்டும் என்பதாலும் சோழன் சேரநாட்டின் மீது படையெடுத்துச் செல்கிறான். சோழரின் படை பலத்தை அறிய மயில்விழி குறத்தி வேடம் பூண்டு பாசறைக்குச் செல்கிறாள். மயில்விழியின் மாறுவேடம் சேரன் தன்னைப் போருக்குத் தயார்படுத்திக்கொள்ள உதவுகிறது. செவ்வந்தியன் காதலி அங்கயற்கண்ணி சொக்கநாத நாயக்கரின் காதலி, "மோகனாங்கியைக் காண பவழமலைக்குக் குறத்தி வேடமிட்டு வருகிறாள்"[56] தேவகுஞ்சரி மணவாளன் ஆட்களிடமிருந்து தப்பிக்க ஆண் வேடமிடுகிறாள்.

### 4. அணிகலன்களையறிதல்

பெண்கள் அணிகலன்களை ஆராய்ந்தறிந்து அணியும் ஆற்றல் பெற்றவர்கள் என்பதைத் 'தெரியிழை', 'ஆயிழை' என்ற இலக்கியச் சொற்கள் புலப்படுத்தும். நடனம் நாடகம் சிறப்புற அணிகலன் அறிவும் தெரிவும் தேவையானதாகும். நடனமங்கை சந்திரமாலாவைக் குறிப்பிடும் பொழுது, "பேழைக்குள்ளிருந்து வெள்ளி தங்க ஆபரணங்கள் வெளியே எட்டிப் பார்த்துக்கொண்டிருந்தன. அதைத் தேர்ந்தெடுத்துச் சந்திரமாலா அணிந்து கொண்டிருந்தாள்"[57] என்பதன் மூலம் சந்திரமாலாவின் அணிகலன் அறியும் ஆற்றலை உணரலாம்.

"பொன்னாலான மணிகள் (கழுத்தில் அணிபவை) காதுக்கு அணியும் அணிகலன் (ஓலை) கையிலே அணிவது கெட்டிக்காப்பு"[58] என்ற அணிகலன்களின் வகைப்பாட்டை விக்கிரமன் நாவல்களில் காணலாம். பெண்களின் அணிகலன் அறியும் கலை அவரது நாவல்களில் வெளிப்படுகின்றன. மாறுவேடத்திற்கு ஆடை உதவுவது போல அணிகலன்களும் பயன்படுகின்றன.

## 5. பிறமொழியறிவு

எண்ணங்களின் பரிமாற்றத்திற்கு உதவுவது மொழி. பல மொழிகளை அறிந்திருப்போர் பிற நாட்டோடு தொடர்புகொள்ள இயலும் பிற மொழியறிவு அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்றாகும். விக்கிரமன் நாவல்களில் படைக்கப்பெற்றுள்ள பெண்கள் நாடுவிட்டு நாடு செல்கின்றனர். அந்தந்த நாட்டுமக்கள் பேசும் மொழியறிந்திருப்பதால் அவர்களால் அங்கு சிரமமின்றி நடமாடமுடிகிறது.

இராஜசுந்தரி - (க.ம.கா)

சைலேந்திரி - (மா.வீ)

சாபினி - (மா.வீ)

தேவசோமை - (மா.வீ)

மலர்க்கொடி - (பா.ம)

இப்பெண்கள் கலைக்காகவும் அரசியலுக்காகவும் நாடுவிட்டு நாடு பெயர்ந்து செல்கின்றனர்.

| | | |
|---|---|---|
| இராஜசுந்தரி | - | உயிர்பிழைக்க நாகநாடு செல்கிறாள். |
| சைலேந்திரி | - | காம்போஜ நாட்டிலிருந்து பல்லவ நாட்டிற்கு வீணை கற்றுக்கொள்ள வருகிறாள். |

சாலினி - சாளுக்கிய நாட்டிலிருந்து பல்லவ நாட்டிற்கு அரசியல் சூழ்ச்சிக்காக வருகிறாள்.

தேவசோமை - காதலனைக் காப்பாற்ற பல்லவ நாட்டிலிருந்து சாளுக்கிய நாடு செல்கிறாள்.

மலர்க்கொடி - மதுரை மகுடத்தைக் காப்பாற்றத் தன் காதலருடன் ஈழம் செல்கிறாள்.

இவ்வாறு பல காரணங்களுக்காகப் பிற நாடுகளுக்குச் செல்லும் பெண்களுக்குப் பிற மொழியறிவு பயன்படுகிறது.

### 6. அறிவுக்கூர்மை

அறுபத்துநான்கு கலைகளுள் அறிவுக்கூர்மை ஒரு கலையாகக் கருதப்பெறுகிறது. அக்கலையில் வல்ல பெண்களை விக்கிரமன் தம் நாவல்களில் பதிவுசெய்துள்ளார். ஆறு பெண் பாத்திரங்களை இவ்வகையில் காணலாம். பெண்கள் அறிவுக்கூர்மையுடன் செயல்படும் நிலையை விக்கிரமன் விரும்புவதாகவும் அதில் சோழநாட்டைச் சார்ந்த பெண்கள் மிகுதியாக அறிவுக்கூர்மைக் கலையுடன் படைக்கப்பெற்றிருப்பதும் தெரியவருகிறது.

தேவகுஞ்சரி - (தெ.வா.மோ)

சித்ரவல்லி - (சி.வ)

சித்ராதேவி - (க.கோ.இ)

சிந்தாமணி - (ப.கா)

அங்கயற் கண்ணி - (அ.க)

இப்பெண்களின் அறிவுக்கூர்மை நாட்டைக் காப்பாற்றவும் மன்னனுக்கு ஆலோசனை கூறவும், போரை நிறுத்தவும் பயன்படுகிறது. அறிவுக்கூர்மை பின்வரும் தலைப்புக்களில் திறனாயப்பெறுகிறது.

1.அயலிடம் செல்லல்

2.மகுடம்காத்தல்

3.முனைப்பை முன்னிறுத்துதல்

4.அரசர்களுக்கு அறிவுரை

5.முள்ளை முள்ளால் எடுத்தல்

6.பாராட்டுப் பெறும்பாங்கு

## 1. அயலிடம் செல்லல்

தேவகுஞ்சரி தன் அறிவுக்கூர்மையால் சோழமன்னர்களின் பகைவர்களைப் பற்றியறிந்து மன்னனுக்கு எடுத்துரைக்கிறாள். பகைவர்கள் தன்னை யார் என்று கண்டுவிட்டால் சிறைப்படநேரும் என்றுணர்ந்து அவ்வப்போது தன் இருப்பிடத்தை மாற்றுகிறாள். தன்னைக் காப்பாற்ற வந்த முதியவரிடம் "நான் எப்படியும் கங்கை கொண்ட சோழபுரம் போகவேண்டும். இங்குமட்டும் நம்மைத்தேடி மணவாளன் ஆட்கள் வந்துவிடமாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்"[59] என்று சாதுர்யமாகப் பேசி அங்கிருந்து சென்றுவிடுகிறாள். அவள் நினைத்ததைப் போல் பகைவர்கள் அவளைத் தேடிவந்துவிட்டார்கள் என்ற செய்தியை அறிகிறாள். அன்று அவள் அறிவுக்கூர்மையோடு செயல்பட்டிருக்காவிட்டால் நாட்டின் தலைவிதி மாறியிருக்கும்.

## 2. மகுடம் காத்தல்

சித்திரவல்லியின் அறிவுக்கூர்மையால் சோழமகுடம் பிழைத்தது. ஜெயசிம்மனைக் காதலித்த சித்திரவல்லி அவனால் தன் நாட்டிற்கு ஆபத்து வருகிறது என்றறிந்தவுடன் காதலைத்துறக்கிறாள். சோழமகுடத்தைத் தாங்கிப்பிடித்து இராஜேந்திரன் முடியில்சூட்டி உயிர்துறக்கிறாள்.

## 3. முனைப்பை முன்னிறுத்துதல்

சோழநாட்டுப் படைத்தலைவர் மகள் சிந்தாமணி, சோழமன்னரால் வளர்க்கப்பெறுகிறாள். அவர் விரும்பாத பகைவன் பாண்டியகுமாரனைக் காதலிக்கிறாள். அதை மறுத்த சோழனிடம் சாதுரியமாகப்பேசிப் பகைவனின் காதலியாகிவிடுகிறாள். பாண்டியகுமாரன் சிந்தாமணியுடன் பேசும் போது, பாண்டியர்கள் இன்னும் முனைப்போடு செயல்பட வேண்டும் என்று மறைமுகமாகவும் நகைச்சுவையாகவும் எடுத்துரைக்கிறாள். "சோழர் குலப்பெண் யாராவது கிடைப்பார்களா? என்று இக்காட்டில் தேடிக்கொண்டிருப்பதாகப் பாண்டியகுமாரன் கூற, சிந்தாமணி, "இப்பொழுதுதான் புரிகிறது பாண்டியர்கள் ஏன் தோல்வியைக் காண்கிறார்கள் என்று சோழ மங்கை காட்டிற்கு வலிய வந்து உங்களிடம் சிக்குவாள் என்று இந்தக் கானகத்தில் காத்திருக்கிறீர்கள்"[60] என்று. மனதில்படும்படிப் பேசியப் பேச்சுக்குப் பதில் அளிக்க முடியாமல் பாண்டியகுமாரன் திணறுகிறான்.

## 4. அரசர்களுக்கு அறிவுரை

சித்ராதேவி பாண்டிய அரசர்களைப் பற்றிக் கூறும்போது "மகுடத்திற்காக மட்டுமல்ல, ஒரு மங்கைக்காகவும் ஒருவரோடொருவர் வாளெடுத்துப் போரிடச் சித்தமாயிருக்கிறார்கள். இருவரும் அழிந்துவிடப் போகிறார்கள்"[61] என்கிறாள். அறிவுக்கூர்மையோடு பேசும் சித்ராதேவியின் பேச்சைக் கேட்ட அவளது தந்தை விக்கிரமபாண்டியனின் உடல் சிலிர்க்கிறது.

## 5. முள்ளை முள்ளால் எடுத்தல்

மங்கம்மாள் ஒரு பேரரசனுக்குரிய அறிவுக் கூர்மை பெற்றவள். வெங்கண்ணாவும், அழகிரியும் சொக்கநாத நாயக்கரை அழிக்கத்திட்டம் தீட்டுகின்றனர். அதைக் கண்டுபிடித்துவிட்ட மன்னரும் மந்திராலோசகர்களும் அவர்களுக்குத் தண்டனை அளிக்க நினைக்கிறார்கள். ஆனால் மங்கம்மாள் அழகிரிக்குத் தஞ்சையை ஆளும் பொறுப்பைக் கொடுத்து

வெங்கண்ணாவைப் பிரதானியாக்குமாறு கூறுகிறாள். இதைச் செய்யாவிட்டால் வெங்கண்ணா, அழகிரியின் மனப்பான்மை மாறும். மேலும் மேலும் தீமைசெய்ய நினைப்பார்கள். அந்த எண்ணத்தை மாற்றி அவர்களைப் பொறுப்புள்ளவர்களாக்கவும் நாட்டின் எல்லைப்பகுதி பாதுகாப்பாக இருக்கவும் மங்கம்மாவின் அறிவுரை உதவுகிறது. இதனால் மங்கம்மாவின் அறிவுக்கூர்மையை அனைவரும் மெச்சுகிறார்கள்.

### 6. பாராட்டுப்பெறும் பாங்கு

செவ்வந்தியின் காதலி அங்கயற்கண்ணி சொக்கநாத நாயக்கரின் பொருட்டு அவரது காதலி மோகனாங்கியைச் சந்திக்கத் தஞ்சைக்குச் செல்கிறாள். மாறுவேடம் பூண்டால்தான் மாளிகைக்குள் யாருடைய சந்தேகமும் இல்லாமல் செல்லமுடியும் என்று பேசுகிறவளைப் பார்த்துச் செவ்வந்தி "என் காதலிக்கு இவ்வளவு சாமர்த்தியமும் சமயோசிதமும் இருக்கிறதா"[62] என்று வியக்கும் அளவுக்கு அங்கயற்கண்ணி அறிவுக்கூர்மையோடு செயல்படுகிறாள்.

### முடிவுரை

அழகும் பயன்பாட்டில் இன்புறுத்தலும் கலையின் தன்மையாகும். அவ்வகைக் கலை இரு பாலர்க்கும் பொதுவானது. அழகுணர்ச்சியை மையமிட்ட கலைகள் பெரும்பாலும் பெண்களோடு தொடர்புடையனவாக அமையும்.

வாழ்வியலோடு தொடர்புடைய கலைகள் பிற்காலத்தில் தனித்துப் பிரிந்தன. சங்க இலக்கியங்களும் காப்பியங்களும் கலைகள் பற்றிய செய்திகளைப் பதிவு செய்துள்ளன. சமணம், பௌத்தம் ஆதிக்கத்தில் கலைகள் வீழ்ச்சியடைந்தாலும் பக்தி இயக்கத்தில் புத்தெழுச்சி பெற்றன.

பதியிலாதார் கலைகளின் வளர்ச்சிக்கு உதவியதை மெய்ம்மைகள் சுட்டுகின்றன. வரலாற்று நாவலாசிரியர்கள் வரலாற்றுக்காலக் கலைச்சூழலைத் தம்நாவல்களில் பதிவு செய்வர். அவ்வகையில் விக்கிரமன்

தம் நாவல்களில் கலைகளைப் பதிவுசெய்துள்ளமை அறியப்பெறுகிறது. நுண்கலைகள், பயன்கலைகள் என்ற வகைமைக்குள் அவை பிரித்தறியப் பெறுகின்றன.

ஆய்விற்கெடுத்துக் கொள்ளப் பெற்ற இருபத்தைந்து நாவல்களில் பதினோரு நாவல்களில் இடம்பெறும் இருபத்திநான்கு பெண்கள் நுண்கலைத் தொடர்புடையவர்களாகச் சித்தரிக்கப் பெற்றுள்ளனர்.

நாடுகளின் அடிப்படையில் நோக்கும் போது முதலில் சோழநாட்டுக் கலைப்பெண்கள் மிகுதியாக இடம்பெறுகின்றனர். நுண்கலைகளுள் நடனக்கலை அறிந்த பெண்கள் நாவல்களில் மிகுதியாகச் சித்தரிக்கப் பெற்றுள்ளனர். சித்தரிக்கப் பெற்ற பெண்கள் திருமணமாகாதவர்களாவர். கலைப்பெண்களில் அரசகுலம் சார்ந்தவர்கள் யாருமிலர். கலைகள் அக்காலத்தில் அரசகுலம் சாராத பெண்களோடு மட்டும் தொடர்புபடுத்தப் பெற்றிருக்கிறது. இதற்குச் சமூக அமைப்பும், அக்காலத்தில் கலைக்குக் கொடுத்த இடமும் காரணமாயிருக்கலாம். விக்கிரமன் நாவல்களில் பதியிலாதார் கலைப் பெண்களாகச் சித்தரிக்கப் பெற்ற நிலை மிகுதி.

பல்லவர் காலத்தில் ஓவியக்கலைச் சிறப்புற்றிருந்தது. இதனைப் பல்லவ நாட்டு வரலாற்றை அடிப்படையாகக் கொண்ட நாவல்களில் ஆசிரியர் பதிவு செய்துள்ளார். ‘பரிவாதினி’ நாவல் ஓவியக்கலையைப் மையமிட்டு எழுதப்பெற்றது. ‘சித்திரக்காரப்புலி’ எனப்பெயர் பெற்ற மகேந்திரவர்மன் இந்நாவலில் தொடர்பு பெறுகிறான்.

விக்கிரமன் நாவல்களில் நடனக் கலைப் பெண்கள் மிகுந்துள்ள நிலையில் அதிலும் சோழநாட்டுப் பெண்கள் கூடுதலாகவும் அடுத்த நிலையில் பல்லவ நாட்டுக் நடனக்கலைப் பெண்களும் இடம்பெற்றுள்ளமை ஆய்வின்வழி உணரப்பெறுகிறது. தமிழக வரலாற்றில் சோழர்களும் பல்லவர்களும் கலைக்கு முதன்மைத்தன்மை கொடுத்தனர் என்பது வரலாற்று மெய்ம்மை. கலையில் பெண்கள் படைக்கப்பெறுகிற போதும் அதே தன்மை

வெளிப்படுகிறது. நடனக்கலைப் பெண்களில் ஏழுபேர் பதியிலாதார் குலத்தைச் சார்ந்தவர்கள் என்பது கருதத்தக்கதாகும்.

'கடல்மல்லைக் காதலியில்' இடம் பெறும் இராஜசுந்தரி, சந்திரமாலா, காஞ்சி சுந்தரியில் சித்தரிக்கப் பெற்றுள்ள காஞ்சனா, சுந்தரி, சோழ இளவரசன் கனவில் வரும் மயிலழகு ஆகியோர் குறிப்பிடத்தகுந்த கலைப்பெண்களாவர்.

சோழநாட்டு நடனக் கலைப் பெண்களான இன்பவல்லி, சிந்தாமணி, மயில்விழி, தேவகுஞ்சரி, வீரம்மாள் ஆகியோர் முறையாக நடனம் கற்றவர்கள். தாம் மட்டும் கலையில் சிறந்திருக்காமல் பிறருக்கும் அக்கலையைச் சொல்லிக் கொடுத்து நாட்டில் கலையை வளர்க்கின்றனர். மயில்விழி, தேவகுஞ்சரி போன்றோர் பதியிலாதாராகத் திகழ்ந்தபோதும் இவர்கள் கலையுணர்வு சமூகத்தால் மதிக்கப்பெற்றது.

நாடகக் கலையும் நடனக்கலையும் தொடர்புடையது. எனவே ஆசிரியர் நடனக் கலைப்பெண்களை நாடக்கலை அறிந்தவர்களாகவும் சித்தரிக்கிறார். இசைக்கலையில் வாய்ப்பாட்டாகப் பாடுவதில் சிறந்த பெண்களையும் இசைக் கருவிகளோடு பாடுபவர்களையும் படைத்துள்ளார். யாழ், வீணை ஆகிய இசைக்கருவிகள் நாவல்களில் இடம்பெறுகின்றன. அவற்றை இசைக்கத் தெரிந்தவர்கள், இளம் பெண்களாகவும், வயது முதிர்ந்தவர்களாகவும் உள்ளனர். ஆசிரியர் கலைக்கு முக்கியத்துவம் கொடுத்து இரண்டு நாவல்களுக்கு இசைக்கருவிகளின் பெயரை வைத்துள்ளார். 'யாழ்நங்கை' 'பரிவாதினி' என்ற அந்த இரண்டு நாவல்களில் இடம்பெறும் பெண்களுக்கும் அப்பெயரைச் சூட்டியுள்ளார் என்பது குறிப்பிடத் தகுந்ததாகும்.

மருத்துவம், சமையல், பிறமொழியறிவு, மாறுவேடம், அறிவுக் கூர்மை, அணிகலன்களையறிதல் முதலிய கலைகள் பயன்கலைகளாகக் கூறப்பெற்று அக்கலையில் சிறந்த பெண்கள் நாவல்வழி அறியப் பெறுகின்றனர்.

பல்கலை அறிவு பெற்ற பெண்கள் படைக்கப் பெற்றுள்ளனர். ஒரே பெண் நடனம், நாடகம், ஓவியம், இசை ஆகிய கலைகளை அறிந்துள்ளாள். பயன்கலைகளில் சிறந்த பெண்கள் மிகுதியாக உள்ளனர். ஓவியக்கலைக்கும், சிற்பக் கலைக்கும் நடன முத்திரைகள் அடிப்படையாக அமைவதால் ஓவியர், சிற்பி ஆகியோரின் மனைவி, மகள் நடனக்கலைகளில் கலையால் சிறந்திருந்த தன்மை புலப்படுகிறது. பிற குடும்பப் பெண்களோடு கலை தொடர்புபடுத்தப் பெறவில்லை.

## சான்றாதாரங்கள்


1. வாழ்வியற் களஞ்சியம், (தொகுதி 6), பக்.862-863.

2. மயிலை சீனி.வேங்கடசாமி, தமிழர் வளர்த்த அழகுக்கலைகள், ப,22.

3. திருவிளையாடற் புராணச் சொற்பொழிவு, ப,29.

4. வாழ்வியற்களஞ்சியம், (தொகுதி 6), ப,864.

5. முத்துலெட்சுமி, சாண்டில்யன் நெடுங்கதைகளில் பெண்மை, ப,162.

6. வே.தி.செல்வம், தமிழக வரலாறும் பண்பாடும், ப,119.

7. துளசி.இராமசாமி, தமிழகக் கலைச் செல்வங்கள், ப,14.

8. மயிலை.சீனி.வேங்கடசாமி, மகேந்திரவர்மன், ப,114.

9. கல்கி,சிவகாமியின் சபதம், ப,52.

10. விக்கிரமன், பரிவாதினி, ப,74.

11. சுந்தா, பொன்னியின் புதல்வர், ப,348.

12. பத்மா சுப்பிரமணியம், பரதக்கலைக்கோட்பாடு, ப,2.

13. விக்கிரமன், கடல்மல்லைக் காதலி, ப,152.

14. மேலது, ப,98.

15. மேலது, ப,276.

16. மேலது, ப,232.

17. விக்கிரமன், காஞ்சி சுந்தரி, ப,268.

18. மேலது, ப,279.

19. மேலது, ப,285.

20. விக்கிரமன், சோழஇளவரசன் கனவு, ப,36.

21. மேலது, ப,338.

22. மேலது, ப,407.

23. விக்கிரமன், பரிவாதினி, ப,26.

24. விக்கிரமன், 'நந்திபுரத்து நாயகி', ப,280.

25. விக்கிரமன், 'நந்திபுரத்து நாயகி', ப,280.

26. மேலது, ப,50.

27. மேலது, ப,48.

28. விக்கிரமன், மங்கலத் தேவன் மகள், ப,123.

29. விக்கிரமன், 'வஞ்சிநகர் வஞ்சி' ப,11.

30. விக்கிரமன், சோழமகுடம், ப,20.

31. மேலது, ப,125.

32. மேலது, ப,133.

33. விக்கிரமன், கங்காபுரிக் காவலன்(பாகம் 2), ப,23.

34. விக்கிரமன், கங்காபுரிக் காவலன் (பாகம் 2), ப,23.

35. மேலது, ப,253.

36. விக்கிரமன், தெற்கு வாசல் மோகினி, ப,15.

37. மேலது, ப,74.

38. மேலது, ப,129.

39. மு.வரதராசனார், இலக்கியமரபு, ப,99.

40 துளசி.இராமசாமி, தமிழகக் கலைச் செல்வங்கள், ப,78.

41. விக்கிரமன், கடல்மல்லைக் காதலி, ப,231.

42. மேலது, ப,254.

43. ஏ.என்.பெருமாள், தமிழர் இசை, ப,524.

44. வாழ்வியற் களஞ்சியம் (தொகுதி 7), ப,921.

45. விக்கிரமன், தெற்குவாசல்மோகினி, ப,9.

46. விக்கிரமன், நந்திபுரத்துநாயகி, (பாகம் 1), ப,176.

47. விக்கிரமன், கொன்றை மலர்க்குமரி, ப,2.

48. மேலது, ப,104.

49. விக்கிரமன், யாழ்நங்கை, ப,1.

50. ஏ.என்.பெருமாள், தமிழர்இசை, ப,14.

51. விக்கிரமன், தெற்குவாசல் மோகினி, ப,28.

52. விக்கிரமன், யாழ்நங்கை, ப,17.

53. மேலது, ப,

54. விக்கிரமன், பரிவாதினி, ப,24.

55. விக்கிரமன், பரிவாதினி, ப,74.

56. மேலது, ப,194.

57. விக்கிரமன், கடல்மல்லைக் காதலி, ப,2.

58. விக்கிரமன், வல்லத்து இளவரசி, ப,195.

59. விக்கிரமன், தெற்கு வாசல் மோகினி, ப,111.

60. விக்கிரமன், பகைவனின் காதலி, ப,29.

61. விக்கிரமன், கன்னிக்கோட்டை இளவரசி, ப,12.

62. விக்கிரமன், வல்லத்து இளவரசி, ப,196.

# 7.பெண்ணியச் சிந்தனைகள்

சமூகத்தில் பெண் சமூகத்திற்குச் சிறப்பான இடமுண்டு. இருப்பினும் சமுதாய வளர்ச்சியில் பெண்சமூகம் ஏற்றங்களையும், வீழ்ச்சிகளையும் பெற்றே இயங்கிவருகிறது. ஆணாதிக்கம், பண்பாட்டுச் சூழல், சமயச் சடங்குகள் போல்வன பெண் சமூகத்திற்குப் பின்னடைவை ஏற்படுத்திய நிலையை வரலாற்று மெய்ம்மைகள் உணர்த்துகின்றன.

இந்நிலையிலிருந்து மாற்றம் பெற வேண்டும் என்பதற்காகப் பெண்ணுரிமைச் சிந்தனை அண்மைக்காலத்தில் பரவலாக வளர்ச்சியடைந்துள்ளது. இதைப் ‘பெண்ணியம்’ என்பர். சமூக இயக்கமாகிய பெண்ணியம் எழுத்தாளர்களின் வழி இலக்கியங்களில் பதிவாகின்றன. இச்சூழலைக் கருத்தில் கொண்டு இலக்கியங்களில் பெண்ணியம் குறித்து ஆராயும் போக்கு வளம்பெற்றுவருகிறது.

இவ்வாய்வு விக்கிரமனின் வரலாற்று நாவல்கள் குறித்த ஆய்வாகும். எனினும் பெண்ணியம் எழுச்சி பெற்றிருக்கக் கூடிய இக்காலத்தில் வாழுகிற விக்கிரமன், வரலாற்று நாவல்களிலும் பெண்ணுரிமை குறித்துச் சிந்திக்க முயற்சித்திருப்பதை மதிப்பிடுவதே ஆய்வின் நோக்கமாகும்.

பெண்ணியம், பெண்ணிய வகைகள், விக்கிரமன் நாவல்களில் இடம்பெற்ற விதம் இவ்வியலில் ஆராயப் பெறுகின்றன.

## பெண்ணியம் விளக்கம்

‘Feminism’ என்ற ஆங்கிலச்சொல் பெண்ணியத்தைக் குறிப்பதாகும். இச்சொல் Femina என்ற இலத்தீன் சொல்லிலிருந்து மருவி வந்ததாகக் கூறுவர். ‘Femina’ என்றால் ‘பெண்ணின் குணாதிசயங்களைக் கொண்டுள்ள’ என்பது பொருளாகும். இச்சொல் முதலில் பாலியல் குணங்களைக் குறிக்கப் பயன்படுத்தப்பெற்றது. அதன்பின் பெண்ணின்

உரிமைபேசும் சொல்லாகப் பிற்காலத்தில் உருவாகியது. 1894 ஆம் ஆண்டு வெளிவந்த ஆக்ஸ்போர்ட் ஆங்கில அகராதியிலேயே இச்சொல் எடுத்தாளப்பெற்றுள்ள நிலையை அறிஞர்கள் எடுத்துக்காட்டுகின்றனர்.

"பெண்ணியம் என்பதன் வேர் பெண் விடுதலையிலிருந்து தொடங்குகிறது. இன்று 'பெண்ணியம்' என்பதற்குப் 'பாலியல் சமத்துவம்' (Sexual equalities) என்ற பொருளைத் தந்தாலும், அஃது பெண்களின் எல்லாச் சிக்கல்களையும் புரிந்துகொண்டு அதை நீக்க முயல்வதாகும். 'பெண்ணியம்' ஆண்கள் எந்த அளவு குடும்ப அமைப்பிலும் சமூக அமைப்பிலும் பொருளாதாரத்திலும் அரசியலிலும் ஈடுபட்டு உரிமை கொண்டாடுகிறார்களோ அந்த அளவுக்குப் பெண்களுக்கும் மேற்கூறியவற்றில் அனைத்து உரிமைகளும் வழங்கப்படவேண்டும் என்று போராடும் போக்கினது"[1] என்று குறிப்பிடுவர்.

மேலும், "உலகத்தோடு பெண் எத்தகைய தொடர்பு கொண்டிருக்கிறாள். எவ்வாறு அவள் அடக்கு முறைக்கு ஆளாகிறாள். ஆணுக்கு ஒருநீதி, பெண்ணுக்கு ஒருநீதி என்ற நிலை நிலவுதல் போன்ற பல செய்திகளை நன்கு அறிவதும் அவ்வறிவினை மேற்கூறிய நிலையை மாற்றியமைக்கத்தக்க சக்தியாகப் பயன்படுத்துதலும் எனலாம்"[2] என்ற பெண்ணியம் பற்றியக் கூற்றும் இவண் கருதத்தக்கதாகும்.

எனவே பெண்ணியம் என்பது பெண்களின் நிலை அறிதலும், அவ்வறிதலை ஆக்கசக்தியாக மாற்றிப் பெண்களின் நிலையை உயர்த்தலும் ஆகும்.

"பெண் சமூகத்தில் காணப்படும் சிக்கல்களைக் களைவதன் மூலம் அரசியல், பண்பாடு, பொருளாதாரம், ஆன்மீகம் என்ற துறைகளில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்த முடியும் என்கிறார் சார்லட் பன்ச். (Charlotte Bunch) மேலும் பெண்ணியச் சிந்தனையால் சமூகமாற்றம் (Transformation politics of the society) நிகழும் என்பதில் உறுதியாய்

இருக்கிறார்."[3] ஆகவே சமூகமாற்ற நிகழ்விற்குப் பெண்ணியச் சிந்தனை வெகுவாக உதவும் என்பதும் தெளிவாகிறது.

### பெண்ணியத்தின் வகைகள்

"பெண்ணின் வாழ்க்கைச் சூழலுக்கும், அனுபவத்திற்கும் ஏற்பப் பெண்ணிய இயக்கத்தில் மூன்றுவகைப்பாடு அமையும் என்று முனைவர் பிரேமா தன்னுடைய நூலில் வகைப்படுத்தியுள்ளார்."[4]
அவையாவன,

1. தாராளப் பெண்ணியம் (Liberal Feminism)
2. சமதர்மப் பெண்ணியம் (Socialist Feminism)
3. தீவிரவாதப் பெண்ணியம் (Radical Feminism) என்பதாகும்.

இவைகளைப் பற்றிய விளக்கத்தைப் பின்வரும் பகுதியில் காணலாம்.

மேலை நாடுகளில் தனிநபர் விடுதலை, அரசியல் செல்வாக்கு, சமவாய்ப்புப் போன்ற கொள்கைகளை முன்னிறுத்தி, மக்களாட்சிக்கு ஏற்ற முறையில் தாராளப் பெண்ணியம் இயங்குகிறது. அதில் வெற்றியும் கண்டுள்ளது. 'சமதர்மப் பெண்ணியம்' தன்னுடைய கொள்கைகளை முதலாளித்துவத்தின் வகுப்புவாத அடக்கு முறைக்கு எதிராக அமைத்துக்கொண்டுள்ளது.

தீவிரவாதப் பெண்ணியத்தில் ஆண்கள் எதிரிகளாகக் கருதப்பெற்றனர். ஆண்களால் தாங்கள் அடக்கி ஒடுக்கப்பெற்றிருக்கிறோம் என்பதை உணர்ந்து அதிலிருந்து உரிமைபெறவேண்டும் என்ற தீவிரமான எண்ணத்தைக் கொண்டது.

முனைவர் சரோஜா பெண்ணியத்தை,

1. மிதவாதப் பெண்ணியம்
2. மார்க்சியப் பெண்ணியம்
3. தூய அல்லது மரபுநிலைப் பெண்ணியம்
4. சோசலிஸ்ட் பெண்ணியம்

5. தீவிரப் பெண்ணியம்

6. கூட்டுசேராப் பெண்ணியம்

7. மகளிர் முன்னேற்றப் பெண்ணியம்

8. மனித இன மேம்பாட்டுப் பெண்ணியம்

என்று வகைப்படுத்துகிறார்"[5]

பெண்ணியம் என்பது இயங்கும் விதத்தாலும், வடிவமைப்புப் பெற்ற தன்மையாலும், முரண்படுகிற நிலையிலும் வேறுபட்டு நிற்கின்றன. பெண்ணிய நிலைகள் நாட்டுக்குநாடு வேறுபடுவதுண்டு. நாட்டுக்கு நாடு வேறுபடுவதற்கு நாட்டில் நிலவும் பண்பாட்டுச் சூழலும் குறிப்பிடத்தகுந்த காரணியாகும்.

## இந்தியப் பெண்ணியம்

இந்தியப் பெண்ணியம் பற்றியறியப் பாரம்பரியமாக இந்தியநாட்டில் பெண்ணின்நிலை எவ்வாறிருந்தது என்பதை அறிதல் வேண்டும். இந்தியச் சமுதாய அமைப்புத் தந்தைவழிச் சமூகம் தாய்வழிச்சமூகம் என்ற இரண்டையும் கொண்டதாக இருந்ததை வரலாற்றாய்வாளர்கள் கூறுவார்கள்.

வேதகாலத்தில் மக்கள் கடவுளர்களை ஆண்கடவுளர்களாகவே வணங்கினர். இத்தன்மை ஆணாதிக்க நிலையைக் காட்டுகிறது. திராவிடச் சமயத்தில் பெண்தெய்வம் மிகுந்திருக்கின்ற நிலை உருவானது. இந்துசமயம் வளர்ந்து பரவியபோது ஆண்கடவுளர்களும் பெண்கடவுளர்களும் இடம் பெற்றிருந்தனர். ஆனாலும் எல்லாச் சடங்குகளிலும் பழக்கவழக்கங்களிலும் பெண்களின் பங்கு மிகுதியாக இல்லை. அவர்கள் நிலை அடக்கம் பெற்ற நிலையிலேயே இருந்தமையை அறிஞர்கள் சுட்டுகின்றனர்.

"பழஞ்சமயங்களான சமணமும் பௌத்தமும் பெண் எதிர்ப்புக் கொள்கையை வலியுறுத்தின. இம்மதங்கள் பெண்ணை ஒதுக்கித்தான் ஆண் துறவு பூணவேண்டும் என்று கூறின"[6] இந்திய நாட்டில் சமயம் முக்கியக் கூறாக விளங்குவதால் அது சமூக அமைப்பிலும் வெளிப்படுகிறது.

மக்களின் வாழ்க்கைமுறை, பண்பாடு அனைத்திலும் சமயம் சார்ந்த நிலையைக் காணலாம். பிறப்பு, இறப்புத் தொடர்பான சடங்குகளில் ஒருசிலவேறுபாடுகள் இருந்தாலும் அவற்றில் ஒரு பொதுமைப் பண்பு நிலவுகிறது. பெண்களுக்கு ஆங்காங்கு உரிமைகள் கொடுக்கப்பெற்ற நிலையை அறியமுடிகிறது. ஆனாலும் முழுமையான உரிமைகளைப் பெண்கள் பெற்றிருப்பதாகத் தெரியவில்லை.

ஆங்கிலேயர் வரவுக்குப்பின் இந்தியாவில் அரசியலில், பொருளாதாரத்தில், சமூக அமைப்பில், கல்வியில் பல்வேறு மாற்றங்கள் தெரியத்தொடங்கின. சமூகச் சீர்திருத்தங்கள் உருவாயின. பெண்களின் வாழ்க்கையில் பலவித மாற்றங்கள் தோன்றின. சமூகச் சீர்திருத்தவாதிகள் பெண்ணுரிமைக்காகக் குரல்கொடுக்கத் தொடங்கினர். பெண்கள் பின்தங்கிய நிலையில் உள்ள எந்தநாடும் முன்னேறாது என்று சீர்திருத்தவாதிகள் எண்ணினர். பெண் சமூகத்தின் குறையைக் களைவதால் எல்லாத் துறைகளிலும் மாற்றத்தைக் கொணரமுடியும் எனச் சமூகவியலார் கருதினர்.

ஐரோப்பியர் வரவால் கல்வி பெண்ணுக்குக் கிடைக்க ஏதுவாயிற்று. மேலைநாட்டுக் கல்வியால் உலகச் செய்திகள் நாட்டில் பரவலாக ஊடுருவின. பெண்ணைப் பற்றிய பார்வை விசாலமாயிற்று. பெண்கள் தங்கள் நிலைமையை உணர்ந்து வாழ்வில் மாற்றம் காண விழைந்தனர். ஆண்களும் பெண்களின் முன்னேற்றத்திற்குக் குரல்கொடுத்தனர். மேலைநாடுகளில் 17ஆம் நூற்றாண்டில் பெண்ணியச்சிந்தனை தோன்றியது. இந்தியாவில் காலதாமதமாகப் பெண்ணியச் சிந்தனை விழிப்புணர்வு பெறத் துவங்கியது.

இந்தியப் பெண்ணியத்திற்கும், மேலைநாட்டுப் பெண்ணியத்திற்கும் பல வேறுபாடுகள் உண்டு. மேலைநாட்டுப் பெண்ணியம் ஆணாதிக்கத்தை முழுமையாக எதிர்க்கும் தீவிரவாதப் பெண்ணியமாக இருக்கிறது. இந்தியப் பெண்ணியம் ஆணிற்கு எதிரான இயக்கமாய் இல்லாமல், மனைவி, தாய் என்ற உறவுநிலையில் இருந்து மாறாமல்,

விழிப்புணர்வுபெற்ற நிலையில் இயங்குவது கருதத்தக்கதாகும். பெண்விடுதலை என்ற பெயரில் திருமணத்தை மறுப்பதோ திருமண உறவுகளை நிராகரிப்பதோ தெய்வத்தன்மையை மறுப்பதோ இந்தியப் பெண்ணியத்தில் குறைவாகக் காணப்படுகிற நிலை கருதத்தக்கதாகும்.

### தமிழ்ப் பெண்ணியம்

"பெண்மையாவது கட்புலனாயதோர் அமைதித்தன்மை"[7] என்று பெண்ணுக்கு இலக்கணம் சொல்லப்பெறுகிறது. "பெண்மை என்பது அடக்கம், பொறுமை, தியாகம், பிறநலம், இரக்கம், அழகு, ஒப்புரவு, தொண்டு முதலியன அமைந்த ஒன்று"[8] என்று பெண்ணுக்குப் பல்வேறு பரிமாணங்களை அறிஞர்கள் குறிப்பிடுவர்.

பெண் உரிமையுடையவளாகத் திகழ்ந்ததை,

"உரிமை கொடுத்த கிழவோன் பாங்கில்
பெருமையின் திரியா அன்பின் கண்ணும்"[9]

என்ற தொல்காப்பிய வரிகளால் அறியலாம். ஔவையார் முதலிய பெண்பாற்புலவர்கள் நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகளும் திமிர்ந்த ஞானச்செருக்கும் கொண்டு திகழ்ந்தமைப் பண்டைத் தமிழகத்தில் பெண்கள் சிறப்புப் பெற்றிருந்தமையை வரலாற்றுச் செய்தியாக உணர்த்துகிறது.

பிறசமயங்களின் வரவாலும், ஆட்சிமாற்றத்தாலும் பெண்ணுக்கு உரிமை மறுக்கப்பெற்றது. 'பெண் போகப்பொருள்' எனக் கருதப்பெறுகிற நிலை ஏற்றுக்கொள்ளத்தக்க நிலையாய் இல்லை. வீட்டுக்குள் பெண்ணைப் பூட்டிவைக்கும் அடிமைநிலை உண்டாகியது. பெண்ணோடு கூடிவாழும் வாழ்க்கை வீடுபேற்றைத் தராது என்று சமயவாதிகள் கருதினர். பெண்களின் உணர்வுகள் மறுக்கப்பெற்று அவர்களது விருப்பம் அறியாமல் மணமுடிக்கப்படுவதும் வழக்கத்தில் நிலவுகிறது. அதிகாரம் படைத்தோர் பலபெண்களை மணக்கும் நிலை உருவாகியது. ஆணாதிக்கம் வெகுவாகத் தலைதூக்கிய நிலையையும் வரலாற்றின்வழி அறியலாம். பெண்கல்வி, பெண்

பணிக்குச் செல்லுதல் மறுக்கப் பெற்றது. இதை எதிர்த்துச் சமூகச் சிந்தனையாளர்கள், இலக்கியப் படைப்பாளிகள், இயக்கங்கள் முயற்சி செய்து வந்தமையினால் பெண்களுக்கான நியாயமான உரிமைகள் கிடைத்தாக வேண்டிய நிலையைத் தமிழ்ச்சமூகம் பெற்றது.

மேலே பெண்ணியம் குறித்த விளக்கங்களும், வகைநிலைகளும் இந்தியச் சூழல் மற்றும் தமிழர் சூழல் கருத்தில் கொள்ளப்பெற்று, அறிமுகநிலையில் விளக்கப்பெற்றன. விக்கிரமன் தம் நாவல்களில் பெண்ணியச் சிந்தனைகளை இடம்பெறச் செய்ததை இனிவரும் பகுதியில் விரிவாகக் காணலாம்.

## விக்கிரமன் காட்டும் பெண்ணியம்

விக்கிரமன் என்ற படைப்பாளரின் காலச்சமூகச் சூழலில் பெண்ணியச் சிந்தனை விரிவாக்கம் பெற்றநிலை குறிக்கத்தக்கதாகும். இயல்பாகவே விக்கிரமன் பெண் சமூகத்தின் மேன்மையைக் கருத்தில் கொண்டிருப்பவர். பாரதியைப் போற்றுகிறவர். ஆகவே பாரதி விரும்பும் புதுமைப் பெண்ணை விக்கிரமன் விரும்புவதாகக் கருதலாம். இவர் வரலாற்றுக்கால நாவலை எழுதினாலும் சமகாலப் பெண்ணியச் சிந்தனையை அந்நாவல்களில் பதிவுசெய்துள்ள நிலையை உணரமுடிகிறது.

## உரிமையும் சுதந்திரமும்

'பெண்ணியம்' என்ற சொல் அண்மைக் காலத்தில் புழக்கம் பெற்ற சொல்லாகும். பொதுவாக அச்சொல் பெண்ணுரிமைகளைக் குறித்ததாக அமையும். விக்கிரமன் தம் நாவல்களில் இந்த 'உரிமை' என்ற சொல்வழக்கைப் பெண்பாத்திரங்களின் கூற்றில் பயன்படுத்துகிறார்.

'பகைவனின் காதலி' என்ற நாவல் சோழபாண்டிய நாட்டு வரலாற்றுப் பின்னணியை உடையது. பாண்டிய குமாரன் கதைத் தலைவன். இவன் வரலாற்றுப் பாத்திரமாவான். சிந்தாமணி பாண்டிய

குமாரனை விரும்பும் அரசகுலம் சாராத பெண்ணாவாள். கற்பனைப் பாத்திரமும் ஆவாள். இப்பாத்திரத்தின் வழி ஆசிரியர் பெண்ணுரிமைச் சிந்தனையை முன்வைக்கிறார்.

பொதுவாக அரசகுலப்பெண்கள் மற்றைய பெண்களைவிடக் கட்டுப்பாடுகளை அதிகம் சந்திக்க வேண்டியவர்களாகவே வரலாற்றுக் காலத்தில் இருந்திருக்கின்றனர். அரசகுலப்பெண்கள் பட்டத்தரசியாக இருந்தபோதிலும் அந்தப்புரத்தில் பிற ஆடவர்கள் பார்க்க முடியாத நிலையிலேயே வாழ்ந்துவரவேண்டிய நிலையில் இருந்தார்கள். இந்த நிலையிலிருந்து மாற்றம் பெற்றுப் பெண்கள் உரிமைபெற வேண்டும் என்பது விக்கிரமனின் சிந்தனையாக இருத்தல் வேண்டும்.

"பொதுவாக வேற்று ஆடவர் முன்னிலையில் அந்தப்புரப் பெண்டிர் வருவதில்லை ஆனால் சிந்தாமணிக்கு முழு உரிமை உண்டு"[10] என்ற கூற்று கதைப் போக்கில் ஆசிரியர் குறிப்பிடுவதாகும். சிந்தாமணி அரசகுலப் பெண்ணாக இல்லாததால் பிற ஆடவரைச் சந்திக்கும் வாய்ப்பையும், உரிமையையும் பெற்றிருக்கிறாள். ஆனால் அரசகுலப் பெண்களுக்கு வாய்ப்பில்லை. இப்படிப்பட்ட நிலையைச் சிந்தாமணி வரவேற்கவில்லை.

அரசகுலப்பெண்கள் உரிமையற்றவர்களாகக் கட்டுப்பாடுகளுடன் அந்தப்புரத்தில் இயங்குகிற வாழ்க்கையை வெறுக்கும் சிந்தாமணி, "அரசகுல வாழ்க்கையை நான் வெறுக்கிறேன். சுதந்திரப் பறவைபோல் வானில் பறந்து மகிழ எனக்கு ஆசை"[11] என்கிறாள். பறவைகள் கட்டுப்பாடற்றுச் சுதந்திரமாக இயங்குவது போன்று பெண்களும் கட்டுப்பாடுகள் இல்லாமல் சுதந்திரமாக இயங்கவேண்டும் என்பது சிந்தாமணியின் விருப்பம். ஆகவே பெண்குல மீட்சிக்கு இவர் உரிமை, சுதந்திரம் போன்ற சொல்வழக்குகளைக் கதைப்போக்கில் தன் கூற்றிலும், பாத்திரக் கூற்றுக்களிலும் கூறுவதை மேற்குறித்த எடுத்துக்காட்டுகள் மட்டுமன்றி பிற எடுத்துக்காட்டுக்களின் வழியாகவும் உணரலாம்.

வரலாற்றுக் காலத்தில் அரசாட்சி உரிமை ஆண்களுக்கே இருந்தது. நந்திபுரத்து நாயகியில் குந்தவை என்கிற பாத்திரம் சித்தரிக்கப் பெறுகிறாள். இவள் அரசாளுதற்குரிய பண்புகளைத் திறம்படப் பெற்றவள். இச்சிந்தனை வரலாற்றின் உண்மைச் சிந்தனைகளாகும். தமக்கையான இவளது ஆதரவுடன்தான் அருண்மொழிவர்மன் பிற்காலத்தில் இராசராசனாக உருவெடுக்கிறான். இராசமாதா செம்பியன் மாதேவி தம்கூற்றில் "ஆணாகப் பிறந்திருந்தால் குந்தவை நாட்டை ஆளும் உரிமை பெற்றிருப்பாள்"[12] என்று குந்தவையைப் பற்றிக் கூறுகிற நிலை கருத்திற்குரியதாகும்.

அரசர்களுக்கருகில் இருக்கும் பட்டத்தரசியாகப் பெண்கள் இருந்தாலும் நாட்டை ஆளும் உரிமைகளை அவர்கள் முழுமையாகப் பெறவில்லை. இந்நிலையில் மாற்றம்பெற வேண்டும் என்பது விக்கிரமனின் உள்ஆசையாகும். அந்த உள் ஆசையைச் செம்பியன்மாதேவி பாத்திரப் படைப்பின் மூலம் வெளிப்படுத்துகிறார்.

## விக்கிரமன் காட்டும் பெண்ணிய வகை

பெண்ணிய வகைகள் குறித்து முற்பகுதியில் விளக்கப்பெற்றது. பிரேமா, சரோஜா போன்றோர்கள் குறித்த வகைகள் எடுத்துரைக்கப் பெற்றன. எல்லாநாட்டிலும் பெண்ணியங்கள் ஒன்றுபோல் இருப்பதில்லை. அந்தந்த நாட்டின் அரசியல், பொருளாாரம், பண்பாட்டுச் சூழல் போன்றவைகளுக்கு ஏற்பப் பெண்ணிய வகைகளும் மாறுபடும். பொதுவாக இந்தியாவில் தந்தைவழிச் சமூகம் சிறப்பாக இயங்கிவருகிறது. பண்பாட்டு நிலையிலும் பெண்களுக்கெனத் தனித்த பண்புகள் வரையறுக்கப் பெற்றுள்ளன. பண்டைய மரபுகளும் இலக்கியப்பதிவுகளும் பெண்கள் சமூகத்தில் இயங்க வேண்டிய முறைகளை நெறிமுறைப் படுத்தியுள்ளன. இச்சூழலில் இந்தியாவில் தோன்றுகிற பெண்ணியம் பெரும்பாலும் மிதவாதப் பெண்ணியமாக இருப்பதை அண்மைக்கால அறிஞர்கள் சுட்டியுள்ளனர்.

சமகாலப் பெண்ணியச் சிந்தனையே மிதவாதப் பெண்ணியமாக இருக்கிறபோது வரலாற்றுக்காலப் பெண்கள் இதைவிடக் குறைந்த மிதவாதப் பெண்ணியத்தில்தான் இயங்கமுடியும் என்பதை விக்கிரமன் தெளிவாக உணர்ந்து தம் வரலாற்று நாவல்களில் மிதவாதப் பெண்ணியத்தைச் சித்தரிக்கிறார். கல்விநிலை, ஆடவரோடு பழகுகிற நிலை, கணவனைத் தேர்ந்தெடுக்கும் நிலை, அரசாளும் நிலை, சொத்துரிமை இவைகளைச் சார்ந்து மிதவாதப் பெண்ணியத்திற்கு நாவல்களில் பரவலாகக் குரல்கொடுப்பதை உணரமுடிகிறது.

இக்குரலை விரிவாக உணர்வதற்குக் கீழ்க்கண்ட தலைப்புக்கள் அமைத்துக்கொள்ளப்பெற்றன.

1. காதலில் பெண்ணியச் சிந்தனை
2. திருமணத்தில் பெண்ணியச் சிந்தனை
3. குடும்பத்தில் பெண்ணியச் சிந்தனை
4. சமூகத்தில் பெண்ணியச் சிந்தனை
5. அரசியலில் பெண்ணியச் சிந்தனை

## 1. காதலில் பெண்ணியச் சிந்தனை

காதலில் பெண்ணின் நிலை எவ்வாறிருந்தது என்பதனையும், அந்நோக்கில் ஆசிரியரின் பெண்ணியச் சிந்தனையையும் இவ்வியலில் காணலாம்.

குந்தவை காதல் கொண்டபோதும், குடும்பச்சூழலால் காதலை நிறைவேற்றிக் கொள்ள முடியாத நிலையில் உள்ளாள். மனம் திறம்பாத காதல் குந்தவையிடம் காணப்பெறுகிறது. தடைகளும். போராட்டங்களும் காதலுக்கு இருந்தபோதும் காதலைக் கைவிடவில்லை.

### காதலில் சுதந்திரம்

தன்காதலன் சிறையிலடைக்கப்பட்ட போதும் உள்ள உறுதியோடிருக்கிறாள். குந்தவையின் காதலுக்கு அவள் குடும்பத்தினர் பெரும்

எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை. அரசியல் பகைவர்களால்தான் அவள் காதலுக்கு இன்னல் ஏற்படுகிறது. குந்தவையின் சகோதரன் இராசராசசோழன் தனக்காகத்தான் சகோதரியின் காதல் காத்திருக்கிறது என்பதை உணர்ந்து இருவரையும் சேர்த்து வைக்க முயற்சிசெய்கிறான். அரசகுடும்பத்தில் இப்படியொரு சுதந்திரமான காதல் சிந்தனை இருப்பதை நாவல்களின்வழி உணரமுடிகிறது.

## காதலர் சுதந்திரம்

'பகைவனின் காதலி' சிந்தாமணியின் காதல் வீரமும், எதிர்ப்பும் கொண்ட காதலாகச் சித்தரிக்கப் பெறுகிறது. படைத்தலைவரின் மகளான சிந்தாமணி, சோழ அரண்மனையில் மன்னன் குலோத்துங்கனின் மகளைப் போல் வளர்ந்து வருகிறாள். அவள் பாண்டி நாட்டைச் சார்ந்த பாண்டிய குமாரன் என்பவனைக் காதலிக்கிறாள். சோழ நாட்டுக்கும் பாண்டியநாட்டுக்கும் இருந்த சிக்கலைத் தீர்க்க மற்றொரு பாண்டிய நாட்டு இளவரசனுக்கு மணமுடிக்கக் கருதுகின்றனர். காடுகளில் ஒளிந்து திரிந்தாலும் பாண்டிய குமாரன் நாட்டுப்பற்றோடு இருப்பதை அறிந்த சிந்தாமணி அவனையே மணக்க நினைக்கிறாள் அதற்குத் தடை வருகிறது. அதை எதிர்க்கிறாள். இறுதியில் பாண்டிய குமாரன் சோழநாட்டு வீரர்களால் கொல்லப்பட்ட போதும் தன்காதலில் இருந்து மாறாத தன்மையைக் கீழ்வரும் அவளது பேச்சுக்களால் உணரலாம், "தங்களுடைய எந்தச் சொல்லையும் கட்டளையையும் மீற விரும்பாத நான் இந்த விஷயத்தில் மீறுவதற்கு மன்னித்து விடுங்கள். நான் ஒருநாளும் கோழையை மணக்க மாட்டேன் சோழநாட்டினரின் அடிபணிந்து, அவர்கள் தயவில் பாண்டிய நாட்டை ஆளவிரும்பிய விக்கிரமபாண்டியனை விடச் சுதந்திரபுருஷராகக் கடைசி வரையில் இருந்து வீரமரணம் எய்திய பாண்டிய குமாரன்தான் என் மணாளன்"[13]

காதலை நிறைவேற்றிக் கொள்வதில் பெரும்பாலும் தோற்றுப்போகிறவர்கள் பெண்களாயிருப்பர். காரணம் பெற்றோர், தன்னைச் சார்ந்தோரின் நலம் கருதி காதலை விட்டுவிடுவதுண்டு. பயம் கருதி மனத்தை மாற்றிக்கொள்வதுண்டு. ஆனால் சிந்தாமணி துணிந்த உள்ளத்தோடு, தன்காதலனின் இறப்புக்குப் பிறகும் அவன் நினைவாகவே வாழ்கிறாள். தேவையில்லாத எதிர்ப்புத் தோன்றுகிற போது அதை எதிர்க்கும் பெண்ணியச் சிந்தனை இங்கு வெளிப்படுகிறது.

### தவறும் தவறாமையும்

தான் காதலித்த விக்கியண்ணன் ஏற்கனவே திருமணமானவன் என்பதை அறிந்ததும் மீன்விழி எண்ணத்தை மாற்றிக்கொள்கிறாள். அதேசமயம் தான் விரும்பாத போது தன்னை விரும்பி, அடைய நினைத்த வெள்ளீச்சுரனைத் தாக்குகிறாள். வெள்ளீச்சுரன் மீன்விழியிடம் தன்னை ஏற்றுக்கொள்ளும்படி கூறுகிறான். மீன்விழி மனதில் அவனுக்கு இடமில்லை. அதனால் "என்னை மறந்துவிடு, தீய கனவு கண்டால் அதை எப்படி மறந்துவிட வேண்டுமோ அதைப்போல் மறந்துவிடு. சிற்பக் கூடத்துக்குத் திரும்பிச் சென்று கவனி"[14] என்கிறாள். அவன் மேலும் மேலும் தொந்தரவு செய்கிறான். அப்போது "மீன்விழி சிலிர்த்தாள். தன் தலையாலேயே அவனது முகத்தில் முட்டினாள். மூக்கு பலமாகத் தாக்கப்பட்டது. அவன்பிடி சற்று தளர்ந்து வலக்கரத்தாலும், இடக்கரத்தாலும் மாறிமாறி அவன் முகத்தில் குத்துக்களை வீசினாள்".[15] இதிலிருந்து தன் மனம் விரும்பாத காதலை ஏற்றுக்கொள்ள மறுக்கும் பெண்ணுள்ளத்தை 'சோழ இளவரசன் கனவு' என்ற நாவல்வழி அறியமுடிகிறது.

### சார்பின்மை

மயிலழகு அமுதனைக் காதலிக்கிறாள். பல்லவநாட்டில் அவன் கொல்லப்பட்டவுடன், தான் இனிமேல் திருமணம் செய்துகொள்ளக் கூடாது என்று முடிவெடுக்கிறாள். கோவிலில் சென்று தங்கிச் சிறுசிறு வேலைகளையும்

கோவிலுக்காகச் செய்து வாழ முடிவெடுக்கிறாள். விக்கிரமன் படைத்திருக்கிற பெண்கள் யாரும் காதலில் தோற்றுப் போகிறபோது தனக்குத்தானே சமாதானம் கூறிக்கொண்டு மற்றவரை மணந்ததாகக் காட்டப்பெறவில்லை.

## *மறுப்பில் துணிவு*

'வல்லத்து இளவரசியில்' மோகனா சொக்கநாதரின் காதல், நாட்டுச் சூழலால் பாதிக்கப்பெறுகிறது. தஞ்சை நாயக்கர்களும், மதுரை நாயக்கர்களும் மனவேறுபாடு கொண்டிருக்கின்றனர். எனவே மோகனாவின் தந்தை அவளது காதலுக்கு அனுமதியளிக்கவில்லை. மோகனாவின் தந்தையின் பிடிவாதம், அவளது அத்தையின் மாறுபட்ட சிந்தனை இரண்டும் மோகனாவின் காதலை அழிக்கிறது. அரச குடும்பங்களில் பெண் யாரைக் காதலிக்கிறாள் என்பதைப் பொறுத்து அக்காதல் வெற்றியோ, தோல்வியோ பெறும் தன்மையிலுள்ளது. இன்றைய உலகில் வசதி நிறைந்த ஆடவனுடன் ஒருபெண் காதல் கொண்டால் சிரநேரங்களில் ஏற்கப்படுகிறது. ஏழையைக் காதலித்தால் எதிர்ப்பு அதிகமாகிறது. அரசகுடும்பங்களில் உறவும், பகையும் இன்றிருக்கும் வசதி, ஏழ்மை ஆகிய நிலையில் வைத்துப் பார்க்கப் பெற்றிருக்கிறது.

'மங்கலத்தேவன் மகள்' சிந்தாமணி நம்பியைக் காதலித்தபோது தந்தையை இழக்கிறாள். பெண்களை அடிமைகளாக வைத்திருக்கும் அம்பலவாணன் அவளையும் அவள் சகோதரியையும் சிறைப்படுத்துவதாகக் கூறுகிறான். இவர்களுக்கு உதவ யாருமே இல்லை. அந்நிலையில் வாழ்ந்தால் நம்பியுடன்தான் வாழ்வது, இல்லையேல் கோவிலில் இறைவன்முன் ஆடி வாழ்வது என்று கோவிலுக்கு வருகிறாள். ஆடை அலங்காரங்களுடன் அம்பலவாணனின் அந்தப்புரத்தில் தங்கி அங்கு வருகின்ற ஆடவரைத் திருப்திப் படுத்த விரும்பாத நற்சிந்தனையுடைய பெண்ணாகச் சிந்தாமணி படைக்கப்பெற்றுள்ளாள்.

## போராடும் உறுதி

'கடல்மல்லைக் காதலியில்' சந்திரமாலா தன்காதலன் குமாரதேவனை அடைய நினைத்தவுடன் பெற்றோரை மறக்கிறாள். சாளுக்கிய நாட்டில் வளர்ந்தவள் காதலனைத்தேடிப் பல்லவநாடு வருகிறாள். காபாலிகர்களாலும், அக்கூட்டத்தைச் சேர்ந்த தேவசோமையாலும் காடுகளிலும், மலைகளிலும் பல்வேறு துன்பங்களைச் சந்திக்கிறாள். அரசனால் அறியப்பட்ட சந்திரமாலாவின் காதல் அவனாலேயே நிறைவேற்றி வைக்கப்பெறுகிறது. சந்திரமாலா தன் கதையைப் பற்றிக் கூறும்போது "வேதனையும் சோதனையும் நிறைந்த கதை"[16] என்கிறாள். இவ்வளவு துயரத்திலும் போராடித் தன்காதலனைக் கண்டுபிடித்து மணந்து கொள்கிறாள். காதலில் பெண்ணியச் சிந்தனையை முன்னிறுத்த நினைத்த ஆசிரியர் பாத்திரங்களை இவ்வாறு படைத்துச் செல்கிறார் எனக் கொள்ளலாம்.

'யாழ்நங்கையில்' பைரவியின் காதல் துணிச்சலான காதலாகச் சித்தரிக்கப் பெற்றுள்ளது. சோழநாட்டுப்பெண் பைரவி, பாண்டியநாட்டுத் தூதுவனைக் காதலிக்கிறாள். சோழநாட்டைச் சேர்ந்தோர் இதையறிந்து அவளைத் தூற்றுகின்றனர். அவள் நாட்டுக்குத் துரோகம் இழைக்கிறாள் என்று நினைக்கின்றனர். தன்னுடைய பொதுமை எண்ணமான 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற கருத்தை எடுத்துக்கூறித் தன் காதலை வளர்க்கிறாள். சோழமன்னன் அழைத்துப் பேசியபோது மிகுந்த அறிவுக்கூர்மையோடு பேசும் பைரவி அவருக்கு உதவுவதாக வாக்களிக்கிறாள். அதன்படி சோழநாட்டிற்கு உதவித் தான் உதவியதற்குப் பரிசாகச் சிறையில் வாடும் பாண்டிய நாட்டுத் தூதுவனைக் கேட்டுத் தன்காதலை நிறைவேற்றுகிறாள். நேர்மையான எண்ணம் கொண்ட பைரவி, ஊரார்பேச்சைப் பொருட்படுத்தாத முற்போக்குச் சிந்தனையுடையவளாகப் படைக்கப் பெற்றுள்ளாள்.

**கடமையும் காதலும்**

'மதுரை மகுடத்தில்' மலர்க்கொடி தான் காதலிக்கும் மதிவாணன் அரசகுலத்தவன் என்பதையறிந்து பெருமையுறுகிறாள். தன் காதலனுடன் நாடுவிட்டு நாடு சென்று தன்காதலை நிறைவேற்றிக்கொள்கிறாள். தன் தந்தையின் கொடிய நடவடிக்கையை அவள் வெறுக்கிறாள். மதிவாணனின் ஆடம்பரமற்ற எளிய வாழ்க்கை முறை அவளைக் கவர்கிறது. கடமைக்கப்புறம்தான் காதல் என்பதில் உறுதியாய் உள்ளாள். "அன்பே தாய்நாட்டின் விடுதலைதான் உங்கட்கு முதன்மையாயிருக்க வேண்டும். உங்களை முதலில் நான் வீரராகக் கண்டேன். தாங்கள் அரசகுமாரர் என்ற செய்திகேட்டுப் பேருவகை அடைந்தேன். அந்தப் பெருமையெல்லாம் வீணாகச் செய்யாதீர்கள். அத்தான், அதனால்தான் என்னை மறந்துவிடுங்கள் என்று கூறினேன். எனக்காகத் தாய்த்திருநாட்டை மறந்து விடாதீர்கள்"[17] என்கிறாள். காதல் நிறைவேறாமல் போகுமோ என்று கண்ணீர் விடாமல் மனத்திடத்தோடு பேசும் மலர்க்கொடி மதிவாணனை உயிருக்குயிராகக் காதலித்தபோதும் கடமைக்கப்புறம் தான் காதல் என்கிறாள்.

பெண்கள் பெரும்பாலும் காதலில் உரிமை பெற்றவர்களாகப் படைக்கப் பெற்றுள்ளனர். காதலை நிறைவேற்றிக்கொள்ளும் ஆற்றலுடையவர்களாகப் பெண்கள் உள்ளனர். காதலில் தடைகள், தோல்விகள் இருந்தபோது அதைச் சமாளிக்கும் ஆற்றல் உடையவர்களாகத் திகழ்கின்றனர். காதலில் விழிப்புணர்வும். புரட்சிப்போக்கும் காணப்பட்டாலும் ஒழுக்கம் தவறாத தன்மையோடு பெண்களைப் படைத்துள்ள ஆசிரியர் தமிழ்ப்பண்பாட்டுத் தளத்தை மறக்கவில்லை.

அரசகுலத்தில் வரலாற்றுப் பாத்திரங்கள் சித்தரிக்கப் பெறுவதால் வரலாற்று மெய்ம்மைகளை ஒட்டியே எழுதவேண்டியுள்ளது. நந்திபுரத்து நாயகியில் வரும் குந்தவை வாணவராயன் வந்தியத்தேவனைக்

காதலித்த செய்தி வரலாற்றோடு தொடர்புடைய செய்தியாகும். துணிச்சலும், உறுதியும் நிறைந்த குந்தவை அரசகுலத்திலிருந்து விரும்பியவனையே மணக்கிறாள் என்றால் அது அவளது பெண்ணுரிமைக்குக் கிடைத்த வெற்றியாகும். இந்த உரிமை சோழநாட்டுப் பின்புலத்தில் சித்தரிக்கப்பெற்றுள்ளது.

தஞ்சாவூர் நாயக்கர் கால அரசப் பின்னணியில் மோகனாவின் காதல் வரலாற்றுக் காதல்தான். விஜயரகுநாத நாயக்கர் மோகனாவின் காதலை ஆதரிக்காமல் பகைமைக்காகத் தீயிட்டுக் கொல்கிறார். இங்கு பகைமைதான் முதலிடம் பெறுகிறது. இந்நிலையைச் சிந்திக்கும்படி நாவலில் கூறியுள்ளதிலிருந்து காதலில் பெண்ணுக்கு உரிமை வழங்கப்பட வேண்டும் என்பதை ஒலிக்கிறார். பெண்ணிற்குக் காதலில் உரிமையும் சுதந்திரமும் தேவை என்பதை மறைமுகமாகச் சிந்திக்க வைக்கிறார்.

அரசகுலத்தில் காதலைக்கூட அரசியலாக்கிவிடுவார்கள். சில அரசகுடும்பத்துப் பெண்கள் நாட்டின் நன்மை என்ற பெயரில் பகடைக் காய்களாகி விடுவார்கள். சோழநாட்டின் தயவில் ஆட்சிபுரியும் பாண்டியனை விடக் காட்டில் சுதந்திரமாகத் திரியும் பாண்டிய இளவரசனைக் காதலித்து உரிமைக்காகப் போராடுவது பெண்களின் காதல் சுதந்திரத்திற்கு உரிமை கொடுப்பது போலாகிறது.

காதலித்தவன் திருமணமானவன் என்றவுடன் மீன்விழி காதலை மறைக்கிறாள் . காதலில் நேர்ந்த தவறை உணர்கிறாள். வெள்ளீச்சுரன் மீன்விழியை அடைய முற்படும்போது அவனை எதிர்க்கும் துணிவு பெற்றிருக்கிறாள். நேர்ந்த தவற்றிற்காகப் புதுக்காதலை வரவேற்கவில்லை. வன்முறையாகக் காதல் இயங்குகிறபோது எதிர்க்கவும் துணிகிற பெண்மையைக் காணமுடிகிறது. காதலன் இறந்தபிறகும் காதலில் தோல்வியுற்றபோதும் சார்பில்லாமல் பெண்கள் வாழ்வது தமிழ்ப்பெண் சமுதாயத்தில் சற்று கடினம்தான். ஆனால் சோழஇளவரசன் கனவில் வரும்

மயிலழகும் காஞ்சிசுந்தரியில் வரும் காஞ்சனாவும் சார்பில்லாமல் தனித்து வாழ்கின்றனர். பெண்கள் ஆடவரின்றித் தனித்தியங்கமுடியும் என்ற முன்மாதிரியை இப்பாத்திரங்களின் வழி ஆசிரியர் சித்தரிக்கிறார்.

காதலுக்காக நாடுகடந்து துன்பங்களை எதிர்கொண்டு வெற்றிபெறுகிற மன உறுதிபடைத்தவர்களாவும் பெண்கள் சித்தரிக்கப் பெறுகின்றனர். காதலும் கடமையும் முரண்படுகிறபோது கடமைக்கு அடுத்தபடியாகக் காதலை நினைக்கிற நிலையில் பெண்ணியச் சிந்தனை வெளிப்படுகிறது.

## 2. திருமணத்தில் பெண்ணியச் சிந்தனை

விக்கிரமன் நாவல்களில் படைக்கப் பெற்ற பெண்களுக்குத் திருமணத்தில் உரிமைநிலை உள்ளதாகச் சித்தரிக்கப் பெற்றுள்ளது. திருமணத்தில்தடை, சிக்கல் ஏற்படுவதாகக் கதைப் போக்கில் சொல்லப் பெற்றாலும் இறுதியில் பெண்ணுரிமை நிலைநிறுத்தப் பெறுகிறது. பெண்களின் கூற்றின் மூலம் ஆசிரியர் பெண்ணுரிமைச் சிந்தனையைப் புலப்படுத்துகிறார்.

### *விருப்பிற்கேற்ற திருமணம்*

'பகைவனின் காதலி' சிந்தாமணிக்குத் தான் விரும்பாத ஒருவனைத் திருமணம் செய்துகொள்ளப் பிடிக்கவில்லை. அதனால் சோழமன்னன் குலோத்துங்கனிடம் "சோழநாட்டுப் பிரஜை ஒவ்வொருவருக்கும் தங்கள் திருமண விஷயமாகத் தாங்களே முடிவுசெய்துகொள்ளும் உரிமை உண்டு"[18] என்று கூறுகிறாள். திருமணம் செய்து கொள்வதில் ஒவ்வொரு மனிதனுக்கும் தனிப்பட்ட கருத்து உண்டு. பிறர் விருப்பத்திற்கேற்ப ஆணோ, பெண்ணோ திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற அவசியமில்லை என்ற நிலை இருந்தாலும் இன்றும் சமூகத்தில் குறிப்பாகப் பெண்களுக்கு அந்த உரிமை முழுமையாக இல்லை என்றே சொல்லலாம். இப்படிப்பட்ட சூழல் உள்ள நிலையில் ஆசிரியர்

இச்சிந்தனையில் மாறுபட்டவராக இருப்பதால் சிந்தாமணி மூலம், வரலாற்றுக் கால அடிப்படை நாவலில் பெண்ணியச் சிந்தனைக்குக் குரல் கொடுப்பதாகக் கருதலாம். ஒவ்வொருவருக்கும் திருமணம் தொடர்பாக முடிவெடுக்க உரிமை உண்டு என்று சொல்ல நினைத்த ஆசிரியர், சிந்தாமணி சோழநாட்டைச் சார்ந்தவளாதலால் அவளைச் 'சோழநாட்டுப் பிரஜை' என்று பேசவைக்கிறார்.

'வல்லத்து இளவரசியில்' மோகனாவின் காதல் சித்தரிக்கப் பெறுகிறது. அவளது காதல் அவள் தந்தையால் மறுக்கப் பெறுகிறது. அவளுக்குப் பிடிக்காத ஒருவனுக்குத் திருமணம் செய்து வைக்க முடிவெடுக்கின்றனர். அதை விரும்பாத மோகனா, "நற்குடியில் பிறந்தவர் என்றாலும் மணமகளுக்குப் பிடித்தவனா என்பதைக் கவனிக்க வேண்டாமா? அந்தக் காலத்தில் அரசகுலத் திருமணங்கள் எல்லாம் சுயம்வரமாகவும், காந்தர் வவிவாகமாகவும் ஏன் நடத்தி வந்தார்கள் என்பது தங்களுக்குத் தெரியாதா? ஒரு பெண்ணுக்கு அவளது கணவன்தான் முக்கியமேயன்றி வேறெதுவும் இல்லை"[19] என்கிறாள். அம்முறையில் திருமணத்தில் மணமகளின் உரிமை குறிக்கப் பெறுவது கருதத்தக்கதாகும்.

தமிழ்ச்சமூகத்தில் ஆரம்ப காலத்தில் முழுமையான உரிமையோடு நடந்த திருமண முறைகளை ஆசிரியர் இங்கு கூறுகிறார். சமூகக் கட்டுப்பாடுகள் காலப்போக்கில் ஏற்பட்டவையாகும். அவை விரும்பப்படாதவைகளாக அமைகின்றன. அவற்றில் ஒன்றுதான் கட்டாயத் திருமணம். அது, உரிமையைப் பறிப்பதாக நினைக்கும் ஆசிரியர், மோகனா என்ற பாத்திரத்தின்வழி திருமணத்தில் பெண்களுக்குள்ள உரிமையை நிலைநாட்ட விரும்புகிறார். அக்கருத்து மேற்சுட்டிய கருத்தின்வழி புலப்படுத்தப் பெறுகிறது.

"திருமணம் என்பது என்னுடைய சொந்த விஷயம். இதில் மற்றவர்களுடைய குறுக்கீடு அல்லது உபதேசங்கள் என்னை எந்தவிதத்திலும் பாதிக்காது"[20] என்றும், "என்விருப்பம் இல்லாமல் அரசர் திருமணத்திற்கு

ஏற்பாடு செய்துவிட முடியுமா? மாலையிடப்போகிறவள் நானா? என் தந்தையா?”[21] என்றும் பேசும் மோகனா பாத்திரப்படைப்பு மூலம் பெண்ணுரிமைச் சிந்தனை மிகத்தெளிவாக எதிரொலிப்பதை அறியலாம்.

‘மாறவர்மன் காதலில்’ சோழநாட்டுக் குறுநிலத்தலைவன் சிங்கவரையனின் மகள் ரங்கதேவி மாறனைக் காதலிக்கிறாள். காதலுக்கு எதிர்ப்புத் தோன்றுகிற போது தன் உரிமையை மிதவாத உணர்வுடன் “நான் என்றுமே சோழநாட்டுக் குடிமகள் என்ற எண்ணத்திலிருந்து மாறியதே கிடையாது. அதனால் என் மனதிற்குகந்த மணாளனைத் தானே தேர்ந்தெடுத்துக்கொள்வதில் தவறில்லை”[22] என்று எடுத்துரைக்கிறாள்.

## பொருத்தமின்மை மறுக்கப்படல்

வயதான ஆண்மகனுக்கு இளமையான பெண்களைத் திருமணம் செய்யும் பழக்கம் சமூகத்தில் இருந்தாலும் இதை ஆசிரியர் விரும்பவில்லை. இஃது நல்லதல்ல என்பதைப் பாத்திரங்களின் வழி ஆசிரியர் பேசுகிறார். சந்திரவதனா என்ற சோழநாட்டு இளம்பெண்ணை வயது முதிர்ந்த சுந்தரபாண்டியன் மணக்க நினைக்கிறான். நாடிருந்த சூழலில் சோழனால் பாண்டியனை எதிர்த்து வெல்லமுடியவில்லை. அதனால் சுந்தரபாண்டியன் எவ்வாறேனும் சந்திரவதனாவை மணந்தவிடக்கூடும் என்றநிலை உருவாகிறது. நாவல்கதை வளர்ச்சியின் உச்சகட்டத்தில் சந்திரவதனா சுந்தரபாண்டியனிடம், “என் மனதை முன்பே ஒருவருக்குக் கொடுத்துவிட்டேன். என் தந்தையின் இடத்திலிருந்த என் விருப்பத்தை நிறைவேற்றுங்கள்”[23] என்று சரண் அடைகிறாள். சந்திரவதனாவின் தாய் புவனமுழுதுடையாள், தன்மகளை வயதுமுதிர்ந்த சுந்தரபாண்டியன் மணப்பதற்கு சம்மதம் தர மறுக்கிறாள். திருமண உரிமை இங்கு மிதவாதவழியிலே நிலை நிறுத்தப் பெறுகிறது. இச்சூழல் ‘ஒருவாள் ஒருமகுடம் இருவிழிகள்’ என்ற நாவலில் சித்தரிக்கப் பெறுகிறது. இவ்வகைச் சிந்தனைகள் மேலும் பல நாவல்களில் எடுத்துரைக்கப்பெற்றுள்ளன. எடுத்துக்காட்டு விளக்கத்திற்காக மேலே சில சான்றுகள் தரப்பெற்றன.

## 3. குடும்பத்தில் பெண்ணுரிமைச் சிந்தனை

கணவன், மனைவி குழந்தைகள் என்று சேர்ந்து வாழும் குடும்ப அமைப்பில் ஆண்கள் உரிமை பெற்றிருப்பது போல் பெண்களும் உரிமைபெற்றிருக்க வேண்டும் என்ற சிந்தனையை ஆசிரியர் புலப்படுத்துகிறார். குடும்பத்தை மேன்மைப் படுத்துவதில் முடிவெடுத்தல், குடும்பநிர்வாகம், குழந்தைகளின் நலன்பற்றி அக்கறை கொள்ளுதல் இவற்றில் பெண்ணின் கருத்துக்குக் குடும்பத்தில் உரிமை கொடுப்பதைக் குடும்பத்தில் பெண்ணுரிமைச் சிந்தனையாகக் கொள்ளலாம். மேலும் வழிபாடு முதலிய பழக்கவழக்கங்களில் பெண்ணுக்குக் குடும்பத்தில் கட்டுப்பாடற்ற சூழல் தோன்றுகிற போது பெண் உரிமை பெற்றவளாகக் கருதப் பெறுகிறாள்.

### குடும்பநலனும் நிர்வாகமும்

குடும்பநலனில் அக்கறைகொண்ட அல்லி(தி.வ) தன்கணவன் தான்வாழும் நாட்டிற்குத் தீமைசெய்து வீட்டை மறந்து திரியும்போது அவனைக் கண்டிக்கிறாள். தீயவர்களோடு சேர்ந்து திரிந்தால் குடும்பநலன் அழியும் என்று அறிவுறுத்துகிறாள். நந்தீசன் மனைவி செங்கமலவல்லி (மா.வீ) இறைப்பற்று மிக்கவள். அவளால் நந்தீசன் வீட்டை மறந்து நாட்டிற்குச் செய்துவரும் தீமைகளைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அவனுக்கு அறிவுரை கூறித் திருத்துகிறாள். உதயசந்திரனின் தாயும் அவனது மனைவி வண்டார்குழலியும் (உ.ச) ஒற்றுமையாய் இருந்து குடும்பத்தை நிர்வகிக்கின்றனர். அதனால் உதயசந்திரன் நிம்மதியாய் நாட்டிற்கு உழைக்கிறான்.

### குழந்தை நலன்

புவன முழுதுடையாள் (ஒ.வா.ஒ.ம.இ.வி)

நாச்சியார் (மா.வ.கா)

அறம் வளர் செல்வி (தி.வ)

செம்பியன் மாதேவி (சோ.ம)

இப்பெண்கள் தங்கள் குழந்தைகளின் நலனில் மிகுந்த அக்கறை கொண்டவர்கள். குழந்தைகளின் நலன் பற்றி முடிவெடுப்பதில் உரிமை பெற்றவர்களாகப் படைக்கப் பெற்றுள்ளனர்.

புவனமுழுதுடையாள் தன்மகள் சந்திரவதனாவின் நலனில் கவனம் செலுத்துகிறாள். அவளுக்கு நல்வாழ்வை அமைத்துக்கொடுப்பதற்குத் தனக்கு உரிமையுண்டு என்று வாதிடுகிறாள். சந்திரவதனாவுக்குப் பிடிக்காத ஒருவனுக்கு அவளைத் திருமணம் புரிவிக்க அவளது தந்தை நினைத்தபோது வாய்மூடி உரிமையற்று இருக்காமல் "என்மகள் விரும்பாது போய்விட்டால் மகளுக்குப் பிடிக்காத மணமகனுக்குக் கொடுக்கச் சம்மதிக்க மாட்டேன்"[24] என்று கூறுகிறாள். தன் குடும்பத்தில் தனக்குள்ள உரிமையைப் பயன்படுத்தித் தன்மகள் வாழ்வைக் காக்கிறாள். பெண்ணிய உரிமைகளுக்கு முன்மாதிரியான பாத்திரங்களை விக்கிரமன் நாவல்களில் படைத்துள்ளார்.

சிங்கவரையன் மனைவி நாச்சியார்(மா.வ.கா) குடும்பத்தில் முழுமையான உரிமை பெற்றவளாக உள்ளாள். நாச்சியார் மகள் ரங்கதேவி மாறனைக் காதலிக்கிறாள். சிங்கவரையன் தன்மகள் மீது கொண்ட மிகுதியான அன்பால் அவள் காதலை ஆதரித்து அவளுக்கும் மாறனுக்கும் திருமணம் முடித்து வைக்க நினைக்கிறான். ஆனால் மாறன் ரங்கதேவியைக் காதலிக்கவில்லை. இதை அறிந்த நாச்சியார் மகள் நலனில் அக்கறை கொண்டு, தன் கணவனிடம் உண்மையை எடுத்துரைக்கிறாள். மகளுக்கு அறிவுரை கூறுகிறாள். ரங்கதேவி மாறன் திருமணம் நடந்தால் அது சிறப்பாய் இராது என்று முடிவெடுத்த நாச்சியார் கருத்தைச் சிங்கவரையன் ஏற்றுக்கொள்கிறான். மாறன் பாண்டியநாட்டிலிருந்து வந்த படைவீரன், சோழநாட்டில் தங்கி வேவுபார்த்தவன் என்பதால் பின்னால் போரில் அழிகிறான். ரங்கதேவி வாழ்வு பிழைக்கிறது.

அறம்வளர் செல்வி(தி.வ) தனியாய் இருந்து தன்மகன் வல்லபனைச் சிறந்தவனாய் வளர்க்கிறாள். அவன் எதிர்காலத்தில் எப்படிச் செயல்பட வேண்டும், அவன் யாரை மணக்க வேண்டும் என்பதில் தெளிவான முடிவெடுக்கிறாள். ஆண் பிள்ளைகள் தந்தையற்ற சூழலில் வளரும் குடும்பத்தில் தாய் எடுக்கும் முடிவுகளை ஏற்க மாட்டார்கள். தாயும் வளர்ந்துவிட்ட மகனுக்கு முன்னால் எந்த முடிவையும் எடுக்கத் தயங்கும் நிலையைக் காணலாம். காரணம் காலம் காலமாகப் பதிந்துவிட்ட ஆணாதிக்கச் சூழல். ஆனால் அறம் வளர் செல்வியின் கருத்துக்களை ஆரம்பத்தில் ஏற்கமறுத்த வல்லபன் பின்னால் ஏற்றுக்கொள்கிறான். குடும்பத்தில் அவளுக்கு உரிமையான சூழல் நிலவுகிறது.

செம்பியன் மாதேவியும் கண்டராதித்தனும் கருத்தொருமித்தவர்கள். கணவன் ஒன்றை நினைக்குமுன் அதைச் செய்து முடிக்கும் தன்மை பெற்றவள். தன்மகன் மதுரனைச் சிவநேசமிக்கவனாக வளர்க்கிறாள். அதற்குத் தந்தை குறுக்கே நிற்கவில்லை. மதுரன் வளர்ந்து பெரியவனானதும் அவனே சோழநாட்டிளவரசனாக வேண்டும் என்று கூறுகிறாள். அது கண்டராதித்தனால் ஏற்கப்பெறுகிறது. மதுரன் பெரியவனாகும் வரை அரிஞ்சயன் இளவரசனாக அறிவிக்கப்பட வேண்டும் என்று இருவரும் முடிவெடுக்கின்றனர். பகைவர்களால் சில குழப்பங்கள் ஏற்பட்டால் கூடச்செம்பியன் மாதேவியின் எண்ணம் அவர்கள் குடும்பத்தில் வெற்றி பெறுகிறது.

### வழிபாட்டுரிமை

கோவில் வழிபாட்டில் 'சோழமகுடம்' செம்பியன் மாதேவியும், நந்திபுரத்த நாயகியில் வரும் இராசமாதா செம்பியன் மாதேவியும் உரிமைபெற்றவர்களாக உள்ளனர். இவர்களின் இந்த உரிமைக்கு யாரும் தடையாய் இல்லை. குடும்பச் சூழலில் உரிமைபெற்ற பெண்களைச் சித்தரித்து பெண்ணுரிமைச் சமுதாயத்தைக் காணவிழையும் ஆசிரியர் எண்ணம் நாவல்களின் வழிப்புலனாகிறது.

## 4. சமூகத்தில் பெண்ணியச் சிந்தனை

விக்கிரமன் சமூகத்தில் பெண்ணுக்குள்ள உரிமைகளை நாவலில் வெளிப்படுத்துகிறார். சமூக நிலையில் பெண்ணுரிமைச் சிந்தனைகளைச் சில வகைகளின் வழியில் காணலாம். தன்னையும் சமூகத்தையும் விளக்கம் பெறச் செய்யும் கல்வியறிவு பெறுதல், தான்வாழும் ஊருக்காகப் பாடுபடுதல், தான்கற்ற கலையைப் பல்லோரும் அறியச் செய்தல், பல்வேறு தொண்டுகள் புரிதல் ஆகியவை சமூக விழிப்புணர்வாகக் கொள்ளப் பெறும். இவற்றை நாவல்களில் கூறிச்செல்லும் ஆசிரியர் பெண்கள் இச்சிந்தனையில் எவ்வாறு உரிமையும் விழிப்புணர்வும் பெற்றவர்களாக உள்ளனர் என்பதைச் சுட்டுகிறார்.

### கல்விநிலை

பெண் விழிப்புணர்வு பெறக் கல்வியறிவு பெறவேண்டும் என்று சமூகச்சிந்தனையாளர்கள் பெண் கல்வியை வற்புறுத்துகின்றனர். பெண் கல்வியறிவு பெற்றதோடு அல்லாமல் பல்லோர் கூடிய சபையில் தன் கல்வியறிவைக் கொண்டு பிறரை மகிழ்ச்செய்யும் உரிமை பெற்றுள்ள தன்மையை ஆசிரியர் படைத்துக் காட்டுகிறார். 'வல்லத்து இளவரசியில்' ரங்கராஜம்மா என்ற பெண் கல்வியறிவு மிகப்பெற்றவளாகச் சித்தரிக்கப் பெற்றுள்ளாள். நொடியில் நூறுபாடல்களை அரங்கேற்றம் செய்யக் கூடியவள். "இன்று இரவு அரண்மனையில் வித்வான்கள் எல்லாம் கூடுகிறார்களாமே! ரங்கராஜம்மா எனும் வித்வாம்சனி புதியபாடல்களை அரங்கேற்றப் போகிறாளாமே"[25] என்ற செய்தியின் மூலம் பெண் கல்வியும் கல்விநிலையில் பெண் உரிமைபெற்ற தன்மையும் புலப்படுகிறது. கல்வி பெண்களுக்குத் தேவை என்பதைப் பலநாவல்களில் குறிப்பாகவும், வெளிப்படையாகவும் எடுத்துரைக்கும் போக்கில் விக்கிரமன் பெண்கல்வியில் கொண்டுள்ள மதிப்பு வெளிப்படுகிறது.

## ஊர்த்தலைமை

"இன்று பெண்ணுரிமை என்ற ஒருகாலம் நிலவுவதாகக்கொள்வது தவறு. அப்படி ஒருநிலை, சிலவிதிவிலக்குகள் நேர்ந்தாலும் அதற்குக் காரணம் ஆணாதிக்கம் அல்ல. பெண் தன்னையே விமர்சனம் செய்துகொள்ள வேண்டும். தவறுகளை நீக்கித் திருத்திக் கொண்டு கிடைத்திருக்கும் வாய்ப்புக்களைப் பற்றிக் கொண்டு முன்னேறவேண்டும்"[26] என்ற சிந்தனையை வளருகின்ற பெண்ணியச் சிந்தனையாக ராஜம்கிருஷ்ணன் கூறுகிறார். உதயசந்திரனின் தாய் வயது முதிர்ந்த பெண். அவள் தான் வாழும் நகரத்தின் தலைவியாக இருந்து சேவை புரிகிறாள். தனக்கு ஒரு வாய்ப்பை ஏற்படுத்திக் கொண்டு வீட்டுச் சிந்தனையை விடுத்து வெளியில் வந்து ஊருக்கு நன்மை செய்கிறாள். இதை உதயசந்திரன் பாராட்டிப் பேசுகிறான். பெண் அடக்கமாக வீட்டிற்குள் ஒடுங்காமல் சேவைக்காகச் சமூகத்திற்கு வருகிற சூழலை 'உதயசந்திரன்' என்ற நாவலில் விக்கிரமன் எடுத்துரைக்கிறார்.

## கலைச்சேவை

'நந்திரபுரத்து நாயகியில்' அருண்மொழிவர்மனின் முல்லைத்தீவுக் காதலி இன்பவல்லி சோழநாடு வந்தாள். தன்காதலை அவனிடம் சொல்ல முடியாத நிலைக்குத் தள்ளப்படுகிறாள். குந்தவையின் தலையீட்டால் இன்பவல்லி அரண்மனையில் தங்கும் வாய்ப்புப் பெற்றும் காதலனோடு பேசஇயலவில்லை. வெறுப்புற்ற நிலையில் ஊரைவிட்டுச் சென்று நடனப்பள்ளி நடத்திக் காலம் கழிக்கிறாள். அக்கலைச்சேவை அவளுக்கு மகிழ்வளிக்கிறது. இதையறிந்து குந்தவை பின்னால் பெருமை கொள்கிறாள். காதலனின் துணை கிடைக்காத சூழலில் தனித்தியங்கு கலைச்சேவையில் ஈடுபடுதல் பெண்ணால் சார்பின்றித் தனித்தியங்க முடியும் என்பதற்கு விளக்கமாகும்.

## பொதுத்தொண்டு புரிதல்

அரசகுலத்தை அடிப்படையாகக் கொண்டு வரலாற்று நாவல்களைப் படைக்கும் ஆசிரியர், அக்குலத்தவரின் வாழ்க்கை முறையைச் சித்தரிப்பதில் மாறுபாடு கொள்ளவில்லை. அதே சமயத்தில அங்கு ஏற்படும் சிக்கல்களைப் பெண்கள் எதிர்கொள்ளும் தன்மையைப் பேசும் போது பெண்ணுரிமைச் சிந்தனையைச் சுட்டிச் சொல்லத் தவறவில்லை. வீரமாதேவி இராஜேந்திரச் சோழனின் மனைவியரில் ஒருத்தி. "வேதகாலத்திலிருந்து ஓர் ஆடவன் பல பெண்களை மணந்து கொள்வதையும் சமூகம் அனுமதியளித்திருக்கிறது. செல்வந்தர்களும் தங்கள் செல்வாக்கையும், செல்வ வளத்தையும் சமூகத்தில் தங்கள் மேலான இடத்தையும் நிலைநாட்டப் பல மனைவியரை மணம்புரிந்து கொண்டனர். இடைநிலைக் குடும்பங்களிலும் தங்கள் குலம் விளங்க மக்கட் செல்வத்திற்காக மறுமணங்கள் நடைமுறையிலிருந்தன"[27] என்ற கருத்தின்வழி பலதாரமணத்தையும் மறுமணத்தையும் சமூகம் ஏற்றுக்கொண்டதை அறியமுடிகிறது. இதை நடைமுறைப் படுத்தும் குடும்பங்களில் பெண்ணுக்குக் கொடுமைகள் நிகழவும், உரிமைகள் மறுக்கப்படவும் வாய்ப்புண்டு.

'கங்காபுரி காவலனில்' வீரமாதேவிக்கு அந்நிலை ஏற்படுகிறது. பிறமனைவியரின் ஏச்சும் பேச்சும் அவளை விழிப்புணர்வு கொள்ளச் செய்கிறது. அதனால் கணவனுக்கு மட்டுமே மகிழ்ச்சியளிக்கும் தன்மையை விடுத்து வெளியுலகைக் காண்கிறாள். கோவில் கட்டுதல், குளம் அமைத்தல், சிற்பக்கூடங்களை வளரச்செய்தல் ஆகிய பொதுத்தொண்டுகளில் தன்னை ஈடுபடுத்திக் கொள்கிறாள். வீரமாதேவி பொதுத்தொண்டு புரிவதற்கு அடிப்படையாக இருந்த பெண்ணுரிமைச் சிந்தனை இங்கு கருதத்தக்கதாகும்.

## பதியிலாதார் சமூகம்

"இலக்கியம் என்பது ஒருதனிமனித முயற்சி. காலத்தை வெல்லுகின்ற படைப்பை ஒருமனிதன் இயற்றினால் அப்படைப்பு இலக்கியமாகிறது. இலக்கியம் என்பது ஒரு சமூகசக்தி இலக்கியம் மனித

உறவுகளை உணர்வு பூர்வமாகத் தொட்டு, அறிவுபூர்வமாக விளக்கி, ஆக்கபூர்வமாகச் செயல்பட வைக்கிற காரணத்தால் சமூகமாற்றத்திற்கான கருவியாகவும் திகழ்கிறது. இலக்கியம் வளைந்துகொடுக்கக் கூடிய கருவி. பலசமயம் சமூகம் காட்டிய வழியில் இலக்கியம் போகிறது. சிலசமயம் இலக்கியம் காட்டிய வழியில் சமூகம் போகிறது. சமுதாயம் தனிமனிதன் இவை இரண்டும் இணைந்து உருவாக்கும் படைப்பே இலக்கியம்".[28] இக்கருத்துப் படைப்பாளனைச் சமூகத்திலிருந்து பிரிக்க இயலாது என்பதை உணர்த்துகிறது. படைப்பாளன் காணும் சமூகம் பாதிக்கப்பட்ட சமூகமாகவும் நலிந்த சமூகமாகவும் வீறுகொள்ள வேண்டிய சமூகமாகவும் அமைந்து விடுவதை இலக்கியங்களின் வழிக் காணலாம்.

பெண்கள் தொடர்பான சமூகச் செய்திகளைக் கூறும் விக்கிரமன் அச்சமூக மாற்றத்திற்கான சிந்தனையையும் முன்வைக்கிறார். பதியிலாதார் சமூகத்தைப் பற்றித் தம் நாவல்களில் பேசும் விக்கிரமன் பதியிலாதாரின் வாழ்க்கை முறையைச் சித்தரிப்பதோடு அச்சமூகம் பெற வேண்டிய மரபு மாற்றத்தையும் கூறுகிறார். பெண்ணே 'எல்லாம்' என்றிருக்கும் பதியிலாதார் சமூகம்,

1. ஆணாதிக்கச் சூழல் வெறுப்பு
2. பெண்ணின் தன்னம்பிக்கை
3. தன்னிச்சையான போக்கு

முதலிய கூறுகளால் மரபுமாற்றம் கொள்கிறது எனக்கொள்ளலாம்.

"தேவதாசி குடும்பம் தாய்வழிக் குடும்பமாகவும், பெண் ஆதிக்கக் குடும்பமாகவும் இருந்தது"[29] இக்குடும்பப் பெண்கள் 'தேவராட்டி' என்றழைக்கப் பெற்றனர். "விழாக்காலங்களில் சிறப்பாகப் பூசனை செய்யவரும் ஆடவனுக்குத் 'தேவராளன்' என்றும் பெண்ணுக்குத் 'தேவராட்டி' என்றும் பெயர். தேவராட்டி என்பவர்தான் பிற்காலத்தில் 'தேவரடியார்' என்று அழைக்கப் பெற்றனர். பெண்கள் வெறியாடியதால் அவர்களுக்கு 'வெறியாட்டி' என்றும் பெயருண்டு"[30]

கோவில்களில் இறைவனுக்கு முன் ஆடல், பாடல் முதலிய கலைத்தொண்டு செய்யும் பெண்கள் ‘கணிகையர்’ என்று அழைக்கப் பெற்றனர். இவர்களைப் ‘பொதுமகளிர்’, ‘பதியிலாதார்’ என்று இலக்கியங்கள் பகர்கின்றன. கணிகையர் வீட்டைப்பற்றிச் சொல்லும்போது விக்கிரமன், “பொதுவாக யாராவது மெல்லிய குரலில் பாடுவார்கள். பாட்டில் கேலி நிறைந்திருக்கும். சிருங்காரக் குறிப்புக்கள் நிறைந்திருக்கும். விரகதாபத்தால் வாடும் மங்கையின் உணர்ச்சிகள் நிறைந்திருக்கும். அதற்கேற்றாற்போல் வாத்தியக் கருவிகள் ஒலிக்கும். பாதச்சலங்கை ஒலிக்க ஒருத்தி நடனமாடுவாள். அவளது விரல் புலப்படுத்தும் பாவங்கள் அங்கே அமர்ந்திருக்கும் ஆடவர் உள்ளத்தை அப்படியே கிள்ளி எடுத்துவிடுவது போல் தோன்றும். இதயம் கிள்ளப்பட்டாலும் போகிறது என்று அழகுமங்கையரின் முகத்தையும் அவர்கள் இசைக்கும் பாடல் நேர்த்தியையும் அங்க லாவண்யத்தையும் கண்டு அங்கேயே ஏங்கிய கண்களுடன் அமர்ந்திருப்பார்கள் பலதரப்பட்ட ஆடவர்கள்”[31] என்கிறார்.

மேற்கூறப்பட்ட சமுதாயம் அரசர்கள் காலத்திலிருந்ததைக் காட்டும் விக்கிரமன் அக்குலத்தைச் சார்ந்த பெண்களில் பலரை மரபுமாற்றச் சிந்தனையோடு படைத்துள்ளார். குடும்பத்தில் பெண் ஆதிக்கம் பெற்றிருந்தாலும் சமூகத்தில் உயர்நிலையில் உள்ள ஆண்கள் பலரின் ஆதிக்கம் பதியிலாதார் வாழ்வில் இருந்தது, அதை அவர்கள் வெறுத்ததால் மரபுமாற்றத்தை ஆசிரியர் சிந்திக்கிறார். மேலும் ஒருவனுக்கு ஒருத்தி என்ற நிலை இல்லாததால் அவர்கள் ‘பதியிலாதார்’ என்றும் ‘பொதுமகளிர்’ என்றும் அழைக்கப்பெற்ற இவர்களின் வாழ்க்கையில் ஒருமரபு மாற்றத்தைக் காண ஆசிரியர் விழைந்திருக்க வேண்டும். இக்குலப் பெண்களின் பெண்ணியச் சிந்தனைவேர் அவருள்ளத்தில் ஆழப்பதிந்திருப்பதால் கீழ்க்காணும் வகைமைகளில் பெண்களைப் படைத்துள்ளார் எனக்கருத இடமுண்டு.

விக்கிரமன் படைத்துள்ள பதியிலாதார் குலப்பெண்களை,

1. ஒருவனுக்கு ஒருத்தியாய் வாழ்கிறவர்கள்

2. நாட்டுக்காகத் தியாகம் செய்பவர்கள்

என்றிரு வகைப்படுத்தலாம். இவர்களைப் பற்றி இனிவரும் பகுதியில் விரிவாகக் காணலாம்.

## 1. ஒருவனுக்கு ஒருத்தியாய் வாழ்கிறவர்கள்

இராஜசுந்தரி பதியிலாதார் குலப்பெண். 'கடல்மல்லைக் காதலியில்' இவள் சித்தரிக்கப் பெறுகிறாள். இவளது அழகைப் பயன்படுத்திப் பல்லவநாட்டில் குழப்பம் விளைவிக்க வேண்டும் என்று சமுத்திர நாதனும் சாளுக்கிய மன்னனும் முடிவெடுக்கின்றனர். அதனால் சிறையில் அடைக்கப் பெறுகிறாள். நாடு கடத்தப் பெறுகிறாள். அவள் மனம் பல்லவர் படைத்தலைவன் குமாரதேவனை விரும்புகிறது. அரசகுடும்பத்து ஆண்கள், படைத்தலைவர்கள், ஒற்றர்தலைவர்கள் வந்துபோகும் தன்மையில் அமைந்த பதியிலாதார் குலப்பெண் இராஜசுந்தரி குமாரதேவனைக் காதலித்து மன்னன் முன்னிலையில் ஊரறியத் திருமணம் செய்துகொண்டு ஒருவனுக்கு ஒருத்தியாய் வாழ்கிறாள்.

காஞ்சனாவின் சகோதரி சுந்தரி மனதில் போக வாழ்க்கையின் மீது விருப்பம் ஏற்படவில்லை. தாயை ஏமாற்றியவனைக் கண்டு பழிவாங்கத் துடிக்கிறாள். ஆடலும் பாடலும் தெரிந்த அழகுமிகுந்த சுந்தரியின் அழகில் பலர் மயங்குகின்றனர். அவள் அதை ஏற்கவில்லை. இறுதியில் தன்னை உண்மையாய்க் காதலிக்கும் விஜயனைத் திருமணம் செய்து கொள்கிறாள். இந்நிகழ்வு 'காஞ்சி சுந்தரி' என்ற நாவலில் எடுத்துரைக்கப் பெறுகிறது.

மரகதவல்லி கோவிலில் நிருத்தியாஞ்சலி செய்து வாழ்கிறாள். அவளால் வளர்க்கப் பெற்ற மயில்விழி காலம் முழுவதும் கோவிலில் நிருத்தியாஞ்சலி செய்து தன் வீட்டிற்கு வரும் பல ஆடவர்களை மகிழ்வித்து வாழ விரும்பவில்லை. சேரநாட்டிளைஞனைக் காதலித்துத் திருமணம் செய்து

கொள்கிறாள். இருவரும் நடனக் கலைஞர்கள் என்பதால் சேரநாட்டில் நடனப்பள்ளி அமைத்துப் பிழைப்பு நடத்துகின்றனர். ஒருவனுக்கு ஒருத்தியாய் வாழ்ந்து, மிகச்சிறப்பாகக் குடும்பம் நடத்தும் மயில்விழியை 'வஞ்சிநகர் வஞ்சியில்' காணலாம்.

காஞ்சனாவுக்குத் தான்வாழும் வாழ்க்கை பிடிக்கவில்லை. ஊர் ஊராகச் சென்று நடனமாடி, நாடகத்தில் பங்கேற்றுத் தன்விருப்பம் போல் வாழ முடியாத பதியிலார் குலவழக்கம் அவளுக்கு வெறுப்பைத் தருகிறது. விஜயனைக் காதலிக்கிறாள். அவனைத் திருமணம் செய்து கொண்டு ஒருவனுக்கு ஒருத்தியாய் வாழவேண்டும் என்று முடிவெடுக்கிறாள். ஆனால் விஜயன் தன்மீது காதல் கொள்ளவில்லை, தன் தங்கை சுந்தரியைத்தான் காதலிக்கிறான் எனத்தெரிந்ததும் ஆடம்பரத்தை வெறுத்துக் கப்பலேறி வேற்றுநாடு சென்று புத்தபிட்சினியாக வாழ்கிறாள் என்பது கருதத்தக்கது.

## 2. நாட்டுக்காகத் தியாகம் செய்பவர்கள்

தேவகுஞ்சரி என்ற பதியிலாதார் குலப்பெண்ணின் பாத்திரப்படைப்பு மிகஉயர்ந்த கொள்கைகளைக் கொண்டதாகப் படைக்கப் பெற்றுள்ளது. அரசு தொடர்பான செயல்களில் தன்னை ஈடுபடுத்திக்கொண்ட குஞ்சரி பல்வேறு துன்பங்களைச் சந்திக்கிறாள். ஆயினும் மனம் தளரவில்லை. "பதியிலாதார் குலத்தில் பிறந்ததாலேயே ஆடவர்களின் போகப் பொருளாக விளங்கியாக வேண்டுமா?"[32] என்று இறைவனிடம் வேண்டுகிறாள். தான் வாழும் சூழலை வெறுத்து மரபு மாற்றத்தை அவள் மனம் விரும்புகிறது.

தன் கண்ணெதிரே நடக்கும் சதிச் செயல்களைக் கண்டு துன்பம் அடைகிறாள். அதைத் தன்னால் முடிந்தவரை எதிர்க்க நினைக்கிறாள். "குஞ்சரி, குஞ்சரி என்று ஓர் நடனப்பெண் இருந்தாள். அவள் நாட்டைக் காக்க உடல், பொருள், ஆவி அனைத்தையும் தியாகம் செய்தாள் என்று வருங்காலம் கூறட்டும்"[33] என்று சபதம் செய்கிறாள். எக்குலத்தில்

தோன்றினாலும் பெண் நினைத்தால் அவளால் எதுவும் செய்ய முடியும் என்ற தன்மையில் ஆசிரியர் தேவ குஞ்சரியைத் ‘தெற்குவாசல் மோகினி’ என்ற நாவலில் படைத்துள்ளார்.

தேவகுஞ்சரியின் செயல்கள் அவளது தாய்க்குப் பிடிக்கவில்லை. தம்குல வழக்கப்படி வீட்டிற்குள் அடங்கி வாழாமல் இப்படி ஊர் ஊராக மகள் அலைகிறாளே என்று வருந்துகிறாள். “நாவலில் ஒரு கதைப் பாத்திரம் தன்னைத் தனித்தன்மையுடையவராக நிலைநிறுத்திக் கொள்வதற்குக் கலாச்சார வேலிகளைத் தாண்ட வேண்டியவராகிறார்”[34] என்ற கருத்து இவண் கருதத்தக்கது.

விக்கிரமன் படைத்துள்ள பதியிலாதார் குலப்பெண்களில் பெரும்பாலோர் தங்கள் குலமரபிலிருந்து முழுதும் மாறுபட்டவர்களாய் உள்ளனர். தமது வாழ்க்கையில் மாற்றம் ஏற்பட வேண்டும் என்ற விழிப்புணர்வு கொண்டவர்கள். சமூகத்தில் ஒரு கூறான பதியிலாதார் சமூகத்தில் உள்ள பெண்களுக்குச் சமூகச் சிந்தனையும் விழிப்புணர்வும் உள்ள தன்மையை நாவல்களின் வழி உணரமுடிகிறது.

### 5. *அரசியலில் பெண்ணியச் சிந்தனை*

‘அரசியல்’ என்ற பகுதியை ஆணோடு மட்டுமே இணைத்துப் பார்த்தக் காலகட்டத்தில் பெண்கள் அரசியலில் பங்கும், விழிப்புணர்வும் பெற்றுச் சிறந்ததை விக்கிரமன் தம்நாவல்களில் சித்தரிக்கிறார். கணவன் இறந்தவுடன் உயிர்வாழ்வது இயலாது என்றுணர்ந்து உடன் கட்டை ஏறிய வானவன்மாதேவியின் மகள் குந்தவை சோழநாட்டு அரசியலில் பெரும்பங்குவகிக்கிறாள். தன் குடும்பச் சூழலில் பெண்களின் நிலை சிறப்பாய் இல்லாததை உணர்ந்த குந்தவை தன்னை மிகுந்த உரிமையுடையவளாக்கிக் கொள்வதை ‘நந்திபுரத்து நாயகியில்’ திறம்படச் சித்தரித்துள்ளதைக் காணலாம்.

பலதுன்பங்களைச் சந்திக்கும் குந்தவை மன உறுதியோடு செயல்படுகிறாள். "சிரிப்பும் மிகிழ்வும் தானே வேதனை தீர்க்கும் மருந்து"[35] என்று வாழ்க்கையை நேரான(Positive) முறையில் சந்திக்கிறாள். "திலகவதியாருக்கும், காரைக்காலம்மையாருக்கும் வராத துன்பமா?"[36] என்று தன் மனதைத் தேற்றிக் கொண்டு செயல்படுகிறாள். ஆணாதிக்கமும், நாட்டில் உட்பகையும் மிகுந்திருந்த காலத்தில் அதைப் பொருட்படுத்தாமல் செயலாற்றுகிறாள். இப்படிப்பட்ட சிந்தனைதான் பெண்ணியச் சிந்தனையாக இன்றைய சிந்தனையாளர்களால் பேசப்பெறுகிறது. இதை வரலாற்று நாவல்களில் படைத்துக் காட்டியிருக்கும் விக்கிரமனின் பெண்ணியச் சிந்தனை இங்கு நோக்கத்தக்கது.

மங்கம்மாள் அரசியலில் தலையிட்டு வெற்றியடைந்த செய்தியை விக்கிரமன் 'மதுரைமகுடம்' என்ற நாவலில் குறிப்பிட்டுள்ளார். பெண்களுக்கு நாட்டை ஆளும் உரிமை இல்லை என்று பேசப்பெற்ற காலத்தில் கணவனுக்கு இருந்த இக்கட்டை உணர்ந்து மங்கம்மாள் தானே அரசாட்சியைக் கையிலெடுக்கிறாள். மதிநுட்பம் வாய்ந்த மங்கம்மாளின் அறிவுரையைச் சொக்கநாதர் ஏற்கிறார்.

பகைவர்களால் மங்கம்மாளின் திறமையை, அரசியலில் அவள் பெற்றிருக்கும் உரிமையை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அதனால் அவளுக்குத் துன்பங்கள் தொடர்கின்றன. அரசியலில் நம்பிக்கையற்ற மக்கள் இருப்பதை மங்கம்மாள் நன்குணர்ந்து மன்னனுக்குத் தெளிவுபடுத்துகிறாள். "நம்பிக்கை மிகுந்தவர்களைத் தேடிப் பிடிப்பது இந்தக் காலகட்டத்தில் நடக்கிற காரியமா? நமது பலவீனத்தைப் பலர் புரிந்துகொண்டு விட்டார்கள். எனக்கு ஒருவர்மீதும் நம்பிக்கை இல்லை. நேற்றே சொல்லிவிட்டேன். இராயசமும், பிரதானியும் ஏதோ சூழ்ச்சி செய்கிறார்கள் என்று என் உள்ளுணர்வு கூறுகிறது"[37] என்ற செய்தி மங்கம்மாளின் விழிப்புணர்வுக்குச் சான்றாய் அமைகிறது. அரசியலில் உரிமைபெற்ற மங்கம்மாள் அதைத் தன்னம்பிக்கை, தனித்தன்மை ஆகிய கூறுகளால் சிறக்கச் செய்கிறாள்.

பெண்கள் அரசியலில் தலையிடும் உரிமை பெற்றுள்ளதை எடுத்துணர்த்தும் ஆசிரியர் அவர்கள் சிறப்பாகச் செயல்பட்டதையும் பலநாவல்களில் கூறுகிறார். 'சித்திரவல்லி'யில் சித்திரவல்லி அரசகுலம் அல்லாத குலத்துப் பெண்ணாக இருந்தபோதும் நாட்டுப்பற்றின் மிகுதியால் அரசு தொடர்பான செயல்களில் ஈடுபடுகிறாள். அதைச் சிலர் எதிர்க்கின்றனர். ஆனால் சித்திரவல்லியின் ஆற்றலைக் கண்ட பிரம்மராயர், "ஆண்களை விடப் பெண்கள் அரசியலில் சாமர்த்தியமாக விளங்கியிருக்கிறார்கள்"[38] என்று பாராட்டுகிறார். பெண் தனக்கு இழைக்கப்படும் கொடுமையை எதிர்க்கத் துணிவற்று இருக்கக் கூடிய நிலையை இன்றும் ஆங்காங்கே காண்கிறோம். சித்திரவல்லி ஜெயசிம்மனால் தான்வாழும் சோழநாட்டிற்கு இழைக்கப்பெற்ற கொடுமைகளை எதிர்க்க நாடு விட்டு நாடு செல்கிறாள். எதிர்ப்புக் குணம் கொண்ட பெண்ணியச் சிந்தனையின் முன்மாதிரிப் பாத்திரமாக சித்திரவல்லி படைக்கப் பெற்றுள்ளாள்.

'மாறவர்மன் காதலியில்' இடம்பெறும் குமுதாவின் இளமைக் காலத்தில் பாண்டிய நாட்டைச் சோழநாடு அடிமைப்படுத்தியது. இதை அவளுள்ளம் அசைபோட்டுக் கொண்டிருக்கிறது. அதற்காக நாட்டிலுள்ள அரசியலதிகாரிகளுடன் சோழநாடு சென்று அந்நாட்டின் இரகசியங்களை அறிகிறாள். நாடு விட்டு நாடு செல்லும் உரிமைபெற்று, ஆண்களோடு சேர்ந்து நாட்டுக்காகப் பெண்ணும் பாடுபடும் பெண்ணுரிமைச் சிந்தனை குமுதா பாத்திரப்படைப்பின் மூலம் வெளிப்படுகிறது.

சித்திராதேவி என்ற அரசகுலப் பெண் கண்ணன் கொப்பத்தில் தனிக்கோட்டை அமைத்து வாழ்கிறாள். தனித்தியங்கும் ஆற்றலும், சிந்தனையும் கொண்ட சித்திராதேவி படையாற்றல் மிக்க பெண்கள் பலரைத் தன் பக்கபலமாகக் கொண்டுள்ளாள். மாலிக்காபூர் சித்திராதேவியின் துணிச்சலைப் பற்றிக் கேள்விப்பட்டு அவளைச் சந்திக்கிறான். வில்லாலும், அம்பாலும் பெண்கள் பலர் கண்ணன் கொப்பம் கோட்டையைச் சுற்றிக்

காத்து நிற்கும் காட்சி மாலிக்காபூரை வியக்கவைக்கிறது. இளவரசர்கள் தன்னை அடையப் போட்டி போட்ட போது அவர்களது செயலை விரும்பாது தனித்தியங்குகிறாள். ஆற்றலும் துணிவும் மிகுந்த பெண் சித்திராதேவி கன்னிக்கோட்டை இளவரசியில் சித்தரிக்கப் பெறுகிறாள்.

நாடுகாக்கும் பணியில் ஈடுபடல், வில்லேந்துதல், குதிரையேறல், தூது போதல் போன்ற செயல்களில் ஈடுபட்ட பெண்களை நாவலாசிரியர்கள் நாவல்களில் படைத்துக் காட்டுவதால் முற்காலப் பெண்ணின் நிலை உணர்த்தப்படுவதோடு தற்காலத்தில் அச்சிந்தனை வலுப்பெற வாய்ப்பேற்படுகிறது. பெண்ணியச் சிந்தனைக் கருத்துருவாக்கங்கள் காலப்போக்கில் இந்த அடிப்படையில்தான் மேன்மேலும் வளரும் எனக் கருதலாம்.

## முடிவுரை

பெண்களின் நிலையறிதலும் அவ்வறிதலை ஆக்கசக்தியாக மாற்றலும் பெண்ணியத்தின் மையச் செயலாகும். 'பெண்ணியம்' குறித்த வகைகள் பண்பாட்டுச் சூழலுக்கு ஏற்ப வேறுபட்டு அமையும்.

இந்தியச் சமூகம் தந்தை வழிச் சமூக அமைப்புடையது. ஆகவே பெண்கள் இரண்டாந்தர நிலையிலேயே இருந்தனர். சமணம், பௌத்தம் போன்றவை பெண் சமூகத்திற்கு எழுச்சியாக இயங்கவில்லை. பெண் கடவுளர்கள் போற்றப் பெற்றாலும் பெண்சமூக நிலையில் உரிமைகள் பல இல்லாமலிருந்தன. ஆங்கிலேயர் வரவுக்குப்பின் ஆங்கிலேயக் கல்வியால் சமூகச் சீர்திருத்தம் உருவாகியது. அச்சீர்திருத்தத்தில் பெண் சமூகத்திற்கான உரிமையும் அடங்கும். மேலைநாட்டுப் பெண்ணியத்திற்கும் இந்தியப் பெண்ணியத்திற்கும் வேறுபாடு உண்டு. இந்தியப் பெண்ணியம் ஆண்களுக்கு எதிரான இயக்கமல்ல. ஆண்களோடு இயைந்து வழங்குகிற மிதவாதப் பெண்ணியமாகும்.

சங்ககாலத்தில் பெண்கள் உரிமை பெற்றவர்களாக இருந்திருக்கிறார்கள். பெண்பாற் புலவர்களும் இருந்திருக்கிறார்கள். காலப்போக்கில் புறச் சமயங்களின் தாக்குதலினால் பெண் சமூகம் வீழ்ச்சியடைந்தது. சமூக சீர்திருத்த இயக்கங்கள் இக்காலத்தில் இந்நிலையிலிருந்து மீட்சிபெற உதவியது.

பெண்ணியச் சிந்தனைகள் எழுத்தாளர்களிடம் இலக்கியத்தின் வழிப் பதிவுபெற்றன. விக்கிரமன் தற்கால எழுத்தாளராக இருந்தாலும் வரலாற்றுக்கால நாவல்களில் பெண்ணியச் சிந்தனைகளைப் பதிவுசெய்த பாங்கு கருதத்தக்கதாகும்.

பெண்ணியம் என்பது அண்மைக்கால வழக்காகும். விக்கிரமன் இச்சொல்லுக்கு இணையாக 'உரிமை' என்ற சொல்லை நாவல்களில் பயன் படுத்தியுள்ளார். அந்தப்புரத்தில் பெண்கள் அடக்கமாக இல்லாமல் உரிமைபெற்று வெளியே வருதல் வேண்டும். பிற ஆடவரைச் சந்திப்பதில் தவறில்லை. குறிப்பாக அரசகுலத்தில் பெண்கள் பல கட்டுப்பாடுகளைப் பெற்றவர்களாக உள்ளார்கள். நாட்டை ஆளும் உரிமை பெண்களுக்கு வேண்டும் என்பன போன்ற உரிமைச் சிந்தனைகளை விக்கிரமன் முன்வைக்கிற பாங்கு குறிக்கத் தக்கதாகும்.

வரலாற்றுக்காலப் பெண்ணியம் மிதவாதப் பெண்ணியமாக விளங்குவது விக்கிரமன் குரலில் தெரிகிறது. இந்நிலையில் காதல், திருமணம், குடும்பம், சமூகம், அரசியல் போன்ற உட்தலைப்புக்களில் பெண்ணியச் சிந்தனை மதிப்பிடப் பெற்றன. காதலில் பெண்களின் சுதந்திரப் போக்கை விக்கிரமன் வரவேற்றிருக்கிறார். எதிர்ப்புத் தோன்றுகிறபோதும் மன உறுதியோடு குறித்த காதலை நிறைவேற்றிக் கொள்ளும் திறமும் அப்பெண்களிடம் காணப்பெறுகிறது. காதலில் தோல்வியுற்றாலும் மனம் விரும்பாதவனைப் பெண்களின் மனம் ஏற்காத நிலை சித்தரிக்கப்பெறுகிறது. எதிர்ப்புக்களுக்குப் படியாமல் துணிவுடன் இயங்கும் பெண்கள்

கருதத்தக்கவர்கள். அவ்வகையில் போராடும் உறுதிபடைத்தவர்களாகப் பெண்கள் சித்தரிக்கப்பெற்றுள்ளனர். கடமையும் காதலும் மோதுகிறபோது கடமைக்கு முக்கியத்துவம் கொடுக்கும் தன்மை பெண்களிடம் காணப்பெறுகிறது.

திருமணத்தில் முடிவெடுக்கும் உரிமை பெண்களுக்கு வேண்டும் என்பதை உரிமைச் சிந்தனையாக வைக்கிறார். தந்தை அல்லது அரசரே தலையிட்டாலும் பெண் விருப்பம் தான் என்ற கருத்துக் குறிக்கத்தக்கதாகும். பொருத்தமில்லாத திருமணங்கள் எந்தச் சூழலிலும் ஏற்றுக்கொள்ளப் பெறவில்லை. நாடுகள் குறித்த முரண்பாடுகள் கூடத் திருமணத்திற்குத் தடையாய் இருக்கக் கூடாது என்று சுட்டுகிறார். குடும்பநலத்தில் தாய், மனைவியரின் நிர்வாகத் திறனைச் சிறப்பித்து நாவல் புனைந்த திறன் கருதத்தக்கதாகும்.

மகன், மகள் நலனில் முடிவெடுக்கும் தாயாரான புவனமுழுதுடையாள், அறம் வளர்செல்வி முதலியோரைப் பற்றிக் கூறும் ஆசிரியர், அவர்களைப் பெண்ணுரிமைச் சிந்தனைக்கு முன்மாதிரியாக்குகிறார். குடும்பச் சூழலில் உரிமை பெற்றவர்கள் வழிபாட்டுச் சூழலிலும் உரிமை பெற்றவர்களாகச் சித்தரிக்கப் பெற்றுள்ளனர்.

பெண் சமூகத்தில் கல்வியானது பெண்களுக்குத் தேவை என்பதை விக்கிரமன் வலியுத்துகிறார். கல்வியுடன் ஊர்த்தலைமை, கலைச் சேவையுடன் பொதுத்தொண்டு புரிதல் முதலியவற்றில் பெண்களைத் தொடர்பு படுத்துவதன் வாயிலாகப் பெண்களின் வெளிச் செயல்பாடுகளில் உரிமைக்காகக் குரல்கொடுக்கிறார்.

பெண்சமூகத்தில் ‘பதியிலாதார்’ சமூகம் பாதிக்கப்பெற்ற சமூகமாகும். உடல் தொடர்பான ஆணாதிக்க வெறுப்பு, தன்னம்பிக்கை, தீர்மானிக்கும் முடிவு போன்றவைகள் பதியிலார் சமூகத்தில் சிறப்பாக இயங்குகிறபோது அச்சமூகம் மேன்மையடையும். அதாவது பழைய

மரபிலிருந்து மாற்றம் பெறும் என்பது விக்கிரமனின் சிந்தனையாகும். ஒருவனுக்கு ஒருத்தி என்று போற்றப் பெறுகிறபோதுதான் பதியிலாதார் சமூகம் உருவாகாமல் இருக்க முடியும் எனச் சிந்திக்க வைக்கிறார். இச்சமூகத்தைச் சார்ந்த பெண்கள் ஒருவனுக்கு ஒருத்தியாய் வாழ்கிற நிலையிலும் நாட்டுக்காகத் தியாகம் செய்து வாழ்கிற நிலையிலும் மேன்மை அடைந்து எழுச்சி பெறுகிறார்கள்.

அரசியலில் பெண்கள் சிறந்து விளங்க முடியும் என்பதற்கு குந்தவையும், நிர்வாகத்தில் பெண்கள் சிறந்து விளங்கமுடியும் என்பதற்கு மங்கம்மாளும் சிறந்த முன்மாதிரிகளாவர். குந்தவை எழுச்சிமிக்க சோழப் பேரரசை உருவாக்குவதில் முனைந்து நின்று வெற்றிகொள்கிறாள். நாட்டின் உட்பூசலால் நாடு சிதைந்து போகாமலிருக்க மங்கம்மாள் நிர்வாகச் சீர்திருத்தம் செய்கிறாள். மேற்கூறிய பெண்ணியச் சிந்தனைகள் விக்கிரமன் நாவல்களின் வழிப்புலனாகின்றன.

# சான்றாதாரங்கள்

1. பிரேமா, பெண் மரபிலும் இலக்கியத்திலும், ப,131.

2. கதிர்மாகாதேவன், மோகன்(ப.ஆ), பெண்ணியம், இ.ப.த.ம. வெள்ளிவிழா மலர், ப,1.

3. பூ.மஞ்சுளவல்லி, சிவசங்கரி நாவல்களில் குடும்ப உறவுகள், ப,200.

4. பிரேமா, பெண்ணியம், ப,37.

5. சண்முகசுந்தரம் (தொ.ஆ), பெண்ணியமும் கலை இலக்கியப் பிரதிகளும், ப,42 .

6. எஸ்.குருமூர்த்தி, திரு.வி.க வின் பெண்ணுரிமையும் பெண்ணியமும், முப்பத்தோராம் கருத்தரங்க ஆய்வுக் கோவை 2000, ப,1050.

7. தொல், சொல், நூ.எண்.57.

8. திரு.வி.க, பெண்ணின் பெருமை, ப,12.

9. தொல், நூ.எண்,1093.

10. விக்கிரமன், பகைவனின் காதலி, ப,23.

11. மேலது, ப,59.

12. விக்கிரமன், நந்திபுரத்து நாயகி (பாகம் III), ப,216.

13. விக்கிரமன், பகைவனின் காதலி, ப,219.

14. விக்கிரமன், சோழ இளவரசன் கனவு, ப,249.

15. மேலது, ப,250.

16. விக்கிரமன், கடல்மல்லைக் காதலி, ப,7.

17. விக்கிரமன், பாண்டியமகுடம், ப,81.

18. விக்கிரமன், பகைவனின் காதலி, ப,78.

19. விக்கிரமன், வல்லத்து இளவரசி, ப,331.

20. மேலது, ப,220.

21. விக்கிரமன், மாறவர்மன் காதலி, ப,258.

22. மேலது, ப,159.

23. விக்கிரமன், ஒருவாள் ஒருமகுடம் இருவிழிகள், ப,40.

24. மேலது, ப,274.

25. விக்கிரமன், வல்லத்து இளவரசி, ப,40.

26. இராஜ கிருஷ்ணன், இந்திய சமுதாய வரலாற்றில் பெண்கள், ப,187.

27. Altekar.A.S, The Position of women in Hindu civilization PP,104-105.

28. க.ப.அறவாணன், படைப்பாளி + சமுதாயம் = இலக்கியம், முன்னுரை, ப,2.

29. ஆ.பிரேமா, பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும், ப,131.

30. விக்கிரமன், நந்திபுரத்து நாயகி, (பாகம் I), ப,164.

31. விக்கிரமன், காஞ்சி சுந்தரி, ப,274.

32. விக்கிரமன், தெற்குவாசல் மோகினி, ப,163.

33. மேலது, ப,164.

34. Raban, Jonathan, The techniques of Modern fiction, P,91.

35. விக்கிரமன், நந்திபுரத்து நாயகி, (பாகம் I), ப, 302

36. மேலது, ப,310.

37. விக்கிரமன், மதுரை மகுடம், ப,97.

38. விக்கிரமன், சித்திரவல்லி, ப,177.

# 8. முடிவுரை

நாவல் இலக்கிய வரலாற்றில் வரலாற்று நாவலுக்குச் (Historical Novel) சிறப்பான இடமுண்டு. வரலாற்று நூலிலிருந்து வரலாற்று நாவல் வேறுபடும் தன்மையது. முன்னதில் வரலாற்று மெய்ம்மைகள் முதன்மை பெறும். பின்னதில் மெய்ம்மைகளுடன் கற்பனையும் கலந்திருக்கும்.

வரலாற்று நாவல்கள் வரலாற்றுக் கால நிகழ்வுகளை அடியொற்றியிருந்தாலும் சமகாலப் பயன்பாட்டிற்குப் பயன்படும் நிலை கருதத்தக்கதாகும். வரலாற்று நாவலின் போக்கு, வாழ்க்கை வரலாற்று நூலின் இயல்பு, பிரயாண நூலின் தனித்தன்மை ஆகிய முக்கூறுகள் வரலாற்று நாவலில் இடம்பெற்றிருக்கும். இதில் இயல்பாகக் கவிதைப் பண்புகள் மிளிரும். அக்காலத்திலிருந்த காப்பியத்தின் இடத்தை வரலாற்று நாவல்கள் பிடித்துக் கொண்டதாக மதிப்பிடலாம். வரலாற்று நாவல்களின் உருவாக்கம் 1895-இல் தோற்றம் பெற்று வளர்ந்தாலும் கல்கிக்குப்பின் புத்தெழுச்சி பெற்றதை இலக்கிய வரலாற்றின்வழி உணரலாம். அவ்வகையில் கல்கி வரலாற்று நாவல் படைப்போர்க்கு முன்மாதிரியாகத் (Model) திகழ்கிறார்.

கல்கி வழியில் வரலாற்று நாவல்களைப் படைத்துவரும் விக்கிரமனுக்குச் சிறப்பான இடமுண்டு. ஆசிரியரின் படைப்புக்களை மதிப்பிடுவதற்கு முன் அவர்களின் வரலாறு அறிமுகநிலையில் அறியப்படல் வேண்டும் என்பதற்கேற்ப விக்கிரமனின் வாழ்வியல் கருத்தில் கொள்ளப் பெற்றது.

சுப்பிரமணிய ஐயருக்கும் லெட்சுமி அம்மையாருக்கும் ஐந்தாவது குழந்தையாகப் பிறந்தவர் வேம்பு ஆவார். சென்னையில் பள்ளி இறுதிப் படிப்புக்களைப் படிக்கும்போது தமிழை முதற்பாடமாக வேம்பு கற்றார். எட்டு வயதிலேயே பாரதியை ஆர்வமாக அறிந்து கொண்டவர். படிக்கும் காலத்திலேயே கையெழுத்துப் பிரதிகளை நடத்திய அனுபவத்தைப்

பெற்றிருக்கிறார். சிறுகதை, நாவல், நாடகம், கட்டுரை, கவிதை எனப்பல நிலைகளில் தம் படைப்புக்களை உருவாக்கியிருக்கிறார். எனினும் கல்கி எழுதிய பொன்னியின் செல்வனைத் தொடர்ந்து இவர் எழுதிய நந்திபுரத்து நாயகி (1964) சிறப்பினைப் பெற்றது. கல்கியின் பார்த்திபன் கனவில்(1941) வரும் விக்கிரமன் என்ற பாத்திரத்தைத் தம் புனைபெயராக வேம்பு மாற்றிக் கொண்டார்.

'அமுதசுரபி' இதழைப் பல ஆண்டுகளாக நடத்தி இதழாசிரியர் என்ற சிறப்பினைப் பெற்றுள்ளார். தற்போது 'இலக்கிய பீடம்', 'இலக்கிய நந்தவனம்' ஆகிய இதழ்களையும் நடத்தி வருகிறார்.

கல்கியின் தலைமையில் உருவான எழுத்தாளர் சங்கத்தைக் கட்டிக் காத்துத் தற்போது அதன் தலைவராகவும் இருந்து நிர்வகித்து வருவது கருதத்தக்கதாகும்.

அறிஞர், அரசியலாளர், தனியார் அமைப்புக்கள், பல்கலைக்கழகங்கள், மடங்கள் எனப் பலநிலையிலுள்ளோரும் இவரது சாதனைகளைப் பாராட்டிப் பட்டங்களும் பரிசுகளும் வழங்கியுள்ளனர். கல்கியின் வழித்தடத்தில் வாழும் எழுத்தாளர் விக்கிரமன் பன்முகப் பரிமாணங்களைப் பெற்றவர் என்பதை மதிப்பீட்டின் வழி அறியமுடிகிறது.

மனித வாழ்வியலில் காதலுக்குக் குறிப்பிடத் தகுந்த இடமுண்டு. இனக்கவர்ச்சி அடிப்படையில் காதல் தோன்றினாலும் அன்பின் முதிர்ச்சி காதலுக்குரிய பரிணாமமாக அமைகிறது. தொல்காப்பியமும் பண்டைய இலக்கியங்களும் காதல் குறித்த மெய்மைகளையும் மரபுகளையும் எடுத்தியம்புகின்றன.

வாழ்வியலின் பிறகூறுகளான அரசியல், பொருளாதாரம், பண்பாடு, ஆகியவற்றில் வாழ்வியல் மதிப்புக்கள் மாற்றம் பெறத் தொடங்கின. அம்மாற்றம் காதல் மதிப்பிலும் ஏற்பட்ட நிலை

குறிக்கத்தக்கதாகும். அவ்வக்கால இலக்கியங்கள் காதல் மதிப்புக்களைப் பதிவு செய்துள்ளன. இலக்கியங்கள் காதலைப் பாடுபொருளாகக் கொள்வதை மரபாக வைத்துள்ளமையையும் உணரலாம்.

காதல் வகைகளில் ஐந்திணைக்காதல் சிறப்புப் பெற்ற காதலாகும். நிறைவேறும் காதலில் இயல்புக்காதல், உயர்வுக்காதல் என்ற வகைப்பாட்டினைக் காணலாம். உயர்காதலுக்கு உணர்வுகள் முதன்மையல்ல. உள்ளங்களின் சங்கமம் முதன்மையானதாகும். உயர்வுக்காதலை இலட்சியக்காதல் எனல் பொருந்தும். உறவு நிலையிலும் உறவு அல்லாத நிலையிலும் தோன்றும் காதலை இயல்புக்காதல் எனலாம்.

விக்கிரமன் தம் நாவல்களில் காதல் குறித்த செய்திகளைக் கூறியுள்ளார். அச்செய்திகள் ஆசிரியர் கூற்றின் வாயிலாகவும் கதைப்பாத்திரங்களான தாய், தந்தை, காதலன், காதலி ஆகியோர் கூற்றின் வாயிலாகவும் வெளிப்படுத்தப் பெறுகின்றன.

சாதி, மதம், பொருளாதார உயர்வு, தாழ்வு என்ற நிலைகளைக் கடந்து இருக்கும் காதலை விக்கிரமன் சிந்தித்திருக்கிறார். எதார்த்தமாகத் தோன்றும் இயல்புக் காதலை மிகுதியாகப் படைத்துள்ளார். காதல் உயர்வானது என்றாலும் பிற்காலத்தில் சிறப்பாய் வாழப் பொருள்வேண்டும் என்ற உலகியல் தன்மையைத் தாய்கூற்றில் ஒலிக்கவைக்கிறார்.

அழகான பெண்மீது ஆசை கொள்வது ஆண்குலத்தின் இயற்கை என்ற எண்ணத்தைத் தந்தைவழிப் பாத்திரங்களின்வழிப் புலப்படுத்தியுள்ளார். காதலன் காதலைப் புனிதமாகப் போற்றிக் கடமைக்கு இணையாகக் காதலைக் கருதுவது பற்றிச் சித்தரித்துள்ளார். இலட்சியப் பெண்கள் சிலர் பார்வையில் காதல் இரண்டாமிடத்தைப் பெறுவதாக ஆசிரியர் படைத்துள்ளார்.

விக்கிரமனின் வரலாற்று நாவல்களில் காதல் செய்திகள் மதிப்பிடப்பெற்றன. ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பெற்ற இருபத்தைந்து நாவல்களில் இருபத்தொரு நாவல்களில் காதல் இடம்பெறுகிறது. அரசகுலம் சார்ந்த பெண்களின் காதலைவிட அரசகுலம் சாராத பெண்களின் காதல் மிகுதியாகச் சித்தரிக்கப் பெறுகின்றது. அரசகுலம் சார்ந்த செய்திகளைச் சொல்லுகிறபோது வரலாற்று மெய்ம்மைகளை மாற்றி அமைக்க இயலாது. அரசகுலம் சாராத செய்திகளை சொல்லுகிற போது புனைவுகளை இணைத்திடலாம் என்ற தன்மை உணரப்பெற்றது.

*அரசகுலம் சார்ந்த பெண்களின் காதல் சற்று மிகையாகப்* படைக்கப்பெற்றுள்ளது. போராட்டங்களுக்கிடையில் காதலை எதிர்கொள்ளுதல் குலம், நாடு கடந்து காதல் கொள்ளுதல், அவற்றில் வெற்றிபெறுதல் ஆகிய நிலைகளில் உள்ளது. பகைமை காரணமாகவும் வஞ்சகம் காரணமாகவும் சிலநேரங்களில் அரசகுலப் பெண்களின் வளர்ந்துவிட்ட காதல்கூட நிறைவேறாமல் போகிற நிலையும் ஆய்வின்வழி உணரமுடிகிறது.

இவ்வகையில் நிறைவேறும் காதலில் உறவு, பரிவு, குலம்கடந்த நிலை, கலைஆர்வம், நாடுகடந்த நிலை, உதவிநிலை, பாதுகாப்பு, இயல்பு, ஆகியவைகள் காதலுக்குரிய அடிப்படைச் சூழல்களாக அமைகின்றன.

*அரசகுலம் சாராத பெண்களில் சிலர் அரசகுல ஆண்களைக்* காதலித்துள்ளனர். அதில் வெற்றியும் தோல்வியும் கிடைத்திருக்கிறது. வீரம்மாள் அரசகுலம் சாராத பெண். அவளது கலையாற்றலால் அரசனுக்குக் காதலியாகிறாள். அவள்காதல் உயர்வுக்காதலாய் மிளிர்கிறது. இன்பவல்லி அரசகுல ஆணைக் காதலித்து அவனை அடைய முடியாத காதல் தோல்வியைச் சந்திக்கிறாள். இதற்கு அவ்வக்காலச் சமூக அமைப்பும் குடும்பச் சூழலுமே காரணமாகும்.

அரசகுலம் சாராத பெண்களின் காதலில் ஒருதலை அன்பு, ஒடுக்கப்பட்டநிலை, நாட்டுணர்வு, உடற்காதல், கைவிடப்பட்ட காதல்நிலை, அரசர்களால் காதல் அழியும் நிலை, பகைவன் காதலனாக அமைதல் ஆகிய சூழல்களால் நிறைவேறா நிலை தோன்றுகிறது.

பொதுவாக நோக்கும்போது இயல்புக்காதலை விக்கிரமன் மிகுதியாகப் படைத்துள்ளார். உயர்காதல் எதார்த்தமில்லை என்பது ஆசிரியர் சிந்தனையாக இருக்கலாம். காதலில் காமம் அன்பாக மாறுதல் கோட்பாடாகச் சுட்டப்பெறுகிறது. மேலும் நிறைவேறும் காதலை மிகுதியாகச் சித்தரித்துள்ளார். ஆனால் எதார்த்தத்தில் காதல் நிறைவேறாத தன்மை பலவகைகளில் இருக்கிறது என்பதைக் கருத்தில் கொள்ளவேண்டும். காதல் நிறைவேறாத பெண்கள் நாட்டுப்பணிகளிலும் கோவில்பணிகளிலும் ஈடுபடுவதாகச் சித்தரித்துள்ள விதம் கருதத்தக்கதாகும். இவர் படைத்துள்ள காதல் பெண்கள் கடமைக்கு முக்கியத்துவம் கொடுக்கிறதன்மை ஆய்வின்வழி புலப்படுகிறது.

சமுதாயத்தோடு இயங்குவதற்குக் குடும்பம் என்கிற நிறுவனம் சிறந்த கருவியாகும். குடும்பத்தில் கணவன், மனைவி, பிற உறவுகள் தொடர்பு பெறுகின்றன. குடும்பத்தில் பலவகைகள் காணப்படினும் தமிழர் பண்பாட்டில் தந்தைவழிக் குடும்பமே முதன்மை பெறுகிறது. கணவன் மனைவியாக வாழ்ந்து பின் எல்லோருக்காகவும் வாழவேண்டும், குடியைக் காக்க வேண்டும் என்பன பாரம்பரியக் குடும்பப் பணிகளாகக் கருதப்பெறுகின்றன. கூட்டுக்குடும்பத்திலும் தனிக்குடும்பத்திலும் இயங்கும் முறைபற்றிய மதிப்புக்கள் (Values) மரபாகப் பின்பற்றப் பெறுகின்றன.

வரலாற்றுக்காலக் குடும்பத்தினையும், குடும்ப உறவுகளையும் விக்கிரமன் இயல்பாகத் தம்நாவல்களில் பதிவு செய்துள்ளார். பெண் திருமணத்தின் வழி, குடும்ப இயக்கத்திற்குள் நுழையவேண்டும் என்பது விக்கிரமனின் சிந்தனையாகும். பெண்கள் கன்னிப் பெண்களாக வாழ்தல்

விரும்பத்தக்கதல்ல என எடுத்துரைக்கிறார். வரலாற்றுக் காலத்தில் பலதார மணங்கள் இருந்தாலும் ஒருவனுக்கு ஒருத்தி என்ற கோட்பாட்டை விக்கிரமன் முன்வைக்கிறார். வரலாற்று நாவல்களில் அரசகுலம் சார்ந்த பாத்திரங்களின் திருமணங்கள் வரலாற்று முறைப்படி சித்தரிக்கப் பெற்றுள்ளன.

படையெடுப்பைத் தடுக்க, படையுதவிபெற, பழங்காலப் பகையை மறக்க, நன்றி உணர்வை வெளிப்படுத்த என்கிற நிலையில் அரசகுலத் திருமணங்கள் அமைகின்றன. குடும்ப அமைப்புக்களில் முழுமைபெற்றகுடும்பம் முழுமையல்லாக் குடும்பம் என்ற வகைப்பாடு இனங்காணப்பெற்றது.

முழுமைபெற்ற குடும்பத்தில் மகள், மனைவி, தாய் என்ற பெண் உறவுகள் கருத்தில் கொள்ளப் பெற்றன. முழுமையல்லாக் குடும்பத்தில் மகள், தாய் என்ற பெண்ணுறவுகள் கருத்தில் கொள்ளப் பெற்றன.

காதல் வருகிற நிலையில் மகள் மீறிச் செயல்படுகிறாள். முழுமைபெற்ற குடும்ப நிலையில் மனைவி உறவில் உள்ள பெண்கள் பணிதல், வழி நடத்துதல், குடும்ப மேம்பாட்டிற்கு உழைத்தல் என்ற பண்புகளைப் பெற்று இயங்குகிறார்கள். தாய்ப்பாத்திரத்தின்வழி குழந்தைகளின் நலன் சிறப்பிக்கப் பெறுகிறது.

தனிக்குடும்ப வகையில் முழுமையல்லாக் குடும்பத்தில் தந்தை வளர்ப்பில் மகள் என்ற நிலை ஆசிரியரால் மிகுதியாகச் சித்தரிக்கப் பெற்றுள்ளது.

அரசகுலம் சார்ந்த குடும்பங்களில் கூட்டுக் குடும்பங்கள் இருக்கின்றன. இதில் பல உறவுகள் தொடர்பு பெறுகின்றன. இக்குடும்பத்தில் உள்ள மகள்கள் மூத்த உறவுகளுக்கும் அரசியல் உணர்வுகளுக்கும் மதிப்புக் கொடுப்பவர்களாக உள்ளனர். மனைவி உறவில் இணைந்தும் விலகியும் ஆதிக்கம் செலுத்தியும் கணவனோடு இயங்குகிற நிலையை ஆசிரியர்

சித்தரித்துள்ளார். கூட்டுக் குடும்பப் பெண்களுக்குப் பிற பெண்களால் பாதிப்பு ஏற்படுவதையும் இயல்பாகச் சுட்டியுள்ளார். அரசகுலம் சார்ந்த தாயுறவு அரசனையும் நாட்டையும் நெறிப்படுத்துவதாகச் சித்தரிக்கப் பெறுவது கருதத்தக்கதாகும்.

திருமணம், குடும்பம், குடும்ப உறவுகள் இவற்றில் வரலாற்றுக்காலச் சூழலையும் பண்பாட்டையும் ஆசிரியர் தம் நாவல்களில் பதிவுசெய்துள்ளார்.

வரலாற்று நாவல்களில் அரசர்களின் அரசியல் இடம்பெறும். சமூகத்தின் கூறுகளுள் அரசியலுக்குச் சிறப்பான இடமுண்டு. விக்கிரமன் தம் வரலாற்று நாவல்களில் பெண்களையும் அரசியலோடு தொடர்புபடுத்திய நிலை ஆய்வில் கருத்தில் கொள்ளப் பெற்றது. அரசகுலத்தில் தாய்நிலையிலிருந்து அரசியலில் ஈடுபடுகிற நிலையைச் சிறப்பாகப் பதிவுசெய்துள்ளார். மகள், மனைவி என்ற நிலையில் உள்ள அரசகுலப்பெண்களும் அரசியலில் ஈடுபட்டுள்ளதைக் காட்டுகிறார்.

அரசகுலம் சாராதவர்களையும் கதைத் தலைவியராக உருவாக்கி அரசியலில் ஈடுபடச்செய்துள்ளார்.

அரசகுலப் பெண்களில் சோழநாட்டுப் பெண்களின் அரசியலீடுபாடு மிகுதியாகவும் அதற்கடுத்த நிலையில் பாண்டிய, சாளுக்கிய நாட்டுப் பெண்களும் சித்தரிக்கப் பெறுகின்றனர். பல்லவநாட்டுப் பெண்களும் சாளுக்கிய நாட்டுப் பெண்களும் மிகக்குறைவான அளவில் நாவலில் இடம்பெறுகின்றனர்.

சோழநாட்டு அரசகுலப் பெண்கள் அரசனை உருவாக்கும் ஆற்றல், அரசியல் ஞானம், எல்லோரும் பாராட்டும் துணிச்சலான போக்கு, மிகுந்த அரசியலறிவு, திருக்கோயில்பணி, பேச்சாற்றல், அரசனுக்கே அறிவுறுத்தும் ஆற்றல், பரந்த நோக்கு, நாட்டு முன்னேற்றம், தன்னலமின்மை ஆகிய நிலைகளில் சிறந்துள்ளனர்.

பாண்டி நாட்டைச் சேர்ந்த அரசகுலப் பெண்கள் நாட்டுநிலையை நன்கறிந்தவர்களாகவும் நாட்டுப்பற்றுடையோர்களாகவும் உயர்ந்த இலட்சியம் பெற்றவர்களாகவும் உள்ளனர்.

நாயக்கர் நாட்டு அரசகுலப் பெண்கள் அரசகுல ஆண்களை அஞ்சவைக்கும் அளவுக்குத் திறமை பெற்றவர்களாக உள்ளனர். தகுதிவாய்ந்த அரசியராகத் திகழ்வதால் தன்னாட்சிக்குத் தயாராய் இருக்கிறார்கள்.

பல்லவ, சாளுக்கிய நாட்டுப் பெண்கள் அரசியலில் மேலோட்டமாக ஈடுபட்டமை மட்டும் நாவல்களின் வழித்தெரிகிறது.

அரசகுலம் சாராத பெண்களில் இளம் பெண்கள், பதியிலாதார், கலைப்பெண்கள் அரசியலில் ஈடுபடுகின்றனர். இவர்களது அரசியலீடுபாடும் நாட்டினடிப்படையில் பிரித்துணரப் பெறுகிறது. சோழநாட்டுப் பெண்கள் மிகுதியாகவும், அதற்கடுத்துப் பாண்டியநாடு, பல்லவநாடு, சாளுக்கியநாடு, நாயக்கநாடு, சேரநாடு என்ற வரிசையில் பெண்களின் அரசியலீடுபாடு அமைகிறது.

நாட்டுப்பற்று, தூதுசெல்லல், ஒற்றாராய்தல், தியாக உணர்வு, நாட்டின் மானம்காத்தல், போராற்றல், போர்த்திட்டத்தில் பங்குகொள்ளல், அரசியலில் அழுத்தமான போக்கு, சிலநேரங்களில் அறியாமையின் காரணமாகப் பகைவனுக்குப் பால்வார்த்தல் இப்படிப் பலநிலைகளில் அரசகுலம் சாராத பெண்களின் அரசியலீடுபாடு அமைகிறது.

அரசியலில் வரலாற்றுக் காலப்பெண்களையும், கற்பனைப் பெண்களையும் இணைத்து விக்கிரமன் உருவாக்கிய திறம் கருதத்தக்கதாகும்.

அழகும், பயன்பாட்டில் மக்களை இன்புறுத்தலும் கலையின் தன்மையாகும். இருபாலார்க்கும் கலை பொதுவானது. அழகுணர்ச்சியை மையமிட்ட கலைகள் பெரும்பாலும் பெண்களோடு தொடர்புடையனவாக அமைகின்றன.

கலைகள் வாழ்வியலோடு தொடர்புடையவை. இலக்கியங்கள் வாழ்வைப் பிரதிபலிப்பதால் கலைகள் இலக்கியங்களில் வெளிப்படுகின்றன. நாட்டின் வரலாற்றடிப்படையிலும் சமூகத்தின் தாக்கத்தாலும் கலைகள் சிலகாலங்களில் வளர்ந்தும் சிலநேரங்களில் வீழ்ந்தும் உள்ளன.

வரலாற்று நாவலாசிரியர்கள் வரலாற்றுக் கால நாவல்களில் அவ்வக்காலச் சமூகக் கலைச் சூழல்களைப் பதிவுசெய்வர். அவ்வகையில் விக்கிரமன் தம் வரலாற்று நாவல்களில் கலைகளைப் பதிவுசெய்துள்ளார். அவை நுண்கலைகள், பயன்கலைகள் என்ற வகைமைக்குள் பிரித்தறியப் பெற்றன.

ஆய்விற்கெடுத்துள்ளப் பெற்ற இருபத்தைந்து நாவல்களில், இருபத்திநான்கு பெண்களின் நுண்கலைத் தொடர்பு ஆய்வின்வழி உணரப்பெறுகிறது.

சோழநாட்டுக் கலைப்பெண்கள் மிகுதியாகப் படைக்கப் பெற்றுள்ளனர். அதற்கடுத்துப் பல்லவநாட்டுப் பெண்கள் இடம் பெறுகின்றனர். தமிழகத்தில் சோழநாடும் பல்லவநாடும் கலையை வளர்ப்பதில் முனைந்து நின்றவை. அத்தன்மை நாவல்களில் வெளிப்படுகிறது. கலைப்பெண்கள் திருமணமாகாதவர்களாகவும் பதியிலாதார் குலத்தைச் சார்ந்தவர்களாகவும் உள்ளனர். கலைத் தொடர்புடைய பெண்கள் அரசகுலம் சார்ந்தவர்களல்லர். அக்காலத்தில் கலையை வளர்த்தவர்கள் மன்னர்களாயிருந்தபோதும் கலையில் ஈடுபட்டவர்கள் அரசகுலம் சாராதவர்களே என்பதை ஆய்வுகளில் காணமுடிகிறது.

கலையில் ஈடுபட்ட பெண்களில் நடனக்கலைப் பெண்கள் மிகுதியாகப் படைக்கப் பெற்றுள்ளனர். கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தளிக்கும் கலை நடனக்கலை. எனவே அது மிகுத்துப் பேசப்பெறுகிறது. நாடகத்திலும் நடனம் இடம்பெற்றுச் சிறந்தது கருதத்தக்கதாகும்.

பல்லவர்காலத்தில் ஓவியக்கலை மிகவும் சிறப்புற்றிருந்து. இதனை விக்கரமன் பல்லவ நாட்டுக் களத்தையுடைய நாவல்களில் பதிவுசெய்துள்ளார். 'பரிவாதினி' நாவல் 'சித்திரக்காரப்புலி' எனப்போற்றப் பெற்ற பல்லவ அரசன் மகேந்திரவர்மனின் ஓவியக்கலை ஆர்வத்தை மையமிட்டு எழுதப்பெற்றது.

பல்லவநாட்டுக் கலைப் பெண்களில் இராஜசுந்தரி, சந்திரமாலா, காஞ்சனா, சுந்தரி, மயிலழகு முதலியோரும் சோழநாட்டுக் கலைப்பெண்களில் இன்பவல்லி, சிந்தாமணி, மயில்விழி, தேவகுஞ்சரி, வீரம்மாள் ஆகியோரும் குறிப்பிடத் தகுந்தவர்கள்.

கலையைப் பொழுதுபோக்காக மட்டும் கொள்ளாமல் பாடமாக்கிப் பிறருக்குக் கற்றுக் கொடுத்துச் சிறப்படையச் செய்தவர்கள் மயில்விழி, இன்பவல்லி, வீரம்மாள் முதலியோராவர்.

இசையை வாய்ப்பாட்டாகப் பாடுகிற பெண்களையும் இசைக்கருவியோடு பாடுகிற பெண்களையும் விக்கிரமன் படைத்துள்ளார். கலைக்கு முக்கியத்துவம் கொடுக்கும் வரலாற்றை அடிப்படையாக வைத்துக் கதை புனைந்த விக்கிரமன் இசைக்கருவிகளின் பெயர்களை நாவலுக்கிட்டுள்ளார் என்பதை 'யாழ்நங்கை', 'பரிவாதினி' என்ற நாவல்களின் பெயரால் உணரலாம்.

பயன்கலைகளில் மருத்துவம், சமையல், பிறமொழியறிவு, மாறுவேடம், அறிவுகூர்மை அணிகலன்களையறிதல் போன்ற கலைகள் பற்றிய செய்திகள் நாவல்களில் வெளிப்படுகின்றன. கலைத்திறமை பெற்ற பெண்களில் ஒவ்வொருவரும் ஒன்றுக்கு மேற்பட்ட கலைகளில் சிறந்துள்ளனர். பயன்கலைகளைக் காட்டிலும் நுண்கலையில் பெண்கள் மிகுதியாக இடம்பெறுகின்றனர். நடனக்கலையில் சிறந்த பெண்களின் முத்திரைகள் சிற்பம், ஓவியம் ஆகிய கலைகளின் வளர்ச்சிக்குப் பயன்பெற்றிருக்கின்றன. ஓவியர், சிற்பி ஆகியோரின் குடும்பப் பெண்கள்

நடன, நாடகக் கலைகளில் சிறந்திருந்ததை உணரமுடிகிறது. கலையுணர்வுகள் நிரம்பப்பெற்ற கலைக்குடும்பங்கள் வாழ்ந்திருக்கின்றன. பிற குடும்பப் பெண்கள் கலைத்தொடர்பு பெற்ற செய்திகள் இடம்பெறவில்லை.

இந்தியப் பெண்ணியம் மேலைநாட்டுப் பெண்ணியத்திலிருந்து வேறுபட்டது. இந்தியப் பெண்ணியம் ஆண்களுக்கு எதிரான இயக்கமல்ல. ஆண்களோடு இயைந்து பெறுகிற மிதவாதப் பெண்ணியமாகும். தமிழ்நாட்டில் சங்ககாலத்திலிருந்து பெண்ணியநிலை அரசியல் மற்றும் பண்பாட்டுப் படையெடுப்புக்களுக்குத்தக மாற்றம் பெற்றே வந்துள்ளது.

விக்கிரமன் வரலாற்றுக்கால நாவல்களிலும் பெண்ணியச் சிந்தனையைப் பதிவு செய்துள்ளார். விக்கிரமன் 'உரிமை' என்ற சொல்லைப் 'பெண்ணியத்திற்கு' இணையாகப் பயன்படுத்துகிறார். அந்தப்புரத்தில் பெண்கள் இருந்தாலும் பிற ஆடவரைச் சந்திப்பதில் பிழையில்லை என்பதிலும் அரசகுலக் கட்டுப்பாடுகளை மீறுவதிலும், நாட்டை ஆளும் உரிமையைப் பெண்களுக்கு வேண்டுவதிலும் உரிமைச் சிந்தனைகளை முன் வைக்கிறார்.

காதலில் பெண்களின் சுதந்திரப் போக்கை ஆதரிக்கிறார். மனஉறுதியோடு காதலை நிறைவேற்றும் பெண்களை விக்கிரமன் நாவல்களில் பரவலாகக் காணலாம். போராட்டங்களைத் துணிவோடு எதிர்கொள்கின்றனர். கடமையும் காதலும் மோதுகிறபோது கடமைக்கு முதன்மை கொடுக்கும் பெண்களைப் படைக்கிறார்.

பொருத்தமில்லாத திருமணங்களை விக்கிரமன் வரவேற்பதில்லை. நாட்டின் எல்லைகளைக் கடந்து காதல் வெற்றி பெறும் என்பதில் முனைப்பாக உள்ளார்.

குடும்பத்தில் தாய், மனைவி ஆகியோர் நிர்வாகத்திறன் பெற்றவர்களாக உள்ளனர். குழந்தைநலன், அவர்களின் எதிர்கால வாழ்க்கை ஆகியவற்றில் மிகுந்த அக்கறை கொண்டவர்களாகப் படைக்கப் பெற்றுள்ளனர்.

வழிபாட்டுச் சூழலிலும் பெண்கள் உரிமையை வலியுறுத்துகிறார். கல்வி, ஊர்த்தலைமை, கலைச்சேவை ஆகியவற்றைப் பெண்களோடு தொடர்புபடுத்திச் சித்தரித்துள்ளார். பதியிலாதார் குலப் பெண்களின் சமூக மேன்மைக்குச் சிறப்பிடம் கொடுத்துள்ளார். ஒருவனுக்கு ஒருத்தி என்று போற்றப் பெறுகிறபோதுதான் பதியிலாதார் சமூகம் உருவாகாமலிருக்கும் என நினைக்கிறார். பதியிலாதார் ஒருவனுக்கு ஒருத்தியாய் வாழ்தல், நாட்டுக்காக உழைத்தல் போன்றவைகளை நாவல் நிகழ்வுகளில் இடம்பெறச் செய்துள்ளார்.

அரசியலில் பெண்கள் ஈடுபட முடியும், நிர்வாகச் சீர்திருத்தம் செய்யமுடியும் என்பதைப் பெண்பாத்திரங்களின் நிகழ்வுகளில் சித்தரித்துக் காட்டியுள்ளார்.

விக்கிரமன் சமூக நாவல்களையும் சிறுகதைகளையும் எழுதியுள்ளார். அவைகளில் பெண்கள் சித்தரிக்கப் பெற்ற விதத்தைக் கருத்தில் கொண்டு எதிர்காலத்தில் ஆய்வுகள் நிகழ்த்தலாம். பிற வரலாற்று நாவலாசிரியர்கள் சித்தரித்துள்ள பெண்கள் படைப்புக்களை விக்கிரமன் படைத்துள்ள பெண்படைப்புக்களுடன் ஒப்பிட்டு நோக்கலாம். கல்கியின் வழித்தடத்தில் விக்கிரமன் வெற்றி பெற்றுள்ளாரா? என்பதைக் கருத்தில் கொண்டு விக்கிரமனின் வரலாற்று நாவல்களைக் கல்கியோடும் பிற வரலாற்று நாவலாசிரியர்களுடனும் ஒப்பிட்டு ஆய்வுகள் நிகழ்த்தலாம்.

பின்னிணைப்பு - 1

# துணை நூற்பட்டியல்

## முதன்மைச் சான்றுகள்


| | | | |
|---|---|---|---|
| 1. | விக்கிரமன் | : | உதயசந்திரன்,<br>ஜெமினி பதிப்பகம்,<br>சென்னை,<br>1960. |
| 2. | ” | : | பரிவாதினி,<br>பாரதி பதிப்பகம்,<br>சென்னை.<br>1960. |
| 3. | ” | : | பாண்டிய மகுடம்,<br>தமிழ்நாடு பதிப்பகம்,<br>சென்னை,<br>1961. |
| 4. | ” | : | நந்திபுரத்து நாயகி,<br>குமாரவேல் பதிப்பகம்,<br>சென்னை,<br>1964. |
| 5. | ” | : | காஞ்சி சுந்தரி<br>குமாரவேல் பதிப்பகம்,<br>சென்னை,<br>1964. |

6. ” : வல்லத்து இளவரசி
பாரி பதிப்பகம்,
சென்னை,
1965.

7. ” : சித்திரவல்லி,
அருள் பதிப்பகம்,
சென்னை,
1974.

8. ” : மாறவர்மன் காதலி,
நல்வாழ்வுப் பதிப்பகம்,
சென்னை,
1978.

9. ” : இராஜாதித்தன் சபதம்,
நல்வாழ்வு பதிப்பகம்,
சென்னை,
1978.

10. ” : மங்கலத்தேவன் மகள்,
குமரன் பதிப்பகம்,
சென்னை,
1979.

11. ” : தெற்கு வாசல் மோகினி,
வசந்தா பதிப்பகம்,
சென்னை,
1979.

12. ” : தியாக வல்லபன்,
திருமகள் பதிப்பகம்,
சென்னை,
1979.

13. ” : கடல் மல்லைக் காதலி,
திருமகள் பதிப்பகம்,
சென்னை,
1979.

14. ” : யாழ்நங்கை,
கதிர் பதிப்பகம்,
சென்னை,
1980.

15. ” : சோழ இளவரசன் கனவு,
திருமகள் பதிப்பகம்,
சென்னை,
1980.

16. ” : பகைவனின் காதலி,
பாரதி பதிப்பகம்,
சென்னை,
1981.

17. ” : கொன்றை மலர்க்குமரி,
வசந்தா பதிப்பகம்,
சென்னை,
1982.

18. ” : சோழ மகுடம்,
திருமகள் பதிப்பகம்,
சென்னை,
1983.

19. ” : வஞ்சிநகர் வஞ்சி,
கவிதா பதிப்பகம்,
சென்னை,
1985.

20. ” : கன்னிக் கோட்டை இளவரசி,
விக்கிரமன் பதிப்பகம்,
சென்னை,
1988.

21. ” : மதுரை மகுடம்,
விக்கிரமன் பதிப்பகம்,
சென்னை,
1988.

22. ” : மாணிக்க வீணை,
நர்மதா பதிப்பகம்,
சென்னை,
1991.

23. ” : ஒருவாள் ஒருமகுடம், இருவிழிகள்,
விக்கிரமன் பதிப்பகம்,
சென்னை,
1992.

24. " : கங்காபுரிக்காவலன்,
நர்மதா பதிப்பகம்,
சென்னை,
1996.

25. " : ஆலவாய் அரசி,
ராஜேஸ்வரி பதிப்பகம்,
சென்னை,
2001.

## *துணைச் சான்றுகள்*

1. அருணாசலம் .சபா : தமிழ்நாவல்களில் காந்தீயத்தாக்கம்,
காளத்தி நூலகம்,
தேவகோட்டை,
1981.

2. ஆறுமுகம் .நா : புதுமைப்பித்தன் கதைகளில் சமுதாய விமர்சனம்,
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை,
1994.

3. இராமசாமி .துளசி, : தமிழகக் கலைச் செல்வங்கள்,
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை,
1990.

4. இராசகோபாலன் .தி : வரலாற்று நாவல்களில் வரலாற்றுச் செய்திகள், பாரி நிலையம், சென்னை, 1993.

5. இராமலிங்கம் .மா : திறனாய்வு நெறி, மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1983.

6. இறையரசன் .பா, : தமிழர் நாகரிக வரலாறு, பூம்புகார் பதிப்பகம், சென்னை, 1993.

7. இராசமாணிக்கனார் .மா, : தமிழக ஆட்சி பாரி நிலையம், சென்னை.

8. இளங்கோவடிகள் : சிலப்பதிகாரம், கேசரி அச்சுக்கூடம், சென்னை, 1927.

9. கல்யாண சுந்தரனார், திரு.வி.க. : முருகன் அல்லது அழகு, சாது அச்சுக்கூடம், சென்னை, 1954.

10. ” : பெண்மை அல்லது வாழ்க்கைத் துணைநலம்,
புனித நிலையம்,
சென்னை,
1970.

11. கம்பர் : கம்பராமாயணம்,
என்.சி.பி.எச் பிரைவேட் லிமிடெட்,
சென்னை,
1962.

12. கமலையா, க.சி : தமிழ்க்கலை வரலாறு,
மணிவாசகர் பதிப்பம்,
சென்னை,
1990.

13. காமாட்சி ஸ்ரீநிவாசன் : குறள் கூறும் சமுதாயம்,
திருக்குறள் ஆயவக வெளியீடு - 5.
ம.கா.ப.
மதுரை,
1975.

14. குருசாமி, .ம.ரா.போ : கம்பன் முப்பால்,
கம்பன் கழகம்,
சென்னை,
1993.

| | | |
|---|---|---|
| 15. குழந்தை .புலவர் | : | தொல்காப்பியர் காலத்தமிழர்,<br>பாரி நிலையம்,<br>சென்னை,<br>1959. |
| 16. கைலாசபதி .க | : | தமிழ் நாவல் இலக்கியம்,<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பி.லிட்,<br>சென்னை,<br>1968. |
| 17. ” | : | இலக்கியமும் திறனாய்வும்,<br>பாட்டாளிகள் வெளியீடு,<br>சென்னை - 21,<br>1976. |
| 18. சக்திப் பெருமாள் | : | பெண்,<br>வஞ்சிக்கோ பதிப்பகம்,<br>மதுரை,<br>1993. |
| 19. சிவகாமி .ச | : | பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ்<br>இலக்கியம்,<br>உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,<br>சென்னை,<br>1996. |
| 20. சிவத்தம்பி .கா | : | நாவலும் வாழ்க்கையும்,<br>தமிழ்ப்புத்தகாலயம்,<br>சென்னை.<br>1978. |

21. சிவம் சிவராமன் : சங்க இலக்கிய வாழ்வியல்,
சிவம் பதிப்பகம்,
வேலூர்,
1998.

22. சுப்பிரமணியன் ச.வே. : மனிதம்,
உலகத் தமிழ்க் கல்வி இயக்ககம்,
தமிழூர்,
1995.

23. சுரேந்திரன் .ஜே.ஆர் : 21ஆம் நூற்றாண்டை நோக்கிப்
பெண்கள்,
பிரசன்னா பதிப்பகம்,
மதுரை,
1998.

24. சுசிலா .எம்.ஏ. : பெண், இலக்கியம், வாசிப்பு,
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை,
2001.

25. செந்தமிழ்ச் செல்வி .தி : மணிக்கொடி சிறுகதைகளில் மகளிர்,
குடியரசி பதிப்பகம்,
சென்னை,
2001.

26. சேதுமணி மணியன் : தமிழ் நாவல்களில் மதிப்புகள்,
செண்பகம் வெளியீடு,
மதுரை,
1990.

27. சேதுராமன் .என் : பாண்டியர் வரலாறு,
சந்திரா பிரிண்டர்ஸ்,
கும்பகோணம்,
1989.

28. ஞானா குலேந்திரன் : பழந்தமிழர் ஆடலில் இசை,
தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
1990.

29. தமிழண்ணல் : ஒப்பிலக்கிய அறிமுகம்,
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை,
1973.

30. தண்டாயுதம் .இரா : ஓர் இலக்கிய ஆய்வு (தற்காலம்)
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை,
1985.

31. தமிழவன் : படைப்பும் படைப்பாளியும்,
காவ்யா,
பெங்களூர் - 38,
1989.

32. தியாகமணி .கா : சு.சமுத்திரம் படைப்புக்களில் பெண்ணியம்,
கருணா பதிப்பகம்,
சென்னை,
1984.

33. திருமலை : தமிழ் மலையாள நாவல் ஓப்பாய்வு, (ஜெயகாந்தனும் தகழியும்) ம.கா.பல்கலைக்கழக வெளியீடு, 1987.

34. " : தமிழ்ச்சுவை, கமலாலயம், மதுரை, 1993.

35. திருத்தக்கதேவர் : சீவகசிந்தாமணி, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1968.

36. நளினா தேவி .நா : ராஜம் கிருஷ்ணன் நாவல்களில் சமுதாய மாற்றம், மணிவாசகர் பதிப்பம், சென்னை, 1991.

37. நாகராசன் .கரு : திவ்விய பிரபந்தத்தில் மனம், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1982.

38. நாராயணசாமி .ஆர் : சரத்சந்திரரின் பெண்ணின்
பெருமை,(தமிழாக்கம்)
இமயப்பதிப்பம்,
நாகபட்டினம்,
1961.

39. நாராயண வேலுப்பிள்ளை .எம் : புராண இதிகாசப் பாத்திரங்கள்,
மகாலெட்சுமி பதிப்பகம்,
ஆரணி,
1987.

40. பஞ்சாங்கம் .க : மகாகவி பாரதியாரின்
பெண்ணியக் கட்டுரைகள்,
அன்பர்கள் வெளியீடு,
புதுச்சேரி,
2000.

41. பத்மா சுப்பிரமணியன் : பரதக்கலைக் கோட்பாடு,
வானதி பதிப்பகம்,
சென்னை,
1985.

42. பன்னீர்ச்செல்வம் .துரை : விக்கிரமனின் இதழ்ப்பணிகள்
ஓர் ஆய்வு,
மகாகவி பதிப்பகம்,
சென்னை,
1989.

43. பாலகிருஷ்ணன் .நா : தொல்காப்பியப் பொருளதிகாரவழி
நற்றிணை ஓர் ஆய்வு,
இளங்கோ பதிப்பகம்,
சென்னை,
1988.

44. பாலசுப்பிரமணியன் .இரா : நாவல் களங்கள்,
சத்யா வெளியீடு,
மதுரை,
1995.

45. பாலசந்திரன் .சு : இலக்கியத் திறனாய்வு,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை,
1992.

46. பாரதிதாசன் : பாரதிதாசன் கவிதைகள்,
(முதல் பகுதி) முல்லை பதிப்பகம்,
சென்னை,
1944.

47. பாரதியார் : பாரதியார் கவிதைகள்,
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம்,
1987.

48. பிச்சமுத்து .ந. : மு.வ.வின் நாவல்களில் சமுதாய மறுமலர்ச்சியின் தாக்கம், சக்தி புத்தக நிலையம், சென்னை, 1988.

49. பிரேமா .இரா : பெண்ணியம், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1994.

50. ” : பெண் மரபிலும் இலக்கியத்திலும், தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 2001.

51. பிள்ளை .கே.கே : தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1972.

52. பூ வண்ணன் : கல்கியின் வரலாற்று நாவல்கள், வானதி பதிப்பகம், சென்னை. 1985.

53. மகாத்மா காந்தி : பெண்களுக்கு,
காந்திய இலக்கியச் சங்கம்,
மதுரை,
1997.

54. மகாத்மா காந்தி : சமூகத்தில் பெண்கள்,
காந்திய இலக்கியச் சங்கம்,
மதுரை,
1991.

55. மாணிக்கம் .வ.சுப : தமிழ்க்காதல்,
பாரிநிலையம்,
சென்னை,
1980.

56. ” : சங்கநெறி,
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம்,
1987.

57. மாப்பஸான் (தமிழில் முல்லை முத்தையா) : பெண் வாழ்க்கை,
இன்ப நிலையம்,
மயிலாப்பூர்,
சென்னை,
1963.

58. மீனாட்சி முருகரத்தினம் : அழகியல்,
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை,
1992.

59. ” : மேலை இலக்கியத்திறனாய்வு,
என்னெஸ் பப்ளிகேஷன்ஸ்,
மதுரை,
1987.

60. முத்தய்யா .கரு : ஜெயகாந்தன் நாவல்களில் பாத்திரப் படைப்பு,
முத்துமீனாள் பதிப்பகம்,
தேவகோட்டை,
1980.

61. முத்து இலக்குமி .சு : சாண்டில்யன் நெடுங்கதைகளில் பெண்மை,
இலக்குமி பதிப்பம்,
மதுரை,
1992.

62. முத்துச் சிதம்பரம் : பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும்,
தமிழ்ப்புத்தகாலயம்,
சென்னை,
1995.

63. முத்துச் சண்முகன் : தமிழ் இலக்கியக் கோட்பாடுகள்,
சர்வோதய இலக்கியப் பண்ணை,
மதுரை,
1974.

64. முத்துராசன் : இலக்கிய வடிவங்கள்,
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம்,
1973.

65. மோகன் .இரா : நாவல் வளர்ச்சி,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,
1989.

66. ” : கல்கி கட்டுரைகள்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,
1999.

67. ரங்கநாதானந்தர் : நவீனப் பெண்மணிகள்,
ஸ்ரீராம கிருஷ்ண மடம்,
மயிலாப்பூர்,
சென்னை,
2000.

68. ராதா கிருஷ்ணன் : நா.பா.நாவல்களில் ஒரு பார்வை,
தமிழ்ப்புத்தகாலயம்,
சென்னை,
1978.

69. ராதா தியாகராசன் : அகத்தில் மகளிர்,
வானதி பதிப்பகம்,
சென்னை,
1992.

70. வளவன். சா : பெண் படைப்பாளர் தம் படைப்புக்கள்,
தெய்வம் ஆப் பிரிண்ட்டர்ஸ்,
சென்னை,
1995.

71. வரதராசனார் .மு : இலக்கிய மரபு,
பாரிநிலையம்,
சென்னை,
1965.

72. ” : இலக்கியத் திறன்,
பாரிநிலையம்,
சென்னை,
1965.

73. ” : தமிழ் இலக்கிய வரலாறு,
சாகித்ய அக்காதெமி,
புதுதில்லி,
1972.

74. வானமாமலை .நா : தமிழ் நாவல்கள் ஒரு மதிப்பீடு,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை,
1977.

75. வினோபா பாவே : மகளிர் மாண்பு,
சர்வோதயா பிரசுராலயம்,
தஞ்சாவூர்,
1964.

76. வினோபா பாவே : புலனடக்கமும் மக்கட்பேறும்,
சர்வோதயா பிரசுராலயம்,
தஞ்சாவூர்,
(ஆண்டு இல்லை).

77. விவேகானந்தன் : வாழும்போதே ஒரு வரலாறு,
மகாகவி பதிப்பகம்,
சென்னை,
1993.

78. விவேகானந்தர் : இந்தியப் பெண்மணிகள்,
ஸ்ரீராம கிருஷ்ண மடம்,
சென்னை,
2002.

79. வீராச்சாமி .தா.வே : தமிழ் நாவல் வகைகள்,
தமிழ்ப்பதிப்பகம்,
சென்னை,
1979.

80. வேங்கடராமன் சு.வே : அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு,
தமிழ்ப்புத்தகாலயம்,
சென்னை,
1977.

81. ” : எண்பதுகளில், தமிழ்ப் புனைகதைகளில்
பெண்ணியம்,
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை,
1993.

82. வேங்கடசாமி .மயிலை.சீனி : தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,
2000.

83 ” : நுண்கலைகள்,
மணிவாசகர் நூலகம்,
சிதம்பரம்.
1967.

## பிற நூல்கள்

1. அன்புக்கரசி
மோகன் லார்பீர் - (தொ.ஆ) : தலித் பெண்ணியம்,
தலித் ஆதாரமையம்,
மதுரை,
1997.

2. கடிகாசலம் .ந (ப.ஆ) : தமிழ் ஆய்வுக்களங்கள்,
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.

3. கதிர் மகாதேவன்
மோகன் இரா (ப.ஆ) : பெண்ணியம்,
தமிழியற் பள்ளி வெளியீடு,
ம.கா.ப
மதுரை,
1994.

4.சண்முகசுந்தரம் (ப.ஆ) : பெண்ணியமும் கலை இலக்கிய
பிரதிகளும்,
காவ்யா,
பெங்களூர்,
1994.

5. சண்முகம், .இராம (ப.ஆ) : திரு.வி.க. ஒரு பார்வை,
விநாயகமூர்த்தி, மணிவாசகர் பதிப்பகம்,
இராஜேந்திரன், சிதம்பரம்,
வண்ணமுத்து .மா (ஆண்டு இல்லை)

6. சுப்பிரமணியன் .ச.வே (தொ.ஆ): தமிழ் இலக்கியக் கொள்கை,
பகவதி .க உலகத்தமிழ் ஆராய்ச்சி
நிறுவனம்,
சென்னை,
1983.

7. தமிழண்ணல் (ப.ஆ) : ஆய்வுக்கோவை - 1
அறவாணன் .க.ப (ப.ஆ) இ.ப.த.ம.
சிலம்பு செல்வராசு .நா தமிழியல் துறை,
புதுவைப் பல்கலைக்கழகம்,
புதுச்சேரி,
1996.

8. முத்துசாமி (ப.ஆ) : வரலாற்றுக்குப் புதிய வரவு,
முருகாலயம்,
சென்னை,
1997.

9. கலைக்களஞ்சியம் : தொகுதி 1,
தமிழ்வளர்ச்சிக்கழகம்,
சென்னை,
1954.

10. கழகத்தமிழ் கையகராதி : சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை,
1940.

11. வாழ்வியற் களஞ்சியம் : தொகுதி 7,
தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
1987.

12 வாழ்வியற் களஞ்சியம் : தொகுதி 6,
தமிழ்ப்பல்கலைக்கழம்,
தஞ்சாவூர்,
1991.

## ஆய்வேடுகள்

1. சரோஜா .எம் : பாலகுமாரன் நாவல்களில் பெண்கள்,
பி.எச்.டி. பட்ட ஆய்வேடு,
ம.கா.ப.
1992.

2. சாந்தி கோகில பானு : கிறிஸ்தவ இசுலாமிய திருமுறைகள் காட்டும்
பெண்களும் இன்றைய சமுதாய
நிலையும்,
ம.கா.ப.
மதுரை,
1994.

3. சித்ரா .இரா : தமிழ்ப் புதினங்களில் தாய்,
பி.எச்.டி.பட்ட ஆய்வேடு,
ம.கா.ப,
மதுரை.
1996.

4. சுந்தரி : தமிழ் நாவல்களில் பண்பாட்டுக் கலைகள்,
பி.எச்.டி.பட்ட ஆய்வேடு,
ம.கா.ப,
மதுரை,
1995.

5. ஞானசந்திர ஜான்சன் : நீலபத்மநாபன் நாவல்களில் பாத்திரப்
படைப்பு,
ம.கா.ப,
மதுரை,
1989.

6. தேவகி .பெ : சிவசங்கரி, வாசந்தி நாவல்களில்
பெண்கள் - ஓர் ஒப்பாய்வு,
பி.எச்.டி.பட்ட ஆய்வேடு,
பாரதியார் பல்கலைக் கழகம்,
2003.

7. பரிமளா - வாசந்தி நாவல்கள் ஓர் ஆய்வு,
பி.எச்.டி.பட்ட ஆய்வேடு,
ம.கா.பல்கலைக்கழகம்,
1989.

8. மஞ்சுளவல்லி .பூ : சிவசங்கரி நாவல்களில் குடும்ப உறவுகள்,
பி.எச்.டி.பட்ட ஆய்வேடு,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி,
2001.

9. ராஜகுமாரி N.R. : இந்துமதி, சிவசங்கரி நாவல்களில்
மகளிர் நிலை,
பி.எச்.டி.பட்ட ஆய்வேடு,
ம.கா.ப,
1995.

## English Books


1. Allan. E.Lewis - The Mother hood of God
The saint Andrew Press
Edinburgh.

2. Altekar A.S - The position of Women in
Hindu Civilization
Motilal Bansarsidass
Delhi,
1973.

3. Astthana Pratima - Womens movement in India,
Vikas Publishing House,
Delhi,
1974.

4. Fathima Ehtesham Siddiqu - Political women,
kanishka publishers,
Distributors,
New Delhi,
1999.

5. Mary Georgina Boulton - On Bang a Mother,
Tairstock publications,
11, New Felter Lane
London, EC 4 P4 EE.
1983.

| | | |
|---|---|---|
| 6. Promilla Kapur | - | The Changing Status of<br>Working women in India,<br>Vikas Publising House,<br>Delhi,<br>1975. |
| 7.Raban, Jonathan | - | The techniques of Modern<br>fiction<br>Edward Arnold Ltd.,<br>London - 1968. |
| 8. Samba moorthy | - | Cataloque of Musical instru<br>ments,<br>Exhibited in the Government<br>Musium,<br>Chennai,<br>1998. |
| 9. Wollstone Craft Mary | - | The Right of Women<br>J.M.Dent & Sons Ltd.,<br>London,<br>1968. |

## Dictionary


1. Readers digest great illustrated.Dictionary - Published by readers Digest Association Limitted, London, New York, Sydney - cape Town Monteral, 1984.


## Encyclopaedias


1. Cambridge Paper Back Encyclopaedia - Edited by David Crystal Cambridge press, 1993.

2. Encyclopaedia of women Biography - Edited by Nagendra K.Singh A.P.H.Publishing corporation New Delhi - 2001.

3. World University Encyclopaedia - Volume 13. Books INC, New York, Washington 1968.

4. World University Encyclopaedia - Volume 12. Books INC, New York, Washington 1968.

| | | |
|---|---|---|
| 21. | சோழமகுடம் | 1983 |
| 22. | வஞ்சிநகர் வஞ்சி | 1985 |
| 23. | நாச்சியார்மகள் | 1985 |
| 24. | வந்தியத்தேவன் வாள் | 1986 |
| 25. | கன்னிக்கோட்டை இளவரசி | 1988 |
| 26. | இராசராசன் சபதம் | 1988 |
| 27. | மதுரைமகுடம் | 1988 |
| 28. | ஒருவாள் ஒருமகுடம் இருவிழிகள் | 1992 |
| 29. | மாணிக்க வீணை | 1992 |
| 30. | கங்காபுரிக்காவலன் | 1996 |
| 31 . | ஆலவாய் அரசி | 2001 |
| 32. | பராந்தகன் மகள் | 2002 |

## சமூகநாவல்கள்

| | | |
|---|---|---|
| 1. | அழகுராணி | 1957 |
| 2. | திருவிளக்கு | 1963 |
| 3. | நல்லமனிதர்கள் | 1967 |
| 4. | இதயபீடம் | 1979 |
| 5. | சந்திரமதி | 1998 |

## சமூகச் சிறுகதைகள் தொகுப்பு

| | | |
|---|---|---|
| 1. | குழலோசை | 1956 |
| 2. | சோமதேவனின் உயில் | 1962 |
| 3. | கடமையும் கடை விழியும் | 1963 |
| 4. | தங்க விக்கிரகம் | 1967 |
| 5. | அழகின் நிறம் | 1982 |
| 6. | விக்கிரமன் கதைகள் | 1986 |
| 7. | ‘ஓ’ முதலிய சிறுகதைகள் | 1991 |

| | | |
|---|---|---|
| 8. | பொன்விழா ஆண்டுச் சிறுகதைகள் (51 சிறுகதைகள்) | 1994 |
| 9. | சங்குத்தேவன் புனர்ஜன்மம் | 1999 |

## நாடகம்

| | | |
|---|---|---|
| 1. | சொல் காத்த சேதுபதி | 1989 |

## கவிதைத்தொகுதி

| | | |
|---|---|---|
| 1. | என்றும் இன்பநாள் | 2000 |

## கட்டுரைத் தொகுதி

| | | |
|---|---|---|
| 1. | காஞ்சிக்காவலர் கதை | 1960 |
| 2. | பொற்காலத்தின் கதை | 1960 |
| 3. | வாதாபி விஜயம் | 1979 |
| 4. | சிற்பம், சித்திரம், கோபுரம், கோயில் | 1987 |
| 5. | எப்போ வருவாரோ | 2000 |
| 6. | நினைத்துப்பார்க்கிறேன் | 2004 |

## ஆங்கிலநூல்

| | | |
|---|---|---|
| 1. | தமிழ்நாட்டில் தெலுங்கு மன்னர்கள் | 1974 |

நடத்தி ராஜாஜி, கல்கி, ஏ.கே.செட்டியார் போன்றவர்களின் பாராட்டுதலைப் பெற்றவர். இளம் வயதிலிருந்தே பத்திரிக்கைப் பணியில் ஈடுபடவேண்டும் என்ற ஆர்வம் மிகக் கொண்டவர்.

பத்திரிகைப் பணி : அமரர் சின்ன அண்ணாமலை தொடங்கிய 'வெள்ளிமணி' வாரப்பதிப்பில் 1946 ஆம் ஆண்டு முதல் 1947 வரை பணி 1948இல் தமிழ்ப்பண்ணைப் பதிப்பக வெளியீட்டுத் துறையில் பணி.

1949ஆம் ஆண்டு 'அமுதசுரபி' இலக்கிய மாத இதழ் நிறுவனத்தில் சேர்ந்து, 1950ஆம் ஆண்டு 'அமுதசுரபி' ஆசிரியர் ஆனார். 1952 ஆம் ஆண்டு அமுதசுரபி வெளியீட்டாளராகவும், 'அமுதசுரபி' யைச் சொந்தமாக நடத்தும் பொறுப்பையும் ஏற்றார். தமிழ்நாட்டில் தொடர்ந்து ஒரே பத்திரிகையில் 50 ஆண்டுகளுக்குமேல் ஆசிரியராகத் தொடர்ந்து பணியாற்றியது இவரே. 1997 'முதல் இலக்கிய பீடம்' என்ற இலக்கிய இதழின் ஆசிரியராக இருந்து வெளியிடுகிறார். மேலும் சிறிதுகாலம் கீழ்க்கண்ட இதழ்களுக்கு ஆசிரியராகப் பணியாற்றியுள்ளார்.

'குருவி' - குழந்தைகளுக்கான வாரஇதழ்

'சுந்தரி' - மாதம் இருமுறை

'மங்களம்' - வாரஇதழ்

'தமிழ் அரசி' - வாரஇதழ்

பரிசுகள் : 1. தமிழக அரசின் தமிழ் வளர்ச்சித்துறை (சோழ இளவரசன் கனவு - சிறந்த நாவல் பரிசு) ரூ.12,000/-

2. எம்.ஏ.சி.அறக்கட்டளை - இராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் விருது (மதுரை மகுடம் வரலாற்றுப் புதினத்திற்காக) ரூ.25,000/-

3. தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகம் - தமிழ் அன்னை விருது. ரூ.5000/-

4. ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் காஞ்சி மடத்தில் அமர்ந்த ஐம்பதாவது பொன்விழாவின் போது அளித்த பரிசு - பொற்பதக்கம்.

5. விக்கிரமனின் எழுபத்தைந்து ஆண்டு நிறைவு விழாவின் போது பவளவிழா குழுவினரால் வழங்கப்பெற்றது) ரூ.2 1/2 லட்சம் பணமுடிப்பு.

6. மன்னார்குடி செங்கமலத் தாயார் அறக்கட்டளை - தமிழ்ப்பணி விருது. ரூ.50,000/-

| | | |
|---|---|---|
| பாடநூல் | : | ‘மதுரை மகுடம்’ பெரியார் பல்கலைக் கழகத்தில் துணைப்பாடமாக அங்கீகரிக்கப்பட்டது. திருச்சி சீதாலெட்சுமி இராமசாமி மகளிர் கல்லூரியிலும் துணைப்பாடமாக ஏற்றுக்கொள்ளப் பெற்றது. ‘யாழ்நங்கை’ சென்னைப் பல்கலைக்கழகத்தில் பி.ஏ., பி.எஸ்.சி, பி.காம்., வகுப்புக்களுக்குத் துணைப்பாடநூலாக அங்கீகரிக்கப்பட்டது. |
| அயல்நாட்டுப் பயணங்கள் | : | மலேசியா, சிங்கப்பூர் (மூன்றுமுறை), இலங்கை, பாரீஸ், துபாய், ரோம் முதலிய இடங்களுக்கு இலக்கியக் குழுவுடன் பயணம் மேற்கொண்டவர். |
| சமூகப்பணிகள் | : | • நிர்வாக அறக்காவலர் - தமிழ் எழுத்தாளர் நலநிதி அறக்கட்டளை. (இந்தியாவிலேயே நலிந்த எழுத்தாளர்களுக்கு உதவும் ஒரே அறக்கட்டளை)<br>• தலைவர் - அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் (பதிவு) சென்னை.<br>• தமிழ் எழுத்தாளர்களை கல்கத்தா, தில்லி, கன்னியாகுமரி, அண்ணாமலை நகர் ஆகிய இடங்களுக்கு அழைத்துச் சென்று கருத்தரங்குகள் நடத்தியுள்ளார். |

- பாரதி விழாவை எட்டயபுரத்தில் ஆண்டுதோறும் நடத்துகிறார்.

அரசு உறுப்பினர்

- இருமுறை இயல் இசை நாடகமன்றத்தில் அரசு சார்பு பிரதிநிதியாகப் பணியாற்றியுள்ளார்.
- இருமுறை சிறந்த தமிழ்ப்படங்களைத் தேர்ந்தெடுக்கும் அரசுக்குழுவில் உறுப்பினராகப் பணிபுரிந்தார்.
- மைய அரசு ஆதரவில் கரும்பலகைத் திட்டத்திற்காக நூல்கள் தேர்ந்தெடுக்கும் குழுவில் உறுப்பினராகப் பணிபுரிந்தார்.
- தமிழ்நாடு அரசு மதுவிலக்குக் குழு உறுப்பினராக நியமிக்கப்பட்டார்.

ஆராய்ச்சி

- 'தமிழ்நாட்டில் தெலுங்கு மன்னர்கள்' என்ற ஆராய்ச்சி நூல் (ஆங்கிலத்தில்) எழுதியுள்ளார். ஹைதராபாத் நகரில் நடைபெற்ற முதல் தெலுங்கு மாநாட்டில் படிக்கப்பெற்றது.
- 'ஆயிரம் ஆண்டுகளில் தமிழகம்' என்ற நூலில் தமிழ் நாட்டு வரலாற்றை இளைஞர்களுக்காக எழுதி வருகிறார்.

- ‘கல்கியின் பாதை’, ‘பாரதியின் பாதை’ என்ற தலைப்புக்களில் ஆராய்ச்சிச் சொற்பொழிவுகள் ஆற்றக் குறிப்புக்களுடன் ஆயத்த நிலையில் உள்ளார்.

ஒலிநாடா : திருக்குறள் ‘அறத்துப்பால்’ முதல் இரண்டு அதிகாரங்களை எளிய உரையுடன் எழுதியுள்ளார். (இனியபாடல்களுடன்)

நாடகம் : இவர் எழுதிய ‘பரிவாதினி’ (வரலாறு), இதயபீடம் (சமூகம்) நாடகங்கள் பலமுறை மேடை நாடகங்களாக நடிக்கப்பட்டுள்ளன.

தொலைக்காட்சி : ‘நிம்மதி’ என்ற நாடகம் தொலைக்காட்சித் தொடராக ஒளி பரப்பாகியது. சென்னைத் தொலைக்காட்சியிலும், சன் தொலைக்காட்சியிலும் பலமுறை பல நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டுள்ளார்.

பின்னிணைப்பு 4

## பேட்டி

(22-5-04 அன்று ஆய்வாளர் எழுத்தாளர் விக்கிரமனைச்சந்தித்த போது எழுப்பிய வினாக்களுக்கு அவர் அளித்த பதில்கள்)

1. தங்களின் புனைபெயர்களுக்கான காரணங்கள் பற்றிக் குறிப்பிடுங்கள்

விக்கிரமன் என்ற பாத்திரப்படைப்பு கல்கியின் 'பார்த்திபன் கனவு' என்ற நாவலில் இடம்பெறுகிறது. அது எனக்குப் பிடித்ததால் விக்கிரமன் என்ற பெயரில் இளம் வயதிலிருந்தே எழுதுகிறேன். பிற பெயர்கள் அவ்வப்போது வைத்துக்கொண்டவை. அதற்கான காரணங்கள் பெரிதாக ஒன்றுமில்லை.

2. பிடித்த எழுத்தாளர் கவிஞர் யார்?

படிப்பதும் எழுதுவதும் எனக்குப்பிடித்தவை. அதனால் எல்லோரையும் பிடிக்கும்.

3. மேனாட்டு இலக்கியங்களை விரும்பிப் படிப்பதுண்டா?

இல்லை.

4. எழுத்தாளர் சங்கம் ஏற்படுத்தியதன் நோக்கம் யாது?

எழுத்தாளர்களை வளர்க்கவும், அவர்களுக்கு உதவவும் எழுத்தாளர் சங்கம் தோற்றுவிக்கப்பட்டது. இரண்டையும் இன்றுவரை திறம்படச் செய்துவருகிறோம்.

5. இளம் எழுத்தாளர்களை எங்ஙனம் ஊக்குவிக்கிறீர்கள்?

அடிக்கடி சந்திக்கிறேன். முன்னால் எழுதியவர்களின் இலக்கியங்களை வளரும் எழுத்தாளர்கள் படிக்க வேண்டும் என்பதே என் விருப்பம்.

6. பதிப்பகப்பணி பற்றிக் கூறுங்கள்?

நீண்ட நாட்களாக நான் விருப்போடு செய்துவரும் பணி. இதில் பல மேடுபள்ளங்களைச் சந்தித்திருக்கிறேன். ஆனால் துவண்டு போகவில்லை. தற்பொழுது அப்பணியைக் குறைத்துக் கொண்டுள்ளேன்.

7. முதல்படைப்பு வெளிவந்தபோது தங்களின் உணர்வு.

மிகுந்த மகிழ்ச்சி. ஊக்குவித்தவர்களை இன்றும் நன்றியோடு நினைத்துப் பார்க்கிறேன்.

8. வரலாற்று நாவல்களில் சிறப்புடையது என்று எதைக் கருதுகிறீர்கள்.

எல்லாம் சிறப்புடையது. முறையாக வரலாற்றுச் செய்திகளைச் சேகரித்துக் கொண்டு எழுதப்பெற்றவை. எதையும் குறையாகக் கூறமுடியாது.

9. வரலாற்று நாவல் எழுத ஆர்வம் ஊட்டியவர்?

கல்கி. அவர் போட்ட பிச்சைதான் என் வரலாற்று ஆர்வம்.

10. பெண்களுக்கு நாவலில் சிறப்புக் கொடுக்கக் காரணம் யாது?

நான் பெண்களை மதிப்பவன். அவர்கள் உயரவேண்டும் என்று நினைப்பவன். அதுதான் நாவலில் வெளிப்பட்டிருக்க வேண்டும்.

11. குடும்பம், திருமணம், உறவுகளுக்குத் தாங்கள் கூறும் வரைவிலக்கணம் யாது?

இலக்கணத்தைத் தெரிந்துகொண்டு நான் நாவல் எழுதவில்லை. சமகாலத்தில் சமூகத்தில் நான் பார்த்தவை, கேட்டவை இயல்பாக நாவலில் இடம் பெற்றுள்ளது.

12. பெண்ணியம் பற்றிய உங்கள் கருத்துக்களைக் கூறுங்கள்.

இன்று பெண்ணியம் என்பதை துணிவு, உள்ள உறுதி என்ற நோக்கில் கூறுகிறார்கள். துணிச்சலையும், போராட்டத்தையும் எதிர்கொள்கிற பெண்களை நான் படைத்துவிட்டேன். சமூகப்பெண்ணியம் தான் வரலாற்றில் பேசப்படுகிறது. நேற்றைய நிகழ்ச்சி நாளைய வரலாறு.

13. எழுத்தாளராகப் பதிப்பாசிரியராக உள்ளீர்கள்? எது மனநிறைவைத் தருகிறது?

எழுதுவதும், பேசுவதும் எனக்குப் பிடித்தவை. பதிப்புப்பணி எனது தொழில். இறக்கும்வரை எழுத்துப்பணியில் ஈடுபடுவேன்.

14. உங்கள் எழுத்துக்கு ஆதரவு தந்த இதழ்கள்.

1. சுதேசமித்திரன்
2. தினமணிக்கதிர்
3. கல்கி
4. கலைமகள்
5. விகடன்
6. குமுதம்

15. தற்கால இலக்கிய வகைகளான கவிதை, சிறுகதை, நாவல், நாடகம், உரைநடை இவற்றைப்பற்றிய தங்கள் எண்ணம் யாது?

இதில் முதல் நிலையில் கவிதையைக் கூறலாம். ஏனெனில் ஒவ்வொரு கவிதையும் ஒருகதை. சிறுகதை எளிதில் எல்லோரையும் சென்று சேர்வது. நாவல் விரிந்தகளம். இது மூன்றையும் உள்ளடக்கியது நாடகம். (நாட்டகம் தான் நாடகம்). உரைநடை என்ற வகையை இயல் என்றுதான் கூறவேண்டும்.

16. ஆய்வுக்கு உட்பட்ட தங்களது படைப்புக்கள்

1. நந்திபுரத்து நாயகி
2. இதழ்ப்பணி
3. சிறுகதைகள்

17. தங்களின் எதிர்காலத்திட்டம்?

நிறைய எழுத வேண்டும். பனிரெண்டு வரலாற்றுச் சிறுகதைகள் பதிப்பில் உள்ளது. பத்துப் பெருங்கதைகள் வெளியிட உள்ளேன். எழுபது சிறுகதைகள் என்று என் கதைகளைத் தொகுத்து வருகிறேன். அண்மையில் வெளியான எனது நூலான 'நினைத்துப்பார்க்கிறேன்' தலைப்பில் இன்னும் எழுத உள்ளேன்.

18. பெற்றோர், கல்வி, மனைவி, மக்கள் பற்றித் தெரிவியுங்கள்.

சிறுவயதில் தந்தையை இழந்தவன். தாயாரால் அன்பாக வளர்க்கப்பெற்றேன். பள்ளிப்படிப்போடு கல்வி முடிந்தது. என்மனைவி இலக்கிய ஈடுபாடுடையவர். படைப்பாற்றல் மிக்கவர். குழந்தைகள் ஐவர். எல்லோரும் திருமணமாகி நல்லநிலையில் உள்ளார்கள்.

19. வரலாற்று நாவல்களில் பெண்கள் பெரும்பாலும் தந்தையோடு மிகுந்த தொடர்பு பெற்றிருக்க காரணம்?

தாய், மகள் உறவைவிட, தந்தை மகள் உறவு எல்லாக் காலங்களிலும் நன்றாயிருக்கும். தாய் சமூகத்திற்குப் பயப்படுபவள். தந்தை வெளியுலக அறிவுபெற்றவன். மகளின் உறவுகளை நன்கு புரிந்த கொள்பவன். தந்தையின் ஆதரவால் பெண்ணின் காதல், அரசியல், கலை சிறக்க வாய்ப்புக்கள் அதிகம். இது உலகியல். இதைத்தான் நான் நாவலில் படைத்துள்ளேன்.

20. அரசியலில் பெண்கள் ஈடுபடுவது பற்றிய எண்ணம்?

நான் வரலாற்றில் எழுதிய பெண் பாத்திரங்களின் அரசியலீடுபாடு ஆதாரபூர்வமானவை. சமூகம் தானே வரலாறு. 60% வரலாறு 40% கற்பனை கலந்து படைத்துள்ளேன். சில கற்பனைப் பாத்திரங்களை அரசியலில் புகுத்தியுள்ளேன். ஆண் பெண் என்ற பாகுபாடு இல்லாமல் எல்லோரும் அரசியலில் ஈடுபடலாம்.

21. உங்கள் வளர்ச்சிக்குக் காரணம் என்ன?

யாரும் என்னைத் தடை செய்யவில்லை. அதுதான் காரணம் என்று நினைக்கிறேன்.

22. பாரதி மீது தங்களுக்குள்ள ஈடுபாடு பற்றிக் கூறுங்கள்.

சிறுவயதிலிருந்து தந்தையின் தூண்டுதலால் பாரதியிடம் ஈடுபாடு கொண்டேன். அவரது படைப்புக்களுக்கு ஈடுஇணை இல்லை. என் பேத்திக்குப் 'பாரதி' என்று பெயரிட்டுள்ளேன். வருடாவருடம் எட்டயபுரத்துக்கு நண்பர்களோடும் எழுத்தாளர்களோடும் சென்றுவரும் பழக்கத்தைக் கொண்டுள்ளேன்.